உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# காசிரகசியம்.

ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறை

ஆதீனம் மஹாஸந்நிதானத்துக்கு அடிமைபூண்டொழுகும்

ஸ்ரீசுப்பிரமணியத்தம்பிரான் சுவாமிகள் ஆஜ்ஞையின்படி

ஷை ஆதீனத்து வித்வான

ம-ா-ா-ஸ்ரீ

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றிய மூலமும்

சுர. திருச்சிற்றம்பலஞானியாரவர்கள்

இயற்றிய உரையும்,

இஃது

ம-ா-ா-ஸ்ரீ நேமத்தாம்பட்டி

மு. பெ. பெரியகருப்பன்செட்டியாரவர்கள் கூட்டாளி

ம-ா-ா-ஸ்ரீ இராமச்சந்திரபுரம்

மு. அ. ரு. அண்ணாமலைசெட்டியாரவர்கள்

முயற்சியால்

பா. சொக்கலிங்கம்பிள்ளையவர்களது

சென்னை

[illegible] அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

[illegible]

1881.

உ

வெற்றிவேலுற்றதுணை.

ம-ள-ள-ஸ்ரீ

## புரசை அஷ்டாவதானம்

# சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றிய

## நேரிசையாசிரியப்பா.

---

பூநிறைதேமதுப் புதுவிருந்தளிமுரல்
காநிறைதுறைசைக் கண்ணமர்ந்தருளிய
வருங்கயிலாய பரம்பரைமுதன்மை
மெய்கண்டதேவர் வைகியசந்ததி
மேயசீர்நமச்சி வாயமெய்க்குரவன்
வைதிகமரபின் வருந்திருக்கூட்டத்
தெய்தியவிலக்கிய விலக்கணநூற்பொருட்
சட்டகமென்னத் தனியரசியற்றியோன்
வட்டநீர்ப்புவநியோர் வாழ்த்துமேகம்ப
வாணரருட்செங் கோனெறிநடாத்தும்
கச்சிமான்மியமுதற் கலையில்பற்பலநூல்
விச்சையினியற்றிய மேதகுபுலமைச்
சிவஞானமுநிவ னிவனென இற்றைநாள்
அத்தகையாதீனத்து வீற்றிருந்த
மாணுயரம்பல வாணதேசிக
அடிகள்கருணை யி னளிக்கக்கிரியை
ஞானமெனவிரு பான்மையாகிமுப்
பாற்கூறுக வேற்புறுதீக்கை
பெற்றுச்சிவநெறி சற்றும்பிறழ்விலாக்
குரிசில்திரிசிர புரமுறைபுநிதன்
ஆரூர்குடந்தை சீரார்தனியூர்
நாகைமாயூர மாகியவிவைமுதற்
புகல்பலசிவதல புராணமின்னன
நிகர்சுவைஅணிபொருட் டகைமையினெவர்க்கும்
களிதலைசிறப்பக் கண்டமேன்மையோன்
நளிகடற்றிசைதொறும் நனிதன்னிசைநிறூஉ

# உரைப்பாயிரம்.

மேனாட்பெருந்தமிழ் விரகரும்விழைதகு
மீனாக்ஷிசுந்தர விற்பனசிகாமணி
ஓதும்ஆவடுதுறை ஆதீனவித்துவான்
தனைகொடுபல்கால் வினைப்பகைதுமிக்கும்
பொற்பிவர்காசி நற்றலயாத்திரைப்
பயன்பெறுசீரியோ னயன்றருதுறைசைப்
பரிணாமத்தில் ஒருவாத்தவத்தினன்
கரணததூயமையிற் பரிணிதர்க்கேய்ந்த
[illegible]த்திநெறியொடு பயில்சைவநெறியின்
வித்தெனவிளங்கும் சுப்பிரமணியத்
தம்பிரானரும்பெறற் கங்கைசூழ்காசி
இராசியமென்னப் பராவுறுவடநூல்
தன்னைமுன்னைஞான் றுனனரும்புத்திரப்
பேற்றைவிழைந்தாங் காற்றியபூசனை
போற்றித்தேவர்கோன் பாற்றணிஇருத்திய
தியாகியாரூர்த் தியாகப்பெருமான்
முதற்கிளர்சத்த விடங்கமூர்த்திகளையும்
பதிட்டைசெய்த சதுட்டயசாதனத்
துறைதருங்கந்த விரதமனைத்தும்
முறையின்முற்றிய ~~மூசுகுந்த~~னென்னும்
பெருமையோனென்ன அருமையிற்கொணர்ந்து
பல்குமிந்நாட்டில் மல்கிப்பிறங்குவான்
செந்தமிழ்மொழியில் தந்திடுகென்ன
மெய்யுறவிருத்தச் செய்யுளாற்புனைவித்
தன்னதனுட்பொரு ளமைவுறத்தெரிக்கெனப்
பன்னியவாற்றால் பைந்தமிழ்ப்புலவரொன்
றுற்றுளபெரியோர் மற்றையிந்நகரை
புகழாபரிதெனத் திகழ்தருகச்சிப்
பதிவருகூரிய மதிஞன்வேதாகம
நூல்வகைநன்குணர் சால்புயர்பத்திமை
அன்புறுதிருச்சிற் றம்பலஞானி
மன்பதைக்குழாமவ் வாய்மைகளெளிதிற்
பெரிதுணர்ந்துய்ய உரைவிரித்தியல்பெற
நீடுதென்பாண்டி நாடெனுமகட்கு
மங்கலவணியெனத் தங்குமாமதுரை
சார்ந்தவிராம சந்திரபுரத்துறை
அருணாசலவேள் அருந்தவப்புதல்வன்
தெருணாவலர்பால் சிறந்துளவன்பினன்

அண்ணாமலைத்திரு வரளன் முயற்சியால்
விண்ணாடருமிவண் மேவுவான் வெஃக
எங்கணுந்தன்பெயர் இங்கிதநிறுவி
நிலைதிருவண்ணா மலையாதீனக்
குன்றக்குடிப்பதி நன்றாத்தன்புடை
ஆதரத்துடன்கொளும் பாதரக்குடிவளர்
ஆலமுத்தெனும்பெய ராண்டகையீன்ற
சீலவுத்தமத் திவ்வியகுணாளன்
தனையடுத்தோரைத் தாங்குந்தயாரசன்
கனிவொடெஞ்ஞான்றும் கல்வியறிஞரைக்
கண்டுநேசித்துப் பண்டைநட்பினனெனச்
சீராட்டியார்வம் பாராட்டும்வள்ளல்
சொக்கலிங்க சுகுணனுட்டியன்
வைச்சுநடாத்தும் அச்சுக்கூடத்
தெழுதாவெழுத்தி லியைத்து
முழுநீர்ப்புவியில் முயன்றுநல்கினனே.

---

உ
ம-ா-ா-ஸ்ரீ
திருஎவ்வுளூர்.
இராமசாமி செட்டியாரவர்கள்
இயற்றிய

---

ஆசிரிய விருத்தம்.

---

துதிமருவுதனதுபரன் மூழ்குவோர் பவவினைத், துரிசைத் துமித்துமேலாய்ச்
சொல்லுநற்புண்ணியம் வரச்செயுங்கங்கைநதி,சூழ்காசி மான்மியமெனுந்
துங்கவடமொழிநூ லிலங்குதிருவாவடு, துறையாதினத்தகுதிசேர்
தூயசுப்பிரமணிய தம்பிரானன்புளந், தோன்றக் கொணர்ந்துதிவ்ய
விதிமருவுசகலகலை யுணரும்விதரணன்விபவ, வித்வஜன சேகரனிதம்
மேதகுஞ்சீர்கொண்ட திரிசிரபுரத்தினன், மீனாட்சி சுந்தரப்பேர்
விஜையன்றனைக்கொண்டு தென்மொழியினாற்செய்த மெய்க்காசி ரகசியத்தை
விண்ணவர்கள்பணியமா வடிநீழலீசருறை, வியனுலாங் காஞ்சித்தலப்
பதிமருவுமதிஞனுத் தமர்பரவுமமலசிவ, பத்திசெய் சித்ததுல்யன்
பகர்திருச்சிற்றம் பலப்பேர்கொளூரவனுரை, பண்புடன் செய்யவைடம்
பராவுறும் இராமசந்திரபுரம் வாழ்சுகுண, பரிபாலன் அருணசலப்
பார்த்திபன்றருபால னென்னும்அண்ணாமலைப், பகிரதன் முயற்சிசெய்து
நிதிமருவு அளகைநகர் நிகர்பாதரக்குடியி, னிலவுமுயராலமுத்தாம்
நேயமால்மாதவப் புத்திரன் விசித்திரன், நிகரில் மதியூகியான
நீடியபுகழ்ச்சொக்க லிங்கபூபதியினிசை, நிகழச்சுயந்திரத்தில்
நீக்கரும்எழுதா வெழுத்தினிலிசைப்பித்து, நிலமிசைத்தந்தனனரோ.

# அட்டவணை.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# காசிரகசியம்.

## பாயிரம்.

### துண்டிராசவிநாயகர் துதி.

பூமேவுகங்கைநதி யெடுத்தெறிகொக்கரை யெனவொண்
புனிற்றுலோனும்
தூமேவுமுத்தமென வதுகாலுஞ்சுவையமுதத்
துளியும்வேணி
யோமேவுமெய்வயங்கக் காசியிலந்நதிக் கோட்டி
னுளிரமேவு
மாமேவுமொருகோட்டுத் துண்டிராசக்களிற்றை
வணக்கஞ்செய்வாம்.

இதன் பொருள்.

பொலிவுள்ள கங்காநதியானது, அலைகளால் வீசப்படுகின்ற சங்கத்தைப் போல ஒளிபொருந்திய இளஞ்சந்திரனும், அச்சங்கம் பெறும் முத்துக்களைப் போல, அச்சந்திரன் பொழியும் மதுரம் வாய்ந்த அமுதத்துளிகளும், சடையிலும், பிரணவவடிவமான திருமேனியிலும் பிரகாசிக்கும்படி காசிப்பதியிலே அக்கங்கைக்கரைக்கண்ணே எழுந்தருளியிருக்கின்ற ஒற்றைக்கொம்பையுடைய துண்டிராச விநாயகக் கடவுளை வணங்குவாம். எ-று. (க)

மங்கலம்படப் பூமேவுமென்றார். கங்கைநதியென்றது மூத்தபிள்ளையார் திருமுடிக் கண்ணதாகிய இன்ப அருட்பெருக்கினை கங்கையென்றொழியாது நதியெனமிகுத்துக் கூறினர். சத்தனுக்குள்ளன சத்திக்குமுள்ள ஒற்றுமை நயங்கருதி மூத்தபிள்ளையார் கிரியாசத்தி கூறுமாகலின். எடுத்தெறியென்றது ஒருசொன்னீரது. கொக்கரை உவமேயப்பொருள். புனிற்றுலோன் என்றது இளம்பிறை. அது உவமிக்கப்படுபொருள். அது காலுமென்பதனை முத்தமென்பதனோடும், அமுதமென்பதனோடும் தாப்பிசைப் பொருள்கோளாகக்கூட்டினுமமையும். சங்கைப்போலும், பிறைவேணிவயங்கவெனவும், அச்சங்கீன்ற முத்துப்போலும் பிறையீன்ற அமுதத்துளி மெய்வயங்க எனவும், உவமநிரனிறையாகக்கொள்க. ஓம்மேவும் மெய்யென்றது, மூலாதாரத்தின் கண்ணே பிரணவபீடத்திருந்து நால்வகை வாக்கின் சத்திக்கும் காரணமாயுள்ள மூத்தபிள்ளைப்

பெருமான் அற்புதத்திருவுருவை. அது இன்ப அருட்பெருக்கினால் செலுத்துண்ட மதிக்கொழுந்து ஒழுக்கிய அமுதத்துளியாற் புனைவுற்ற வண்ணம் தியானித்தார். இந்நூல் இடையூறின்றி இனிது முடிந்து சுத்தமுற்று நிலவுதல் வேண்டி. இங்ஙனமன்றி எக்கலைக்கும் பரிணாம உபாதானகாரணமாகிய பிரணவமே திருமேனியெனவுங் கூறுப.

## விசுவநாயகர் துதி.

சீர்பூத்தவிடப்பாலும் வலப்பாலும் பசிதாகஞ்செகத்திற்கோம்பும்
பார்பூத்த வன்னபூரணி மந்தாகினிதழுவப் பதுமன்மாயோன்
றார்பூத்தபனிமலர் தூய்ப்போற்றெடுப்பக் காசிநகர்தழைப்பமேவு
மேர்பூத்தவிச்சுவ நாயகனடித்தாமரைமலர்க ளிறைஞ்சிவாழ்வாம்.

(இ - ள்.) சராசரப் பிரபஞ்சங்களாகிய ஆன்மகோடிகளின் பசியை நீக்கியருளும் அன்னபூரணியார், இடப்பக்கத்திலும், அவ்வுயிர்களின் தாகத்தை நீக்கியருளும் கங்காதேவியார், வலப்பக்கத்திலும் பொருந்த பிரமவிஷ்ணுக்கள் மலரால் அர்ச்சித்துத் துதிக்கக் காசித்தலமானது மேன்மேல் தழைக்கும்படி எழுந்தருளிய விசுவநாதர் திருவடித்தாமரைகளை வணங்கி வாழ்வாம். எ-று. (உ)

தாரென்பது—பூந்தாள். மாலையென்பாருமுளர். போற்றெடுப்ப என்பது ஒரு சொன்னீரவாய்வந்த செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் மேவும் என்பதனை, தழுவ, போற்றெடுப்ப, தழைப்ப என்பவற்றோடுங் கூட்டி விச்சுவ நாயகன் என்னும் பெயரோடு முடித்துக்கொள்க.

உயிர்களுக்குப் போகமூட்டுவிக்கும் வள்ளற் றன்மைகுறிக்க அடித்தாமரை மலரென்றார்.

வாழ்வார் மலரைவேண்டுதல் ஒருதலையாதலின் ஈண்டு இறைஞ்சுதற்கு இருபுடையும் இயைபுபெற்றவாறுமிற்று.

## அன்னபூரணியார் துதி.

இறையவனில்வெண்ணிறஞ்செந்நிறமுளார் முகக்கண்ணா
யிருக்குஞ்சீரு
மறைதருத வளப்பிறைதாழ் தருகுழற்பின்
னலும்வன்னியமரங்கையு
மறைகெழுமு மேதகவும் வாய்ந்துமாதேவியென
மருவிநாளு
நிறைதருபே ரருள்கொழிக்கு மன்னபூ ரணிமலர்த்தா
ணினைந்துவாழ்வாம்.

(இ - ள்.) சிவபெருமானைப்போலும், வெள்ளை நிறமும் செம்மைநிறமும் உள்ளே நிரம்பி முகத்தினிடத்துக் கண்ணாகக் காட்டி நிற்கின்ற அழகும், சொல்லப்படுகின்ற வெள்ளைப் பிறைசேர்ந்து நீண்ட குழற்பின்னலும் எரியழல் தங்

கியகையும் வேதத்தால் துதிக்கப்பட்ட பெருமையும் அமைந்து, மாதேவர் என்றதற்கேற்ப மாதேவி எனத் திருநாமமந்திரத்தாலும் ஒத்து நின்று, ஆன்மாக்களுக்கு என்றும் நிறைந்த பேரருளைச் செய்கின்ற அன்னபூரணியாருடைய மலர்போலுந் திருவடிகளைத் தியானித்துக் கெடாத நிலைமையைப்பெறுவாம். (எ-று.) (௩)

பெருமான் திருமேனிக் கண்ணதாகிய திருநீற்றின் வெண்மையும் ஒளியின் செம்மையுமாகிய நிறமும் பிறையணிந்த சடையுந் திருக்கரத்தில் எரியழலும் வேதத்தாற் பரவப்படுதலும் மாதேவரென்னுந் திருநாமமுமுடையராய் அருள்செய்து நின்றவாறுபோல, அம்மையும் தமது திருவிழியில் வெண்மையுஞ் செவ்வரியுமாகிய அந்தச் செந்நிறமும் பிறைவடிவாகச் செய்யப்பட்ட தலைக்கோலமணிந்து பின்னப்பட்ட கூந்தலும் எரியழலேந்திய திருக்கரமும் வேதத்தாற் பரவப்படுதலும் மாதேவியென்ற திருநாமமுங்கொண்டு அருள்செய்து நின்று வாழ்க்கைத்துணையாமாறு உலகுணர்த்தியவாறு காண்க. இது சிலேடைவிசேடணம். பின்னல், சடைக்கும் மாதர் குழற்பின்னலுக்கும் பெயராம். மாதேவர் என்றசொல் அவாய்நிலையாக நின்றது. வாழ்க்கைத் துணையாமாறுலகுணர்த்தியதென்பது குறிப்பெச்சம். கெழுமுதல்—பரவுதல்.

## சபாநாதர் துதி.

வில்லாருந்திருமேனிமுதலாளுள் காண்பதன்றி
விளங்கம்மேனிக்
கெல்லாருமாடையாபரணமா யிருப்பவையோ
டெல்லாங்காணச்
செல்லாரும்பொழிற்றில்லைமணி மன்றுணடநவிலுந்
தேவதேவன்
சொல்லாருங்குஞ்சிதத்தா ணெஞ்சிதத்தாள்விதமுருகித்
துதித்துவாழ்வாம்.

(இ-ள்.) ஒளிபொருந்திய திருமேனியை, யாவைக்கு முதற்காரணமாயுள்ள சிவகாமசௌந்தரியார் நிரந்தரந் தரிசிப்பதன்றி, விளக்க விளங்கும் அத்திருமேனிக்குப் பிரகாசம்பொருந்திய வஸ்திராபரணங்களால் அலங்கரித்திருக்கும் காட்சியோடு கூடிய அகப்பாட்டுப் புறப்பாட்டுத் திருவடையாளங்களை யுலகுங் காணும்படி மேகந்தங்கிய சோலைகள் சூழ்ந்த சிதம்பரத்தின் கண் அழகிய கனகசபையிற் பஞ்சகிருத்திய நடனஞ்செய்கின்ற சபாநாதரது புகழமைந்த குஞ்சிதபாதமானது நெஞ்சை இதம்படத்தன்வயப்படுத்த உருகித் துதித்துவாழ்வாம். எ-று. (௪)

அகப்பாட்டுப் புறப்பாட்டுத் திருவடையாளங்களை ஆளுடையவரசு அருளிய திருவதிகைத் திருத்தாண்டகத்திற் பரக்கக்காண்க, "எல்லாங்காண" என்பதற்கு உலகமெல்லாங் காணவெனப் பொருள்விரிப்பாருமுளர், உடை

யானுடைமை யொற்றுமை நயங்குறித்தற்கு "மணிமன்று" என்றார். திரோ தித்தலை யுணர்த்தற்பொருட்டு "எல்லாரு மாடையாபரணமாயிருப்பவையோ" டென்றபடி. வேதாந்தத்தின் முடிவின்க ணுள்ளதாளென்பார் "சொல்லா ருங் குஞ்சிதத்தா ளென்றதென்க. உலகுசொல்லெச்சம், அவாயநிலையான் வந் தது; காட்டக்காணுந் தரத்ததாகலின். அறம்பொருளின்பம் வீடென்னும் பொருட்பேற்றிற்குக் காரணமாதலுடைமையின் "செல்லாரும் பொழிற் றில்லை" என்றார். உருகுதல் என்றது தத்துவங்களைதலை. நெஞ்சென்ற தீண் டுள்ளமென்னும் பொருட்டு. பஞ்சகிருத்தியம் என்பது சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்பன. பிறவுமன்ன.

## சிவகாமசவுந்தரியார் துதி.

யாதுபுரியினுந்தனக்கென்றொன்றும் வேண்டான்
புரியுமிறையேபோற்செந்
தாதுபுரிபொதுநடனங்காண்டல் புரிவதுமுயிர்க
டமக்கேயாக்கிக்
கோதுபுரிபவந்தவிர்ந்துகுலவு சிவானந்த
வெள்ளங்குளிர்ப்பக்காணும்
போதுபுரிகருங்கூந்தற் சிவகாமசவுந்தரிதன்
பொற்றாள்போற்றி.

(இ-ள்.) எத்தொழிலைச் செய்யினுந் தனக்கொருபயன் கருதாது பிறர்ப யன் கருதிச்செய்கின்ற இறைவனைப்போலக் கனகசபையி னிடத்தானந்த நட னதரிசனஞ்செய்வது மவ்வுயிர்களின் பொருட்டேயாக்கிக் குற்றத்தை யியற்று கின்ற பிறப்பை நீங்கி அவ்வுயிர்கள் விளக்கமுற்ற பரசிவானந்த வெள்ளத்திற் குளிரும்படி கிருபாநோக்கஞ் செய்கின்ற மலர்கள் விரும்பும் இயற்கை மணம மைந்தகரிய கூந்தலையுடைய சிவகாமவல்லியாரது பொன்போலுந் திருவடிகளை நமஸ்கரிக்கின்றேன். எ-று. (௫)

இறைவன் அநாதிமல முத்தனாதலின் இடரின்மையனாகலானும் ஆனந்த மயனாகலின் சுகப்பேறு விழையானாகலானும் தனக்கொப்பாரு மிக்காரு மின்மையனாகலின் புகழ்விரும்பானாகலானும் பிறர்பயன் கருதியே அழகிய திருச்சிற்றம்பலமுடையார் புரியும் பஞ்சகிருத்தியமென்பது கருதி "யாதுபுரி யினுந் தனக்கென்றொன்றும் வேண்டான்" என்றார். உயிர்களென்றது விஞ் ஞானகலர், பிரளயாகலர், சகலரென்ற மூவகையணுக்களை. இவற்றை "மூவ கை யாருயிர்வர்க்க மலத்தார்கன்ம மூலமலத்தார் மூன்றுமுடையா" ரென்ற சிவப்பிரகாசத் திருவிருத்தத்தாற் காண்க. கோதுபுரிபவமென்றது பிறவிக் கேதுவாய காமம்வெகுளி மயக்கங்களை. "காமம்வெகுளி மயக்கமிவைமூன்ற, னாமங்கெடக் கெடுநோய்" எனத் திருவள்ளுவர் கூறலுமிக்கருத்தேபற்றி என்க. இனிக் "கோது புரிபவந்தவிர்ந்து குலவுசிவானந்த வெள்ளங் குளிர்ப்ப" என்றதற்கு "ஞாலத்தாரிதைதெட மணிமன்றுளாடல் காணும்" என்ற சிவப்

பிரகாசத்திருவிருத்தத்திற் குறையானுமுணர்க. போது என்றது பொழுதென்ற தன் மரூஉ. அஃதீண்டாகுபெயராய் மலரையுணர்த்தி நின்றது. புரிதல் விரு ம்புதல், போதுபுரிகருங்கூந்தலென்றதில் போது புரியென வினைமுதலாக வைத் துரைக்கின் மலர்களுந் தம்மணத்தினாங்கு இறைவியார் கூந்தலினறுமணமிறப் பக்கமழ்தலின விழைதலேனுக்கிக் கூறியபடி. இங்ஙனமியற்கை மணமுடைத் தென்பதைப் "பரவி நீவழிபட்டேத்தும் பரஞ்சுடர் திருக்காளத்தி, யரவுநீர்ச்ச டையார் பாகத்தமர்ந்த ஞானப்பூங்கோதை, யிரவினீர்ங்குழலுமற்றே வென வஃது மற்றேயென்னு" என்ற திருவிளையாடற்புராணத்துத் தருமிக்குப்பொற் கிழியளித்த படலத்திருவிருத்தத் தானும் அத்தருமிக்கு இறைவனருளிய "கூந்த லினறியவுமுளவோ நீயறியும் பூவே" என்ற திருப்பாசுரத்தானு முணர்க. இனி போதுபுரியென்பதை யிரண்டாவதன்றொகையாகக் கொண்டு மலரை விரும்பி யணிகின்றவெனப் பொருள்கூறினுமிழுக்காது. இது சத்தனுக்குஞ் சத்திக்கும் பேதம் கூறியபடி.

### தக்ஷிணாமூர்த்தி துதி.



வேறு.

மாலமராடிவாவென [illegible] வந்துகொண்டேகுமுன்பிரியுஞ்
சீலமராடிவாவினுந்திகழுந [illegible] முகத்துச்சிப்
பாலமராடிவாய்நிழல்பொருவப் பதிபெரும்பேறுளங்கொடுக
லாலமராடிவாழ்தருபெருமா னடிமலர்க்கன்புசெய்திடுவாம்.

(இ-ள்.) மயக்கமானது போர்செய்ய இயமன்வந்து வாவென்றுசொல்லி யழைத்துக்கொண்டு போமுன்னம், சொல்லளவில் பிரியேனென்று சொல்லி, பிரிதலாகிய ஒழுக்கத்துநின்றும் தவறாத மாதரது முகவழகையே நினைத்தி ராது, உச்சிப்போதில் சூரியன் எதிர்நின்ற கண்ணாடியின் நிழல்புறந்தோன் றாது தன்னிலே நின்றாற்போல திருவருட் பிரகாசத்தின்முன் ஆன்மபோதந் தோன்றாது அருள் நிலையில்நிற்கச் சிவபோகத்தையேநாடிக் கல்லாலமரத் தடி யிலே குருமூகூர்த்தமாக எழுந்தருளிய பெரியபெருமான் திருவடிமலருக்கு அன்புசெய்வாம். எ-று. (௬)

கோழிகூவிப்போது புலர்ந்தது என்றாற்போல அமராட வென்ற் பாலது, அமராடி யெனத்திரிந்து நின்றது. இங்ஙனமன்றிப் பெரும்போர் செய்து வாவென்றெனநடுவன் வினையேயாக்கி, செய்து என்னும் வாய்பாட் டாற் கூறுவாருமுளர். நடுவன்வந்து வாவெனக்கொண்டு ஏகுமுன், எனக் கூட்டுக. சொல்லளவிற் பிரியேன் என்பது முன்னத்தினுணர்தலால் வந்தது. எனவே, சொல்வேறு செய்கைவேறு என்பது கருத்து. சீலமறாள் எனற்பா லது எதுகைநோக்கித் திரிந்தது. சாதியொருமை முகத்தினது அழகை முகமென்றார். மருட்கைஎன்னும் மெய்ப்பாடு மிகுதி குறித்தற்கு. திரு மதி விருப்பத்தைத் தருகின்ற மதி. மதியாகிய முகமெனவிரிக்க. திவாவினுந் திகழும் மதியெனக் கூட்டுக. இது உருவக ஏதுத்தற்குறிப்பு. மதிபோலு

முகமென்பாருமுளர். அதுபொருந்தாது. உச்சிப்பால மராடி வாய்நிழல்பொ ருவ, என்பது ஒட்டணி. அமராட நடுவன்வந்துகொண்டு ஏகுமுன் முகம் உன் னுது நிழல்பொருவ உள்ளங்கொண்டு அன்புசெய்வாம் எனமுடிக்க. மர அடி மராடியெனத் திரிந்தது. பிரியுஞ்சீலமராடி என்பதற்கு பிரியுஞ்சீலத்தைப் பொருந்தாதவனென்று பொருள்கூறுவாருமுளர். (௬)

## தண்டபாணிசுவாமிகள் துதி.

எண்டபாணியை நிறத்துறவழுத்தினுமீயங்
கொண்டபாணியை நிரப்பியுட்புகுத்தினுங்குறும்புள்
விண்டபாணியை பூம்பொழிற்காசியுண்மேய
தண்டபாணியை யன்றிமற்றுரையுந்தாழேம்.

(இ—ள்.) கணக்கில்லாத இருப்பாணிகளை மார்பிற்பொருந்த அறைந் தாலும் ஈயத்தை உருக்கி நீர்போல நிறைத்து அதனுள்ளே முழுகச்செய்தா லும் வண்டுகள் வெளிப்படுத்தும் சுரமமைந்த மலர்ச்சோலைகளையுடைய காசி த்தலத்தில் எழுந்தருளி இருக்கும் தண்டபாணி சுவாமிகளை யல்லாமல் வே றொரு தெய்வத்தையும் வணங்கோம். எ-று. (எ)

ஈயங்கொண்டபாணி, ஈயத்தையுருக்கிக்கொண்ட பாணி எனக்கொள்க. உருக்கி அவாயநிலையால் வந்தது. ஈயமென்புழி ஈறு இரண்டனுருபு தொகை யாகலின் இயல்பாயிற்று.

## காலவயிரவர் துதி.

### வேறு.

தளம்பொலிமலரோனாதி வானவர்தாழ்ந்துபோற்ற
வுளம்பொலிகாசிமேவு முயிர்கள்செய்பாவமெல்லாங்
களம்பொலியாதுதண்டங் கண்டறவொழித்துமுத்தி
வளம்பொலிவகைசெய்கால வயிரவற்கன்புசெய்வாம்.

(இ - ள்.) இதழ்களோடுங்கூடிய தாமரைப்பூவையுடைய பிரமன்முதலிய தேவர்கள் வணங்கித் துதிக்க காசிப்பதியை விரும்பி யடைந்த உயிர்கள்செய்த பாவத்தையெல்லாம் தண்டஞ்செய்து முற்றுமொழித்து முத்திச்செல்வத்தை யடையச்செய்கின்ற காலவயிரவக் கடவுளுக் கன்புசெய்வாம். எ-று. (அ)

தளம்பொலி மலர்என்பது இதழ்களோடுங் கூடிய தாமரைமலரென்க. உளம்பொலிகாசியென்பது உய்தலை விரும்பினவரது உள்ளந்தோறும் நிக ழுங் காசியென்க. தியானிக்கத் தக்கதென்றபடி. களம்பொலியாது என் பதுவேறு உடற்களத்தைச் சென்றடைந்து நுகராதுஎன்க. விளைத்தவை நுகர்ந்து மேல்விளைவித்தலுக்கு வித்தாக வினைப்பயன் தொகுக்கப்பட்டு நிற் றலைப்பற்றி உடலைக்களமென்றது. உயிர்களென்பதனை முத்திவளம்பொலி என்றதனோடுங் கூட்டுக.

## துர்க்காதேவி துதி.

நிறைகடலுடுத்தவைப்பி னிகரறமுழங்கிப்பாயு
மிறைகெழுகூற்றமூரும் வெங்தொழின்மகிடமஞ்சக
கறைகெழுபிசிதவூண்கொள் கருமகிடஞ்சாய்த்தும்பர்
குறையறமுடித்ததெய்வக் கொற்றியையணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) நீர்நிறைந்த கடலை ஆடையாக உடுத்த உலகின்கண் நிகரில்லாமல் முழக்கம்கொண்டு பாய்கின்ற அச்சம்பொருந்திய இயமன் செலுததும கொடுந்தொழிலையுடைய எருமைக்கடா அஞ்சும்படி உதிரங்கலந்த மாமிசத்தை உணவாகககொள்ளும் கரிய மகிடாசூரனை வதைத்துத் தேவர்குறைகளை முற்றுமொழிதத தெய்வத்தன்மைவாய்ந்த துர்க்காதேவியை வணங்குவாம். எ-று. கூ.

கூற்றுவனைக் கூற்றமென்றதும் மகிடாசூரனை மகிடமென்றதும் உயர்திணை அஃறிணைமயக்கம். மிறையென்பது அச்சம்.

## துண்டிவிநாயகர் துதி.

விண்டிராசதந்தாமதமொழி தரவிரும்புசத்துவமொன்றே
கொண்டிராசதந்தாழ்தாமுத்திகை கூடினீர்மதுவுண்ட
வண்டிராசதந்தாதிதழூட்டுயின் மருவுதீம்புனற்காசித்
துண்டிராசதந்தாவளத்தினை யடிதொழினுலகுள்ளீரே.

(இ-ள்.) உலகத்தவரே தேனுண்டவண்டுகள் இராக்காலத்தில் படுக்கையாகக்கொண்டு நித்திரைசெய்கின்ற நூற்றிதழ்த் தாமரைபூத்த மதுரம்வாய்ந்த நீர்வளமுள்ள காசித்தலத்தில் எழுந்தருளியிருக்கும் துண்டிராசரென்னும் திருநாமத்தையுடைய யானையைத் திருவடிக்கண்ணே வணங்குவீர்களானல் இராசததாமதகுணம் நீங்கி அறிவுடையோரால் விரும்பத்தக்க சத்துவகுணமொன்றுமே மேற்கொண்டு ஆணவக்குற்றம் விலகி முத்தியடைவீர்கள் எ-று. (௧௦)

கொண்டிரென்னும் வினைமுற்றை வினையெச்சமாக்கிக்கொள்க. வண்டு இராத்துயில் தாது சதவிதழ் மருவுதீம்புனல், எனக்கூட்டுக. சததாதுசதந்தாது எனவிரித்தல் விகாரமாயிற்று. சதவிதழ் உறுப்பாகுபெயர். மூதலை ஐயுறிற் சினையைக்கண்ணுறும் என்பதனல் தந்தாவளத்தினை அடிதொழின் என்புழி, எழனுருபு விரிக்கப்பட்டது. இஃது உருபுமயக்கம் ஆண்டுத் தகரஒற்று மிகாமை புறனடையாற்கொள்க. துண்டிராச தந்தாவளம் என்பது தற் குறிப்பணி. மூத்தபிள்ளையார்க்குத் துண்டிராசர் என்பது, காசிப்பதியை கவர்ந்திருந்த துராசதன் என்னும் அசுரனை அழிக்கும்பொருட்டு உமாதேவியார் திருமுகத்து எழுந்த கோபப்பிரசாதமே ஐந்து திருமுகமும் பத்துத் திருத்தோளுமுடைய வக்கிரதுண்ட மூர்த்தியாகத் திருக்கோலஞ்சாத்தி அவ்வசுரனைத் திருவடிககீழ் அடக்கியகாலத்து அம்மூத்தபிள்ளைப்பெருமானை நோக்கி

தேவா யாவருந் துதிப்பகக்குறித்த திருநாம மந்திரமென்றுணாக இக்கதை ப்க லத்தினைப்பார்க்கவ புராணத்துட்காண்க. தந்தாவளமென்பது யானை. யானைமு கத்தினை யுடையாரை யானையென்றார். ஆர்வவணிவிளங்க.

## சுப்பிரமணியர் துதி.

இருகூட்டிவளர்பறவை யிரண்டேறுமிருவருமுள்ளிடத்துநாண
வொருகூட்டிவளர்பறவையிரண்டினொன்றுதுவசமற்றென்றூர்தியாக்கி
யருகூட்டிபஞ்சடிமென்பிடியு மானுந்தழுவவமர்போரேற்றை
வருகூட்டினுழையாதுபோற்றுவா மிருவினையுமாற்றுவாமே.

(இ-ள்.) இரண்டுகூண்டில் வளரத்தக்க இருபட்சிகளாகிய அன்னத்தின் மீதும் கருடன்மீதும் ஏறுகின்ற பிரம விஷ்ணுக்களிருவரும் மனத்தில் நாணங் கொள்ளும்படி ஒருகூட்டில் வளர்ந்த சேவலு மயிலுமாகிய பறவைகள் இரண் டனுள் சேவலொன்றனையுங் கொடியாகக் மயிலொன்றனையும் வாகனமாக் கிக்கொண்டு பக்கத்துச செம்பஞ்சு ஊட்டிய திருவடிகளையுடைய பிடியையும் மானையுந் தழுவி வீற்றிருந்த தொருபோரிற் சிறந்த ஏற்றினை இனிவருங் கூட் டில் நுழையாதபடி போற்றிசெய்து இருவினையு மொழிப்பாம். எ-று. (கக)

பறவைச்சாதி என்று குறித்தற்கு இருகூட்டிவளரென விசேடிக்கப் பட்டது. ஒருகூட்டிவளர் பறவை. சூரபன்மனென்னும் பெயருடைய தோர்யாக்கைக்கண்ணே வாழ்ந்திருந்த சூரன் பதுமனென்னும ஈரறிவினையு டைய உயிர் சேவலு மயிலுமாகிய புள்வடிவோடு போரழிந்த ஞான்று வந்த னவற்றைக் குறித்தது. ஆக்கி என்பது மும்முதற்றொழிலில் படைப்புக் காப் பென்னும் இருதொழிற்கும் தலைமைபூண்ட பெருந்தேவராய் அப் பிரமவிஷ் ணுக்களிருவரும் வேறொன்று படைத்துக்கொள்வதற்கும் வளர்த்துக்கொள்வதற் கும் வல்லராயும் அங்ஙனஞ்செய்துக்கொள்ளும் உரிமையாற்றல் இல்லாராய் ஒவ்வொன்றனையே ஒவ்வொருவரும் ஊர்திக்கும் கொடிக்குமாகப் பெற்றமை யின். அவர்கண்டு நாண அவ்விரண்டிற்கும் வேறுவேறுஅமையக்கடைக்கணித் துக் கொண்டருளிய இளையபிள்ளையார் அளவிலாற்றலைக் குறித்தது. இது விபாவனையணி. ஊட்டுபஞ்சடி வினைத்தொகை. பிடியுமானும் தழுவ அமர் ஏறு என்பது தொகை உவமம். பிடியும் மானும் ஏற்றைக்கண்டஞ்சி அகல் வது இயற்கையாகவும் அதனைமறுத்து தழுவ அமர் ஏறு என்றார் இது விரோ தவிலக்கணி. வருகூடு, இனிவரும் பிறவிக்கண்ணதாகிய உடல். உயிர்க்கிழவ னும் பறவைபோல யாக்கைதோறும் திரிதலுண்மையின். சொற்பொருளின் பம்பெற கூட்டுநுழையாது என்னப்பட்டது. "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே யுடம்போ டுயிரிடைநட்பு" என்ற தேவர் மறைமொழிநோ க்கி. போற்றுவாமென்ற வினைமுற்றை வினையெச்சமாக்கி இருவினையை மாற் றுதற்குக் காரணமாக்கிக்கொள்க. நல்வினையும் பிறவிக் கேதுவாகலின் இரு வினையு மாற்றுவாமென்றது. "இருள்சேரிருவினையுஞ் சேரா" என்ற தேவர் திருவாணையுமது.

## நந்திதேவர்வணக்கம்.

**மறைமுழுதும்வகுத்துணர்ந்த வாதராயணமுனிவன் மதிமாழாந்து**
**நிறையகிலநாதனெதிர் நாரணனேபிரமமென நிகழ்த்தலோடு**
**மறைதருமவ்வகிலேசன் முன்புநாட்டியசயத்தூணவனேயாக**
**முறைநிறுவியருள்கொழிக்குநந்திபிரானடிக்கமலமுடிக்கொள்வாமே.**

எ-து ;—எல்லாவேதங்களையும் வரம்பிற்படுத்து ஒருவரிடத்தன்றித் தாமே யுணர்ந்தவராகிய வாதராயணரென்னும் பெயரையுடைய வியாதமுனிவர் அவத்தையத்தானறிவுகலங்கிப் பூரணகர்த்தாவாகிய விசுவநாதர் திருமுன்னர், நாராயணனே பரமபதியென்று கூறுதலும், மேல் பூரணகர்த்தாவாகச் சொல்லப்பட்ட விசுவநாதர் சந்நிதிக்கு முன்பாக நாட்டியுள்ளதாகிய வெற்றிக்கொடித்தம்பம் அவ்வியாதனேயாம்படி அவனைத் தமது ஆணையாணிறுத்திப் பேரருள் புரிந்தவராகிய நந்திதேவருடைய ஸ்ரீபாதகமலங்களை யெமது முடியிற் குஞ்சிப்பூவெனக் கொள்ளுவாம். எ-று. (௧௨)

ப-ம்.—வேதங்கள் நான்கேயன்றி அநந்தமென்பது அவ்வேதத்திற்றனே பெறப்படுதலால் மறைமுழுதும் என்று கூறினர். "अनन्ता वै वेदाः" என்பது சுருதிப்பிரமாணம்.

அநந்தமாயுள்ள வேதங்களை யுணர்வது அநந்தமாகியகாலத்தை யாச்சிரயித்துக் காலம் முடிவு பெறாத வுண்மையால் வேதமுமன்னதேயாய் முடியும். பரிமிதத்தானுணர்தற் பாலனவல்லாத வேதமடங்கலுந் தமது தெய்வத்தன்மையா லொருங்குணர்ந்தமையால் வகுத்து என்று கூறினர். தெய்வத்தன்மை யென்பது விஷ்ணுவினுடைய அவதாரமாதல் பற்றி யென்க.

"स होवाच व्यासः पाराशर्यः" எனவேதத்திற் புகழப்படுந் தன்மையுண்மையால், உணர்ந்து என்பதற்குத்தாமேயுணர்ந்து என்று பொருள்கொள்ளப்பட்டது.

சாட்சாத்விஷ்ணுவேயாயினும், மறைந்து வியாசரூபங்கொண்டமையால், அவ்வுண்மைதோன்ற வியாதமுனிவரென்னாது மறைசொல்லாய்வாதராயணரென்று கூறினர்.

விஷ்ணுவே வியாதமுனிவராயினும், அவத்தை வயத்தானழுங்குமோர் பசுவென்பது தோன்ற மதிமாழாந்து என்று கூறினர். வியாதர் பசுவானபோது அவர்க்கு மூலமாகிய விஷ்ணுவும் பசுவென்பதுதானே போதரும். "ब्रह्मविष्णुसुरेन्द्राद्याः पशवः परिकीर्तिताः" என்னும் பிரமாணத்தால் பிரம னிந்திரன் முதலியவர்களோடு விஷ்ணுவு மோர்பசுவென்பது வெளிப்பட்டது. பசுத்துவமுள்ள விஷ்ணுவைத் தெய்வத்தன்மையுள்ளவராக மேற்கூறிய தென்னையெனின், சிவபெருமானை வழிபட்டு அவருடைய அதிகாரசத்திகளிற் பரிபாலன சத்தி தம்மிடம் பதியப்பெற்றுக்கொண்டதனாலென்க. எனவே, அத்தெய்வத்தன்மைஆகந்துகமெனக் கொள்ளப்பட்டது.

"వ్యాసరూపమహంకృత్వాసుగృహ్ణామియుగేయుగే।
చతుర్లక్షప్రమాణేన ద్వాపరేద్వాపరేతథా।
తథాష్టాదశధాకృత్వాభూలోకేస్మిన్ ప్రకాశయే।
అద్యాపిదేవలోకేతచ్ఛతకోటిప్రవిస్తరం"

என்னும் மச்சபுராணவாக்கியத்தால் நான் வியாசரூபியாய்ப் பிரதி துவா பரயுகங்களினும் சதுர்லட்சப்பிரமாணங்களால் புராணங்களைச் சங்கிரகித்து அஷ்டாதசவிதமாய்ப் பூமியிற்பிரகாசிக்கச் செய்கின்றேனெனவும், இப்போதும் தேவலோகத்தில் சதகோடி விஸ்தாரமாய்க் கிடக்கின்றனவெனவும் விஷ்ணுவால் சொல்லப்பட்ட வுண்மை வெளியானதால், விஷ்ணுவே வியாசரென்பது துணியப்பட்டது. இன்னும் புராணங்கள் பதினெட்டேயன்றிச் சதகோடி விஸ்தாரமாய்க் கிடக்கின்றனவென்னுமுண்மையால் புராணத்தின் முதனூலாகிய வேதம் அநந்தமென்று மேற்கூறினதுந்தெள்ளிதின் விளங்கற்பாலதாயிற்று.

விசுவத்தையாளுந்தன்மையொன்றினுனே வந்தவோர் பேரெனமயங்காதவழிவியாபகத்தன்மையாலுமமைந்தவுண்மைதோன்ற நிறையகிலநாதனென்றுகூறினர்.

விசுவநாதரென்னுந் திருப்பெயருடைமையால், அம்மூர்த்திக்குரிய காசியென்னுமிடந்தோன்ற எதிர் என்று கூறினர்.

மண்முதனாத மீருகிய தத்துவங்கள்தாமேயாகியும், கடந்து மொப்புவமையின்றி விளங்குமெய்ப்பதிக் கெதிரில் பரத்துவங் கூறப்போந்த வேற்றுப் பொருளின் சிறுமைதோன்ற நாரணனே பிரமமென நிகழ்த்தலோடு மென்று கூறினர். நாரணன் என்பது சலார்நவத்திற்கிடக்கு மொருவனென்று பொருள்படும். சலார்நவமெனவே, பிருதிவி கழிந்த விரண்டாவது தத்துவாதிக்கம் பெறப்படும். அதற்குமேலுந் தத்துவங்களுளவாகலி னவற்றைநோக்குழியவ்வவற்றிற்குரிய தெய்வங்களின் முன்னர்ச் சலார் நவதேவதை தலையெடுப்பது பரியாசமாய்முடியும். சலம்தீயிற் சுவறுகையால், சலத்துக்காதிக்கம் வந்துழிமண்ணு மதனதிட்டான தெய்வமுங்கெடுமாபோல், தீக்காதிக்கம்வந்துழிச் சலமுமதனதிட்டான தெய்வமுங்கெடும். மேல்தீயுங்காற்று மாகாயமுமாகிய பூதங்களும், அவ்வவற்றிற்குரிய தெய்வங்களு மொன்றி னொன்றேற்றமுடையனவாய் வெளிப்படுமாற்ருல், சலமாகியதானம் அபாவத்தை யடைந்தபோது அதனோடு நாசத்தையடைகிற தேவதையைப் பரம்பொருளாக மதித்தல் பேதமையிற் பேதமையென்க. ஆயின், வேதத்தில் நாராயணனே பரம்பொருளென்று கூறப்பட்டமையென்னை யெனின், அந்தவேதத்திற்ருனே சந்திரன், இந்திரன் பிரமன் முதலியவர்களும் பரம்பொருள்களாகக் கூறப்படுதலின் அமைவுடைத்தன்ரும். அப்படிக்கூறுவ தென்னையெனின், அவரவர்களுக்குக் கீழிட்டவர்களை நோக்கியென்க. சந்திரனிந்திரன் முதலியவர்களை நோக்கப் பிரமனுக்காதிக்கமும், பிரமனைநோக்க விண்டுவுக் காதிக்கமுமுளவாகு மூண்மையால். அன்றியு மன்னோர் சிவபெருமானுடைய தனுவாகுந்தன்மையால்.

“ అహంహిసర్వహవిషాంభోక్తాచైవ ఫలప్రదః। సర్వ దేవతనుర్భూత్వా సర్వాత్మా సర్వసంస్థితః” என்னுங் கூர்மபுராணவாக்கியத்தால் சர்வகதனுகியும், சர்வ சொரூபியாகியும், அக்னி சோமேந்திர விஷ்ணுவாதி சர்வதேவ தநுர்ப்பூதனுகியும், சர்வமுக்கிய ஹவிர்த்திரவியங்களுக்கும் போக்தாவாய் நானே பலப்பிரதாதாவாகின்றேனென்று சிவபெருமான் கூறியவுண்மை வெளிப்பட்டதால், சமஸ்த தேவர்க்களுஞ் சிவனுடைய தனுவாதல் பெறப்பட்டது. இதனுல், சிவபெருமானுக்கெதிரில் நாரணனைப் பிரமமெனக்கூறல் அசப்பியமாயிற்றென்க. “ సత్యంసత్యంపునస్సత్యం నదైవంకేశవాత్పరం” என்னும் வாக்கியமே யாண்டுவியாதர் கூறிப்பிரமாணித்த துண்மையாக, ஈண்டு நாரணனேபிரமமெனக்கூறல்யாண்டமையு மெனின், விஷ்ணுவுக்குரிய கேசவாதி பன்னிரண்டு நாமங்களில் நாராயணனென்பது, மூலமந்திரமும் பரியாயபதமு மாதல்பற்றியென்க. கேசவன் என்பதற்குப் பிரமனையு மீசனையுந் தன்னிடத்திற் பெற்றவன் என்று பாஞ்சராத்திரிகள் பொருள் கூறுவர். பிரமனைத்தானே பெற்றதுண்டாயின், அப்பிரமனுடைய தலை சிவபெருமானுற் கழிந்ததை மீண்டுமேன் உண்டாக்கிக்கொடுத்திலர்? சிவனைப்பெற்றதுண்டாயின், அச்சிவனிடம் கைலைக்குச் சென்று பிள்ளைவரம் வேண்டியேன் யாசித்துப் பெற்றுக்கொண்டனர்? பிருதிவி அப்புத் தேயுக்களில் பிருதிவி அப்புவினும், அப்பு தேயுவினும் உதித்து மொடுங்கியும் வருதல் சகசம். அவற்றின திட்டான தெய்வங்களில் முறையே பிரமன் விஷ்ணுவினிடத்தும், விஷ்ணுவுருத்திரனிடத்துந் தோன்றியும், ஒடுங்கியும் வருதல் சகசம். தேயு அப்புவிற் பிறப்பினன்றோ விஷ்ணுவினிடம் சிவன் பிறத்தல் கூடும்? அப்படியே தேயுபிருதிவியிற் பிறப்பினன்றோ பிரமனிடஞ் சிவன்பிறத்தல்கூடும்? திரிமூர்த்திகளிலொருவராகிய வுருத்திரமூர்த்தியே பிரமவிஷ்ணுக்களிடம் பிறத்தல்செல்லாமையின், துரியமூர்த்தியாகிய பரமசிவம் பிரமவிஷ்ணுவாதி பசுக்களிடம் பிறந்தாரென்பது சர்வாபத்தமென்க. உண்மையில், கேசவன் என்பதற்குப் பொருளை விசாரிக்குங்கால், சவத்தைத்தலையிலுடையவன் என்று பெறப்படும். தக்கனுடைய யாகத்தில் சிவாபராதத்தா லிறந்த தெய்வப்பிணவுடல்களை விஷ்ணுவினுடைய தலையிலேற்றி அவனை நாகபாசத்தாற் பிணித்து அந்தயாககுண்டத்தைச் சுற்றிவரும்படி வீரபத்திரர் தண்டித்த மான்மியம் பைப்பலாதம், காந்தமுதலியவற்றிற் கூறப்பட்டமைகாண்க.

விசுவநாதரென்றுஞ் சொல்லானே பூரண கர்த்தாவாந் தன்மைபெறப்படுமுண்மைதோன்ற அறைதருமென்று கூறினர்.

பிரமாணஞ்செய்யும்பொருட்டனுகிய வியாதமுனிவருக்குச் சேய்மைப்பட்டவராகு முண்மைதோன்ற அவ்வகிலேசனென்று கூறினர். இன்னும், விசுவநாதரென்பதற்கு மேலிடத்தில் அகிலநாதரென்றபடி அவர்க்கே விசுவேசரென்னும் பேருண்டென்பதை விளக்கும் பொருட்டே அவ்வகிலேசரென்றுரைனினுமமையும். சேய்மைப்பட்டவரப்படியே யாகாதபடி அவருக் கண்மையராய்த் துசத்தம்பமாகி வியாதமுனிவர் நிற்றல் தோன்றமுன்பு என்று கூறினர்.

நேர்ந்த விவாதம் பரிஷ்காரப்பட்டுவேறு ஆசங்கைக்கிடம் பெறுமை தோன்ற நாட்டிய என்று கூறினர். எங்ஙனம் பரிஷ்கரிக்கப்பட்டதெனின், விளம்புதும். வியாதமுனிவர் பால் வேதங்களையும் புராணங்களையும் பிறகலைக ளையு முணர்ந்த முனிவர்கள், அவற்றுற்றெளிவு பெறுராகி யோர்பகல்வியா தரையடைந்து தேவரீரிடங் கேட்ட வுபதேசங்களா லெமக்குச் சந்தேகமே அதிகரிக்கின்றது. ஆகையால் நான்முகமா யெங்களுக் குபதேசித்த லொழி ந்து தேவரீருடைய வுள்ளத் துண்மைப்பொருளாகத் தெளிந்திருக்கும் பரம பதியாவான் இவன் என்று பிரமாணித்துக் கூறல்வேண்டுமென்று கேட்டனர். அப்போதுவியாதமுனிவர் அவர்களைநோக்கி நாராயணனே பரமபதியென்று பிரமாணித்துக் கூறினர். அவர்கள் வியாதனை நோக்கித் தேவரீர் காசியில் விசுவநாதர் சந்நிதியின்கண்வந்து இவ்வாறு சொல்ல வேண்டுமென்று கேட்டனர். அதற்கிசைந்து அப்படியே சிவசந்நிதியில் நின்றுகொண்டு இரண்டு கைகளையு முயரவெடுத்து நாராயணனே பரம் என்று கூறுதலு மிரண்டு கரங்களுந் தம்பித்துத் தம்பமாய் நின்றனர். உடனே நந்திபகவான் வெ ளிப்பட்டுத் தம்பித்துநின்ற வவருடைய விரண்டுகரங்களையும் வாள்கொ ண்டு சேதித்தனர். அப்போது விஷ்ணுமூர்த்தியு மங்குவந்து வியாதமுனி வரைப்பார்த்து "తత్వం మే వచనం వ్యాస శృణు మూఢ యథార్థతః । అహం మే వ జగత్కర్తా మమ కర్తా మహేశ్వరః। తస్య దేవాదిదేవస్య కర్తా కోపి న విద్యతే" என்று கூறினர். என்பது; மூடனாகியவியாசனே! சத்தியமாய்ச்சொல்லுகிறேன் கேள். உலகத் துக்கெல்லாம் நானேபதியென்பதுண்மை. எனக்குப்பதியாவார் மகேசு வரரென்றறிவாயாக. மகாதேவராகிய அவர்க்கு மேலொரு பதிப்பொருள் கிடையாது என்று பெறப்படுதலறிக.—இவ்வுபதேசத்தை வியாதமுனிவரு க்குச்செய்துவிட்டு விஷ்ணுபகவான் யதேச்சையாய்ச் சென்றனர். பின்னர் முனிவர்கள் தம்மிருப்பிடஞ் சேர்ந்தனர். வியாதமுனிவர் நந்திபகவானை வ ணங்கி அடியேன் பாலிரங்கி யிரண்டுகரங்களையு மருளல்வேண்டுமென்று பிரார்த்தித்தபடியே அருளப் பெற்றுக்கொண்டனர். நந்திதேவர் தாம்செய் தருளிய சிவபரத்துவதாபனம்யாண்டு முலகி னிலைபெற்றிருக்கும்பொருட்டு வியாதமுனிவரையே விசுவநாதர் சந்நிதிக்கெதிரில் வெற்றிக்கொடித் தம்பமா கநிறுத்தினர். இவ்வுண்மை காசிமான்மிய முதலிய நூல்களிற்காண்க.

சிவபாரம்ய விடயத்தி னேர்ந்தவாதத்தில் வெற்றிநந்திபகவான் பக்கல் சார்தலால் அவ்வெற்றியைக் காட்டுமறிகுறியாக வவர் நிறுத்துமுறைமை தோன்றச் சயத்தூணென்று கூறினர்.

அவரங்ஙனநாட்டிய தூண் அவராற்கரங்களொழிந்து வாயடைந்து தம்பா காரமாய்நின்ற வியாதரென்பது தோன்றவவனே யாகவென்று கூறினர். சிவ பெருமானுக்கு வாகனமாகிய நந்திபகவான் தமக்குள்ளவன்பு மபிமானமுங் கொடியாவாருக்குமுளவாதல் கருதியமைத்தாரென்பதுதோன்றக்கொள்ளினு மமையும். தானுமோர்வாகனமாதலா லபிமானம்பற்றி விஷ்ணுவே யாண்ட டைந்து வியாதருக் கறிவுறுத்தியபடி. சிவநிந்தைசெய்வாரைத் தண்டித் தறி வுறுத்தல் விகிதமென்பது தோன்றமுறை நிறுவியென்று கூறினர்.

அறிவுறுத்த வுணர்ந்து வழிபட்டார்க் கிரங்குதன் முறைமையென்பது தோன்றவருள் கொழிக்குமென்று கூறினர்.

பெருமானைத்தாங்கி வாழ்தன்மாத்திரமேயன்றிச் சைவத்துக்கு முதலாசிரியருமாந் தன்மைதோன்ற நந்திபிரானென்று கூறினர்.

முடியிற் சூட்டிக்கொள்வது பூவென்பதுதோன்ற அடிக்கமலமென்று கூறினர். இன்னும் அவரடியிற் சூடிய கமலமெனினு மொக்கும்.

மலரை முடிப்பது குஞ்சியிலென்பது தோன்ற முடிக்கொள்வாமென்று கூறினர். முடிவுத்தமாங்க மாதலறிக. இன்னும், அவர் திருவடியை முடிமேற்கொள்வாமென்பது முடிமேலிருக்கக்கொள்வாமென்று பொருள்கொண்டு அவர் திருவடிநீழலில் வசிக்கப்பெற்றோ மெனினுமமையும். எம்முடைய தலையிற் பிரமனெழுதியவெழுத்தை அவர்காலாற் றுடைக்கப்பெற்றுக் கொண்டேமென்பதும் பொருந்தும். அவரிடம்திருவடிதீக்ஷை யடையப்பெற்றேமென்பதுமொன்று. இன்னும், முடிக்கொள்வாமென்பது நந்திதேவர் தருமதேவதை யாதல்கண்டென்க. தருமம் என்பது யாவரானுஞ் சிரசாக வகித்தொழுகற் பாலதாகிய பதியினுடைய வாணையின் சொரூபம். அது அப்பதியின் காலின்கீழொதுங்கிக் கிடக்கும். அப்பதியொருவருடைய வாணையில் வசிக்க வுரியவனல்லாமையால், அவராணையில் யாவரும்வசிக்கவும், அவரொருவருடைய வாணையில் வசிக்காமலிருக்கவுமுள்ள வாதிக்கத்தாற்பதியைச் சர்வநியந்தாவென்று வேதங்கூறும். தருமம் சிவன் காலின்கீழ்க்கிடப்பது தோன்றவாகனமாய்ச் சமைந்திருத்தல்சான்றாம். அத்தருமமதனையனுட்டிப்பார் முடியிற்கொள்வதொன்றாகலானத்தருமவடிவமாகிய நந்தி தேவர் பாதங்கள் முடியிற் சேரும் பெற்றிமைத்தாதலறிக. இதனால், வியாதரைத் தருமமேதண்டித்தது என்று கூறுவதும் பொருந்தும்.

இங்ஙனநிற்க, வியாதமுனிவர் வேதத்திற்புகழப் பெற்றவரும், ஓதாமலுணர்ந்தவருமாதலுண்மையாக,பின்னர்மலைவுற்றுக் கூறினமையாண்டமையுமெனின், வேதத்திற் புகழப்பெற்றவரும், தெய்வத்தன்மை யுடையவருமாகிய விஷ்ணுபகவான் பொய்ச்சான்று கூறி மலைப்பாம்பாகச் சமைந்ததென்னை? வேதத்திற் புகழப்பெற்றவரும், தெய்வத்தன்மையுடையவருமாகிய பிரமதேவர், விஷ்ணுவினிடம் பொய்யுரைத்துப் பூசையுங் கோயிலும் போக்கடித்துக்கொண்டதென்னை? பசுக்களாதலுண்மையாகலின் மலைவுற்றமுழங்கலியல்பாம். (உதியாமரியா வுணராமறவா, விதிமாலறியா விமலன்புதல்வா) என்பது பிரமாணம். இதனால், மறப்புமாத்திரமேயன்றி நினைப்பு என்னுந் தெளிவுமுடையராதல் பெறப்பட்டமையின், வியாத முனிவர் நாரணனேபரமென்று கூறியதைமலைந்து கூறினாரென்னாது தெளிந்து கூறினாரெனினுமமையும். தெளிந்து கூறுங்கால் பொய்யுரைத்தல்யாண்டமையு மெனின், அதுபொய்யன்றாம். எங்ஙனமெனின்; வியாதரையடைந்த முனிவர்கள் வேதங்களையும், பிறகலைகளையும் பலகாலவரிடங் கேட்டுமையம் விலகாமையால், மீண்டு மவர்க்கு முற்படியே வுரையாராயினர். பிழைபடக்கூறின் விஷ்ணுவேயாண்டடைந்துண

மையுணர்த்துவா ரென்பதறிந்து, அவரால் முனிவர் சந்தேகத்தை யொழித்தற் பொருட்டேயவ்வாறு கூறியதாம். (பொய்மையும்வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மைபயக்குமெனின்) என்னும் பிரமாணமே யீண்டுகருதற்பாலதென்க. விஷ்ணுவே வியாதராதலுண்மையாக, வியாதனை விஷ்ணு விகழ்ந்து புத்தி கூறல்யாண்டமையுமெனின், கருத்து வேறுபாடின்மையால் பிழைபடாதென்க. வேறுபட்டகாலத்தும் பிழையுண்டாகாமையைப் பின்செய்யுளாற்காண்க. (அரியீரைந்தவதாரச் செயலியாவுமரன்செயலா மாலறியாதகந்தைகூறற், றிரிவாதுமுடல் வாலதநுணமுப்பின் செய்லுயிரின்செயலாதுஞ் செய்தீபோலும், விரிவாமைந்தொழிலெயு மெம்மிறைவன்றனே மிதுபடர்க்கை முன்னிலைத் தன்மையிலுண்டாக்குந், தரியாதன்றிராமனுடன்பரசுராமன் சமர் போருதகதையுலகிற் சாற்றுவீரோ) என்பது பிரமாணம். வியாதர்கூறினது பொய்யல்லாமையாகப் பெறப்பட்ட வோர்ஙியாயத்தால் அவர்க்குக் கரங்கள் தம்பித்ததும், அவரைத்துணைச் சிவசந்நிதியினிறுத்தியதும் யாண்டமையுமெனின், அவ்வினையை யவரநுபவிக்க விருந்ததனாலென்க. அன்றியும், அவருடன் பாடுமப்படி யொத்திருந்தமைகாண்க, எங்ஙனமெனின், சிவபரத்துவதாபனஞ்செய்வது சிவபுண்ணியத்திற்றலையாய வுண்மையால், அதுசெய்தலே பேறுகக்கொண்டிருந்தவராகலின், சிவசிந்தையிற் றலைப்படுவா ரடையுங்கதியை விளக்கவும் அது தம்பானிகழப்பெற்றுக் கொண்டன ரென்றறிக. (அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடையா - ரென்புமுரியர்பிறர்க்கு)என்னும்பிரமாணத்தால் எலும்பையும் பிறர்க்குமேலோர் கொடுப்பரென்று வெளிப்படுமாற்றால் அவற்றைப் பெருமானுக்கென் றர்ப்பணஞ் செய்வதிலார்வங்கொண்டொழுகியவியாதர்தன்மை யிழுக்கடைவதெப்படி? (செயற்கரிய செய்வார்பெரியர்) என்பதற்கினஞ்செய்தலால். மேதாவியரிது கொண்டே யின்னு மநந்யுத்திகளைவரித்து மேல்விஷயங்களைப் பரியாலோசிக்கக்கடவரென் றிவ்வளவி னிறுத்தினம். இன்னும் விரிக்கிற்பெருகும்.

## காசிவணக்கம்,

வேறு.

தானங்களெதுசொற்றுலுந்தனைமுதலெடுத்துக்கூறு
மானங்களுடையதாகிமாதேவன்வடிவுற்றார்க்கு
ஞானங்களோடுநல்கிநலமுறவைகுமொண்பூங்
கானங்கள்பொலியுந்தெய்வக்காசியைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) எந்தத்தல மான்மியத்தையெடுத்துச் சொல்பவர்களும், அவற்றிற்கு மான்மியம் விளங்கும்பொருட்டுத் தன்னையே முதலிலெடுத்துக் கூறுஞ் சிறப்புடையதாகித் தன்பக்கல்சார்ந்து மகாதேவனைப் பதிட்டித்து வழிபடுவார்க்கு ஞானமோட்சங்களை யளித்து எல்லாநலங்களு நிறைந்து பிரகாசிக்கும் அழகிய பூஞ்சோலைகளால் விளங்குந் தெய்வத்தன்மைபொருந்திய காசியென்னும் பதியைவணங்குவாம். எ-று (கரு)

தெய்வக்காசியென்பதனால் தாரகக்ஷேத்திரமென்பது பெற்றாம். இந்தப் பதியில் தேகத்தை விடுமுயிர்கட்கு நிரியாணதசையில் ஸ்ரீவிசுவேசர் அவர்கள் வலக்காதில் தாரகமந்திரத்தை யுபதேசித்தருள்வரென்று வேதமுதலிய கலைகள் சாற்றலால். தாரகமந்திரமென்பது உடனே பாசத்தினின்றுந் தாண்டச்செய்யுமாற்றலுடைய மந்திரமென்றாம். அது தசரதனுடைய மூத்தமகன் பேரென்று சிலர்சாற்றுவர். அவனுடையபேரை எல்லாமுடையானாகிய பெருமானுபதேசித்தல் அடாது. அவனே பாசத்தின்மூழ்கி யோனிவாய்ப்பட் டமுங்கியும், பெண்டைப் பறி கொடுத்து அசுரன்வாதையிற்பட்டு நொந்தும், பின்னர்ப் பலவவதிக்குள்ளாகிச் சரயுநதியில் வீழ்ந்திறந்து மொழிதலால். அப்பெயர் இராமனென்பதேயாக, அது தசரதன் மகன்பேரென்பதுமடாது. சமதக்கினிக்கும், வசுதேவனுக்கு மப்பேரையுடைய பிள்ளைகளுளவாதலால். தசரதன் மகனைப்போலவே யேனையவிருவரும் விஷ்ணுவினுடைய அவதாரங்களாதலால், மூவரும் விஷ்ணுவினவதாரங்களேயாக, இருவரைக்கழித்துஒருவனைக் கொண்டது பிழையாம். சமதக்கினிமகன் விஷ்ணுவி னற்பாமிசமாதலும், வசுதேவன் மகன் விஷ்ணுவின் சுவேதரோமமொன்றாதலு நோக்கித் தசரதன்மகனைக்கொண்டதெனின், தசரதன் மகனுக்குப் பூர்வஞானமின்மையும், வசுதேவனிளைய சேயாகிய கண்ணனுக்குப் பூர்வஞானமுடைமையும் பெறப்படுதலால் மூவரையும்விடுத்துக் கண்ணனையேன் கொள்ளக்கூடாது? கண்ணன் பூர்வஞானமுடையவனாயிருப்பினும், அவன் விஷ்ணுவின் கறுப்புமயிரொன்றாதனோக்கிக் கழித்தனர்போலும். மற்றை யவதாரங்கள் சிங்கம், ஆமை, மீன், பன்றி குதிரையாதிகளாய் முடிதலா லவற்றையறவே யொழித்தனர்போலும், இவ்வாபாசங்களாலோரவதாரமுஞ் சால்புடைத்தன்றாம். இதனால் தசரதராமனை யெழுத்துவிடுத்தது தவறாய்முடிந்தது. அன்றியும், அவதாரபரமாகிய இராமமந்திரம் தாரகமாகிறபோது மூலமந்திரமாகிய நாராயணமந்திரம் தாரகமாகாததென்னை? மூலமந்திரத்துக்குத் தாரகத்வஞ் சித்தியாதபோது அவதாரமந்திரத்துக் கவ்வாதிக்கமுண்டாமென்பதெப்படி? மோக்ஷப்பிரதாயகமாகிய மூலமந்திரத்தைநோக்க இராமமந்திரத்துக்கு மோக்ஷப்பிராதானியத்து வமின்மையும், உடனே பாசவிச்சேதஞ் செய்யுந்தன்மையால் இராமதாரகத்தை நோக்க மூலமந்திரத்துக் கஃதின்மையும் வெளிப்படலால் ஒன்றைநோக்க வொன்றழிந்து இரண்டுமந்திரங்களு மவலமாதல்சாலும். இவ்வுண்மை விசாரத்தால் மூலமந்திரமுந் தாரகமந்திரமுமாகிய மோக்ஷமந்திரமொன்றே யாதல் பெறப்படும். அஃது ஏகாக்ஷரமாகிய பிரணவமென்று உண்மைநூலனைத்துங் கூறும். பிரணவம் தாரகமு மோக்ஷமந்திரமுமாயின், ஸ்ரீபஞ்சாட்சரம் மோட்சமந்திரமும் தாரகமுமாத விழுக்காமேயெனின், பிரணவமும், ஸ்ரீபஞ்சாட்சரமும் ஏகமேயாகிச் சூக்குமமும், தூலமுமாய் விளங்கிச் சூக்குமபஞ்சாக்கரம், தூலபஞ்சாக்கரம் என்று வெளிப்படலால் ஒன்றிலொன்று முரணாவாம். இவ்வுண்மை சூதசங்கிதையிற்காண்க. ஆகவே, ஸ்ரீ விசுவேசராண்டுபதேசித்தருளுவது தமது ஸ்ரீ பஞ்சாட்சரமாகிய பிரணவதாரகமென்பது நிச்சயிக்கப்பட்டது. இவ்வுபதேசத்தைப்பெற்று நீங்குமான்மாசிவசாரூப்பியமெய்தல் காசிகண்டமுதலிய நூல்களுரைத்தலால், அச்சிவப்பேற்றை யுதவுமந்திரம் பரசிவ

சம்பந்தமொன்றேயன்றி யிதரதேவதா சம்பந்தமொன்று மெய்தாமைதெளிக. மாதேவன் வடிவுற்றார்க்கு ஞானங்களோடு நல்கியெனவிச்செய்யுளிற் போந்தமையு மிதனைவிளக்கும். எனவே தன்னிடத்தி னிரியாணத்தைப்பெற்ற பேர்க்குத்தாரகோபதேசத்துடன், அதன்பிரயோசனமாகிய மகாதேவருடைய சாரூப்பியத்தையு மருளுந் தகைமைத்தென்பது வெளிப்படை. இன்னும் விரிக்கிற் பெருகும்.

## கங்காதேவிவணக்கம்.

மாற்றவளிடப்பான்மேவிவாழ்வதையுணர்ந்துவள்ளல்
போற்றுறும்வலப்பான்மேவிப்புரிந்துவந்தாடாநின்றோர்
சாற்றருங்கொடியபாவத்தளையழித்தறங்களெல்லா
மேற்றிநன்கருளுந்தெய்வக்கங்கையையிறைஞ்சல்செய்வாம்.

இ-ள். உமாதேவியார் அவ்பெருமானுடைய இடதுபாகத்திற் பொருந்தி வாழ்வதை யறிந்து அவருடைய வலப்பாகத்தையடைந்து சங்கற்பஞ்செய்து தன்பால்வந்து மூழ்குகின்றவர்களுடைய சொல்லுதற்கரிய கொடுமையை விளைக்கும்பாவமாகிய விலங்கைத்தறித்துப் புண்ணியத்தில் விடுத்துச் சமஸ்த சிவதருமங்களையும் அவர்கட்கு நன்மையுண்டாம்படி யநுக்கிரகிக்குந் தெய்வத்தன்மையுடைய கங்கைஎன்னும் நதீரூபப்பிராப்தியை யடைந்திருக்குமோர்பெண்கொடியைவணங்குவாம். எ-று. (கச)

கங்கையைப்பெண்ணென்ற தென்னையெனின், இமவானுக்கு மேனையென்னுந் தாய்வயிற்றில் குடிலையெனவும், உமையெனவு மிரண்டுபெண்கள் பிறந்தனரெனவும், அவர்களில் ஜ்யேஷ்டையாகிய குடிலையைச் சிவபத்தினியாகத் தேவர்க்கள் பிரம்ஹலோகத்திற்கு வரித்தபோது அவள் பிரம்ஹதேவரால் சபிக்கப்பட்டு நதீரூபப் பிராப்தியையடைந்து சத்தியலோகத்திலேதானே யிருந்தனளெனவும், பின்னர் பகீரதனால் வரிக்கப்பட்டுப் பூமியில்வந்தபோது சிவபெருமான் தரித்தருளினரெனவும் பாகவதம், பாரதம், இராமாயணமுதலியவற்றுள் கூறப்படுதல்காண்க. இவ்வுண்மையை யறியாதார் திரிவிக்கிரமனுடைய பாதநிஸ்ருதமாகிய சலத்தையே சிவன்தரித்தாரென்று கூறுவர். அது சமுத்திரகாமினியாய் விட்டமையும், சிவபெருமான் தரியாமையும் பாகவதம் பஞ்சமஸ்கந்தத்திற் பரக்கக்காணலாம். விரிவஞ்சிவிடுத்தாம். இவ்வுண்மை (கங்காதாரணப் பிரக்யானம்) என்னு நூலில் இனிது விளங்குமென்க.

## அகத்தியர்வணக்கம்.

ஒருமலைபிலத்துவீழவுரறிமிக்கார்த்துப்பொங்கி
வருமலைவயிற்றுச்செல்லமலர்க்கரங்கவித்திட்டேற்றுப்
பொருமலையொழிந்தோமென்றுபுவிமகள்களிப்பத்தென்னந்
திருமலையமருந்தெய்வச்செம்மலைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) விந்தமென்னு மோர்மலையின் செருக்கழிந்து பாதலத்திற் பதுங்கவும், மிக்ககோபங்கொண்டு பேரிரைச்சலோடு பொங்கிவருஞ் சமுத்திரமடங்கலுந் தமது திருவயிற்றுட்செல்லவும், முறையே தமது மலர்போலுந் திருக்கரத்தைமேலேவைத்தும், ஆசமனத்தின்பொருட்டு எற்றும் பூமியின் தென்பாகம் பாரமின்றித் தூக்கிக்கொண்டபோது பூமிதேவிக்குண்டாகிய துன்பந்தணிந்து களிக்கும்பொருட்டுத் தென்மலையென்னும் பொதிகையின் கண் ணெழுந்தருளியிருக்கும் தெய்வத்தன்மையுடைய அகஸ்தியமகாமுனிவரை வணங்குவாம். எ-று. ... ... ... (கரு)

## திருஞான சம்பந்தசுவாமிகள் வணக்கம்.

திருமடத் தமணரிட்ட செய்யதீ வழுதிமேனி
யுருகிடப் பற்றியங்கின் றெல்லையவ் வமணரோடு
கருகிடப் பற்றியன்னார் வயிற்றுளுங் கலப்பச்செய்த
பொருவரு முத்தீச்செல்வர் பொன்னடி சென்னிசேர்ப்பாம்.

(இ—ள்.) மதுராபுரியில் சைவமடாலயத்தில் திருக்கூட்டத்தோடெழுந்தருளியிருக்கும்போது, சமணர்கள் வஞ்சனையால் அம்மடத்தில்வைத்த செந்தீ அவ்விடத்தினின்று நீங்கி கூன்பாண்டியன் சரீரம் குழையும்படி சுரநோயாகப்பற்றச்செய்து அவன் வணங்கியபோது அவ்விடத்தினின்று நீங்கி அச்சமணர்கள் சபதங்கூறி நெருப்பிலிட்ட அவர்கள் சமயநூலெழுதிய எடுவினை விற்கருகி எரியும்படிசெய்து அவர் வயிற்றுள்ளும் பற்றச்செய்தருளிய சமானமில்லாத காருகபத்தியம், தக்ஷிணாக்கினி, ஆகவனீயம் என்கிற மூன்றக்கினிகளையும் விதிப்படிவளர்க்கும் சிவஞானச்செல்வராகிய திருஞானசம்பந்த சுவாமிகள் பொன்போன்றதிருவடிகளைச் சிரசிற்சூட்டிக்கொள்வாம். எ-று. (கசு)

மூன்று தீயைப் பாதுகாக்கின்ற பிராமணகுலத்தில் அவதரித்தவராகலின் அம்மடாலயத்தில்வைத்த நெருப்புவிலகி மூன்றிடத்திற்பற்றச் செய்தருளினா ரென்னும் விசித்திரந்தோன்றக்கூறினார்.

"திருமடத்தமணரிட்ட செய்யதீவழுதி மேனியுருகிடப்பற்றி"
என்பதற்குப் பிரமாணம்.

## திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம்.

திருவாலவாய் பண் கௌசிகம்.

திருச்சிற்றம்பலம்.

செய்யனேதிருவாலவாய் மேவிய
ஐயனேயஞ்சலென்றருள்செய்யெனைப்
பொய்யராமமணர்கொளுவுஞ்சுடர்
பையவேசென்று பாண்டியற்காகவே.

அப்பனலவா யாதியருளினல்
வெப்பன்தென்னவன் மேலுறமேதினிக்
கொப்பஞான சம்பந்தனுரைபத்துஞ்
செப்பவல்லவர் தீதிலர்ச்செல்வரே.

திருச்சிற்றம்பலம்.

"அங்கின்றொல்லையவ்வமணரோடு கருகிடப்பற்றி
யன்னார்வயிற்றுளுங் கலப்பச்செய்த" வென்பதை

அஞ்சுமுள்ளத்தராகியு மறிவிலாவமணர்
வெஞ்சுடர்ப்பெருந்தீயினில் விழுத்தியவேடு
பஞ்சுதீயினிற்பட்டது படக்கண்டுபயத்தால்
நெஞ்சுசோரவும் பீலிகைசோர்ந்திலர்நின்றார்.

வேறு.

"அருகர்தாமிட்டவேடுவாங்கச் சென்றணையும்போதிற்
பெருகுதீக்கதுவவெந்து."

என்று கூறிய பெரியபுராணத்திருவிருத்தங்களாலுணர்க.

## திருநாவுக்கரசுசுவாமிகள் வணக்கம்.

அரும்பிளமுலையாள்பாகத் தண்ணலாரினிதுமேய
திருப்புகலூருகப்பேர்யோகமேயென்றுசெப்பப்
பொருப்புமுள்ளுருகப்பாடிப் புகுந்துபேரின்பந்துய்த்த
விருப்புறுபுகழ்சர்ஞானின் வேந்தர்தாள் வணக்கஞ்செய்வாம்.

(இ-ள்.) தாமரை அரும்புபோலும் இளங்கொங்கைகளையுடைய பிராட்டியாரை இடப்பாகத்திலமைத்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சரணபுரம் என்னும் திருப்புகலூருக்குப் பிரதி நாமமானது சிவயோக புரமென்று சொல்லும்படி மலைகளும் உள்ளுருகத்தக்க திருத்தாண்டகத்தைத் திருவாய் மலர்ந்து சிவலிங்கப் பெருமானிற் கலந்து சிவானந்தப்பெருவாழ் வெய்திய மேலோர் விரும்பத்தக்க புகழையுடைய திருநாவுக்கரசு சுவாமிகள் திருவடிகளை வணங்குவாம். எ-று. (கஎ)

இசைக்கு மலைகளு முருகுமென்பது புராணப்பிரசித்தமாகலின் தேவாரப்பண்ணின் பெருமைதோன்றப் பொருப்பு முள்ளுருகப்பாடியென்றார்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் வணக்கம்.

போகமென்பனவருந்தல் பொருந்தன்மற்றவைகளுள்ள
வாகவோர்பகலினள்ளு மான்றதோரிரவினள்ளும்
பாகமார்பதஞ்சென்றேற்றும் பரிந்துசென்றூட்டீர்த்து
மேகநாயகனேசிற்றற் கியைந்தவர்துணைத்தாள்போற்றி.

(இ-ள்.) சிவபோகமென்பவைகள் அருந்தலும் பொருந்தலும் அவற்றின் உபகரணங்களைத் தேடலுமே யென்று பொருள்படும்படி நடுப்பகலிலும், அர்த்தராத்திரியிலும் வீடுகடோறுஞ் சென்று அன்னப்பிச்சைவாங்கி வந்து உண்பிக்கவும் விருப்போடு பரவைநாச்சியார் மனையிற் சென்று அவளுடலைத் தணியச்செய்து சேர்ப்பிக்கவும் ஒப்பற்றவராகிய சிவபெருமானே முன்னின்று ஏவல் செய்யும்படிக்கு இசைந்தவராகிய தம்பிரான் தோழரென்னுஞ் சுந்தரமூர்த்திசுவாமிகளிரண்டு திருவடிகளையும் நமஸ்கரிப்பாம். எ-று. (கஅ)

பொருந்தலாசைநீத்தோர்க்கே கடவுள் முன்னின்று அநுக்கிரகிப்பாரென்பது வேதாகமத்துணிபாயிருக்க இவ்வாறு பெருமான் முன்னிற்றல் கூடுமோ வெனின் திருக்கயிலாயத்தில் பிராட்டியாருக்குப் பணிவிடைசெய்து வந்த அனிந்திதை கமலினியென்னும் மாதரிருவரையும் சுந்தரமூர்த்தியடிகள் கண்டு விரும்பியபோது அம்மாதரும் விரும்பினமையால் நீவிர் பூமியிற்றென் றிசையிற்பிறந்து கூடி இன்பமனுபவிப்பீர்களென்று சிவபெருமான் திருவாய் மலர்ந்த கட்டளையைக்கேட்டு நடுங்கிய சுந்தரர் மனிதசரீரத்தை எடுத்து யான் மயங்கும்போது தேவரீரே எழுந்தருளி ஆட்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி திருவாக்களித்தமையால் சிவபிரான் முன்னின்று முடித்தாரென்றுணர்க.

## மாணிக்கவாசகசுவாமிகள் வணக்கம்.

இருபொருள்கல்வி செல்வ மென்பனவவ்விரண்டும்
பொருவருந் தம்பிராற்கே புணர்த்திமாலயன்முன்னோரு
ளொருவரும் புணர்தற்கொல்லா வுலப்பிலானந்தமுற்ற
வெருவரும் புகழ்சால் வாத வூரர் தாள்விரும்பிவாழ்வாம்.

(இ-ள்.) கல்விப்பொருள் செல்வப்பொருள் என்னும் பொருள்களிரண்டினையும் சமானமில்லாதவராகிய சிவபிரானுக்கே அர்ப்பணஞ்செய்துவிட்டு திருமால் பிரமன்முதலிய தேவருள் ஒருவரும் அடைதற்கரியதும் அழியாத நிலைமையதுமாகிய சிவானந்தப் பெருவாழ்வினைப்பெற்று விரும்பத்தக்க புகழிற் சிறந்த ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் திருவடிகளை விரும்பி வாழ்வாம். எ-று. (கசு)

திருவாசகமும் திருச்சிற்றம்பலக்கோவையாரும் அழகிய திருச்சிற்றம்பலமுடையாரே தமது அருமைத் திருக்கரத்தால் எழுதும்படிசெய்தலால் தம்பிராற்கே கல்வி புணர்த்தி என்றும் குதிரைவாங்கும்படி கொண்டுவந்த பொருள் முழுவதும் திருப்பெருந்துறையில் சிவாலயப்பணிமுதலிய சிவபுண்ணியங்கட்கே உபயோகித்தலால் தம்பிராற்கே செல்வம் புணர்த்தி என்றும் "பூமேலயனொடுமாலும் புகலரிதென் றேமாறிநிற்ப வடியேனிறுமாக்க" என்னும் திருவாசகத்துண்மையாதலின், மாலயன் முன்னோருளொருவரும் புணர்தற்கொல்லாவுலப்பிலானந்த முற்றவென்றுங் கூறினார்.

## தண்டீசர் வணக்கம்.

வேறு.

அன்பதற்கிட மாயவர்பிள்ளையா
ரெனபதற்கியை யத்திருச்சேய்ஞலூர்
முன்பதற்கணியா முளைத்தார்பதம்
வன்பதற்கிட மாற்றியுள்ளவருமே.

(இ-ள்.) உலகத்தில் அடியார்கள்செய்யும் அன்புக்கு இடமாக எழுந்தருளிய சிவபிரான், என்பொருட்டு உன் பிதாவின் கால்களை வெட்டினமையால் இனி உனக்கு நான் பிதா நீ புத்திரனென்று திருவாய் மலர்ந்தருளியதற்குப் பொருந்தும் வண்ணம் முன்னமே, முருகப்பெருமான் திருப்பெயரால் விளங்குந் திருச்சேய்ஞலூருக்கு அழகுண்டாகத் திருவவதாரஞ்செய்த சண்டேச்சுரநாயனார் திருவடிகள் கொடியகுணங்களை யொழித்து சற்குணங்களை வளர்த்து என்மனதில் வீற்றிருக்கும். எ-று. (உ0)

ஆன்மகோடிகள் மனம் வாக்குக்காயங்களால் செய்யும் அன்பை அவ்வவ்விடத்தறிந்து, அநுக்கிரகஞ்செய்பவர் சிவபிரானாகலின் அச்சிவபிரானை "அன்பதற்கிடமாயவ" ரென்றும், சுப்பிரமணியக்கடவுள் சூரபன்மனைச் சங்கரிக்கும் பொருட்டு எழுந்தருளியபோது பூதகணங்களோடு வீற்றிருந்து சிவபூசை செய்து சிவாநுக்கிரகத்தைப்பெற்ற திருச்சேய்ஞலூரில் அவதரித்து சிவபூசை புரிந்து திருக்குமார பதத்தைப்பெற்றவர் சண்டேச்சுரராதலின், "முன்பதற்கணியா முளைத்தா" ரென்றுங் கூறினார். சேய்நல்லூர் என்பது சேய்ஞலூரெனப் போலியாயிற்று. சேய்=முருகக்கடவுள்=பிள்ளை.

## அறுபத்துமூவர் வணக்கம்.

முறைகெழுதாதமார்க்க முதலியமார்க்க நான்கு
னிறையருடத் தமக்கொன் றேற்றமார்க்கங்கைக்கொண்டே
கறைதருபிறவிமாய்த்துக் கருதுபேரின்பமுற்ற
பொறைமலி யறுபானமூவர் பொன்னடி சென்னிவைப்பாம்.

(இ-ள்.) வேதாகமங்களில் முறைமையாகக் கூறிய தாசமார்க்கம் சத்புத்ரமார்க்கம் சகமார்க்கம் சன்மார்க்கம் என்னும் நான்கு மார்க்கங்களுள் சிவகடாக்ஷத்தால் தங்கள்தங்களுக்குப் பொருந்திய மார்க்கங்களைத் தவறாது அநுஷ்டித்து களங்கத்தையுடைய பிறவியை யொழித்து சிந்திக்கத்தக்க சிவாநுபூதிப் பெருவாழ்வையடைந்த சாந்தசீலராகிய அறுபத்துமூவரது பொன்போன்ற திருவடிகளைச்சிரசிற் சூட்டிக்கொள்வாம். எ-று. (உக)

## நமச்சிவாயமூர்த்தி வணக்கம்.

மழைமுகிறவழும்வெள்ளி மால்வரைநந்திப்புத்தேள்
விழைபரம்பரையில்வந்த மெய்கண்டான்வழிமிக்கோங்கக்

**கழைகமுகெனக்குலாவுங் கழனியந்துறைசைநாளுந்**
**தழைகுரு நமச்சிவாயன் சந்ததிவாழ்கமாதோ.**

(இ-ள்.) வருஷிக்கும் பருவமுள்ள மேகங்கள் தவழப்பெற்ற பெருமையுள்ள ஸ்ரீகைலாசகிரியில் நந்தியெம்பெருமானால் விரும்பத்தக்க திருமரபில் திருவவதாரஞ்செய்த மெய்கண்ட சிவாசாரியர் சந்ததி மேலுமேலும் வளர கரும்புகள் கமுகுமரங்களைப்போல் வளர்தற் கிடமாகிய வயல்களையுடைய அழகிய திருவாவடுதுறையில் சார்வகாலமும் மெய்ஞ்ஞானந் தழைத்தோங்கும் நமச்சிவாயதேசிகர் திருமரபு நீடூழிவாழ்க. எ-று. (உஉ.)

"**வெள்ளிமால்வரைநந்திப்புத்தேள் விழைபரம்பரை**" என்பதை **தேவர்பிரான்வளர்கயிலைகாவல்பூண்ட திருநந்தியவர்கணத்தோர்செல்வர் பாரிற், பாவியசத்திய்ஞானதரிசனிகளடிசேர் பரஞ்சோதிமாமுனிகள் பதியாம்வெண்ணெய், மேவியசீர்மெய்கண்டதிறலான்மாறு விரவுபுகழரு ணந்திவிறலார்செல்வத், தாவிலருண்மறைஞானசம்பந்தரிவரிச் சந்தானத் தெமையாளுந்தன்மையோரே.**

என்று சந்தானசாரியர்களிலொருவராகிய உமாபதி சிவாசாரியர் திருவாய்மலர்ந்தருளிய சைவசித்தாந்த நூல்களில் ஒன்றான சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானுமுணர்க.

## அம்பலவாணதேசிகர் வணக்கம்.

### வேறு.

**தூயவான்குணத்துப் பெரும்புகழமைந்த சுப்பிரமணியதேசிகனு**
**நேயமோடருகுநின்றுகண்டுவப்பநிறைபெருங்கருணையாற்பொல்லாத்**
**தீயனேன்சிரத்துந்திருவடிசூட்டிச் செயிர்முழுதொழித்தினிதாண்ட**
**பாயசீர்த்துறைசையம்பலவாண பரசிவற்கியாதுசெய்குவனே.**

(இ-ள்.) பரிசுத்தமும் கெம்பீரமுமுள்ள சத்குணசம்பன்னரும் சர்வலோகங்களும் பரவிய கீர்த்தியையுடையவருமாகிய இளையபட்டத்திருக்கும் சுப்பிரமணியதேசிகரும் அன்போடு சமீபத்திலிருந்து தரிசித்துக் களிப்படையநிறைந்த தயாவிசேஷத்தால் தூர்க்குணம் நிறைந்த கொடியவனாகிய எளியேன் தலையிலும் திருவடி தீட்சைசெய்து குற்றமுழுதையும் நீக்கி, பட்சத்துடன் ஆண்டருளிய திரிலோகங்களும் பரவிய சிறப்புள்ள திருவாவடுதுறையில் [வீற்றிருக்கின்ற பரமசிவசொரூபராகிய அம்பலவாண தேசிகரென்னும் சுவாமிகளுக்கு என்ன கைம்மாறு செய்வேன். எ-று. (உ௩.)

கைம்மாறு=பிரதி உபகாரம்.

## காசிரகசியம் செய்வித்த சுவாமிகள்.

### வேறு.

**ஆனதிருவாவடுதண்டுறை நமச்சிவாயனடிக்கடிமைபூண்டு, ஞான நெறியடைந்தவனற் காசியாத்திரைபலகாலயந்துசெய்தோ, னீன**

பினற்குணமனைத்து மோருருக்கொண்டெனப்பொலிவோ னெண்ணி லாத, மோனமுனிவரர்புகழப்பொலிதவச்சுப் பிரமணியமுனிவனென் போன்.

(இ-ள்.) மேலானகுளிர்ந்த திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருக்கும் நமச்சிவாய தேவருக்கு அடிமைபூண்ட காரணத்தால் சிவஞானநிலையைப் பெற்றவரும் உத்தமமாகிய காசியாத்திரையை விருப்பத்தோடு பலமுறை செய்தவரும் உத்தமகுணங்கள் யாவும் சேர்ந்து ஒப்பற்ற திருவுருக்கொண் டதென்று சொல்லும்படி விளங்குபவரும் ஞானனுஷ்டானத்தை யுடைய அளவு கடந்தபெரியோர் புகழும்படி தவத்தால் விளங்குபவருமாகிய சுப்பிர மணியத் தம்பிரானென்னும் திருநாமம்பெற்றவர். எ-று. (உச)

உாவுமலிகருங்கடல் சூழுலோகோபகாரமிதென்றுள்ளத்தோர்ந்து விரவுவடமொழியைமொழி பெயர்த்தெடுத்துச் செந்தமிழால்விளங்கு மாறு, கரவுதவிர்சிறப்புடைத்தா யறமுதனற்பயனளிக்குங்காட்சித்தாய, பரவுபுகழ்த்திருக்காசி மான்மியமாமந்தணத்தைபபாடுகென்ன.

(இ-ள்.) உறுதியுள்ள பெரியகடல் சூழ்ந்த பூவுலகத்தாருக்கு உபகார மிது வாகுமென்று மனத்திலுணர்ந்து களங்கமில்லாத சிறப்பினையுடைய தாய தர்மார்த்த காம மோக்ஷ மென்னும் நான்கு பிரயோசனத்தையும் கொடுக்கும் காக்ஷியினையுடையதாய் வியாபித்த புகழினையுடைய மேலான காசிமகிமையாகிய ரகசியம் கீர்வாணபாஷையிலுள்ளதை மொழிபெயர்த் தெடுத்துக்கொண்டு செவ்விய தமிழினால் யாவருக்கும் விளங்கும்படி பாடு வாயென்று கட்டளையிட. எ-று. (உரு)

## அவையடக்கம்.

வேறு.

அனையவன்மொழிந்தவார்த்தை யாருயிர்க்குறுதியாகும்
வினையமதுணர்ந்துபாடும் விதஞ்சிறிதுணரேனேனுந்
தனையில்பேராசைதூண்ட நாணெனுந்தளையினீங்கிப்
புனைதருந்தமிழினலேபாடிடப் புகுந்தேன்மன்னே.

(இ-ள்.) அச்சுப்பிரமணிய முனிவர்கூறிய வார்த்தை நிறைந்த ஜீவகோ டிகளுக்கு மோக்ஷத்தையுண்டாக்குகிற விநயசம்பத்தையறிந்து பாடும்வகை சிறிதும் அறியாதயானும் சமானமில்லாத பேராசையினால் தூண்டப்பட்டு நாணமென்னும் விலங்கை விடுவித்து அலங்கரிக்கும் செந்தமிழ்ப்பாவினாலே பாடத்தொடங்கினேன். எ-று. (உசா)

இதுவுமது.

மறையவான்றிமற்றை வருணருமாட்டியூட்ட
நிறையருள்சுரந்துபெய்ம்மா னிலவியகாசிவைப்பின்

முறைகெழுமந்தணத்தை மூதறிவினரேயன்றிக்
குறைபலவுடையயானுங் கூறுதல்வழக்கான்மன்னே.

(இ-ள்.) பிராமண வருணத்தாரன்றி மற்றைச்சாதியாரும் அபிஷேகித்து நிவேதனஞ்செய்ய, பேதமின்றி அவர்களுக்கு நிறைந்தகிருபை கூர்ந்து விசுவநாதர் விளங்குகின்ற காரணத்தால் காசித்தலத்தின் மகிமைதங்கிய ரகசியத்தை பேரறிவினையுடையாரே யல்லாமல் குணதோஷம் பலவாயுள்ள யானும் பாடுதல் முறைமையாகும். எ-று. (உஎ)

இதுவுமது.

இலக்கணம்வகுத்தசான்றோர் விதிவிலக்கிரண்டனோடு
விலக்கறவமைதியொன்று வேண்டினா ரேற்றுக்கென்னி
னலக்குணமில்லாத்தீய நாயினேனவின்றிடும்புன்
குலக்கவியெலாந்தள்ளாது கொள்ளுதற்பொருட்டேயன்றே.

(இ-ள்.) இலக்கணங்களை வரம்புசெய்த பெரியோர்கள் ஏற்படுத்திய விதிவிலக்கு இரண்டினோடு தள்ளக்கூடாத வழுவமைதியொன்றை ஏற்படுத்தினார்கள் யாதுக்கென்னில் நற்குணமில்லாத கொடிய நாயையொத்த சிறியேன் சொல்லுகின்ற அற்பமொழிகளமைந்த செய்யுள்களெல்லாம் விலக்கென்றுதள்ளாமல் விதியென்று ஒப்புக்கொள்ளுதற்பொருட்டேயாகும். (உஅ)

வேறு.

மொழிதருநைமிசவனத்துச் சவுநகமாமுனிமுதலாமுனிவர்கேட்ப
வொழிதருதீங்குடைவாதராயணன்செய் புராணமீரொன்பானுள்ளுங்
கழிதருமேன்மைப்பிரம கைவர்த்தமூன்றாம்பாகத்துமேய
பொழிதருதண்புனற்காசி மந்தணத்தைச்சூதமுநிபுகன்றானன்றே.

(இ-ள்.) நற்குணமுள்ள வேதவியாசமகாமுனிவர் திருவாய்மலர்ந்த பதினெண்புராணங்களுள் அதிக மேன்மையுள்ள பிரம கைவர்த்தமென்னும் புராணத்தில் மூன்றாங்காண்டத்தில் இருக்கின்ற பெருக்கமுள்ள குளிர்ந்தகங்காநதியை யுடைய காசிரகசியத்தை சூதமுனிவர் நைமிசாரண்ணியத்தில் மகிமைதங்கிய சவுநகமுனிவர் முதலாகிய முனிகணங்கள் கேட்கும்படி கட்டளையிட்டனர். எ-று. (உகூ)

அனையமுனிவரனுரைத்தவிருபத்தா றத்தியாயமுநன்காய்ந்து
நினையமிளிர்செந்தமிழாலுரைத்தனன்மற் றிதையுணர்வோர்நெடும்பார்
மீது, புனையமிகுசெல்வமொடு வாழ்ந்தயனுதியர்பதத்தும்போகமார்ந்து
தனையலதொன்றேவ்வாத சிவபதம்பின் புகுந்தின்பஞ்சார்வர்மாதோ.

(இ-ள்.) அச்சூதமகாமுனிவர் திருவாய்மலர்ந்த இருபத்தாறு அத்தியாயங்களையும் செவ்வையாக ஆராய்ந்துணர்ந்து சிந்திக்குந்தோறும் அறிவை

விளக்குகின்ற செந்தமிழ்ப்பாவினல் கூறினேன் இதை ஓதல் கேட்டலால் அறிபவர்கள் பெரிய பூவுலகத்தில் அகண்ட சம்பத்தோடு வாழ்ந்திருந்து மறுமையில் பிரம விஷ்ணு முதலாகிய தேவபதங்களில் அளவிறந்தபோகங்களை யனுபவித்து பின்னர் தனக்குத்தானே சமமாகிய ஸ்ரீ கயிலாசபதத்தையடைந்து சிவாநந்தானுபவத்தைப்பெறுவார்கள். எ - று. (௩௰)

## இந்நூல் செய்தவர் மகிமையும் அவர்பெயருங் கூறுகின்றது.

ஓதுபெரும்புகழ்க்காசிப் புராணமினிதுரைத்தா னுறையூர்வா ளொளிபுற்றூர்குறுக்கைவிளத்தொட்டி, கோதுதவிர்தருமண்ணிப்ப டிக்கரைமாமயிலை கோயிலூராற்றூராரூர்கண்டதேவி, போதுமலிபு னற்றனியூர்சூரையிராறென்னப் புகலிணைய தலப்புராணந் தமிழிற்பு னைந்தோன், மீதுபொலிதிரிசிராமலையமரும் பெரியோன் மீனாட்சிசுந்த ரநாவலன்புலவரேறே.

(இ-ள்.) சாதுக்கள் எடுத்தோதத்தக்க விசேஷ மகிமையுள்ள காசிரகசி யத்தை விருப்பத்தோடு தமிழ்ப்பாவாகச்செய்தவர் யாவரெனில் உறையூர், வாளொளிபுற்றூர், திருக்குறுக்கை, விளத்தொட்டி, மண்ணிப்படிக்கரை, திரு மயிலாப்பூர், கோயிலூர், ஆற்றூர், திருவாரூர், கண்டதேவி, தனியூர், சூரை என்னும் பன்னிரண்டு திருப்பதிகளுக்கும் தலபுராணங்களை, தமிழினாற் செய்தவரும் திரிசிராப்பள்ளியில் விருப்போடுவசிக்கும் பெரியவரும் மீனா ட்சி சுந்தரநாவலரென்னும் திருப்பெயர்பெற்று, புலவரேறுயுள்ளவருமாம். எ - று. (௩௧)

பாயிரமுற்றும்.

திருச்சிற்றம்பலம்.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# குருபத்தி சொரூப மூரைத்த

## அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

கமலிவ வளத்தான்மிக்க நைமிசவனமென்றோதுந்
தலமலிவாழ்க்கைபெற்ற சவுநகமுனிவராதிக்
குலமலிமுனிவரெல்லாங் குழீஇ யிருந்தருளினுய்க்கும்
புலமலிசூதமேலோற் பார்த்திதுபுகலலுற்றார்.

(இ-ள்.) இன்பமிகுந்த வளப்பத்தில் மேலாகிய் நைமிசாரணியமென்று சொல்லும் (பரிசுத்தமுள்ள) இடத்தில் நிறைந்த (சிவயோக) வாழ்வையடைந்த சவுநகமுனிவர்முதலிய ரிஷிகூட்டங்கள் யாவரும் கூடியிருந்து, அடுத்தவர்களைத் திருவருள் மார்க்கத்திற் செலுத்துகின்ற பூரண ஞானத்தையுடைய மஹாபுருஷரான சூதமுனிவரைப் பார்த்து இதைச் சொல்லத் தொடங்கினர். எ று. (க)

அராவணையவன் கூறென்னு முனிவரனருளப்பெற்றுப்
புராணமென்றுள்ள யாவும் புகரறத்தெளிந்த மேலோய்
கராசலத்துரிவைபோர்த்த கண்ணுதற் பெருமான்மேய
தராதலப்பயனுங்காசி மான்மியஞ் சாற்றல்வேண்டும்.

(இ-ள்.) (ஆதி) சேஷ சயனத்தையுடைய விஷ்ணுதேவர் அம்சம் என்னும் வியாச மகாமுனிவரால் உபதேசிக்கப்பெற்று புராணங்கள் யாவையும் களங்கமறத் தெரிந்துள்ள பெரியோரே (தாருகாவனத்து ரிஷிகளால் விடுத்த) யானைத்தோலைப் போர்வையாகக் கொண்ட நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் வீற்றிருக்கப்பெற்ற பூமியிலுள்ள தலங்களுக்குப் பிரயோசனமான காசிதலத்தின் மஹிமையைத் திருவாய்மலரவேண்டும். எ-று. (உ)

ப. ம. புராணமென்றுள்ள யாவுமென்றது பதினெண்புராணங்களையும் உபபுராணங்களையுமாம்.

விதிமுதலெவாக்கு மாதி பீடமாய் விளம்பினலு
மதிசெயும் பரமஞானம் வயக்குகாரணமாய் மிக்குப்
பொதிதருபோகமெல்லாம் புணர்ப்பதாயுள்ளகாசிப்
பதியின்மான்மிய முகத்தின் றருமமும் பகருமென்பார்.

(இ-ள்.) பிரமாதி தேவர்களுக்கு முதற்பீடமாயும், தன்பெயரைச் சொன்ன அளவினாலும் யாவராலும் மதித்தலைச் செய்விக்கும் சிவஞானம் விளக்குதற்கு காரணமாகியும், அதிகமாக நிறைந்த இம்மை மறுமை வீடு என்னும் போகங்களை அநுபவிக்கச் செய்வதாயுமுள்ள காசித்தலத்தின் மான்மியம் வாயிலாகத் தருமங்களைக் கட்டளையிடவேண்டுமென்றனர். எ-று. (ங)

பதிபசுபாசங்களை மதித்தலைச்செய்யும் பரமஞானமென்பதாம்.

அறத்தினுக்குறவாயுள்ள யுகமவற்றளவுசெய்கை
திறத்தின்முன்னுரைப்பயாங்க டெளிந்தனமதான்றுவெய்ய
மறத்தினுக்குறவாய்நன்குந் தீங்குஞ்செய்கலியின்மாண்பு
முறத்தெளிதரமுயன்றோ முரைத்தருளையவென்றார்.

(இ-ள்.) தருமத்துக்குச் சிநேகமாயுள்ள யுகங்களையும் அவற்றினளவையும் அவற்றின் செய்கையையும் முறையாக தேவரீர் பூர்வத்தில் திருவாய் மலர யாங்கள் தெரிந்தோம். அதுவல்லாமல் கொடிய பாவத்துக்குச் சிநேகமாய் நன்மையுந் தீமையுஞ் செய்தற்கு இடமாயுள்ள கலியுகத்தினது இயல்பையும் உண்மையாகத் தெரிந்துகொள்ள முயற்சித்தோம் ஐயனே! உரைத்தருளவேண்டுமென்றனர். எ-று. (ச)

முனிவரர் வார்த்தைகேட்டு முகமிகமலர்ந்தானாகி
வனிதைமார்பினன் கூறென்னும் வாதராயணன்பாற்கேட்ட
புனிதமிக்காயகேள்விப் படியதுபுகல்வேனீவிர்
கனிவொடுகேண்மினென்று கட்டுரைத்திடுவான்சூதன்.

(இ-ள்.) சவுநகாதிமுனிவர் வார்த்தைகளைக் கேட்டு (சூதமுனிவர்) முக மலர்ந்தவராகி இலக்குமியை மார்பிலுடைய விஷ்ணு அம்சமென்று சொல்லத்தகும் வியாசமுனிவரிடத்துக் கற்றுணர்ந்த பரிசுத்த மிகுந்த கேள்விப்படி தெரிவிக்கின்றேன் நீங்கள் அன்போடு கேளுங்களென்று கட்டளையிடுகின்றனர். எ-று. (ரு)

முன்னமோர் கற்பந்தன்னின் முதுதிரைப் பரவையாவும்
பின்னமே வாமலொன்று பட்டெழீஇப் பெருகிற்றாக
வன்னதனுப்பண்மாயோ னறிதுயிலமர்ந்தானன்று
னின்னறீருந்திநின்று மெழுந்ததோர் தெய்வக்கஞ்சம்.

(இ-ள்.) பூர்வம் ஒரு கற்பத்தில் மிகுந்த அலைகளையுடைய சமுத்திரங்கள் யாவும் பின்னப்படாமல் ஒன்றாக மேலே யெழுந்து பெருகியது அதன் மத்தியில் விஷ்ணுதேவர் அறிதுயில் அமர்ந்தனர் அவரது இன்பமயமாகிய நாபியிலிருந்து ஓர் தெய்வத்தாமரை முளைத்தது. எ-று. (சா)

"அறிதுயில்" என்பது யோக நித்திரை.

அன்னகாரணத்தினாலே யக்கற்பம்பதுமகற்ப
மென்னவோர்நாமம்பூண்டன் றெழுந்தவப்பதுமதின்றும

பொன்னவிர்கடுக்கைவேணிப் பூரணனருளினாலே
நன்னலத்துலகந்தோற்று நான்முகன் றோற்றினால்.

(இ-ள்.) அந்தக் காரணத்தினால் அக்கற்பம் பதுமகற்ப மென்றோர் பெயர் பெற்றது. உண்டாகிய அத்தாமரை மலரிலிருந்து பொன்போலும் விளங்குகின்ற கொன்றைமாலிகை யணிந்த சடாபாரத்தையுடைய சிவபிரானது கருணையினாலே கெடாத வின்பத்தை யடைதற்குரிய பிரபஞ்சத்தை யுண்டு பண்ணும் பிரமன் பிறந்தனன். எ-று. (எ)

பொன்னையுமருட்டுந்தேசிற் றோற்றியபுகழ்சால்வேதன்
றன்னையுமேதுவான தலைவனையுந்தேறா
வென்னைநஞ்செயலென்றுன்னி யெழுந்துமால்பாதம்போற்ற
வன்னைநேரனையான்மைந்தற் கார்வமோடறையலுற்றான்.

(இ-ள்.) பொன்னொளியும் மயங்கத்தக்க பிரகாசத்தோடுண்டாகிய மிகுந்த புகழையுடைய பிரமன் தன்னையும் தானுண்டாதற்குக் காரணமாகிய சிவபெருமானையுந் தெளியாதவனாகி அடியேன் செய்யத் தக்கது யாதென்று சிந்தித்தெழுந்து விஷ்ணுமூர்த்தியின் பாதத்தை வணங்க தாயையொத்த விஷ்ணுமூர்த்தி தனது குமாரனாகிய பிரமனுக் கன்போடுஞ் சொல்லத் தொடங்கினர். எ-று. (அ)

மைந்தகேள் பிரமனென்று வழங்குவதுனக்குநாம
மைந்தலையரவம்பூண்ட வண்ணலே நினக்குமெற்கும்
பைந்தழைப்பொழில்சூழெல்லாப் பொழிற்குங்காரணங்காண்பற்றி
நைந்தழியாமலெல்லாம் படையெனநவின்றானன்றே.

(இ-ள்.) குமாரனே கேட்பாயாக பிரமனென்றுனக்குப் பேர் வழங்கக் கடவது ஐந்துதலைகளையுடைய சர்ப்பாபரணராகிய சிவபிரானே ? உனக்குமெனக்கும் பசிய இலைகளையுடைய சோலை சூழ்ந்த எல்லா உலகங்களுக்குங் காரணராகும் இதைக் காண்பாயாக அதனால் நீ கர்த்தாவாக அபிமானித்து எண்ணி அழிந்துபோகாமல் யாவையுமுண்டாக்குவாயென்று விஷ்ணுமூர்த்தி கட்டளையிட்டனர், எ-று. (கூ)

பொழில் என்பதற்குலகென்பதை:

"ஏழுடையான் பொழில்" என்ற திருக்கோவையாருக்கு நச்சினார்க்கினியருரையா லுணர்க.

மாயவனவின்றவார்த்தை மலர்மகன்விருப்பிற்கேட்டு
நேயமிக்குடையதந்தாய் நீயுரைத்திட்டவாறே
யாயதோர்சிருட்டியெவ்வா றாக்குவனருடியென்னப்
பாயநீர்ப்படுக்கையன்னோ னின்னதுபகர்தலுற்றான்.

(இ-ள்.) திருமால் சொன்னவார்த்தையைப் பிரமன் அன்புடன் கேட்டு என்னிடத் தன்பு மிகுந்த பிதாவே தேவரீர் மொழிந்தபடி யாகவேண்டிய

(இ-ள்.) தேகாபிமான மில்லாதவரும், கெடாத நன்மையுடையவரும் வலிமையுள்ள எமதண்டனை நீங்கினவரும், காமததைவென்ற சாந்தசீலரும் பஞ்சாக்கர செபமமூர்திய மனமுடையோரும், சமுத்திரம் புரண்டாலும் சிறிதுங்கலங்காத சத்தியஞானத்தை யுடையோரும். எ-று. (௧௭)

கனவினுநீறுகாணுக் கைதவக்கொடியோரதம்மை
மனநெகச்சம்சாரத்தின் வாஞ்சையுற்றழுந்துவோரை
முனகர்மற்றையரைப்பற்றி முருக்கிடுங்கருமங்காலந்
* தனகமைகுணமிம்மூன்றுஞ் சாதரச்சாந்தசீலர.

(இ-ள்.) சொப்பனத்திலும் விபூதியைக்கண்டறியாத வஞ்சகமுள்ள துஷ்டடர்களையும், மனந்தளரும்படி குடும்பப்பாதுகாப்பில் அபேக்ஷைவைத்து அழுந்திக்கிடப்பவர்களையும், மூடர்முதலாயினோரையும் சம்பந்தித்து காலதத்துவமும் தீவினையும் வருத்தஞ்செய்யும் அஞ்ஞானததால் உள்ளக்களிப்பையுடைய மேற்சொன்ன மூன்றுகுணங்களையும் பொருந்தாத உபசாந்த சீலர்கள் எனது காலத்திலுண்டாவார்கள். எ-று. (௧௮)

என்றதுமற்றைமூன்று மியங்குதங்காளுண்மேவு
கின்றமைதக்கவாறே கிளத்தலுமலரோனோர்ந்து
நன்றமையுகங்காளுங்க ளதிகாரந்தக்க
வென்றிடநடத்துமென்று னவ்வுகத்தியல்புங்கேண்மின்.

(இ-ள்.) கிரேதாயுகதெய்வம் இவ்வாறு சொன்னது மற்றை மூன்றுயுகங்களும் தத்தங்காலங்களில் நடக்கின்றமையைத் தக்கபடி சொன்னபோது பிரமதேவன் ஆராய்ந்து நன்மையுள்ளயுகங்களே உங்களுடைய காலத்துக்குத் தக்க அதிகாரத்தை வெற்றிபெற நடத்துங்களென்றனர் அந்த யுகங்களின் இயற்கையைக் கேட்பீர்களாக. எ-று. (௧௯)

சத்தியஞ்செபவடங்கைத் தாங்கிமெய்ஞ்ஞானமேனிப்
பத்திவைராக்கியச் † சாலிகைபடிதரப்புனைந்து
நித்தியசுகுணமுக்க ணிமலனைத்தியானஞ்செய்து
மெத்தியவருளினமேவு ம விளம்பியகிரேதமாதோ.

(இ-ள்.) கிரேதாயுகதெய்வமானது உண்மைப்பொருளை விளக்கும் செபமாலையைக் கையிலே கொண்டு பரஞானமயமான திருமேனியோடு பத்திவைராக்கியமென்னுங் கவசம் பூண்டு நித்தியராகவும் சுகுணராகவும் மூன்றுகண்களையுடையவராகவும் நிர்மலராகவும் உள்ள சிவபெருமானைச் சிந்தித்து விரும்பத்தக்க திருவருளில் அடங்கி நிற்கும். எ-று. (௨௰)

சாதுநீர்மையரேகொள்ளுஞ் செபவடஞ் ‡ சிருக்குத்தாங்கிக்
கோதுதீர்தருமமேனி குலவுறக்கொண்டுநாளு
மோதுபேரறத்தின்சாபே யுற்றினிதிருக்குநாளுந்
தீதுதீர்தருமிரண்டா முகமெனுந்தெய்வமம்மா.

---

* தனகு=உள்ளக்களிப்பு. † சாலிகை=கவசம். ‡ சிருக்கு=நெய்த்துடுப்பு.

(இ-ள்.) களங்கம் நீங்கிய இரண்டாவதென்னும் திரேதாயுக தெய்வமானது குற்றமில்லாத தருமத் திருமேனியை விளங்கும்படி கொண்டு சாதுத் தன்மை உடையோர்களால் கொள்ளப்படுகின்ற செபமாலிகையும் துடுவையையும் கையிற்கொண்டு பெரியோர்கள் எடுத்துரைக்கத்தக்க தருமசம்பந்தத்தை அடைந்து சந்தோஷங்கொண்டிருந்தது. எ-று. (உ௧)

வரிசிலைகொடுங்கூர்வாளி வயங்குவாள் கட்டுவாங்கம்
பரிவுறவேந்திச்சார்தப் பற்றின்றிப்புறம்பாவங்க
ளுரியமெய்வாய்ந்துதோன்றுங் குரோதமோடுறையாநிற்கு
மரியநூலுணர்ந்தோர்மூன்று முகமெனுமண்ணற்றேவே.

(இ-ள்.) அருமையான கலைகளை அறிந்தோர்களையுடைய மூன்றாவதென்னும் துவாபரயுக தெய்வமானது வரிந்து கட்டிய வில்லையும் கூர்மையுள்ள கொடிய பாணங்களையும் ஒளிபொருந்திய வாளையும் கட்டுவாங்கத்தையும் பிரியத்துடன் ஏந்திக்கொண்டு சார்த சம்பந்தமில்லாமல் புண்ணிய பாவங்கலந்த சரீரத்தோடு மேலும் மேலும் தோன்றுகின்ற குரோதத்தையுடையதாகி இருந்தது. எ-று. (உஉ)

அறம்படுகுறிப்பொன்றானு மடைவதற்கரியதாய
மறம்படுமேனிவாய்ந்து வலக்கையானுவுமற்றை
நிறம்படுமிடக்கையாற்றன் குறியையுநிகழப்பற்றிப்
புறம்படுகொடியநோக்கும் பொங்குபேய்முகமுந்தாங்கி.

(இ-ள்.) நான்காவதென்னும் கலியுக தெய்வமானது தருமக் குறிப்பு ஒரு வகையிலுங் காண்பதரியதாகிய பாவத்தையே உடம்பாகப்பெற்று வலதுகையால் நாக்கினையும் இடது கையால் ஆண்குறியையும் பிடித்துக்கொண்டு புறம்பே பார்க்கின்றகொடிய கண்களையும் பேய் முகத்தையும் உடையதாகி. எ-று. (உ௩)

சத்தியஞானாநந்த தற்பரசிவன்றாணீத்துப்
பத்திமற்றுள்ளவாய பசுக்கள்பால்வைத்தவித்தை
பொத்தியகவசத்தோடும் பொலியுநாலாவதென்று
புத்திமிக்கவருரைக்கப் பொலிகலியுகந்தான்மன்னோ.

(இ-ள்.) போகக்காமிகளால் எடுத்துப் புகழத்தக்க மேற்சொல்லிய கலியானது சச்சிதாநந்த சொரூபரும் சுயம்பிரகாசருமான சிவபிரானுடைய திருவடிகளில் அன்புவையாமல் பசுக்களாகிய மற்றையோரிடத்தில் அன்புவைத்துஅஞ்ஞானமான கவசத்தைப் பூண்டு விளங்கிக்கொண்டிருக்கும். எ-று. (உ௪)

அன்னவெங்கலியெழுந்தாங் கறைந்தசின்னங்களோடும்
பன்னருமறைமுற்றோர்ந்த பனவன்முனடிக்குந்துள்ளு
மின்னலங்கடலுற்றென்ன வெய்துயிர்த்தெழுந்துவீழுந்
தன்னமுமுவகையின்றி யழுந்தழைதரநகைக்கும்.

(இ-ள்.) அப்படிப்பட்ட கொடியகலியானது மேலேகூறிய அடையாளங் களோடு சொல்வதற்கரிய வேதங்கள் முழுவதும் அறிந்த பிரமதேவர்முன்பாகக் கூத்தாடும் துள்ளும் துன்பக்கடலில் விழுந்தது போன்று பெருமூச்சுவிட்டு எழுந்து கீழேவிழும் அற்பமுங் களிப்பில்லாமல் அழுதுகொண்டிருக்கும் பின்பு மிகவும் சிரிக்கும். எ-று. (௨௫)

கொடுங்கலியினையசெய்யக் குருமலர்த்தவிசின்மேலா
னெடுங்கலிலதனைநோக்கி யுரைப்பரும்விகாரமேவிப்
பிடுங்கருநாணம்போக்கி யென்முனடித்தல்பெட்டாய்
விடுநகுணத்தவவிந்நின்று வெளியிடம்போதியென்றான்.

(இ-ள்.) கொடுமையுள்ளகலி இவ்வாறுசெய்ய நிறம்பொருந்திய தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவர் அடக்கமில்லாத அக்கலியினைப்பார்த்து சொல்லுதற்கரிய விகாரங்கொண்டு நீக்கப்படாத நாணத்தைவிட்டு என்முன்னே விரும்பி யாடுகின்றனை குணங்கெட்டவனே இவ்விடத்தில் நின்று வெளியே போவாயென்றனர். எ-று. (௨௬)

என்றலுமென்னையெண்ணு தென்சொனுமையவென்றன்
பொன்றலில்குணத்தையின்னே புகலுவன்கேட்டியென்று
மன்றநித்திரைசெய்வோருங் கலகத்துமனமிக்கோருங்
கன்றலுற்றயலான்பன்னி கதிர்முலையவாவுவோரும்.

(இ-ள்.) இப்படியென்று பிரமதேவர் சொன்னபோது எனது சுபாவத்தை யோசியாது ஐயரே யாது கூறினீர். கெடுதலில்லாத எனது குணத்தை இப் போது மொழிகின்றேன் கேட்பீரொன்று கலிசொல்லுகின்றது அதிக நித்திரை செய்பவரும் கலகப்பிரியரும் காமவிகாரங்கொண்டு பிறன்மனையாளது பூரித்த குஜங்களை விரும்புவோரும். எ-று. (௨௭)

பரதிரவியங்கொள்வோருந் துரோகமேபயிலுவோரும்
விரவியவஞ்சமாதி மித்திரபேதமீறு
வுரவிலித்தொழில்செய்வோரு முறவெனக்காவர்கண்டாய்
மாபிறுச்சிரமமெல்லாம் வஞ்சமாயுறுமென்னுளில்.

(இ-ள்.) அன்னியர்பொருளை வஞ்சனையால் அபகரிப்பவரும் துரோகசிந்தை யுடையவரும் பொருந்திய வஞ்சனை முதல் மித்திரபேத மீறுகவுள்ள அஞ்ஞான கிர்த்தியங்களைச் செய்வோர்களும் எனக்கு இஷ்டராவார்கள் மேலும் எனது நாளில் வருணாச்சிரம நிலைகள் யாவும்கபடமாக முடியும். (௨அ)

அன்றியும்பரதகண்டத் தடியனேற்கிடமிலாமல்
வென்றியென்பகைவர்செய்வார்வெளிக்கொடெங்குறுவேனென்று
கன்றியகலியுரைப்பக் காகுத்தனுந்திவந்தோ
னென்றியபகைவரியாவ ருரையெனக்கலியுரைக்கும்.

(இ-ள்.) அல்லாமலும் பரதகண்டத்தில் ஜெயமுள்ள எனது விரோதிகள் அடியேன்வசிக்க யிடமில்லாமற் செய்வார்கள் வெளிப்பட்டு எவ்விடத்தே போ வேனென்று கலிவருத்தத்தோடுசொல்ல திருமால் நாபிக்கமலத்திற் பிறந்த பிரம தேவர் உண்டாகிய விரோதிகள் யாவர் சொல்வாயென்ன கலியுகதெய்வம் சொல்லுகின்றது. எ-று. (௨௯)

பரவியகாலரும் பண்டிதராலுந்தேரு
வுரவியலெனக்குமாற்று ருறுபுகழ்க்காசிநாமம்
வரமலிகஙகைநாம மர்தேவநாமஞ்சொல்வோர்
விரவியசிவபுராணம விருப்பொடு படிப்போர்கேட்போர.

(இ-ள்.) எவ்விடத்திலும் விரிந்த காலதேவதையாலும் வித்துவான்களாலும் தெளியப்படாத வலிமையுள்ள எனக்கு விரோதிகள், மிகுபுகழையுடைய காசியின் பெயரையும் சிரேஷ்ட்டம் நிறைந்த கங்காநதியின் பெயரையும் சிவநாமத்தையும் சொல்பவர்களும் வியாபகமுள்ள சிவபுராணங்களை விருப்போடு வாசிப பவர்களும் கேட்பவர்களும். எ-று. (௩௰)

வீறுகொண்டெழுந்ததாய வேதாந்தசித்தாந்தத்து
மாறுகொண்டிடாமையுற்றோர் மனைமகவாஞ்சையற்றோர
கூறுகொண்டெழுந்ததாய வறமெலாங்குலவச்செய்வோர்
வேறுகொண்டெழுந்தமற்றை விடயவாதனைகழிப்போர.

(இ-ள்.) மேன்மையுள்ள வேதாந்தப் பொருளிலும் ஆகம சித்தாந்தப் பொருளிலும் பேதபாவனை கொள்ளாதவர்களும் பெண்டிர் பிள்ளைகளிடத்து இச்சையில்லாதவர்களும் வெவ்வேறாகிய தருமங்களை எல்லாம் விளக்கமுறச் செய்பவர்களும் நானாபேதமான விஷய வாதனையைக் கழிப்பவர்களும். எ-று. (௩௧)

இவரெலாம்பகைவரென்ன வின்னகைபுரிந்துவேத
னவரெலாம்பகைவரேயென் றறைந்ததுமெய்யாமேனும்
பவாவிராவியதுபோலும் படர்சடைப்பரன்சாரபுற்ற
தவாவிராவுவரோநின் றுற் செயப்படு*தருப்பநாளும்.

(இ-ள்.) இவர்களெல்லாம் எனக்கு விரோதிகளென்று கலியுக தெய்வஞ் சொல்ல பிரமதேவர் நகைத்து மேற்சொன்னவர்களெல்லாம் பகைவரென்று நீ சொல்லியது உண்மையாயினும், பிறவிச் சம்பந்தமுடையவர்களைப்போல விரிந்த சடையையுடைய சிவபெருமானது திருவருட்சம்பந்தமுள்ள பெரியோர் அடைவார்களோ உன்றுற்செய்யப்பட்ட வீம்புச் செய்கைகளை. எ-று. (௩௨)

சிவனடிக்கன்புவைபபோர் சிவதருமங்கள்செய்வோர்
சிவனமர்காசிவாழ்வோர் திர்த்தயாத்திரையுண்மேலாஞ்
சிவனருள்விராவுங்கங்கா தீர்த்தமாடிடுவோரபோற்றிச்
சிவனடியருச்சிப்போரகள் குருபணிவிடைசெய்வோர்கள்.

(இ-ள்.) சிவபெருமான் திருவடிக்கண்ணே அன்பு செய்பவர்களும் சிவ தருமங்களைச் செய்பவர்களும் சிவபிரான் விரும்பத்தக்க காசிப்பதியில் வசிப் பவர்களும் தீர்த்தயாத்திரைக்குள் மேலாகிய திருவருள் வடிவமுள்ள கங்கா தீர்த்

* தருப்பம = அகங்காரமெனபவருமுளா.

தத்தில் ஸ்நானஞ்செய்பவர்களும் வணங்கி சிவபிரான் திருவடியில் பூஜைசெய்பவர்களும் குருபணிவிடை செய்பவர்களும். எ-று. (௩௩)

இன்னபஃறிறத்தாரெல்லா மெய்துறூர்நினதுதீமை
மன்னமற்றொருநீகால மலமெனப்பொலிதலாலே
வுன்னதிகாரத்தேனோ ருட்பட்ல்சரதமேனு
மென்னருங்காசிவைப்பி லிருந்திடிற்றீமையில்லை.

(இ-ள்.) இத்தன்மையான பலவாயுள்ள புண்ணியஞ் செய்பவர்களெல்லாம் உனது தீமைக்குடன்பட மாட்டார்கள் நீ காலமலமென்று பெயர்பெற்று நிலையாக விளங்குதலால் மற்றவர்கள் உனது அதிகாரத்துக்குட்பட்டிருப்பது உண்மையாயினும் எனக்குப் பிரியமுள்ள அரிய காசித்தலத்தில் வாசஞ்செய்வார்களானல் அவர்களைத் தீமையணுகாது. எ-று. (௩௪)

காசியிலிருத்தன்முற்று தெனிலொருகணப்போதேனு
மாசிலாசிரியன்பூசை யாற்றிநன்கமர்தல்வேண்டும்
பேசியகுரவன்பூசை பெட்டலும்பன்னாள்செய்த
மாசில்புண்ணியத்தாலன்றி வருவதின்றறிதிமைந்த.

(இ-ள்.) காசிப்பதியில் நிரந்தரம் வசிக்கமுடியாதென்றால் களங்கமற்ற குரு பணிவிடைசெய்து ஒரு கணப்போதாயினும் பிரியத்துடனிருக்க வேண்டும். சொல்லுகின்ற அக்குரு பணிவிடையில் விருப்பம் வருதலும் பலகாலமுஞ் செய்த குற்றமற்ற சிவபுண்ணியத்தா லல்லாமல் வேறுவகையில் நேரிடாதென்று குமாரனே அறிவாயாக. எ-று. (௩௫)

குருபணிவிடையினலே குவலயத்தறமுன்னும
வொருவரும்பயன்களுன்கு முறுவதற்கையமில்லை
யருவருப்பொழியவாசான் பணிவிடையவர்ய்ச்செய்தோரே
பொருவருந்தருமமெல்லாம் புரிந்தபுண்ணியரேயாவார்.

(இ-ள்.) குருபணிவிடை செய்தலினாலே உலகத்து நீங்குதற்கரிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பிரயோசனமும் கிடைப்பதற்குச் சந்தேகமில்லை. அருவருப்பில்லாமல் ஆசாரியர் பணிவிடையை விரும்பிச் செய்தவர்களே சமானமில்லாத எல்லாத்தருமங்களையுஞ் செய்த புண்ணியமுடையராவார்கள். எ-று. (௩௬)

என்றுமாமறையோன்கூறக் கலியிணையடிதாழ்ந்தேத்தி
நன்றுநீயுரைத்தாயைய குருவெனநவின்றநாம
மொன்றுகாரணமோவிட்ட குறிகொலோவுணர்த்தியென்ன
வன்றுநான்முகத்தோனாய்ந் ததுவிரித்துரைக்கலுற்றான்.

(இ-ள்.) இப்படியென்று மகிமையுள்ள பிரமதேவர் சொல்ல கலிதேவன் பிரமனது இரண்டு பாதங்களையும் பணிந்து துதித்து ஐயரே! நல்லவார்த்தை

கட்டளையிட்டீர். குருவென்னும் நாமம் காரணப்பெயரோ ! இடுகுறிப்பெய ரோ ! சொல்வீரென்று கேட்க அப்போது பிரமதேவர் ஆராய்ந்து அதனை விரித்துக்கூறத் தொடங்கினர். எ-று. (௩௭)

கரைதரு ககாரவன்னங் காரியசித்திசெய்யும்
புரைதரு பாவநாசம் புரிதரும் ரகாரவன்னம்
விரைதரு கடுக்கைவேணி விமலனேயுகாரவன்னம்
வரைதரு கணேசனிந்த மந்திரக்கதிதேவரவன்.

(இ-ள்.) அறிவுடையோரால் எடுத்துரைக்கத்தக்க குருவென்னும் பதத்து அமைந்த உயிர் மெய்யட்சரம் இரண்டனுள் ககரமெய்யானது எவ்வகைப்பட்ட காரியங்களையும் சித்திக்கச்செய்யும். ரகரமெய்யானது களங்கரூபமான பாவங் களை யொழிக்கும். இவ்விரண்டு மெய்யட்சரங்களில் ஏறிய உகர உயிரானது வாசனைவீசுகின்ற கொன்றைமாலையணிந்த சடையையுடைய நிர்ம்மலரான பர சிவ வடிவமாக விளங்கும் இம்மந்திரத்திற்கு அதிதேவதையானவர் தியானிக்கத் தக்க விநாயகக்கடவுள் . எ-று. (௩௮)

" இந்த ரகசியானுபவங்களை உத்தமாசிரியராலுணர்க "

குரவனேயன்னைதந்தை குரவனேதெய்வமற்றுங
குரவனேயான்முன்னாகக் கூறுமைம்பகுப்பினுருங்
குரவனேபொருளென்றுன்னுங் குணத்தினேன்யாவனேனுங்
குரவனேரருளாலெல்லாந் தெரிந்தவன்குறிக்குங்காலே.

(இ-ள்.) மதிக்குமிடத்து ஆசாரியரே ! மாதா, பிதா, குரு, தெய்வமாவார் ஆசாரியரே யான்முதலிய பஞ்சகிருத்தியக் கடவுளருமாவர். ஆசாரியரே பரம் பொருளென்று தியானிக்கும் குணத்தினையுடையோன் யாவனாயினும், ஆராயு மிடத்து அவ்வாசிரியரது அழகியகருணையால் யாவையும் தெரிந்தவனாவன். எ-று.

ப. ம. யான்முன்னாகக் கூறுமைம்பகுப்பினுரு மென்றது சொல்பவனாகிய பிரமனோடு விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவனென்னுங் கடவுளரை

பரமனுக்கிழைத்தகுற்ற மாரியன்பரிந்துதீர்க்குங்
குரவனுக்கிழைத்தகுற்றங் குரவனேதீர்ப்பதன்றி
யுரன்மிகுபரமனாலு மொழித்திடமுற்றாதென்று
கரவருமறையோன்கூறிக் காதையொன்றுரைக்கலுற்றான்.

(இ-ள்.) கடவுளுக்குச்செய்த பிழையை ஆசாரியர் விரும்பித்தீர்ப்பர். ஆசாரியருக்குச் செய்த பிழையை அவ்வாசாரியரே தீர்ப்பதல்லாமல் பேரறி வினையுடைய கடவுளாலும் தீர்க்கமுடியாதென்று வஞ்சனையற்ற பிரமதேவர் சொல்லி ஒருகதை சொல்லத்தொடங்கினர். எ-று. (௪௰)

வேறு.

திரைபரப்பிப்பெருகிவரு தெண்புனற்கோ தாவரிநற்றீரந்தன்னி
னுரைமறைமுற்றுணர்ந்தவனுங் கிரசுவள ராச்சிரமமொன்றுண்டங்கட்

**கரையிறவமுனிவர்பல்ருளரவருட் பயிலமுனிகாதன்மைந்தன்**
**புரையில்குணத்தவன்வேததருமனெனவொருநாமம்பூண்டோனுள்ளான்**

(இ-ள்.) அலைகள் பெருக்கெடுத்து வருகின்ற தெளிந்த தீர்த்தத்தையுடைய **கோதாவரி** நதிக்கரையில் **அத்தியயனஞ்** செய்யத்தக்க வேதங்களை முழுதும் உணர்ந்தவராகிய ஆங்கிரசுமுனிவர் ஆச்சிரமம் ஒன்றுள்ளது. அவ்வாச்சிரமத்தில் எல்லையில்லாத தவஞ்செய்கின்ற பல முனிவருண்டு, அவருள் பயில முனிவருடைய பிரியகுமாரரும் குற்றம்நீங்கிய குணத்தினையுடையவருமாகிய வேததருமனென்னும் பெயருள்ளவர் ஒருவருண்டு. எ-று. (சக)

**அன்னவன்பால்வேதவேதாந்தமுழுதையமறுத்தமையக்கற்ற,ப**
**லனருஞ்சீடர்கள்பலருட்டீபகனென் றொருவன்மிகுபத்திவாய்ந்தோ**
**னென்னருமுள்ளிறும்பூதுகொளக்குரவன்பணிவிடையேயியற்றிவா**
**ழ்வா, னன்னரவன்றனையொருநாள்வேததருமன் கூவிநவிலலுற்றான்.**

(இ-ள்.) அவ்வேத தருமரிடத்து வேதங்களையும் உபநிடதங்களையும் சந்தேக(விபரீத)மற முழுதும் பொருந்தக்கற்ற மாணுக்கர் சொல்லுதற்கரிய புகழினையுடையோர் பலருண்டு. அவருள் தீபகனென்னும் பெயரையுடையவன் யாருமிதென்ன வியப்பென்னும்படி மிகுந்த பக்தியுடன் ஆசாரியர் பணிவிடை செய்து வாழ்பவனாகிய நற்குணமுடைய அச்சீடனை ஆசிரியராகிய வேததருமர் அழைத்துச்சொல்லத் தொடங்கினார். எ-று. (சஉ)

**பற்பலசீடருட்சிறந்ததீபகா யான்சொன்னபடிகேட்பாயோ,வற்**
**புறவேறொருசீடற்கூவவோ வுரைத்தியெனவடிகள்போற்றிப், பொற்**
**புறுமத்தீபகன்கட்டளையிட்ட படிநிற்பேன்புத்தியென்னச்,சொற்பயி**
**லம்மறைத்தருமனமக்கிருபத் தொருவருடந்தொழும்பாற்றென்றான்.**

(இ-ள்.) பலமாணுக்கருட் சிறந்த தீபகனென்பவனே நான் சொல்லியவிதங் கேட்பாயோ, அன்பாக வேறொரு சீடனை அழைக்கவோ சொல்லென்று கேட்க ஆசிரியரது திருவடிகளை வணங்கி அழகியதீபகன், தேவரீர் ஏவிய எவற்படி நிற்பேன் அதுவே எனக்குக்கடமை என்று சொல்ல. புகழையுடைய வேத தருமர் இருபத்தொரு வருஷம் எனக்குத் தொண்டுசெய்ய வேண்டுமென்றனர். எ-று. (சங)

**அடியனேனுயுள்வரைநின்றொழும்பாற்று வன்புரிவதறைதியென்ன**
**நெடியமாமுனிமுன்செய்தீவினையாற் குட்டமுடனிரம்பிற்றெங்கும்**
**படியவாவாதகொடுங்*கொத்தையுமா னெனென்று பகர்தலோடு**
**முடியவோர்தீபகனு ளைந்துருகி யிரங்கியிது மொழியலுற்றான்.**

(இ-ள்.) அடியேன் ஆயுள்பரியந்தம் தேவரீருக்குப் பணிவிடைசெய்வேன். செய்யத்தக்கது இதுவென்று அருள்செய்யவேண்டுமென்று கேட்க மிக்க பெருமையையுடைய வேததருமமுனிவர் பூர்வகர்மத்தால் என்னுடல் முழுவதும்

* கொத்தை = பழுது.

பெருவியாதி நிறைந்தது, உலகம் விருப்பாத மிகவும் குறையுடம்பாகினேன் என்று கட்டளையிடவும் முழுதுமுணர்ந்த தீபகனும் மனங்கனிந்துருகி கண்ணீர் விட்டழுது இதைச்சொல்லத் தொடங்கினன். எ-று. (௪௪)

ஐயநீமுன்புரிந்ததீவினையை யடியேனுக்களித்தியேற்று
வெய்யதோர்குட்டியாய்க் கொத்தையாயானிருப்பேன் மெலிவுதீர்ந்து
செய்யநீசுகத்திருத்தியென்றுதொழு திரந்தழுதறோர்ந்தவாசான்
மொய்யதீவினையானேயனுபவித்துத் தொலைத்தலன்றி முருங்காதப்பா.

(இ-ள்.) ஐயரே? தேவரீர் பூர்வஜென்மத்தில் செய்த தீவினையை அடியேனுக்குக் கொடுத்தருளும். நான்பெற்றுக்கொண்டு கொடியகுஷ்டரோகியாய் குறையுடலோடிருப்பேன் நன்னிலைமையுள்ள தேவரீர் தளர்ச்சிநீங்கி சுகமாக இருப்பீரென்று வணங்கி குறையிரந்து அழுதலைய்றிந்த வேததருமர் சூழ்ந்து கொண்ட தீவினைப்பயனை நானேயனுபவித்துத் தொலைத்தாலல்லாமல் வேறு காரணத்தால் நீங்காது ஐயனே. எ-று. (௪௫)

அன்றியுந்தம் மடிப்பணிசெய் சீடருக்குப்பாதகமோ வருள்வாரான்றே
ரொன்றியதீவினைப்பயனைத் துய்ப்பதினுமப்பயனையுற்றூர்மாட்டு
நன்றிமிகுபணிபுரிதன் மிகுதுயராமதுநிற்க நல்லாயின்னே
யென்றிவினைமுழுதழிய வெனைச்சுமந்து காசிநகர்க்கெய்தல்வேண்டும்.

(இ-ள்.) அல்லாமலும் தமக்கேவல் செய்கின்ற மாணாக்கருக்கு சாதுக்கள் பாதகத்தையோ ஏற்றுக்கொள்ளும்படி செய்வார்கள். தொடர்ந்தகொடுவினைப் பயனை அனுபவிக்குந்துயரத்தைப் பார்க்கிலும் அதையனுபவிக்கின்றவர்களிடத்தில் நன்மைமிகுந்த பணிவிடைசெய்வது பெருந்துயரமாகும். அது நிற்க நற்குணமுடையோனே விரைவாக என்னுடைய தீவினைமுழுதும் போகும்படி என்னைத் தூக்கிக்கொண்டு காசித்தலத்துக்குப் போகக்கடவாய். எ-று. (௪௬)

பரமசிவன்றனக்காதி பீடமெனப்படுகாசிப் பதியைமேவும்
வரமலியும் புண்ணியத்தாற் றீவினைபோய்நல்வினையா மருவுமுத்தி
கிரமமிஃதெனமீட்டுமுரைப்பமிகு மகிழ்ச்சியனாய்க்கெழுமுசீடன்
பிரமமுனிவனைவருத்தமறச்சுமந்து காசிநகர்பேணிப்புக்கான்.

(இ-ள்.) சிவபெருமானுக்கு ஆதிபீடமென்று சொல்லப்படும் காசிப்பதியை விரும்பியடையுஞ் சிறந்தபுண்ணியத்தினால் பாவம் போய்விடும் புண்ணியமுண்டாகும் முத்திசித்திக்கும் முறைமை இதுவாமென்று மறுபடியும் எடுத்துச்சொல்ல அதிகசந்தோஷமுடையவனாகி விளங்குகின்ற தீபகன் பிரமஞானமுடையவேததருமமுனிவனை வருத்தப்படாமல் தூக்கிக்கொண்டு காசித்தலத்துக்கு விருப்பத்தோடும் போனான். எ-று. (௪௭)

முத்திவளமலிகாசிநகர்மணிகன் னிகைவடபான்முகிழ்க்குமேன்மைச், சித்திதருகம்பளேசுரர்பெருஞ்சந் நிதியிறக்கித்தீர்த்தக்கங்கை, மெத்தியதண்புனன்மூழ்கிக் குரவனையுமாட்டியுயர்விசுவேசன்றாள், பத்தியுடன் குருவொடும் போய்ச்சேவித்தப் பதியமர்வான்பணிமேற்கொண்டான்,

(இ-ள்.) மோக்ஷமாகிய செல்வத்தைத்தருகின்ற காசிநகரத்திலுள்ள மணிகர்ணிகாகட்டத்தில் வடபாரிசத்திலிருக்கும் மேன்மைதங்கிய சித்திகளைத்தரும் கம்பளேச்சரமென்னும் ஆலயத்திலிறக்கி கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஆசாரியனையும் ஸ்நானஞ்செய்துவித்து மேன்மையுள்ள விசுவநாதரை தேசிகரோடுஞ் சென்றுவணங்கி அத்தலத்தில் விரும்பிவசிக்கின்றவன் குருபணிவிடையை மேற்கொண்டனன். எ-று. (௪௮)

வருத்துபிணியாலுடையுமாரியனு டையிற்பவ்வீமயங்கும்போதுங், திருத்துதலின் முடைநாறு நீரல்லா வீரமளாய்ச்செறிந்தபோதும், பொருத்துமுடம்பிடைப்புண்ணீர் வழிபோதுமருவருப்புபபூணுகிக், கருத்துமகிழ்தலைசிறபபச் சுசிபுரிந்து காத்தோம்புங்கடன் மீக்கொண்டான்.

(இ-ள்.) துன்பப்படுத்துகின்ற குஷ்டரோகத்தினால் மெலிகின்ற ஆசாரியர் வஸ்திரத்தில் மலஞ்சேரும்போதும் சீழ்முதலியவைகளை மாற்றும்போதும் துர்க்கந்தநீர் தன்மேற்படுகிறபோதும் ஆசாரியனைத் தாங்கிச்செல்லும்போதும் தன்மேல் உதிரம் ஒழுகும்போதும் அருவருப்படையாதவனுகி மனத்தில்சந்தோஷமதிகரிக்க பரிசுத்தஞ்செய்து திருமேனியை பாதுகாக்கும் கடமையை மேற்கொண்டான். எ-று. (௪௯)

ஒருவேளைதீபகா வருகவரு கென்றழைக்குமுறுசிற்றங்கொண்டொருவேளைமாபாவியொழிகவொழி கென்றுரைக்குமுதவு*பிச்சையொருவேளைநுகருமொரு வேளைநுகராதொழிக்குமுப்பின்றென்னுவொருவேளைசிறிதுண்டுமறுக்குமொருவேளைசினந்துடன்றுவையும்.

(இ-ள்.) ஒருசமயத்து தீபகனே வாவாவென்றழைப்பர் மிக்ககோபங்கொண்டு பெரும்பாதகனே என்னைவிட்டு நீங்கு நீங்கு என்று ஒருசமயத்திற்சொல்வர் அவனால்தரப்படும் பிச்சையை ஒருசமயத்திலுண்பர். ஒருசமயத்தில் உப்பில்லையென்றுசொல்லி உண்ணாதிருப்பர் ஒருசமயத்தில் கொஞ்சம் உண்டு மற்றதைவேண்டாமென்பர் ஒருசமயம் பெருங்கோபத்தால் அடித்துத் தூஷிப்பர். எ-று. (௫0)

ஓதுவித்தகுரவனெதுசெய்யினுநீங் காதுபணியுஞற்றிமேவுஞ சாதுவித்தகத்தீபகற்கிரங்கி விச்சுவநாதன்மாதோடுங், கோதுவித்த முயலாத வவனெதிருண்மகிழ்ச்சியொடுகூடிக்கற்பப், போதுவித்த வாடைமனை மலரெதுவேண்டினுந்தருதும் புகறியென்றான்.

(இ-ள்.) வேதபாடம் ஓதுவித்த ஆசாரியன் யாதுகட்டளை யிடினும் நீங்காது பணிவிடைசெய்து விரும்புகின்ற சாதுத்தன்மையுள்ள அறிவினையுடைய தீபகனிடத்துக் கருணைகூர்ந்து விசுவநாதர் அன்னபூரணியாரோடு குற்றமாகிய பொய்யறிவில்முயலாத அத்தீபகன் எதிரில் மனமகிழ்ச்சியோடு எழுந்தருளி மலர்

---

* பிச்சையென்பது = முற்றத்துறந்த முனிவாகை யேற்றுண்ணுமபலி,

களையுடைய கற்பகத்தருவாழ்க்கை பீதாம்பரத்தைத்தரித்த விஷ்ணு வாழ்க்கை தாமரைமலரிலிருக்கும் பிரமன் வாழ்க்கை இவைகளில் உனக்கு எதுவேண்டி னுந்தருவேன் சொல்வாயென்றனர். எ-று. (௫௧)

ப. ம் கற்பகம் இந்திரனது சிறந்த திருவாதலானும் வித்தவாடை திருமாலுக் கன்றி ஏனையோருக்குப் போர்வையன்றாகலானும் மரைமலர் பிரமனுக்கு ஆச னமாதலானும் குறிப்பான் அவர்வாழ்க்கையை யுணர்த்திற்று. எப்புவனங்களுக் கும் இறைவராகலின் சிவாநுபூதிச்செல்வர் அண்டயும்வீடுபேற்றைக் குறிக்காது ஆசாரியத்தொண்டின் அருமைநோக்கி தமக்குக் கீழுள்ளதேவர்கள் பதத்தை விரும்புவாயேல் தருதுமென அவனை விளித்தாரென்றவாறாயிற்று.

"மரை. முதற்குறைவிகாரம்."

என்றபரம்பரற்கெதிரென் குரவனனுமதிபபடிவந்திரப்பேனெ ன்று, நன்றமையப்புகன்றகன்று போய்க்குரவனடிபணிந்து நாதன் றேன்றி, வென்றவரங் கோடியென்றா னின்பிணிதீர்ந்தொழியும்வரம் வேண்டுகோவென், றன்றமையவுரைத்திரந்தா னரியனபபோது முளத்தழன்றானன்றே.

(இ-ள்.) இப்படி திருவாய்மலர்ந்த விசுவேசர்முன்னே என் ஆசாரியர் கட் டளைப்படி கேட்டுவந்து யாசிப்பேனென்று திருவுளத்துக்கு மிகவும் பொருந்து ம்படி சொல்லிப்போய் ஆசாரியர் திருவடிவணங்கி விசுவநாதர் எழுந்தருளி வேண்டியவரங்களைப் பெற்றுக்கொள்ளென்றனர். தேவரீருடைய வியாதிதீரத் தக்கவரம் கேட்கப்போகிறேனென்று திருவுளம்பொருந்தக் கூறி குறையிரந் தனன் அப்போதும் ஆசிரியர் மனதிற்கோபங்கொண்டனர். எ-று. (௫௨)

பந்தமுதலறுக்குமொரு பராபரன்பா னோய்தீரும்படிபோய்க் கேட்டல், சந்தமலவென்றுரைத்தா னகில நாயகனெதிர்போய்த்தாழ் ந்துபோற்றி, கந்தமலர்க்குழல்பாகா நின்வரம்வேண்டிலனடியேன் கருதென்னுசா, னந்தமரும் பணிவிடையேபோதுமென்றான் மறுக் கவுமீண்டடைந்தானன்றே.

(இ-ள்.) ஆணவமலத்தை ஒழித்தருளும் ஒப்பற்ற பரமசிவனிடத்து குட் டநோய் தீரும்படி வரங்கேட்குதல் முறையல்லவென்று வேததருமமுனிவர் சொல்லினர். தீபகன் விசுவேசருக்கு எதிரேபோய்வணங்கித் துதித்து இயற்கை மணம் வீசுதலையுடைய கூந்தலைவாய்ந்த அன்னபூரணியை இடப்பாகமுடைய வரே தேவரீர் தந்தருளும் வரம் அடியேன் விரும்பேன் நான் சிந்தித்தற்குரிய தேசிகரது அரிய பணிவிடையே போதுமென்றனன் சிவபெருமான் தடுத்து வரங்கேளென்றருள ஆசாரியரிடம் மறுபடியும் வந்தனன். எ-று. (௫௩)

அதிசயமிக்கடைந்தானயந்தின்று முமையாளோடகிலநாதன்,மதி யமையுதிருவாண மண்டபஞ்சார்ந்தரியணைமேல்வைகியாங்குப், பொ திபலவானவருள்ளுந் திருமாலைவிளிக்கவவன்புத்தியென்று, கதியமர் பொற்கழல்பணிந்தானிருத்தியென விருத்தினன்மேற்சழறலுற்றான்,

(இ-ள்.) விசுவநாதர் திருவுளத்தில் மிக்க அதிசயங்கொண்டு அவ்விடத்தில் நின்றும் உமாதேவியோடு புத்திக்கு வியப்பமைந்த முத்திமண்டபத்தைச் சேர்ந்து சிம்மாதனத்தின்மேல் எழுந்தருளி அம்மண்டபத்தில் நிறைந்த தேவர்களுக்குள் விஷ்ணுவையழைக்க அவ்விஷ்ணுதேவர் யாது புத்தி யென்று முத்தியை விருப்போடு தருகின்ற பொன்மயமான திருவடிகளில் நமஸ்கரித்தனர் இவ்விடத்திருப்பாயென்று கட்டளையிட்டு இருக்கச்செய்த மகாதேவர் இதைச்சொல்லத்தொடங்கினர். எ-று. (ருச)

திரையெறிகோதாவரிதீரத்தமர்வான் பெருந்தவத்தான்செயிரொன்றில்லான், வரையனையதோற்றத்தான் மறைத்தருமனெனும் பெயரான்வளமார்காசி, யுரைபெறுமான்மியந்தெளிந்தா னிங்குறைவானவன்பாலோத்துணர்ந்தபாலன், வினைகெழுதீபகனென்பானவனபணியா னமைக்குழைத்தான் மேலு மேலும்.

(இ-ள்.) அலைகளை வீசுகின்ற கோதாவரி நதிக்கரையில் வசிப்பவனும் அதிக தவமுடையோனும் யாதொரு களங்கமில்லாதவனும் மலைபோலும் நெடுந்தூரம் காணும் கீர்த்தியுள்ளோனுமாகிய வேததருமனென்னும் பெயருடைய முநிவன், முத்திவளமமைந்த காசிப்பதியின் புகழ்பெற்ற மான்மியத்தை அறிந்தவனாகி இத்தலத்தில் வசிக்கின்றான் அவனிடத்து வேதமறிந்த மாணாக்கன் தீவிரபக்குவமுள்ள தீபகனென்பவன் குருபணிவிடை செய்தலால் நமது (உள்ளத்தை) மிகவும் கனியச்செய்தனன். எ-று. (ருரு)

அனையனெதிர்யாந்தோன்றிக்கேட்டவர மெலாங்கொடுப்போமறைதியென்றாம், வினையமிகுமவன்குரவன்பணியொன்றேபோதுமென்றான்மீண்டுவந்தோம், நினையவரிதவன்செய்கை யென்றுதிருவாய்மலர்ந்தரனெடியமாயோன், றனையவவற்காண்பனெனத் தொழுதெழுந்து தீபகன்முன்றோன்றிநின்றான்.

(இ-ள்.) அத்தீபகனெதிரே யாம், தெரிசனந்தந்து நீவேண்டியவரங்களெல்லாம் பிரசாதிப்போம் சொல்லென்று கேட்டோம் ஆசாரியபக்தியுடைய அத்தீபகன் குருபணிவிடையொன்றே போதுமென்றனன் நாம் வந்துவிட்டோம் அவன் கருத்து அறியத்தக்கதல்லவென்று திருவாய்மலர்ந்தருளினர். திருமாலும் விரைவாக அவனைக்காண்பேனென்று வணங்கிநின்று அத்தீபகன் முன்னே பிரசன்னமாகினர். எ-று. (ருசா)

தேடரியகுருபத்திசிரோமணியாந் தீபகன்முன சென்றமாயோன்
வீடரியகுருபணிசெய் தகிலநாயகற்குவகை மிகுமாசெய்தாய்
நாடரியமூலநவில்குரவனிலும் பொருளுரைப்போனவில்விசேடங்
கூடரியவவனினுமெய்ச்சிவனையுணர்த் திடுங்குரவன்குழகனேகாண்.

(இ-ள்.) தேடுதற்கரிய குருபத்திசிரோமணியாகிய தீபகன்முன்போன விஷ்ணுதேவர் நீங்குதற்கரிய குருபணிவிடையைச்செய்து விசுவநாதனைச் சந்தோஷமதிகரிக்கச்செய்தாய் நினைப்பதற்கரிய மூலபாடங்கற்பிக்கும் ஆசிரியனைப்பார்க்கிலும் பொருளுரைக்கு மாசிரியன்சிறந்தவனும் கிடைத்தற்கரிய அவ்வாசிரியனிலும் பரம்பொருளை யறிவிக்கும் தேசிகனே அச்சிவமுகூர்த்தமாகும் இதைக் காண்பாயாக. எ-று. (ருஎ)

வேததருமன்சிவனே யெனத்துணிந்து பணிபுரிந்தாய்விசுவநா
தன், போதவரங்கேட்டியெனப் புகலவும்வேண் டாதிருந்தாய் புல
மைமிக்காய், சாதநினைக்காண்பொருட்டேவந்தனன்யா னென்றும
கிழ்தழையக்கூறி, யோதநிறத்தவன்மறைந்தா னகிலேசன்முன்மு
னம்போலுற்றானன்றே.

(இ-ள்.) (மேலும்) வேததருமனைச் சிவபிரானேயென்று நிச்சயித்துப்பணி
விடைசெய்தாய் விசுவேசர் வேண்டிய வரங்களைக்கேளென்று திருவாய்மலர
வும் (ஒன்றும்) விரும்பாதிருந்தாய் அறிவாலுயர்ந்தோனே உன்னைப்பார்க்கு
நிமித்தமே உண்மையாக யான் வந்தேனென்று, (தீபகன்) பெருமகிழ்ச்சி கொ
ள்ளும்படி சொல்லி சமுத்திரம்போலும் கரியதிருமேனி வாய்ந்த விஷ்ணு
தேவர் மறைந்தவராகி விசுவநாதர் (எழுந்தருளி யிருக்கும்) சந்நிதியில் முன்
போலடைந்தனர். எ-று. (௫அ)

காசிவசித்திடுபேற்றாற்கொடுங்குட்ட மொழிந்தழகின்கதிர்ப்பு
வாய்ந்து, பேசியகண்ணிரண்டும்விழித்தக்குரவன் றீபகனைப்பெட்
பினோக்கி, மாசிரியநீசெய்தசகாயத்தாலிக்காசி வசிக்கப்பெற்றேன்
கூசியமெய்ப்பிணியொழிந்தேன் கண்விழித்தேனெனக்கினியோர்
குறையுமின்றால்.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்த நலத்தினால் கொடிய குஷ்டவியாதி
நீங்கி அழகுமிகவிளங்கி கண்களிரண்டையும் விழித்தவேததருமர் தீபகனை யன்
பாய்ப் பார்த்தருளிக் குற்றமற நீபண்ணிய உதவியினால் இந்தக் காசித்தலத்தில்
வாசஞ்செய்யப்பெற்றேன் நாணத்தக்க குஷ்ட நோயை நீங்கினேன் கண்விழி
த்துப்பார்த்தேன் எனக்கு (இனிமேல்) ஒரு குறைவுமில்லை. எ-று. (௫௯)

ஓங்குபெருங்காசியெனுந்தீபத்தா லவித்தைதயிருளுடையும்யார்
க்கும், பாங்குபெறுமித்தலவாசப்பலத்து மேலாயபலவொன்றில்லை
தூங்குசடைவிச்சுவநாயகனிவண்போ லெவணருள்வான்றனைந்து
தோன்றுந், தாங்குகுணத்தாயென்றுமகிழ்வித்தான் குருவேததரு
மன்மாதோ.

(இ-ள்.) மேன்மேலோங்கும் புகழையுடைய காசியென்கிற விளக்கினால்
யாவர்க்கும் அஞ்ஞானமாகிய இருள்நீங்கும் நன்மையை விளைவிக்கும் இந்த
க்ஷேத்திரவாசப்பலனுக்கு மேற்பட்டபலன் வேறேகிடையாது தாழ்கின்ற
சடாபாரத்தையுடைய விசுவேசர் இவ்விடத்தைப்போல எவ்விடத்தில் அருள்
செய்யும்படி விரைந்து தரிசனந்தருவர் காப்பாற்றத்தக்க குணத்தையுடைய
தீபகனேயென்று வேததருமமுனிவர் (மாணாக்கனைச்) சந்தோஷிக்கச்செய்த
னர். எ-று. (௬௦)

குருபத்தி சொரூபமுரைத்த அத்தியாயமுற்றியது.

ஆக பாயிரமுட்பட திருவிருத்தம் (௬௧)

திருச்சிற்றம்பலம்.

# இரண்டாவது

# காசிமான்மியமுரைத்த

## அத்தியாயம்.

மருவியபிணிபோய் மாசுதீர்ந்தொளிரு மணியெனப் பொலிதரும் வேத, தருமனுள்ளுவந்துதீபகற்கூவித்தன்னருகிருத்தியென்னாளு,மொரு வருஞ்சுபமு முண்மைஞானமுமிக் குறைத்திடு சித்தியுமுறுக,பொருவரு நினக்கென் றுரைத்தனனனையான் பொன்னடிபணிந்திதுரைப்பான்.

(இ-ள்.) வேததருமமுநிவர் தமக்குச் சரீரத்துண்டாகிய குஷ்டநோய் முழுவதும் நீங்கி களங்கமில்லாமல் விளங்குகின்ற இரத்நத்தைப்போல் விளக்கமுற்று உள்ளங்களித்து தீபகனையழைத்து, தம்மருகிலிருக்கச்செய்து ஒப்பற்ற உனக்கு சதாகாலமும் நீங்காத மங்கலங்களும் மெய்ஞ்ஞானமும் மேலாகச் சொல்லத் தக்க சித்திகளும் உண்டாகவென்று ஆசீர்வதித்தனர்; அவ்வாசிரியர் அழகிய திருவடிகளை வணங்கி தீபகன் இதைச் சொல்லத்தொடங்கினன். எ-று. (க)

ஐயனேயடியேற் கையமொன்றெழுந்த ததுவினவுறுங்கருத்துடையேன், செய்யநீகருணைசெய்யெனக்குரவன் சிறந்தமாணுக்கருட் சிறந்தோய், பொய்யகனினது பத்திமைநோக்கிற் புகலுறுப்பொருளு மொன்றுண்டோ, துய்யமந்தணமாவிருக்கினும் புகல்வேன் சொல்லுகவெனவவன் சொல்லும்.

(இ-ள்.) சற்குருவே அடியேனுக்கு ஓர் சந்தேகமுண்டானது அதை வினவவேண்டிய எண்ணங்கொண்டேன் அருள்நிலைமாறாத தேவரீர் கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்க, வேததருமமுநிவர் சிறந்த மாணுக்கருட் சிறந்த தீபகனே உண்மையான் உனது பத்தியை நோக்குமிடத்து சொல்லக்கூடாத பொருளொன்றிருக்கின்றதோ மேலான இரகசியமாயிருக்கினும் சொல்லுகின்றேன் நீ சொல்வாயென்று கேட்கத் தீபகன் சொல்கின்றான். எ-று. (உ)

அண்ணலங்குரவ நீயமரிடமே யருந்தல நின்னடிதோய்ந்த
தண்ணமைபுனலே யரும்பெறற்றீர்த்தஞ் சத்தியமிங்ஙனமிருக்கக்
கண்ணரும்பிறர்போனீயுமிக்காசிகலந்ததென்கங்கையாடுவதே[குரவன்.
னுண்ணலம்பயப்ப வுரைத்தியென் றிரந்தா னுரைசெயத்துணிந்தனன்

(இ-ள்.) பெருமையிற்சிறந்த ஆசிரியரோ தேவரீர் விரும்பி எழுந்தருளிய விடமே அரியதலமாகும் தேவர் திருவடியிற்பட்ட குளிர்ச்சியுள்ள உதகமேபெறு தற்கரிய தீர்த்தமாகும் இங்ஙனம் சத்தியமாயிருக்க அன்னியரைப்போல நினைத்

தற்கரிய தேவரீரும் இக்காசித்தலத்திற்கு வந்தகாரணம் யாது கங்காஸ்நானஞ் செய்த காரணம்யாது. எனதுள்ளம் நன்மையடையும்படி கட்டளையிடவேண்டு மென்று குறையிரந்தனன் வேததருமமுநிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (ஙு)

எண்ணருங்கால மெனக்குநீபணிசெய் திருந்தனை யத்தகுநாளுட்
கண்ணருமினக்கெத் தேவர்முன்னின்றார் கரிசிலித்தலத்திடைச்சிலநா
ணண்ணரும்பணிசெய் தொழுகலாலகில நாதனே தோன்றினனென்றால்
விண்ணருங்கருது மித்தலப் பெருமை விரித்துரைசெய்யவல்லவரார்.

(இ-ள்.) அநேககாலம் எனக்கு நீ பணிவிடை செய்திருந்தனை அக்காலத்தில் கிடைத்தற்கரிய உனக்கு எந்தத் தேவர்கள் பிரசன்னமானார்கள் குற்றமில்லாத இக்காசித்தலத்தில் சிலநாள் கிட்டுதற்கரிய பணிவிடைசெய்து நல்லொழுக்கம் புரிதலால் விசுவநாதரே உனக்குக் காட்சிதந்தாராகில் தேவர்களும் சிந்திக்கத் தக்க இத்தலத்தின் பெருமையை விரித்துரைக்க வல்லவரியாவர். எ-று. (ச)

பிறதலத்தொருவனளவினுள் வசித்துப் பெறுபலனொருகணமினைய
வறமலிதலத்து வசித்திடினடைவா னரனருச்சனைபிறதலத்திற்
றிறனுறவநேகந் தினம்புரிபலனோர் தினத்திவணதுபுரிந்தடையும் [வான்.
மறமிலித்தலத்தோ ரணுத்துணைதருமம் வயக்கினுஞ் சிவன்வெளிப்படு

(இ-ள்.) ஒருவன் அன்னியதலத்தில் அனேககாலம் வாசஞ்செய்து அடையும் பிரயோசனத்தை தருமம் நிறைந்த இத்தலத்தில் ஒருகணம் வசிப்பானாகில் பெற்றுக்கொள்வான். சிவபூசையை அன்னியதலத்தில் முறையோடு அனேககாலஞ்செயத பலனை இக்காசித்தலத்து ஓர்நாள் செய்திடின் அடைவன். கொடுமையில்லாத இத்தலத்தில் அணுவளவு தருமஞ்செய்தாலும் விசுவநாதர் பிரசன்னமாவர். எ-று. (ரு)

மற்றொருதலத்திற் பரசிவகாட்சி மருவுறவேண்டுவோர் விரத
முற்றொருமனமா யியமமுற்பலநா ளுஞற்றினு மதுபெறலரிதாங்
கற்றொருமனமா யடங்குறுரோனுங் காசியில் வதிந்திறப்பார்க்குப்
பற்றொருங்ககல வகிலநாயகனே பரையொடுதோன்றிநின்கருளும்.

(இ-ள்.) வேறொருதலத்தில் பரசிவதரிசனம் செய்யவேண்டினோர் விரதங் கொண்டு ஏகமனதோடு இயமம் முதலாக அஷ்டயோகங்களையும் பலநாள் செய்தாலும் அச்சிவதரிசனம் பெறுதற்கு அருமையாகும். வாசித்துணர்ந்து மனோலயம் பெறாதவராயினுங் காசிப்பதியில் வசித்து இறப்பவர்களுக்கு எல்லாப் பற்றுக்களும் நீங்கும்வண்ணம் விசுவநாதரே அன்னபூரணியாரோடு தரிசனங் கொடுத்துத் திருவருள்பாலிப்பர். எ-று. (சு)

காசியின்யாவன் விருப்பம்வைத்திடினுங் கருதுபல்வானவர்குழாமு
மாசியினவன்பால் விருப்பம்வைத்தடையு மானந்தருபியாயடியார்
பேசியின்புறவீற் றிருப்பவனமரும் பெற்றியாலானந்தவனப்பேர்
நாசியின்விழிவைத் தவருஞானியரு நாடொறு மியம்புவதற்கே.

(இ-ள்.) காசித்தலத்தில் எவன் விருப்பம்வைப்பினும் சிந்திக்கத்தக்க பல தேவகூட்டங்களும் ஆசீர்வாதத்தோடு அவனிடத்து பட்சம்வைத்துச் சேருவார்கள் அவன் ஆனந்தரூபியாய் அடியார்கள் யாவரும் அவன் மகிமையைப்பேசி இன்பமடையும்படி அத்தலத்தில் வீற்றிருப்பான் அத்தன்மையினால் அத்தலத்திற்கு ஆனந்தவனமென்று யோகிகளும் ஞானிகளும் தினந்தோறும் பெயர் சொல்லுவார்கள். எ-று. (எ)

**மேவியகாசி நகர்த்தியானஞ்செய் விறலினன்கூற்றினைக் கடப்பான்**
**பாவியவரங்கள் பற்பல நல்கும் படிபலதீர்த்தமுமுளவா**
**லோவியமணிமாளிகையவிழுத்தத் துறைபவர் யாவரேயெனினுங்**
**காவியங்கண்ணு ளொருபுறப்பொருமான் கழலிணைகலந்திடுந்தகையோர்.**

(இ-ள்.) விருப்பத்தைத்தருகின்ற காசித்தலத்தைச் சிந்திக்கத்தக்க வல்லமையுள்ளவன் இயமனைக்கடந்துவிடுவன் அதிகரித்தவரங்கள் பலவற்றைக்கொடுக்கத்தக்க அனேக தீர்த்தங்களும் அத்தலத்துள்ளன சித்திரங்களெழுதிய ரத்நமாளிகைகளையுடைய காசிப்பதியில் வசிக்கின்றவர்கள் யாவராயினும் நீலோற்பலமலர்போலுங் திருக்கண்களையுடைய அன்னபூரணியாளை வாமபாகத்திலுடைய விசுவநாதர் உபயபாதங்களிலும் கலக்குந்தன்மை யுடையோராவார்கள். எ-று. (அ)

**அடைதரமுடியாதணித்தலாத்தேசத் தமர்ந்துகாசியைநினைத்தாலு**
**மிடைதருபலபாதகங்களினீங்கி விரும்புஞானத்தினராவர்**
**தடையறநாளுமித்தலத்தன்ன தானஞ்செய்பவர்பெறும்பேற்றை**
**யுடையநாயகனு மொழிவனோமொழியா தொழிவனோயானறிகிலனால்.**

(இ-ள்.) போகக்கூடாமல் அதிகதூரதேசத்திலிருந்து, காசிக்குப்போகவேண்டுமென்று சிந்தித்துக்கொண்டிருந்தாலும் நெருங்கிய பலபாதகங்களினின்று விடுபட்டு யாவரும் விரும்பும் மெய்ஞ்ஞானத்தை யடைவார்கள். தடையில்லாமல் தினந்தோறு மித்தலத்தில் அன்னதானஞ் செய்பவர்களுக்கு உண்டாகும் பலனை சர்வவல்லமையையுடைய விசுவநாதரும் சொல்லுவாரோ சொல்லமுடியாமல் விடுவாரோ யானறிந்திலேன். எ-று. (௯)

**அன்னியதலத்திற் கோடிமாமறையோர்க் கனேகநாளன்னமிட்டதனுன்**
**மன்னியபலமிக் காசியிலொருவன் வயிற்றெழுபசிசிறிதவிய**
**பன்னியபிச்சை யிடுதலினுண்டாம் பலத்தினைநிகர்தராதென்னின்**
**முன்னியவிதற்கு நிகரெனவொன்றை மொழிநருமடவரேயன்றே.**

(இ-ள்.) வேறுதலத்தில் பெருமைபொருந்திய வேதம் உணர்ந்தகோடி பிராமணர்களுக்கு அனேககாலம் அன்னதானஞ் செய்ததனாலே கிடைத்த நிலையுள்ள பலனானது இக்காசிப்பதியில் ஒருநாள் ஒருவன் வயிற்றினிடத்துண்டாகிய பசி சிறிது தணியும்பொருட்டு சொல்லுகின்ற ஒரு பிடி அன்னபிட்சையிடுவதாலுண்டாகின்ற பலனுக்கு ஒவ்வாதிருக்குமானால் சிந்திக்கத்தக்க இக்காசித்தலத்திற்குச் சமமென்று வேறொரு தலத்தைச் சொல்பவர்களும் அறியாமையுடையோர்களல்லவா. எ-று. (௧௦)

**ஆன்றவித்தலத்தில் வசித்திடவொருவ னவாவுறினதற்குவிக்கினஞ்செய்**
**மான்றநெஞ்சுடையோன்கிளையொடும்பிதிரர்வருப்பொடுமளற்றிடையழு**
**மேன்றவித்தலத்துக்கேத்திரசந்நியாசஞ்செய்திருப்பவர்பெறும்பே[ந்து**
**றூன்றமற்றெவரான் மொழிதரமுடியு மும்பர்நாயகனவரன்றே.**

(இ-ள்.) மகிமை நிறைந்த இத்தலத்து வாசஞ்செய்யும்படி ஒருவன் அபேட்சித்தாலதற்கு விரோதஞ்செய்யும்படி நினைத்தமனமுடையவன் சுற்றத்தோடும் பிதிர்க்களோடும் நரகத்தில் வீழ்வன் மேன்மைதங்கிய இத்தலத்தில் க்ஷேத்திர சந்நியாசஞ்செய்து வசிக்கின்றவர்களடையும் பிரயோசனத்தை நிலைமையாகவே றேயாவர்களால் எடுத்துரைக்கக்கூடும் அச்சந்நியாசிகளே தேவதேவராகிய மகாதேவரல்லவோ. எ-று. (௧௧)

**அன்னியதலத்திற் கொலைகளவாதி யைம்பெரும் பாதகம்புரிந்தோர்**
**மன்னியகாசி யகத்தடைந்தொழிப்பர் மற்றிதி னிருந்தவைசெய்வோர்**
**துன்னியவெந்தத் தலங்கள்சென்றாலுந் தொலைதராதுறவளர்ந்தெழுந்து**
**பன்னியகொடிய நரகெலாம்புகுத்திப் பாரழியினுமழியாதால்.**

(இ-ள்.) அன்னியதலத்தில் கொலை களவு முதலிய பஞ்சமகா பாதகங்கள் செய்தவர்கள், நிலைபெற்ற காசித்தலத்தில் வந்து வசித்து நீக்கிக்கொள்வார்கள். இத்தலத்திலிருந்து அப்பாதகங்களைச் செய்வோர் மகிமைநிறைந்த எந்தத்தலங்களுக்குப் போனாலும் நீங்காது. மேன்மேலும் வளர்ந்தெழுந்து சொல்லுகின்ற மகாநரகங்களிலே புகுவித்து உலகம் அழிந்தாலும் அழியாமல் நிலைத்திருக்குமியல்புடையராவார்கள். எ-று. (௧௨)

**பூதலத்துள்ள தீர்த்தங்களனைத்தும் புகூஉத்துளைந் தாடலின்பேறு**
**காதலின்மணிகன்னிகைப்புனலொருநாட் கலந்துமூழ்கிடுபலனுவ்வா**
**வாதலிற்காசி யகத்தொருகணம்வா ளாவமர்தலின்வருபேற்றை**
**யோதலுற்றிடுபலதலங்களும்பற்ப லுகம்வசிப்பினுமளியாவே.**

(இ-ள்.) பூமண்டலத்திலுள்ள தீர்த்தங்களெல்லாவற்றினுக்குஞ் சென்று ஸ்நானஞ்செய்தலினு லுண்டாகும் பலன்கள் அன்புடன் மணிகன்னிகாகட்டத்தில் ஒருநாளடைந்து தீர்த்தமாடுதலின் பலனுக்குச் சமமாகா ஆதலினால் காசித்தலத்தில் ஒரு நிமிஷம் சும்மாவசித்தலினால் உண்டாகும் பிரயோசனத்தை எடுத்துரைக்கத்தக்க பலதலங்களும் பலபலயுகங்கள் வாசஞ்செய்தாலும் தராதனவாகும். எ-று. (௧௩)

**கண்டமாத்திரத்தாற் சகலபாதகமுங் காற்றிமிக்குயர்த்துதலிதுவே**
**யண்டராதியரும் பொன்னுலகாதி யவாவுதலொழிந்திவணமர்வா**
**ரெண்டவாக்கலியிற் காசியின்வசிப்பா ரேயலாற்கதியெவரடைவார்**
**வண்டறுப்பொழில்சூழித்தலம்பாவ மலைக்கொரு வச்சிராயுதமே.**

(இ-ள்.) தரிசித்தமாத்திரத்தில் சகலபாதகங்களையும் நீக்கி மிகவும் உயர்ந்த நிலையைத்தருதலால் தேவர் முதலானவர்களும் சொர்க்கமுதலான இடங்களை

அபேக்ஷித்தலைவிட்டு இக்காசித்தலத்தில் வாசஞ்செய்வார்கள் மனோலயத்தைக் கொடுக்காத கலியுகத்தில் காசியில் வசிப்பவர்களே யல்லாமல் மோட்சத்தை யாவரடைவார்கள் வண்டுகள் நீங்காத சோலைசூழ்ந்த இக்காசித்தலமானது பாவமாகியமலையைப் பிளப்பதற்கு ஒப்பற்ற வச்சிராயுதம்போலாகும். எ-று. (கச)

**முன்னொனாணடந்த தொருகதையுண்டான் மொழிகுவனதனையுங்கேட்டி**
**யென்னைமற்றதுவென் றிடிஞெருகற்பத் திறுதியிற்பிரளையமெழுந்து**
**பொன்னைநேர்நிறத்த புடவியைமூடப் புக்கரம் படிந்ததப்புடவி**
**மின்னைநேர்சடைமா முனிவராதி மேலுலகத்தவர்வெருண்டார்.**

(இ-ள்.) முற்காலத்தில் நடந்ததோர்கதை யொன்றுண்டு. அக்கதையுஞ் சொல்லுகிறேன் தீபகனே கேட்பாயாக அதென்னவென்றால், ஓர் கற்பமுடிவில் பிரளயவெள்ள மெழுந்து பொன்போலும் நிறமுள்ளபூமியை மூடிக்கொள்ள; பூமி நீரால் நிறைவுற்றது, மின்போலும் பிரகாசிக்கின்ற சடையுடைய மகத்தான முனிவரர் முதலாகிய மேலுலகவாசிகள் பயந்தார்கள். எ-று. (கரு)

**திருமறுமார்பனடியிணைவணங்கிச் சீதரநந்தகோவிந்த, மருமலர்த் துளபமாலைதாழ்புயத்த மாமகண் மணாளகூர்வாள, வெருவரும்புடவி முழுவதும்பிலத்து வீழ்ந்தது கண்டுங்காணாய்போற், பொருவரும்புகழ்நீ யிருத்தலென்னின்னே புக்கெழுப்புதியெனத்துதித்தார்.**

(இ-ள்.) இலக்குமியை மார்பிலுடைய திருமால் பாதங்களை முனிவராதியர் வணங்கி சீதரனே நந்தகோவிந்தனே வாசனையுள்ள மலர்களையுடைய துளபமாலைதாழ்கின்ற புயங்களையுடையோனே இலக்குமிநாயகனே கூரியவாளாயுதத்தை யுடையோனே விரும்பத்தக்கபூமி முழுவதும் பாதலத்துப்போய்விட்டது சமானமில்லாத புகழையுடைய தேவரீர் பார்த்தும் பாராதவரைப்போல் இருப்பது யாது இப்பொழுதே பாதலத்திற்சென்று பூமியை மேலெழுப்புவீரென்று தோத்திரஞ்செய்தார்கள். எ-று. (கசு)

**துதிமொழிகேட்டு விச்சுவநாதன் றுணையடித் தாமரைநினைந்து**
**மதியமைநெடுமா லெறுழ்வலிபடைத்த * வராகமாய்ப் பாதலம்புகுந்து**
**திதியமைபுடவியொருமருப்பேற்றுத் திறலின்மேலெழுந்துமுன்போந்து**
**பதிதரவைத்தான் வராககற்பப்பேர் பட்டதக் கற்பத்துக்கம்மா.**

(இ-ள்.) முனிவராதியர் பயந்து துதித்த வாக்கியங்களை கருணைமதியமைந்த நெடுமாலானவர்கேட்டு விசுவநாதருடைய உபயபாததாமரைகளைச் சிந்தித்து மிகுந்த வலிமையுள்ள பன்றியாகத்திருவுருக்கொண்டு பாதலலோகத்தையடைந்து காக்கப்படுதலையுடைய பூமியை ஒற்றைக்கொம்பால் தூக்கிக்கொண்டு சாமர்த்தியத்தால் மேலெழும்பி முன்போலப் பதிந்திருக்கும் விதம் வைத்தனர் அக்கற்பத்திற்கு வராககற்பமென்னும் பெயருண்டாயிற்று. எ-று. (கஎ)

முடித்தற்கரிய காரியமாயினும் சிவத்தியானஞ் செய்பவர்கட்கு எளிதில் முடியுமென்பது வேதாகமத்துணிபாதலின் விச்சுவநாதன் றுணையடித்தாமரை நினைந்தென்று கூறினார்.

---

* வராகமென்பது = பன்றி.

**பண்டுபோற்புடவி நிறீஇயதுதெரிந்து பண்ணவர்முதலியோர்நறும்பூக்**
**கொண்டுதூய்ப்பணிந்து துதித்திடநெடுமால் குறுகிய வவர்முகநோக்கி**
**மண்டுகாதலினென் னிருதயத்தளியின் மகிழ்ந்தமரகிலநாயகற்கே**
**தொண்டுபூண்டியற்றுந் துதியவனருளாற் றென்னிலை நின்றிப்புடவி.**

(இ-ள்.) முன்போலப் பூமி நிலைத்திருப்பதைத் தேவர்முதலானவரறிந்து, வாசனையுடைய மலர்களால் விஷ்ணுதேவனை அருச்சித்து வணங்கித்துதிக்க, நெருங்கிய அவர் முகத்தைத் திருமால்பார்த்து என்னிருதயமாகிய ஆலயத்தில் விரும்பி எழுந்தருளியிருக்கின்ற விசுவநாதனை நிறைந்த அன்புடன் வழிபட்டுத் தோத்திரஞ் செய்வீர்களாக அவர்கருணையினால் இப்பூமி பழையநிலையினின்றது. எ-று. (கஅ)

நான் இடைவிடாது சிவபிரானை இருதயத்திருத்தித் தியானஞ்செய்கின்றமையால், எத்தனிக்குங்காரியம் எளிதில் முடிகின்றது நீங்களும் அவ்வாறு சிந்திப்பீராயின் உங்களெண்ணமும் நிறைவேறுமென்பார் "அகிலநாயகற்கே தொண்டு பூண்டியற்றுந் துதி" யென்று கூறினார்.

**செய்யபொற்றகட்டின் மணிபதித் தென்னத் திகழுமிப்புவியிடைக்காசி**
**வெய்யவிப்பெருக்கு வெள்ளமிக்காசி வியனகருட்புகாதொழிந்த**
**தையமற்றதனு லெற்றைக்குங்காசி யழிவிலாதிருப்பது தோற்றம்**
**வையமுற்றுணர்ந்து காசியையடையின் மறுகுதல் சற்றுமின்றுமால்.**

(இ-ள்.) செம்பொற்றகட்டின் (மேல்) இரத்தினம் பதித்தாற்போலும், இப்பூமியின்மேற் காசித்தலம் விளங்கிக்கொண்டிருக்கும் வேகமாகிய இப்பிரளயவெள்ளம் மேலாகிய காசிப்பதியினுள்ளே பிரவேசியாமல் விலகியது ஆதலால் எக்காலத்தும் காசித்தலம் அழிவில்லா திருப்பது உண்மையாகும். உலகியல்பை முழுதுணர்ந்து காசித்தலத்தைச் சேர்ந்தால் கலக்கப்படுதல் லேசமுமில்லையாகும். எ-று. (கக)

**ஆனந்தமயமா யானந்தகானத் தகில்நாயகன்பல வுயிர்க்கு**
**மானந்தமுதவு மன்னபூரணியோ டமருவ னவன்றரிசனஞ்செய்**
**தானந்தமுனிவர் பற்பலவரங்க ளவாய்நிறீஇப் பூசனைபுரிந்த**
**வானந்தலிலிங்கம் பற்பலவுளவா லவற்றிய லுரைக்கமுற்றுதே.**

(இ-ள்.) காசித்தலத்தில் விசுவநாதர் ஆனந்தமே திருமேனியாக, பலஆன்மாக்களுக்கும் முத்தியின்பத்தையளிக்கின்ற அன்னபூரணித் தேவியாரோடு எழுந்தருளி இருப்பர் அவரைத் தரிசித்துக்கொண்டு இன்பத்தோடு முனிவர்கள் அனேகவரங்களை அபேக்ஷித்து பிரதிஷ்டைசெய்து பூசித்த ஆநந்தமயமான சிவலிங்கங்கள் அனேகமுள்ளன அவைகளி னியல்பைச்சொல்ல முடியாது.எ-று. (உ0)

வேறு.

**காசியின் பெருமையெல்லாங் கருதகி லேசன்றனே**
**பேசிடி னன்றிமற்றோர் பேசிடுந் தரத்தர்கொல்லோ**

**மாசிலாக காசிவைப்பின் வசித்திடும் வாஞ்சைநாளு**
**மூசிய தெனக்குமென்முற் பிறர்க்கினி மொழிவதென்னே.**

(இ-ள்.) காசித்தலத்தின் மகிமைகள் யாவும் (அறிவுடையோரால்) சிந்திக்கத்தக்க விசுவநாயகர் திருவாய்மலர்ந்தாலல்லாமல், மற்றையோர் சொல்லத்தகுந் தரமுடையவர்களோ களங்கமில்லாத காசித்தலத்தில் வசிக்கவேண்டிய விருப்பந்தினந்தோறும் எனக்கு நிறைந்திருக்குமானால் இனிபிறர்க்குச் சொல்லவேண்டியதியாது. எ-று. (உக)

**நிருமல னமராநின்ற நெடும்புகழ்த் தலங்களெல்லாம்**
**பொருமலற் றியானுங்கூடப் பொருந்தியே யமராநிற்பே**
**னருமையிற் பிரிதலோர்கா லடுப்பினு மளவிலாத**
**பெருமையிற் சிறந்தகாசிப் பிரிவையா னென்றும்பேணேன்.**

(இ-ள்.) அனாதியேமலரகிதராகிய சிவபெருமான், விரும்பி எழுந்தருளி இருக்கின்ற பெரும்புகழையுடைய தலங்களெல்லாவற்றினும் சந்தோஷத்துடன் யானுங்கூடவே நிலைத்துவாசஞ்செய்வேன். ஒவ்வோர் தலங்களில் அருமையாகப் பிரியத்தக்க சமயம்நேர்ந்தாலும், அளவுபடாத மகிமையாலுயர்ந்த காசித்தலத்தைப் பிரிய ஒருக்காலும் விரும்பேனென்று, விஷ்ணுதேவர் மற்றைத்தேவர்களுக்குக் கூறினர். எ-று. (உஉ)

**என்னையா னுரையாநிற்ப தென்னையாண் டருளின்மேவு**
**மின்னனேர் சடிலமோலி விச்சுவநாதன்முனு**
**மன்னனே ருமையாளோடு மரும்பெறன் மகார்களோடுந்**
**தன்னனேர் காசிநீங்கான் கயிலையிற் றணந்தபோதும்.**

(இ-ள்.) எனக்குக் காசித்தலத்திலுள்ள விருப்பத்தை யானே எடுத்துக்கூறவேண்டியதியாது என்னைப் பரிபாலனஞ்செய்து, திருவருள்மார்க்கத்திற் செலுத்தி, நீங்காப்பிரியமுள்ளவரும், மின்னலைப்போலும் பிரகாசிக்கின்ற சடாமகுடத்தையுடையவருமாகிய விசுவநாதரும் சர்வபுவனங்கட்குந் தாயாராகிய அன்னபூரணியாரோடும், பெறுதற்கரிய விநாயகக்கடவுள்முதலிய புத்திரர்களோடும் கயிலாசகிரியைப் பிரிந்தகாலத்தும், தனக்குத்தானே சமானமாகிய மகிமையுள்ள காசித்தலத்தைப் பிரியமாட்டார். எ-று. (உங)

**பற்பல வுரைப்பதென்னை பரகதி யடையவேண்டின்**
**வெற்பெனத் திரண்டபாவ மிக்கவரெனினும் யார்க்குஞ்**
**சொற்படு பழியேநல்குந் துணிபுடைக் கலியினெண்ணு**
**தற்புதக் காசிமேவி யமர்தலே வேண்டுமன்றே.**

(இ-ள்.) பலபலவிதமாக(எடுத்துக்)கூறவேண்டுவதியாது மேலாகிய மோக்ஷத்தையடையவேண்டினால், மலைபோலுங்குவிந்த பெரும்பாவமுடையவர்களாயிருந்தாலும், யாவர்களுக்குஞ் சொல்லத்தக்க நிந்தையை விளைவிக்குந்துணிபுடைய கலியுகத்தில் (இப்பெரும்பாவம் எவ்வாறு நீங்குமென்று) ஆலோசியாது, மேன்மேலும் மனக்களிப்பையுண்டாக்குங் காசிப்பதியை யடைந்து வசித்திருக்கவேண்டும். எ-று. (உச)

நரகவேதனைக்கடங்காத பாவமென்பார் "வெற்பெனத்திரண்டபாவ மிக்கவரெனினு"மென்றும் பரிசுத்தமனமுடையோரையும் பாவஞ்செய்யும்படி பேதிப்பது கலியுகத்தினியற்கையென்பார் "யார்க்குஞ் சொற்படுபெழியே நல்குந்துணிபுடைக்கலியி"னென்றும் மேற்பிறவி இல்லாமல் முத்திசித்திப்பது சத்தியமென்பார் "பரகதியடையவேண்டினற்புதக்காசிமேவி யமிர்தலேவேண்டு"மென்றும் கூறினர்.

**என்றுபண்ணவர்முன்னோருக் கியம்பிமாயவன்மறைந்தா**
**னன்றுதேர்ந்தனையோகாசி நலமெலா மின்னுங்கேட்டி**
**யொன்றுபற் பலரிவ்வாறே யுரைத்தன ரென்றுதேற**
**வன்றுமெய்க் குரவன்சீடற் கன்னதே புகலுற்றான்.**

(இ-ள்.) இப்படியென்று தேவர்முதலாயினோருக்குக் கட்டளையிட்டு விஷ்ணுதேவர் மறைந்தனர் (நீ) செவ்வையாகத்தெளிந்தனையோ இன்னமுங் கேட்பாயாக. அனேகரும் இவ்வண்ணமாகவே காசித்தலத்தின் மகிமையைச் சொன்னார்களென்று உண்மை ஞானத்தையுடைய வேததருமமுனிவர் (சீடனாகிய தீபகன்) தெளியும்வண்ணம் அம்மகிமையைச் சொல்லத்தொடங்கினர். எ-று. (உ௫)

## காசிமான்மியமுறைத்த

## அத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம் உ-க்கு பாயிரம் உள்பட திருவிருத்தம். (௧௧௯)



திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

# திருமால் திருமகளுக்குபதேசித்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

வீங்கிப்பணைத்துப்புடைத்தெழுந்து விம்மிப்பொருமிச்சுணங்கமைந்து
கோங்கிற்பொலியு முலைப்பாரங் கொண்டுநுடங்கு மிடைக்கமலை
பாங்கிற்பொலியு மணவாளன் பதுமமலர்த்தாள் பணிந்தெழுந்து
நீங்கிற்றிலளாயருகடைந்து நிறைபேருவப்பி னிதுவினவும்.

(இ-ள்.) பூரித்துப்பருமிதங்கொண்டு அடிபரந்தெழுந்து நாளுக்குநாள் வளர்ந்து கச்சினைமோதி தேமல்படரப்பெற்று கோங்கரும்பைப்போலவளரும் குஜங்களாகிய சுமையைச் சுமக்கலாற்றாது தளரும் இடையினையுடைய இலக்குமி தேவியானவள் தனது பக்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற நாயகனாகிய விஷ்ணுதேவர் தாமரை மலர்போன்ற திருவடிகளை வணங்கியெழுந்து நீங்காமல் சமீபத்திலிருந்து அதிகபிரியத்தோடு இதை வினவுகின்றனள். எ-று. (க)

நெடியபுகழோயடியேற்கு நிகழாநின்றதோரையங்
கடியவேண்டுமென்னையெனிற் கடியதாய கலியுகத்திற்
படியவாவும்பல்லுயிரும் பந்தபாசமுழுதொழிந்து
முடியவெதனால்வீடுபெறு மொழியவேண்டுமருடின்னே.

(இ-ள்.) பிரபல கீர்த்தியுடையோரே அடியேனுக்கு ஓர் சந்தேகம் உண்டாயிருக்கின்றது (அதைத் தேவரீர்) நீக்கியருள வேண்டும் (அது) யாதெனில் கொடுமையுள்ள கலியுகத்தில் பூமியின்கண் இச்சாசகிதராகிய பல ஜீவர்களும் கட்டுப்பட்ட பாசங்கள்முழுதும் ஒழிந்து கெடும்வண்ணம் எந்தச் (சாதனத்தால்) முத்தியை யடைவார்கள் தடையின்றி இப்பொழுதே (தேவரீர்) திருவாய்மலரவேண்டும். எ-று. (உ)

தானத்தாலோ தவத்தாலோ சமாதியான முதல்யோக
மோனத்தாலோ மகத்தாலோ முழுங்கும்புனலாடுதலாலோ
மானத்தாலோ தரியசிவன் மருவுந்தலவாசத்தாலோ
ஞானத்தாலோ பிறவாலோ நவிறல்வேண்டு நயந்தென்றாள்.

(இ-ள்.) உத்தமதானங்களைச் செய்தலினாலோ தவங்களைச்செய்தலினாலோ சமாதிகூடுதலினாலோ தியானமுதலியவைகளாலோ யோகாப்பியாசஞ்செய்தலி

னாலோ மவுனஞ்சாதித்தலினாலோ யாகஞ்செய்தலினாலோ ஒலிக்கும் அலைகளையு டைய தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணுதலினாலோ அளவைப்பிரமாணங்களால் இத்தன்மையதென்று அளவிடக்கூடாத சிவபிரான் வீற்றிருக்கும் தலங்களில் வாசம்பண்ணுதலாலோ ஞானசாதகத்தாலோ பிறமார்க்கங்களாலோ பிரியத் துடன் கட்டளையிடவேண்டுமென்றனள். எ-று. (௩)

என்றுகமலை வினவுதலு மிறும்பூதுள்ளத் தெழமகிழ்ந்து
குன்றுகுடையாக் கொண்டுபொழி கொண்டறடுத்தகோபால
னின்றுதெளிய வினையதுமற் றெல்லாவுயிர்க்கு முறுதியென
நன்றுதெரிந்து கேட்டிமட நங்காயென்று விடைகொடுப்பான்.

(இ-ள்.) இவ்வாறு இலக்குமிதேவி வினவியவளவில் கோவர்த்தன கிரியை க்குடையாகக்கொண்டு சத்தமேகங்கள் மழைபொழிவதைத்தடுத்து பசுக்கூட் டங்களைக்காத்தருளிய விஷ்ணுமூர்த்தி தமதுள்ளத்தில் ஆச்சரியமுண்டாகக் களி த்து. இப்பொழுது நீ தெளிவாகவினவியது எல்லா ஆன்மாக்களுக்கும் முத்தி மார்க்கமாகுமென்பதை செவ்வையாக வறிந்து கேட்டுனை இளமை நீங்காத மாதே என்று உத்தரஞ்சொல்லுகின்றனர். எ-று. (௪)

முந்துகிரேத முதலாய மூன்றுந்தவிர நான்கதெனப்
பிந்துகலியில் யாவோரும் பெருகுபாவத் தளைபூண்டு
நந்துமெனையே பிரமமென்று நவிலும்பிறரைப் பிரமமென்று
முந்துதமையே பிரமமென்று முரைத்துத்திரிவா ரொண்டொடியே.

(இ-ள்.) ஒளிபொருந்திய வளையல்களையணிந்த இலக்குமியே முந்திய கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், என்னும் மூன்று யுகங்களுந்தவிர பிந்திய நான்காவது கலியுகத்தில் யாவர்களும் அதிகரித்த பாவமாகிய விலங்கை ப்பூட்டிக்கொண்டு லயப்படுகின்ற என்னையே பிரமமென்றும் மற்றத்தேவர் களைப் பிரமமென்றும் போகங்களில் முற்படுகின்ற தங்களையே பிரமமென்றுஞ் சொல்லிக்கொண்டு காலங்கழிப்பார்கள். எ-று. (௫)

வேதநவிலு மைந்தெழுத்தும் விளம்பார்நீற்றுக் காப்பணியார்
சாதமணிந்த பொழுதறமே தருகண்மணிமா லிகைபூணா
ரோதவுலவாப் பெருங்கீர்த்தி யும்பர்பெருமான் கூற்றுதைத்த
பாதம்பணியார் வேறாகப் பகர்வார்புனைவார் பரவுவார்.

(இ-ள்.) வேதங்கள் மிகவுமெடுத்துரைக்கின்ற, ஸ்ரீ பஞ்சாக்கரத்தை யுச் சரியார்கள் பிறவியிற்புகாமல் காக்கத்தக்க விபூதியைத்தரியார்கள். பூண்ட பொழுதே சத்தியமாகச் சிவபுண்ணியங்களைத் தரத்தக்க உருத்திராக்கமாலை யைத்தரியார்கள். சொல்லுதற்கடங்காத பெருங்கீர்த்தியுள்ள தேவதேவராகிய மகாதேவருடைய இயமனை யுதைத்தருளிய திருவடிகளை வணங்கார்கள். வேறு மந்திரங்களைச் சொல்லுவார்கள் வேறு வேடங்களைப் பூணுவார்கள் வேறு தே வர்களைப்பணிவார்கள். எ-று. (௬)

பாவம் அதிகரித்தவர்களுக்கு மகாமந்திர செபமும் உருத்திராக்க தாரணமும் சிவத்தியானமும் வெறுக்குமாதலின், "வேருகப் பகர்வார் புனைவார் பரவுவார்என்று" கூறினர்.

இதுவுமன்றி—" கனவினு நீறுகாணுக் கைதவர்" என்றும்.

"பிறவியந்தகர்க்குவெய்யோன் பேரொளிகாட்டலாமோ
மறைகளாலளவைதன்னுற் றேவரான்மனத்தால்வாக்கா
லறிவருஞ்சோதியெங்கோ னவன்றிருநீற்றுத்தொண்டின்
குறிவழியன்றிக்காணுங் கொள்கையானல்லனென்ருர்."

"தேறலார் தமைக்காழிச் செம்மனேக்கியினிவம்மி
நீறுபூசிக்கண்டிகையும் பூண்டுதிருத்தரெழுத்தைந்து
மூறவோதிப் பாசமொழித் துய்மினென்னுவறநோக்கிக்
கூறினர்மற்றதுகேட்டுக் குண்டரெரியிற் கொதித்துளைப்பார்."

என்றுங்கூறிய திருவிளையாடற்றிருவிருத்தங்களாலு முணர்க.

வஞ்சமனத்திற் படிற்றொழுக்கின் வருணச்சிரமநிலைநிற்பா
ரஞ்சமனையமடநடையா ராசைவலைப்பட் டுழிதருவார்
நெஞ்சநலங்கொள்ளார்வேத நிந்தைமொழிவார் குரவனடி
தஞ்சமெனப்பற்ருர்புறமாஞ் சார்பேதலைக்கொண்டொழுகுவார்.

(இ-ள்.) கபடமுள்ள மனத்துடன் கூடாவொழுக்க நடையுள்ளவர்களாய் வருணச்சிரம நிலைகளில் நிற்பார்கள் அன்னம் போலும் மிருதுவான நடையையுடைய மாதர்கள்மேல் வைக்கின்ற ஆசையாகிய வலையிலகப்பட்டுத்திரிவார்கள். மனத்தில் நல்ல எண்ணங்கொள்ளார் வேதவாக்கியங்களுக்கு நிந்தைசொல்வார்கள். அகச்சமயமாகிய சைவசமயாசாரங்களை உபதேசிக்கும் ஆசிரியருடைய திருவடிகளையே அடைக்கலமென்று பிடித்துக்கொள்ளார்கள் புறச்சமயமார்க்கங்களையே முதன்மையாகப் பற்றிக்கொண்டு நடப்பார்கள். எ-று. (எ)

"புறமாஞ்சார்பே"யென்று கூறினமையால் அகச்சமயம் வருவிக்கலாயிற்று.

பொய்யவாவிமையனெறி பூண்டுவருணச்சிரமநிலை
யையதவழிவயிற்றோம்பு மதுவேபொருளென் றகங்கொண்டு
செய்யமுடியாக்கொலைகளவு திறம்புமதுமாந்துதன்முதலா
வெய்யவனைத்தும்புரிந்துழல்வார் விலக்காம்பவுத்தநெறிநிற்பார்.

(இ-ள்.) பொய்த்தொழில்களை விரும்பி மயக்கமுள்ள பாபமார்க்கங்களை மேற்கொண்டு வருணச்சிரம ஒழுக்கங்களை வழுவி வயிற்றை வளர்ப்பதே பொருளாக மனதிற்கொண்டு நல்லோர்களாலே செய்யப்படாத கொலை களவு மதுபானம் பண்ணுதல் முதலாகிய கொடுந்தொழில்கள் யாவுஞ்செய்து உழல்வார்கள் அறிவுடையோர்களாலே விலக்கத்தக்க புத்தசமய மார்க்கங்களிலே நிற்பார்கள். எ-று. (அ)

இனையகொடுமைபுரிந்துழலு மினையரெளிதிற்கதியடையும்
வினையமுணர்ந்துநம்பெருமான் விதித்ததெய்வமாத்தலமொன்
றனையபெருமான்போலளவைக் கடங்காத்தகையதவனென்றே
புனையமிளிர்வதூழியினும் பொன்றுப்புகழ்மையுடையதால்.

(இ-ள்.) இத்தன்மையாகிய பாபங்களைச்செய்து உழலுகின்றவர்கள் எளிதாக முத்தியடையத்தக்க நுட்பத்தை யறிந்து நமது கடவுளாகிய சிவபெருமான் ஏற்படுத்திய தெய்வத்தன்மையுள்ள மகாத்தல மொன்றிருக்கின்றது. அக்கடவுளைப்போல் பிரமாணங்களுக்கடங்காத மகிமையுடையது அக்கடவுள் வடிவமாகவே அலங்காரத்துடன் விளங்குவது ஊழிகாலத்திலும் கெடுதலில்லாத புகழையுடையது. எ-று. (கூ)

வேதமுடியின்மந்தணமாய் விரவியிருப்பதெஞ்ஞான்றும்
போதமுனிவரிதையமலர் புக்குமருவுவதுமுதுசீ
ராய்பொலிவிற்பெருகியலை யறையுமந்தாகினியுடைய
தேயவெவருந்தொழப்படுவ தெண்ணப்படுவதுயர்காசி.

(இ-ள்.) வேதாந்த மகாவாக்கியங்களுக்கு லக்ஷியார்த்த ரகசியமாயுள்ளதும், ஞானத்தையுடைய முநிவர்கள் இருதயகமலங்களில் சதாகாலமுந் தங்கியிருப்பதும், பிரபலமகிமைகொண்டு விளக்கத்தோடு பெருக்கெடுத்து அலைகள் முழங்குகின்ற கங்காநதியையுடையதும், பெருமைவாய்ந்த எல்லோராலுந் தொழப்படுவதும், யாவராலும் சிந்திக்கப்படுவதுமாயுள்ளது காசிப்பதியாகும்.எ-று.()

அந்தக்காசிவளம்பதியி னமர்வோர்வசிப்போருயிர்துறப்போர்
முந்தக்காணுமதனுமை மொழிவோர் நினைப்போரெல்லாரும்
பந்தக்காடுமுழுதழித்துப் பரமானந்தக்கடற்படிவர்
சந்தக்காமர்மடவாயத்த லச்சீர்சிறிதுசாற்றக்கேள்.

(இ-ள்.) பலவளப்பங்களையுடைய அக்காசித்தலத்தில் இருக்கும்படி விரும்புவோர்களும் வசிப்பவர்களும் இறந்துபோகின்றவர்களும் பெருமையில் முதன்மையாகத் தோற்றுகின்ற அப்பதியின் திருநாமங்களைச் சொல்பவர்களும் அந்நாமங்களைச் சிந்திப்பவர்களும் ஆகிய எல்லோர்களும் பாசங்களாகிய அடவியை முழுவது மழித்து சிவாநந்தசாகரத்தில் முழுகுவார்கள் பொன்னிறம் வாய்ந்து அழகுதங்கிய இலக்குமியே அத்தலத்தின் சிறப்பை நாம் சிறிது தெரிவிக்கின்றோம் கேட்பாயாக. எ-று. (கக)

காசியமரும்புன்முதற்று பரங்கள்கணையும்யோகுயிரே
காசியமருமுயிரெதிரே காலனணுகானெஞ்ஞான்றுங்
காசியமருமுயிர்களே கலிகாலத்துன்பகன்றிருப்ப
காசிவாணர்சிவலோக வாணரொன்றுகணையுமறை.

(இ-ள்.) காசித்தலத்திலிருக்கின்ற புல்முதலாகிய தாபர உயிர்கள் முழுவதும் சிவயோகத்தி லிருப்பவைகளாகும் காசிப்பதியில் வாசஞ்செய்யும் ஆன்

மாக்களுக்கு எதிராக இயமன் எக்காலத்திலும் வரமாட்டான் அக்காசித்தலத்தி லுள்ள ஆன்மவர்க்கங்கள் கலிகாலத்தினால் உண்டாகிய துன்பங்களையடைய மாட்டார்கள் அக்காசிப்பதியில் வாசஞ்செய்பவர்களை சிவலோகவாசிகளென்று வேதங்கள் சொல்லும். எ-று. (கஉ)

வாரணாசியுளநினைத்தோர் வளமார்சிவசாலோக்கியரே
வாரணாசிவாய்மொழிவோர் வளமார்சிவசாமீப்பியரோ
வாரணாசிதரிசித்தோர் வளமார்சிவசாரூப்பியரே
வாரணாசிவசித்தமர்வோர் வளமார்சிவசாயுச்சியரே.

(இ-ள்.) காசிப்பதியை மனதில் நினைத்தவர்கள் எல்லாவளப்பங்களும் நிறைந்த சிவசாலோக்கியத்தைப் பெறுவார்கள். காசித்தலமென்று வாயினால் சொல்லுபவர்கள் எல்லாவளப்பங்களும் நிறைந்த சிவசாமீப்பியத்தைப் பெறுவார்கள் அக்காசிப்பதியைக் கண்களால் பார்த்தவர்கள் வளப்பங்கள் நிறைந்த சிவசாரூப்பியத்தைப் பெறுவார்கள் அக்காசிப்பதியில் பிரியத்தோடு வாசஞ்செய்பவர்கள் பலவளங்களும் மமைந்த சிவசாயுச்சியத்தைப் பெறுவார்கள். எ-று. (கந)

மறையாதரிக்கும்பவானீச வளர்கங்[illegible]கசவிசுவேச
நிறையாதரஞ்செய்மகேசனொளி நிலவாநந்தவனேசவென
முறையார்துதிகள்புரிந்திடுவார் முழுமாமறையின்முடிநடுவுட்
பொறையாய்மருவுமொருகாசிப் புரிவாழ்பவர்கள்யாவருமே.

(இ-ள்.) வேதங்களின் ஆதிமத்தியாந்தங்களில் பெரும்பிரயோசனமாகப் பிரதிபாதிக்கின்ற சமானமில்லாத காசித்தலத்தில் வாழ்கின்ற யாவர்களும் வேதங்கள் விரும்பத்தக்க பவானீசரே மகிமையாலுயர்ந்த கங்காதரேசரே, விசுவநாதேசரே பூரணாநந்தத்தைச் செய்விக்கின்ற மகேசரே ஞானப்பிரகாசம் விளங்குகின்ற ஆனந்தவனேசரே என்று விதியானிறைந்த தோத்திரங்களைச் செய்வார்கள். எ-று. (கச)

அறத்தைவிரும்புமவரொருபா லரியயோகமெனப்புகலுந்
திறத்தைவிரும்புமவரொருபாற் றெய்வஞானமெனுங்கடிந்த
மறத்தைவிரும்புமவரொருபால் வாழ்க்கைபொருந்துங்கலவாத
புறத்தைவிரும்புமவரொருபா லமர்வார்நாளும்பொலிகாசி.

(இ-ள்.) எந்நாளும் மகிமையால் விளங்குகின்ற காசித்தலத்தில் சிவதருமத்தை விரும்புமவர்கள் ஒருபக்கத்திலும், அருமையாகிய சிவயோகமென்றுசொல்லத்தக்க உண்மை மார்க்கத்தை விரும்புவோர்கள் ஒருபக்கத்திலும், கோபத்தையொழித்து தெய்வத்தன்மையுள்ள சிவஞானத்தை விரும்புவோர்கள் ஒருபக்கத்திலும், மனையாளுடனிருந்தும் கூடாது புறம்பேயிருக்கும் வானப்பிரஸ்த ஆச்சிரமத்தை விரும்புவோர்கள் ஒரு பக்கத்திலும் வசிப்பார்கள். எ-று. (கரு)

அரியதவத்தின்வருந்துநருக் கன்றிவெளியாகாப்பெருமான்
பிரியமிகுமானந்தவனம் பேணிவாழ்வார்யாவருக்கு

**மூரியகாட்சிவெளிப்படையி னுதவிப்புரத்தல்செயுமின்னுந்**
**தெரியவேறுமொழிவதெவன் செப்பிற்பொலிந்தபூண்முலையாய்.**

(இ-ள்.) ஆபரணங்களை யணிந்து தங்கக்கிண்ணம்போலும் பிரகாசிக்கின்ற தனபாரங்களையுடைய இலக்குமியே அரிய தபோமார்க்கத்தால் சரீரேந்திரியகரணங்கள் வருத்தப்படுகின்ற தீவிரதரபக்குவர்களுக்கல்லாமல் மற்றயோருக்குப் பிரசன்னமாகாத சிவபெருமான் பெருங்களிப்பை யுண்டாக்குகிற காசித்தலத்தில் விருப்போடு வாழ்கின்றவர்கள் யாவருக்கும் பிரசாதிப்பதற்குரிய திருவருட் காட்சியோடு தரிசனங்கொடுத்து அனுக்கிரகஞ் செய்தருளுவார். இன்னமும் காசிப்பதியின் மகிமை தெரியும்படி வேறொரு பிரமாணங்கூற வேண்டுவதென்னையுள. எ-று. (௧௬)

**சேணையளக்கும்பெரும்புகழிற் சிறந்தகாலவயிரவனு**
**ராணையமைந்துபொலிகாசி யகத்துவாழ்வார்க்கனையவரே**
**கோணையெறிந்துசெவ்வையுறக் குயிற்றுதண்டம்புரிதக்கார்**
**பூணையெறிந்துபொருமாந்து பொருமாநின்றபூண்முலையாய்.**

(இ-ள்.) ஆபரணங்களை மேலேயெழுப்பிப் பூரிக்காநின்ற குஜகும்பங்களையுடைய இலக்குமியே நெடுந்தூரத்தைக் கடந்துசெல்லும் பெரும்புகழையுடையகாலவயிரவர் தமது காவலிலடங்கி விளங்குகின்ற காசியினிடத்து வசிப்போர் யாவருக்கும் பாவங்களை யொழித்து அப்பாவத்துக்குத்தகுந்த தண்டனையைச் செய்யத்தக்கவர். எ-று. (௧௭)

**ஐயமறையீறளப்பரியா ரரையெனையாதியரணுகல்**
**செய்யவணுகானணுவுமக மேருவாகச்சிறிதாகுந்**
**தையலொருபால்விச்சுவநா தன்மாப்புகழத்தலத்தெவரு**
**முய்யவாட்டியூட்டியுப சரித்துப்போற்றவுவந்தருளும்.**

(இ-ள்.) முதன்மையான வேதமுடிவுகளால் அளவுபடாதவரும் ஆராயத்தக்க நான் முதலியதேவர்கள் சமீபிக்கக்கூடாதவரும் அணுவையும் மகம்மேருவென்று சொல்லும்படி சூக்குமவடிவங்கொள்ளத்தக்க பார்வதிதேவியாரை யொருபாகத்துடையவருமாகிய விசுவநாதப்பெருமான் பெரும்புகழமைந்த அக்காசிப்பதியி லெல்லோரும் கடைத்தேறும்வண்ணமவர்களபிஷேகித்து நிவேதித்து உபசரித்துத்துதிக்க விருப்பத்துடன் வீற்றிருந்தருளுவர். எ-று. (௧௮)

வேறு.

**தருமமுயிர்க்கருளுதலாற் றருமவன மிக்கபொருட்**
**பெருமைமிகக் கொடுத்திடலா லருத்தவனம் பெருங்காம**
**மருமையறக் கொடுத்திடலாற் காமவன மடைவரிய**
**ஒருமையருடருதிறத்தான் முத்திவன முயர்காசி.**

(இ-ள்.) தருமத்தை யுயிர்களுக்குண்டுபண்ணுதலால் உயர்ந்த காசிப்பதிக்குத் தருமவனமென்றும் பெரும்பொருளைக் கொடுத்தலால் அர்த்தவனமென்றும் பிரபல சுகத்தையெளிதாகக் கொடுத்தலால் ஆனந்தவனமென்றும் கிட்டுதற்கரிய ஒற்றுமையோடு திருவருளையுதவுந்தன்மையால் முத்திவனமென்றும் பெயராகும். எ-று. (௰௯)

ஆற்றரிய சிவதரும மளவில்பவத் தியற்றினரே
சாற்றரிய புகழ்க்காசித் தலத்தமரராய் நரராய்
மாற்றரிய வலிமாவாய் வண்சிறைப்புள் ளாய்ப்பிறவாய்த்
தோற்றரிய உருவமர்ந்து சுகத்தமர்வ ரோருகாசி.

(இ-ள்.) செய்தற்கரிய சிவதருமங்களை எண்ணில்லாத பிறவிகள் தோறும் செய்தவர்களே, சொல்லுதற்கரிய புகழையுடைய காசிப்பதியில் தேவர்களாகவும் நரராகவும் நீங்குதற்கரிய வலியுள்ள மிருகங்களாகவும் வலிய சிறகுகளையுடைய பட்சிகளாகவும் மற்றவுயிர்களாகவும் பிறந்து அரியவடிவங்கொண்டு சுகமடைவார்கள் (ஆதலால்) காசிப்பதியே ஒப்பற்றதாகும். எ-று. (உ0)

நரருருவ மெடுத்தமரி னுடுகருமந்தவறு
விரதமரி யதுகருமம் வேண்டாத வுயிராகப்
பரவவமர் தலிற்பலிக்கும் பரமசுகமெனக்கருதி
யுரவுமிகு மாவாதி யுருவாவரக்காசி.

(இ-ள்.) காசிப்பதியில் பிறக்க விரும்புவோர் மானிடவடிவங்கொண்டிருந்தால் குறிக்கத்தக்க சத்கருமங்களைத் தவறாது அநுஷ்டிப்பது அருமையாகும் ஆதலால் கருமத்தை விரும்பாத உயிர்களாகப் பிறந்திருந்தால் பரமசுகம் எளிதில் கிடைக்கும் என்று சிந்தித்து வலிமிகுந்த மிருகமாதிசரீரத்தை அபேக்ஷிப்பார்கள். எ-று. (உக)

வேறு.

வானமிசைவாழ்க் கையாரனை வழுத்துதொறுமிப் பெருஞ்சுவர்க்கந்
தானமமர்வாழ்க் கையைவேண்டோந் தவாதகாசிப் பெரும்பதியு
ளூனமரமா திகள்பலவு ளொன்றும்பெறும்பே றருடியெனின்
ஞானமயமாம் பெருங்காசி நலனுமுரைத்தற் கடங்குமோ.

(இ-ள்.) சொர்க்கலோகத்தில் வசிக்குந் தேவர்கள் சிவபிரானைத் துதிக்குந் தோறும் பிரபலபோகங்களுக்கிடமாகிய வாழ்க்கை யெங்களுக்கு வேண்டுவதில்லை கெடுதலில்லாத காசித்தலத்தில் இழிந்த மரங்களாதி பலவுயிர்களுள் ஒன்றாகப்பிறக்கத்தக்க பெரும் பிரயோசனத்தைக் கடாக்ஷிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வார்களானால் ஞானவடிவாக விளங்கும் காசித்தலத்தின் மகிமையை நான் சொல்லக்கூடுமோ கூடாதென்று இலக்குமியே யறிவாயாக. (உஉ)

கந்தமூல பலமருந்திக் காற்றுலுதிர்ந்த சருகருந்தி
முந்தவெழுதீர்த் துளியருந்தி முகிழ்க்கும்பசும்பொற் கொழுந்த
வந்ததருந்தி யதுவுநீத் தமர்வார்காசி மாதேவ [ருந்தி
னெந்தவுணவுண் டமர்ந்தாலு மெளிதினருளும் வகையுணரார்.

(இ-ள்.) காசித்தலத்தில் வசித்து எவ்வகையான சுகபோஜனங்களை உண்டிருந்தாலும், விசுவநாதர் எளிதாக அநுக்கிரகிக்கின்ற முறையைத் தெரியாதவர்கள் வேறுவேறிடங்களில் கிழங்குகளையும் பின்பு பழங்களையும் காற்றாலுதிர்ந்த சருகுகளையும் பசும்புற் கொழுந்திலுள்ள நீர்த்துளிகளையும் பின்னர் புற்கொழுந்துகளையும் பிரயத்தினமின்றி வந்தவைகளையும் உண்டும் பின்னர் உண்ணுதொழிந்தும் வசிப்பார்கள். எ-று. (உஙு)

கொடியதொழிலு மிழிதொழிலுங் குயிற்றுமிருகம் பறவையெலா
நெடியதவயோ கியர்பொருவ நிகழுறஞ்சி நிலாயமர்வ
கடியமலர்கள் பலவீசிக் காமர்கொடியும் பாதவமு
முடியவினையா வையுமுடித்து முடியாவின்பிற் றலைப்படுமே.

(இ-ள்.) கொடுந்தொழிலையும் இழிதொழிலையும் செய்யும் மிருகங்கள் பறவைகள் யாவும் மேலான தபோநிஷ்டர்களைப்போல அன்னிய உயிர்களுக்குத்துன்பஞ்செய்த லொழிந்து ஜீவகருணையோடு விளங்கிக்கொண்டிருக்கும். அழகிய கொடிகளும் சோலைகளும் காசித்தலத்தைக்குறித்து வாசனையுடைய புஷ்பங்களைத்தூவி பந்தமுள்ள வினைகளை யொழித்து எப்பொழுதுமழியாத முத்தியிற் சேரும். எ-று. (௨௪)

கிருமிகீட முதலாகக் கெழுமுமுயிர்கள் பலவினுக்குந்
திருமியுருவொன் றடையாது செயிர்தீரின்பந் தருநகெடுத்த
கருமிகளுமங் குறிற்கலபபர் கதிபற்பலவா வுரைப்பதெவன்
பொருமியெழுந்த பூண்முலையா யென்றுனுந்தி பூத்தபிரான்.

(இ-ள்.) புழு கோற்புழு முதலாகிய செந்துக்கள்யாவும் இறந்தால் திரும்பவும் வேறுதேகம் பெறாமல் களங்கம் நீங்கிய சுகத்தை அக்காசித்தலம் கொடுத்தருளும். சற்கருமத்தில் வழுவின கர்மிகளும் அத்தலத்தையடைந்தால் நற்கதியடைவார்கள் பலபலவிதமாகக் கூறுவதியாது பூரித்தெழுந்து ஆபரணங்களையணிந்த குஜகும்பங்களையுடைய இலக்குமியேயென்று திருமால்கூறினர். எ-று. (௨௫)

உந்திபூத்தோன் வாய்மொழிகேட் டுல்வாவின்ப மூற்றெடுப்பக்
கந்திபூத்த களத்தணங்கு கைகள்கூப்பிக் கடுந்தீமைப்
பந்திபூத்த கலியினுயிர் பலவுங்கதிசேர் தலங்கேட்டுப்
புந்திபூத்த பெருமகிழ்விற் போதம்பூத்த திறத்தமர்ந்தாள்.

(இ-ள்.) நாபிக்கமலத்தையுடைய விஷ்ணுதேவர் திருவார்த்தையை கமுகு போலுங் கண்டத்தையுடைய திருமகள் கேள்வியுற்று நீங்காச்சுகம் மேலுமேலு மதிகரிக்க இருகரங்களுங் குவித்து கொடிய தீமைகள் விருத்தியாகின்ற கலியுகத்தில் பல சீவர்களும் முத்தியடையத்தக்க காசித்தலத்தின் மகிமையைக் கேட்டு மனதிலடங்காத மகிழ்ச்சியோடு ஞானேந்தியமான தன்மையைப்போல விரும்பியிருந்தனள். எ-று. (௨௬)

மன்னுங்காசித் தலப்பெருமை மாயோனுரைத்த படியிதுவான்
முன்னுமனைய தலத்தமரு முதலாகியபுண் ணியத்தோடு
மின்னுஞ்சடிலத் திருமோலி விசுவநாதன் பூசனையும்
பன்னுமன்ன பூரணிபூ சனையும்பரிந்து செயல்வேண்டும்.

(இ-ள்.) நிலைபெற்ற காசித்தலத்தின் பெருமையை விஷ்ணுதேவர் சொல்லிய தன்மை யிதுவாகும். சிந்திக்கத்தக்க காசிப்பதியில் வசித்தல் முதலாகிய புண்ணியத்தோடு பிரகாசிக்கின்ற சடாமகுடத்தையுடைய விசுவேசர் பூசையும் வேதங்கள் எடுத்துரைக்கத்தக்க அன்னபூரணித்தாயார் பூசையும் விருப்பத்தோடு செய்யவேண்டும். எ-று. (௨௭)

இனையர்பூசை புரிதலில்வந் தெய்துமபேறிவ் வளவென்று
நினையவுரைக்க யானேயோ வல்லேனிற்க நிகழ்மைந்தா
வனையர்தமக்கு மூத்தமக னாகியடைந்தார்க் கெவ்விடருந்
துனையவகற்றி யருள்கொழிக்குந் துண்டிராச கணபதியை.

(இ-ள்.) மேற்சொன்னவர்களுடைய பூசையைச் செய்தலால் வரும் பிரயோசன மிவ்வளவென்று நினைக்கவும் சொல்லவும் நான் வல்லவனன்று அது நிற்க அறிவுவிளங்குகின்ற தீபகனே அவ்விசுவநாதருக்கும் அன்னபூரணியாருக்கும் மூத்தகுமாரனாகி அடுத்தவர்களுக்கு எவ்வித விக்கினங்களையும் விரைவில் நிவர்த்தித்து கிருபைபாலிக்கின்ற துண்டி விநாயகரை. எ-று. (உஅ)

ஊட்டிநறிய மோதகங்கொண் டுவப்பிற்பூசை புரிவாரும்
வாட்டியடைந்தார்க் கெவ்விடரு மன்னுகால வயிரவரைப்
பூட்டிவடைமா லிகையன்பிற் பூசிப்பாரும் புகரனைத்து
மாட்டியருளு மொருதண்ட மலர்க்கையானைத் தொழுவாரும்.

(இ-ள்.) விருப்போடு பூசைசெய்து மோதகமுதலியவை நிவேதிக்கின்றவர்களும் அடுத்தவர்களுக்கு எவ்வகைக் கிலேசங்களையும் ஒழித்தருள்கின்ற காலவைரவர்க்கு வடைமாலிகை தரித்து அன்போடு பூசைசெய்பவர்களும் குற்றங்கள் முழுமையும் நீக்கித் திருவருள் பாலிக்கின்ற ஒப்பற்ற தண்டபாணியை வணங்குவோர்களும். எ-று. (உகூ)

அடையுமபேற்றை யினையதென வளவிட்டுரைக்கும் வல்லரெவர்
மிடையுங்கதிர்கால் பரிதியழல் விரிஞ்சன்மாலா தியரைத்தேர்ந்
தடையுங்காசிப் பதியகத்தே சார்ந்துபோற்றி லவரவர்தங்
குடையுநறுஞீ ருலகடைந்து குலவிவாழ்ந்தின் புறுவாரால்.

(இ-ள்.) அடையும் பலனை இவ்வளவென்று அளவிடக்கூடியவர் யாவர் நெருங்கிய கிரணங்களை வீசும் சூரியமூர்த்தி அக்கினிதேவர் பிரமதேவர் விஷ்ணுதேவர் மற்றைத்தேவர்களுடைய பதவிகளையும் விரும்புவோர்கள் காசித்தலத்தையடைந்து அவரவர்களைப் பூசிப்பாராயின் அந்தந்தத் தேவர்களுடைய பதவிகளைப் பெற்று இன்புறுவார்கள். எ-று. (௩0)

என்றுகுரவன் றீபகனுக் கிசைத்தான்கேட்டு மிகமகிழ்ந்தா
னன்றுகலியே நின்னுற்ற லணுவுங்காசித் தலம்புகுதா
தொன்றுமற்றை யிடங்களினின் னுரிமைசெலுத்தி யமரென்று
துன்றுமலரோன் விடைகொடுத்தான் றொழுதுபோய தக்கலியே.

(இ-ள்.) இவ்வண்ணமென்று வேததருமராகிய ஆசிரியர் தீபகனென்னும் மாணாக்கனுக்குக் கூறினர் அந்நாள் தீபகன் கேட்டு களிகூர்ந்தனன் கலிபுருஷனே உனது வல்லமை அணுவளவேனும் காசித்தலத்திற் செல்லாது மற்றையிடங்களில் உனததிகாரத்தைச் செலுத்தி இருவென்று பிரமதேவர் விடைகொடுத்தனர் அக்கலிபுருஷன் பிரமதேவரை வணங்கிச் சென்றனன். எ-று. (௩க)

திருமால் திருமகளுக்குபதேசித்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ௩-க்கு திருவிருத்தம் கசஎ

திருச்சிற்றம்பலம்.

# நான்காவது சோமசன்மா முத்தியடைந்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

அருமையாயமா தவத்துயர்ந் தருள்கெழுவேத
தருமன்மாமல ரடியிணை தீபகன்றாழ்ந்து
பெருமைமேயவிக் காசிமான்மியமினும் பேசென்
றொருமையன்பினு லிரப்பவம் முனிவரனுரைப்பான்.

(இ-ள்.) அருமையாகச் செய்யும் மகத்தான தவத்தால் உயர்ந்து திருவருள் வல்லமைபெற்ற வேததருமமுனிவர் பாதங்களில் தீபகன்பணிந்து பெருமையுள்ள இக்காசித்தலமகிமையை இன்னமுந்தேவரீர் திருவாய்மலரவேண்டுமென்று வேறுபடாத அன்போடு பிரார்த்திக்க அவ்வேததருமமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (க)

இழிந்தசாதிய ராயினும் புண்ணியமியற்றிற்
கழிந்தமேன்மைகூர் சாதியராகுவர் கடையா
யொழிந்தபாதக மியற்றுந ருயர்ந்தவரெனினும்
பொழிந்ததீமைசால் புலைத்தொழிற் புன்மையராவார்.

(இ-ள்.) தாழ்ந்தஜாதியிற் பிறந்தவராயினும் புண்ணியஞ் செய்வார்களாகில் மிகவுமுயர்ந்த மேலான ஜாதியிற் பிறந்தவராவார்கள். உயர்ந்தஜாதியிற்பிறந்தவராயினும், மிகவு மிழிந்தமஹாபாதகங்களைச் செய்வாராயின் தீமைநிறைந்த புலைத்தொழிலைச் செய்கின்ற தாழ்ந்தஜாதியராவார்கள். எ-று. (உ)

ஞானஞ்சத்தியந் தவமெலா முதலுகங்கண்ணு
மானமாரிரண் டாம்யுகந் தருமமேவயங்கு
மானமூன்றெனப் படும்யுகம் யாகமேயமையு
மீனமார்கலி வஞ்சமாதிகள்பல வியங்கும்.

(இ-ள்.) முதலாகிய கிரேதாயுகத்தில் ஞானம், சத்தியம், தவமுதலானவைகள் யாவும்வளரும். பெருமைதங்கிய இரண்டாவதாகிய திரேதாயுகத்தில் சமஸ்த்த தருமங்களும் வளரும். மூன்றாவதாகிய துவாபரயுகத்தில் யாகங்களெல்லாம் வளரும். நான்காவதாகிய கலியுகத்தில் இழிவுள்ள கபடமாதி பாபங்கள்யாவும் வளரும். எ-று. (ங)

கலியின்மேயவ ருடம்பையே யுயிரெனக்கண்டு
புலிவதாகிய போகமேயின்பென மதித்து

**வலியசெய்கையிற் பரதிரவியங்கவர் வாராய்ப்**
**பொலிவர்வஞ்சனைக் தொள்கலமாகி யெப்போதும்.**

(இ-ள்.) கலியுகத்திலிருப்பவர்கள் தேகத்தை ஆன்மாவாகக்கண்டு, இந்திரியகரணங்களால் அனுபவிக்கின்ற சிற்றின்பத்தையே முத்தியின்பமாகமதித்து, மித்திரபேதம் பொறாமை வஞ்சனைமுதலிய கொடுந்தொழில்களாகிய சரக்குகள்நிறையும் மரக்கலத்தையொத்து; எந்நாளும் பலாத்காரத்தால் அன்னியர் பொருளை அபகரிக்குந் தொழிலையுடையவராவார்கள். எ-று. (ச)

**மறையுணர்ந்தவ ரவ்வழியொழுகிடல் வழுவி**
**முறைதிறம்பிவன் புலையர்செய் தொழிற்றிறமுயன்று**
**நிறையினெஞ்சராய் நிகழ்சிவ ஞானமீத்தவராய்ப்**
**பொறையுடம்பையே யோம்பிவாழ் புன்மையாராவார்.**

(இ-ள்.) வேதார்த்தங்களை அறிந்த பிராமணர்கள் விதிவழிநடப்பதுதவறி நமதாசாரத்துக்கு மாறுபட்டு வலியசண்டாளர்கள் செய்யுந்தொழிலில் முயன்று, உண்மையில்லாதமனமுடையராய் விளக்கமுற்ற சிவஞான மில்லாதவராய் பாரமாயுள்ள உடம்பையே பாதுகாத்துவாழ்கின்ற இழிஞராவார்கள். எ-று. (ரு)

**ஆதலாற்கலி யுகந்தனி லெவ்விடத்தடைந்து**
**காதலாற்றவ முஞற்றினுஞ் சித்தியாகழிந்து**
**போதலாற்புனற் காசியினின்னொடும் புகுந்தே**
**னீதலாற்கதி கொடுக்குமோர் வைப்புவேறின்றே.**

(இ-ள்.) ஆதலினால் கலியுகத்தில் எந்தத்தலத்திற்குப்போய் ஆசையுடன் தவம் செய்தாலும் தவம் சித்தியாகாமற்கழிந்து விடுதலால், கங்காநதியையுடைய காசித்தலத்தில் உன்னுடன்வந்தேன். இதுவல்லாமல், முத்தியைத்தருகின்ற வேறுதலம் எங்குமில்லை. எ-று. (சு)

**இன்னகாசியின் மான்மியமியம்புதற் கெளிதோ**
**வன்னமாடரும் புனன்முடியண்ணலா ரருளான்**
**முன்னமோர்மறை வேதியன் முத்தியையுற்ற**
**னன்னர்மேயவக் காதையை நவிலுவன்கேட்டி.**

(இ-ள்.) இவ்வண்ணமான காசிப்பதியின் மகிமை சொல்லுதற் கெளிதாகுமோ அன்னப்பறவை வடிவநுகொண்ட பிரமதேவனால் தேடுதற்கரிய கங்கை தங்கிய சடாமகுடத்தையுடைய சிவபிரானது கருணையினால் பூர்வத்தில் வேதமுணர்ந்த ஓர் பிராமணன் முத்திபெற்றான் நலமுள்ள அக்கதையைச் சொல்லுகிறேன் கேட்பாயென்று(வேததருமமுனிவர்)தீபகனுக்குக்கூறுகின்றனர். எ-று. ()

**திரைகுலாநரு மதையெனுந் திருநதித்தீரத்**
**தரைகுலாமொரு வேதியன் விட்டுணுசருமனு**
**ணரைகுலாமறை யுணர்ந்தவ னொழுக்கமிக்குள்ளான்**
***புரைகுலாநெறி யன்றிமற்றொன்றையும் புரியான்.**

---

* புரை = உயரசி,

(இ-ள்.) அலைகளையுடைய நருமதையென்னு மஹாநதிக்கரையில் வசிக்கின்ற ஒருபிராமணன் விஷ்ணுசருமனென்னும் பெயர்பெற்றவன் புகழையுடைய வேதங்களை யுணர்ந்தவன் நல்லொழுக்கத்திற் சிறந்தவன் சமானமில்லாத சற்காரியங்களை யல்லாமல் வேறொருதொழிலையுஞ் செய்யாதவன். எ-று. (அ)

திருமன்மற்றவன் புத்திரர் திகழ்தருசோம
சருமனக்கினி சருமனென் றிருவர்கடயங்கு
மருமன்மாமல ரானினுமறைகண்முற் றுணர்ந்தார்
பொருமன்முற்றவுங் கடிந்தவர் புந்திகூர்ந்தவரால்.

(இ-ள்.) ஞானசம்பத்திற்சிறந்த அவ்விஷ்ணு சருமன் குமாரர்கள் சோமசருமன் அக்கினிசருமன் என்று இருவர்கள் விளக்கமுற்ற வாசனையுள்ள தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனைப்பார்க்கினும் வேதங்களைமுழுதும் அறிந்தவர்கள் விரோதகுணங்கள் முழுதுங்கடிந்தவர்கள் புத்திநுட்ப முள்ளவர்கள். எ-று. (௯)

தடையிலாச்சித்தி பெற்றன னக்கினிசருமன்
அடையமற்றது பெற்றிலன் மற்றையானவருண்
மிடையுஞ்சோமசன் மாமுகநோக்கிமிக் கின்பங்
குடையுமக்கினி சருமன்மிக் கன்பொடுகூறும்.

(இ-ள்.) இவருள் அக்கினிசருமன் அஷ்டமஹாசித்திகளையும் பூரணமாகப் பெற்றுக்கொண்டான் சோமசருமன் அச்சித்திகளைப் பெறாதவனானான். சித்திபெறாத சோமசருமன்முகத்தை மேலான இன்பத்தை அனுபவிக்கின்ற அக்கினிசருமன்பார்த்து மிகமகிழ்ச்சியோடு சொல்லுகின்றனன். எ-று. (௰)

அஷ்டமஹாசித்திகளாவன, அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பனவாம். இவைகளின் விரிவை திருவிளையாடற் புராணத்தில் அஷ்டமாசித்தி உபதேசித்த படலத்தாலுணர்க.

சிறியமாதவஞ் செய்யினும் பெரிதெனத்திகழு
நறியதேமலர்க் கொன்றையான் விச்சுவநாத
னெறியபேரரு ளெண்மையிற் கிடைத்துற நில்வுங்
குறியகாசியை யடைதும்வா வெனவவன்கூறும்.

(இ-ள்.) அறிவுடையோரால் குறிக்கத்தக்க காசித்தலத்துக்கு நாமிருவரும் போவோம். அற்பதவஞ்செய்தாலும் மஹத்தாகவிளங்கும். தேன்றுளிக்கின்ற கொன்றைமாலையணிந்த விசுவநாயகர் பெருங்கருணைகிடைக்கும் ஆதலால் நீரும் வரவேண்டுமென்று அழைக்க சோமசருமன் சொல்லுகிறான். எ-று. (௰௧)

நம்பியித்தகு நருமதை தீரமே நயந்தேன்
றம்பிவேறொன்றுஞ் சிறந்ததாயுண்டென்று சாரேன்
பம்பிநீர்வள மலியுமக் காசியிற்படர்நீ
கம்பியாதென வுரைத்தனன் வருவதுகருதான்.

(இ-ள்.) தக்கசிறப்புள்ள நருமதாதீரத்தில் வசிக்கும் வாழ்வையேவாழ்வென்று நம்பிவிரும்பினேன். தம்பிஅக்கினிசருமனே வேறேரிடமுஞ் சிறப்புள்ளதாயிருக்குமென் றெண்ணிப் போகமாட்டேன் நிறைந்த நீர்வளமுள்ள காசித்தலத்தைச் சலனமில்லாமல் நீ அடைவாயாக என்றுகூறினன் பின்னல் தனக்கு வரும் தீமையை உணரமாட்டாத சோமசருமன். எ-று. (ய௨)

ஓங்குகாசிமந் தணமெலா முன்னைநாளுண்மை
தாங்குதெய்வமார்க் கண்டனற் றெளிந்தவத் தவத்தோன்
வீங்குநீர்மலி யத்தலவெறுக்கைவைப் பவனே
பாங்குசேர்தர மனத்தினும் விரைதரப்படர்ந்தான்.

(இ-ள்.) உயர்ந்த காசிரகசியங்கள் யாவும் பூர்வகாலத்தில் சத்தியஞானத்தையுடைய தெய்வத்தன்மைவாய்ந்த மார்க்கண்டேயமுனிவராலுணர்ந்த அவ்வக்கினிசருமன் அதிகரித்த கங்காப்பிரவாகத்தையுடைய அக்காசிப்பதியில் மென்மேலும் விருப்பமுடையவனாகி அத்தலத்தை அடையவேண்டுமென்று நினைக்கின்ற மனத்தினும் விரைவாகச் சென்றனன். எ-று. (யஙு)

தருமமுந்துறப் புரிந்ததா லக்கினிசருமன்
றருமமார்தரு காசியிற்றமியனுப் சார்ந்து
தருமநாதனைத் தருமகூபப்புன லாட்டித்
தருமவாஞ்சையிற் போற்றியாங்கிருந்தனன் றவாதே.

(இ-ள்.) அவ்வக்கினிசருமன் பூர்வத்தில் தருமஞ்செய்திருத்தலால் தருமம் நிறைந்த காசிப்பதிக்குத் தனியனுகச்சென்று தருமவடிவாகிய சிவபிரானை அறக்கூபமென்னும் கிணற்றுநீரால் அபிஷேகித்து சிவதருமத்தில் விருப்புடையவனாகி அவ்விடம் நீங்காது பணிந்திருந்தனன். எ-று. (யச)

தருமதேவதை போற்றிய தருமநாயகன்றன்
றருமமார்தரு சரித்திரமுழுவதுங் கேட்பான்
றருமமால்விடை யகிலநாயகனெதிர் சார்ந்து
தருமமார்தரப் போற்றுவான் சாற்றுவான்றுதியே.

(இ-ள்.) அறக்கடவுளால் துதிக்கத்தக்க சிவதருமவடிவான விசுவநாதருடைய சரித்திரமுழுவதும் பெரியோர்களால் கேட்பவனாகி தருமவடிவமாகிய விஷ்ணுமூர்த்தியை இடபமாகக்கொண்ட விசுவநாதர் சந்நிதியடைந்து சிவதருமநிறையும்படி வணங்கித் தோத்திரஞ் செய்பவனானான். எ-று. (யரு)

காமமாதிமுக் குற்றமுங் கடிந்தவனாகி
யேமமாரவ னிருப்புழி முடிவுவந்தெய்தச்
சோமசேகரன் றாரகமந்திரஞ் செற்று
ஞமமோவிய முத்தியை நயந்துநண்ணினனே.

(இ-ள்.) காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றத்தையும் நீக்கி இன்பவடிவாக அத்தலத்திலிருக்குங்காலத்து முடிவுகாலம்வந்து சம்பவிக்க, சந்திர

சூடனாகிய விசுவநாதர் தாரகமந்திரத்தை உபதேசித்தருளினர். ஆதலால், அச்ச மில்லாத முத்தியை மகிழ்ச்சியுடன் அடைந்தனன். எ-று. (மசு)

இன்னவாறமர்ந் தழற்சரு மன்கதியெய்த
வன்னசோமசன் மாவனையாதிக ளடுத்து
நன்னர்மேவிய வருந்தவம்பற்பக னடாத்தி
முன்னமேவருஞ் சித்திகண் முழுவதும் பெற்றான்.

(இ-ள்.) இவ்வண்ணமாகக் காசிப்பதியில் அக்கினிசருமன் வாசஞ்செய்து முத்தியடைய அவன் தமையனாகிய சோமசருமன் பெரியமலைமுதலான இடங்க ளுக்குப்போய் நன்மையோடு விரும்பத்தக்க அரியதவங்களைப் பலகாலஞ்செய்து சிந்தனைக்கடங்காத சித்திகள் முழுவதையும் பெற்றுக்கொண்டனன். எ-று. (மஎ)

சித்திபெற்றகா ரணத்தினன் மிக்குளஞ்செருக்கி
முத்திபெற்றவர் தங்களைநிந்தனை மொழிவான்
பத்தியிற்சிவ பணிசெய்வார்க் கிடர்பலபடிப்பா
னத்தியிற்பெரி தவன்செயுங்கொடுமையா ரளப்பார்.

(இ-ள்.) சித்தியடைந்தகாரணத்தால் மிகவுஞ்செருக்கடைந்து முத்திபெற்ற மகான்மார்களை நிந்தைசெய்வான். அன்போடு சிவபணிசெய்கின்றவர்களுக்கு பல விரோதங்களையுஞ் செய்வான். அச்சோமசருமன் செய்யுங் கொடுமையை யாவர் அளவிடத்தக்கவர்கள் அவன் செய்யும் பாவம் சமுத்திரத்திலும் பெரிதாகும். எ-று. ()

சற்றுமோரப ராதமில்லாரையுஞ் சபிப்பா
னற்றுநன்மைநேர் வந்திடுசிலர்தமை யருள்வான்
முற்றுநல்குர வினரிரு நிதிபெறமொழிவான்
பற்றுசெல்வத்தர் நல்குரவடைதரப் பகர்வான்.

(இ-ள்.) அபராதஞ் சற்றுமில்லாதவர்களுக்குச் சாபங்கொடுப்பான். தீமை செய்பவர்களுக்கு அருள் செய்வான். மிகுந்தவறியவரை பெருஞ்செல்வமுடை யோராகச்செய்வான் பெருஞ்செல்வமுடையோரைத் தரித்திரராக்குவான். எ-று. ()

தேடுபுத்திர ருளர்தமை யிலரெனச்செய்வா
னேடுமற்றவ ரிலர்தமை யுளரென நவில்வான்
பாடுபெற்பல மாதர்தம்பெருநலம் படர்வான்
கூடுபெற்றியின் பெருமிதமுட்கொடு குளிர்வான்.

(இ-ள்.) அருமையாகத்தேடத்தக்க புத்திரசம்பத்துடையவர்களை இல்லாத வர்களாகச்செய்வான். அப்புத்திரர்களில்லாதவர்களுக்குப் புத்திரருண்டாகும் படிசெய்வான். பேரழகுள்ள மாதர்களோடு கூடிச்சுகிப்பான் தனக்குள்ள சாமர் த்தியத்தால் பெருமிதங்கொண்டு களிப்பான். எ-று. (உம)

அரியமாதவ முயன்றுநான் சித்திகளடைந்தே
னுரியபோக மெலாமுவப்பூற்றெழ வுறுவேன்

பெரியகாசியிற் றம்பிபோய்ப் பெற்றதென்னென்று
விரியவோதுவன் றன்னையேமதித்திடு * மிகையான்.

(இ-ள்.) அரியதவஞ்செய்து நான் சித்திகளையடைந்தேன். மகத்தானபோகங்களையெல்லாம் சந்தோஷமேன்மேலு முண்டாகும்படி யனுபவிக்கின்றேன். பெரியகாசித்தலத்தைத் தம்பி அக்கினிசருமன் அடைந்து யாதுபெற்றா னென்று தனது பெருமையை விரித்தோதுவன் தன்னைத்தானே மதிக்குங் கேடுடையவனானான். எ-று. (௨௧)

இனையனின்னணஞ் செருக்குழி முடிவுநாளெய்தத்
துனையவிட்டுடம் பொருகடற்கரையகந் தொடர்ந்து
நினையவ்வாழ்தரு மிலேச்சருக்கதிபனாய் நிகழ்ந்தான்
முனையசூலிபே ரருளுறார்க்கீதொன்றோ முற்றும்.

(இ-ள்.) இச்சோமசருமன் இவ்வாறு செருக்கடைந்தகாலத்து மரணகாலம் சம்பவிக்க வருத்தத்தோடு உடம்பைவிட்டுப்பிரிந்து கடற்கரையோரத்திலுள்ள ஒரு நகரத்தில் மிலேச்ச அரசனாகப் பிறந்திருந்தனன். கூர்மையானசூலத்தைத்தாங்கிய சிவபெருமான் கிருபையைப் பெறாதவர்களுக்கு ஈதொருதுன்பமோ சூழும் (இன்னுமனந்த முண்டாகும்.) எ-று. (௨௨)

திரையுலாங்கடன் மிலேச்சனாய்ப் பிறந்தவன் றிரிந்து
புரையுலாந்தொழில் போக்கறப் பற்பகல்புரிந்து
நரையுலாந்தலை யாளனாயமர்ந்துபின் னசித்து
வரையுலாம்புயத் தியமனூர் புக்கனன்மறுகி.

(இ-ள்.) அலைகளையுடைய கடற்கரையில் மிலேச்சனாகப்பிறந்த சோமசருமன் பலவிடங்களிலலைந்து குற்றங்களையுடைய கொடுந்தொழில்களைத் தடைப்படாது பலநாளுஞ்செய்து நரைத்தலையுள்ள கிழவனாகி மரணத்தையடைந்து மலைபோலும் புயங்களையுடைய எமதருமராஜன் வீற்றிருக்கும் எமபுரத்தை வருத்தத்துடனடைந்தனன். எ-று. (௨௩)

தண்டமெண்ணில நமன்றமர் புரிதரத்தாங்கிக்
கொண்டதுன்பொடு வெரூஉக்கொடு குலைகுலைந்துடைந்து
கண்டகும்பியில் வீழ்ந்தனன் கற்றருந்தவஞ்செய்
தண்டனாயினுஞ் செருக்குற லெற்றைக்குமடாதால்.

(இ-ள்.) அளவில்லாததண்டங்களை நமன்றூதர்கள் செய்யப்பொறுத்துத் துக்கத்தால் மிகப்பயந்து நடுநடுங்கி நைந்து நரகத்தில் வீழ்ந்தனன். வாசித்தறிந்து செய்தற்கரிய தவங்களைச்செய்து தேவபதத்திருப்பவனாயினும் செருக்கடைதல் என்றைக்குங் கூடாது. எ-று. (௨௪)

வருத்துகும்பியி லழுந்திவேதனைப்படு மறையோன்
றிருத்துகாசியிற் றம்பிசென் றதுமுயர் தெய்வம்

* மிகை = கேடு.

பொருத்துமுத்தியிற் புகுந்ததுந் தம்பியின்பொலிவுங்
கருத்துளைந்துசற் றெண்ணினன் பண்டறக்கதிர்ப்பால்.

(இ-ள்.) வருத்துகின்ற நரகத்தில்மூழ்கி வேதனைப்படுகின்ற சோமசருமன் திருத்தமான காசித்தலத்தைத் தம்பி அக்கினிசருமன் சேர்ந்ததும் உயர்ந்தவிசுவநாதர் அருளைப்பெற்று முத்தியடைந்ததும் தம்பியினது விளக்கமும் பூர்வத்திற் செய்த தருமப்பலனால் மனங்கசிந்து சற்றுநேரஞ் சிந்தித்தனன். எ-று. (உரு)

காசியுண்ணினைத் தலும்பெருநரகெல்லாங் கழித்து
வீசிமேலெழீஇ மிக்கதோர் பொலிவின்வீற றிருந்தா
ருசியாவருங் கூறினரடிதொழு தணைந்தார்
பேசியுய்ந்தனங் காசியையெனப்பெரி துவந்தான்.

(இ-ள்.) காசித்தலத்தை உள்ளத்தில் நினைத்த அளவில் மகாநரகவேதனைகள் முழுதுமொழித்து மேலெழுந்து பிரபல விளக்கத்துடன் கெம்பீரமாக இருந்தனன். தேவர் முனிவர் முதலியோர் ஆசீர்வதித்தார்கள். மற்றையோர் அவன் பாதங்களில் பணிந்து சமீபித்தார்கள். காசித்தலத்தை நினைந்து பிழைத்தேனென்று அச்சோமசருமன் மிகவுங் களிப்படைந்தனன். எ-று. (உசு)

தம்பிசொற்படி கேட்டொரு காசியைச்சார்ந்து
நம்பினாமிருந் தோமெனி னண்ணுமோநரகம்
வெம்பிவெய்திடர்ப் பட்டனமென்றுமெய் வெயர்த்தர்ன்
கம்பியாவெழுந் தஞ்சலிமுகிழ்த்துளங் கரைந்தான்.

(இ-ள்.) தம்பி சொல்லியபடி கேட்டு ஒப்பற்ற காசித்தலத்திற்குப்போய் நம்பிக்கையுடன் வசிததிருப்பேமாயின் எனக்கு நரகம் வருமோ கேளாமையால் மிகக்கொடிய துன்பத்தை யடைந்தேனென்று எண்ணி சரீரம் வெயர்த்து நடுங்கி எழுந்து இருகரங்களையும் அஞ்சலிசெய்து மனங்கசிந்துருகினான். எ-று. (உஎ)

நரகவர்தையு நன்னுதன் மடந்தையர் நல்கும்
விரகவாதையு மிக்கபாதகமென விளம்பு
முரகவாதையு முறுகருக்குழியென வுரைக்குங்
கரகவாதையுங் கழிப்பது காசியென்பெயரே.

(இ-ள்.) நரகங்களால்வருகிற உபாதியையும், நல்ல நெற்றியையுடைய மாதர்களால் கொடுக்கப்படுகின்ற விரகதாப உபாதியையும், பெரும் பாதகமென்று சொல்லத்தக்க சர்ப்பதத்தினாலுண்டாகின்ற உபாதியையும், கருப்பாசயப்பையென்று சொல்லத்தக்க கரகத்தினாலுண்டாகின்ற உபாதியையும், நிவர்த்திசெய்தருளத்தக்கது காசியென்கிற திருநாமமந்திரமாகும். எ-று. (உஅ)

நினைந்தகாலையிற் றுயர்கெடுத் தருஞ்சுக நிரப்பிப்
புனைந்ததேவொரு காசியாங்குறுநர்க்கென் புணர்க்கு
மினைந்தபோதகூ தொழித்திடுமெந்திர மியம்பிற்
புனைந்தகாசியென் றுரைசெயும் பொற்பினமந்திரமே.

(இ-ள்.) நினைத்தமாத்திரத்தில் அரிய துயரத்தை யொழித்து சுகபூர்த்தியைச் செய்விக்குமானல், ஒப்பற்ற காசித்தலத்தை அடைந்தோர்க்கு யாதுவந்துசம்பவிக்கும், ஆபத்துவந்தகாலத்து அவ்வாபத்தை யொழிக்குமந்திரம் இதுவென்று சொல்லுமிடத்து அலங்காரமமைந்த காசியென்று சொல்லத்தக்க அழகுவாய்ந்த மந்திரமே மகாமந்திரமாகும். எ-று. (௨௯)

என்றுகூறிவீற் றிருப்பவன் செய்கையை யியமன்
கன்றுதூதர்க ணோக்கினர் கண்சிவந்தோடி
யன்றுமற்றவன் றிருமுனமுரைத்தலு மவனுங்
கொன்றுதின்றிடு தழலினும் பெருஞ்சினங்கொண்டான்.

(இ-ள்.) இவ்வாறு சொல்லிச் சுகித்திருக்கின்ற சோமசருமன் செய்கையைக் காலதூதர்கள்பார்த்துக் கோபித்துக் கண்கள் சிவந்து ஓடிப்போய் இயமன் முன்னணுகிச்சொன்ன அளவில் எப்பொருளையும் பின்னப்படுத்திச் சாம்பலாக்குகின்ற நெருப்பைப்பார்க்கிலும் அவ்வியமன் கடுங்கோபங் கொண்டனன். எ-று. (௩0)

கொண்டுமற்றவற் கூவுதியென்றலுங் குறுகி
மிண்டுதூதர்கள் வருகெனவழைத்தனர் வெருவான்
மண்டுகாசிநன் னாமமேவாயிடை யுரைத்துத்
தண்டுதாங்கிய கடவுண்முன் சார்ந்தனனன்றே.

(இ-ள்.) கோபங்கொண்டு இவ்விடத்தழையுங்க ளவனையென்ற அளவில் வலிய தூதர்கள் வந்து வாவென்றழைத்தார்கள். சோமசருமன் பயப்படாதவனாகி பெருமைநிறைந்த காசிகாசியென்கிற திருநாமத்தையே வாயினாற் சொல்லிக்கொண்டு தண்டமேந்திய கடவுளாகிய இயமனுக்கு முன்னே சென்றனன். எ-று. (௩௧)

சார்ந்தவன்றனை நரகவாதனையெலாந்தள்ளிப்
பேர்ந்ததெவ்விதமுரையெனப் பெரிதவன்கேட்ப
வார்ந்தகாசியை முன்னிகழ்ந்தித்துய ரடைந்தேன்
வார்ந்தவிப்பொழு துன்னினேன் யாவையுமறுத்தேன்.

(இ-ள்.) எதிரேவந்த சோமசன்மனைப்பார்த்து நரகவாதனைகள் யாவுங் கீழ்ப்படுத்தி மேலேவந்து சுகித்திருக்குங் காரணம் யாதென்று கெம்பீரமுள்ள இயமன்கேட்க மகிமை நிறைந்த காசித்தலத்தை முன்னே நிந்தித்து இவ்வண்ணமான துக்கத்தை யனுபவித்தேன். உயர்ச்சி நேரிட்ட இக்காலத்து காசிப்பதியைச் சிந்தித்தேன். எல்லாத்துயரங்களையுந் தடுத்துக்கொண்டேன். எ-று. ()

வார்தல்—உயர்ச்சி.

காசிகாசியென் றுரைத்திருக் கின்றனன்கண்ட
வாசிநீக்குவ னேயெனமற் றுமத் தலத்தைப்
பேசியின்னல னரகுபாழ் படுக்குமே பிறங்க
வாசிகூறிநாம் விடுவதே கடனெனவறிந்து.

(இ-ள்.) காசிகாசியென்கிற திருநாமத்தைச் சொல்லிக்கொண்டிருக்கின்றேன். உரைத்தபலன் அனுபவமாகக் கண்டபடியால் இனி நீக்கிவிடுவேனோவென்று சோமசருமன்கூற இன்னும் அத்தலத்தைச்சொல்லிக்கொண்டு இச்சோமசருமன் நரகத்தைப்பாழாக்குவன். ஆதலால், விளக்கமுற்ற ஆசீர்வாதஞ்சொல்லி இவனை அனுப்பிவிடுவதே முறைமையென்று அவ்வியம னுணர்ந்து எ-று. (ௐௐ.)

**செய்யகோலினன் கைதொழுதேகெனச் செப்ப**
**வையமற்றவன் பெயர்ந்துகொல்லாபுர மடைந்து**
**துய்யமாமறைச் சூருமணன்மகனாகி**
**வெய்யதீர்தர வேதமுற் கலைபலபயின்று.**

(இ-ள்.) செங்கோலையுடைய இயமன் அஞ்சலிசெய்து போய் வாருமென்றுசொல்ல சந்தேகமற்ற மனமுள்ள சோமசருமன் எமபுரத்தைவிட்டு கொல்லாபுரமென்னு மகாநகரத்தையடைந்து பரிசுத்தத்தையும் மகிமையையும் உடைய வேதங்களையுணர்ந்த பிராமணகுலத்தில் சூருமணனுக்குத் திருக்குமாரனாக அவதரித்து தீக்குணங்கள் நீங்கும்படி வேதங்கள்முதலிய கலைகள் பலவற்றையும் பழகி எ-று. (ௐச)

ப-ம். நீதியன்றி அணுவளவேனுந் தண்டஞ்செய்யாமையின் செய்யகோலினனென்றும் சிவகருணையுடையோரன்றி மற்றையோர் அந்நகரத்தின்கண்ணில்லாமையின் கொல்லாபுரமென்றுங் கூறினர்.

**தூயகாசியை யடைந்தொரு கங்கைநீர் தோய்ந்து**
**மேயவிச்சுவ நாதனைவிசால நேத்திரத்தா**
**ளாயவன்னபூ ரணியுமை தனைப்பணிந்தருச்சித்**
**தேயகாமமுற் கடிந்துபே ரின்பமுற்றிருந்தான்.**

(இ-ள்.) பரிசுத்தமுள்ள காசித்தலத்திற்குப்போய் ஒப்பற்ற கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அத்தலத்தெழுந்தருளிய விசுவநாதரையும் விசாலாக்ஷிதேவியாராகிய அன்னபூரணித்தாயாரையும் வணங்கிப்பூசைசெய்து பொருந்திய காமமுதலியவைகளை யொழித்து முத்தியின்பத்தைப்பெற்றனன். எ-று. (ௐரு)

ப-ம். பஞ்சமகாபாதகஞ் செய்துவந்தவராயினும் உடனே ஒழித்து உயர்வைத்தருதலின் தூயகாசியென்றும் கங்காதீர்த்தத்துக்கு மேற்பட்டதீர்த்தமில்லாமையின் ஒரு கங்கைநீரென்றுங்கூறினர்.

**இரண்டெழுத்தினலாகிய காசியென் றிசைக்கு**
**மரண்டருந்திரு மந்திரமளற்றினின் றெடுத்துத்**
**திரண்டவின்புலா முத்தியிற்சேர்க்குமேற் சிலம்பு**
**குரண்டநீர்ச்செழுங் காசிமர்ன்மியமெவர் குறிப்பார்.**

(இ-ள்.) இரண்டெழுத்தாலாகிய காசியென்று அறிவுடையோரால் சொல்லத்தக்க காத்தலைச்செய்கிற மகாமந்திரமானது நரகத்தினின்றுந்தூக்கி நிறைந்த

இன்பவடிவாகிய முத்தியிற்சேர்க்குமாறால் கூவுகின்றகொங்குகள் வாழுங் கங்காதீர்த்தத்தையுடைய சிறந்த காசித்தலத்தின் மகிமையை யாவர் மதிக்கவல்லவர்கள். எ-று. (௬௪)

காசிவாவென வுரைத்தலு மதித்திடாக் கயத்தாற்
சீசியென்றிட வுழன்றவ னுறுகதை தேர்ந்தோ
ராசியாபுகழ்க் காசியை யவமதிப்பாரோ
வாசியாரினுங் கனவினுமறந்துமென் றுரைத்தான்.

(இ-ள்.) தம்பியாகிய அக்கினிசருமன் காசித்தலத்திற்கு வீருவீரென்று அழைத்தவளவில், இழிந்தகுணத்தால் அவமதித்து யாவரும் சீசீயென்று நிந்திக்கும்படி உழன்று பின்னர் மதித்துப் பேரின்பானுபவம் பெற்ற சோமசருமன் சரித்திரத்தை அறிந்தவர்கள் அதேதோரை ஆசீர்வதித்தற்குரிய சாதுக்களால் புகழத்தக்க காசித்தலத்தைச் சற்றுங் கல்வியில்லாதவர்களுங் கனவிலாயினும் மறந்தாயினும் அவமதிப்பார்களோ. (பெருமைபாராட்டுவார்களென்று) வேததருமமுனிவர் தீபகனுக்குக் கூறினதாக சூதமகாமுனிவர் சவுநகமுநிவர் முதலானோர்களுக்கு உணர்த்தினார். எ-று. (௬எ)

ப-ம். யாவரும் சிரசாகவகித்துப் பெருமை பாராட்டுவார்களென்று கூறவேண்டியவர் எதிர்மறை விளுமுகத்தால் அவமதிப்பாரோவென்றுங் கூறினார்.

## சோமசன்மா முத்தியடைந்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ௪-க்குத் திருவிருத்தம் - ௩அ௪.

திருச்சிற்றம்பலம்,



# ஐந்தாவது மகாசேனன் முத்தியடைந்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

**மன்னுகொடுங்கலிகால வன்மையாதென்னுரைக்கேன்**
**முன்னும்புகசந்திகளின் முகிழ்த்திருக்குஞ் சிலதருமம்**
**பன்னுமுதலிடையதுவும் பாவாது மறைந்துபோ**
**மின்னுமிழிகடையிலறத் தியல்புரைக்க வேண்டுவதோ.**

(இ-ள்.) நிலைத்த கொடுமைகளையுடைய கலிகாலத்தினது வல்லமையை யான் யாதென்று கூறுவேன். கருதத்தக்க துவாபரயுகமுடிவும் கலியுகமுதலும் ஆகிய யுக சந்தியில் சில தருமங்கள் மறைவாகத்தோற்றும் சொல்லத்தக்க கலியுக முதலிலும் மத்தியிலும் வெளிப்படாமல் மறைந்துபோம் மேலும் இழிவானகலி யுகமுடிவில் தருமத்தினியற்கையைச் சொல்லத்தக்கதோ. எ-று. (க)

கலியுகமுடிவில் தருமங்களின் பெயருமறந்து போமென்பார் அறத்தியல் புரைக்கவேண்டுவதோ வென்று கூறினார் அதுவருஞ்செய்யுட்களால் பெறப்படும்.

**மறையவருக்கடையாள மார்பிடைமுப் புரிநூலே**
**குறையில்பொருளுடையாரே குலத்துநனி யுயர்ந்தவர்க**
**ளிறையளவும் பொருளில்லா ரிழிகுலத்தரேயாவர்**
**முறையெனவோர் சிறிதின்றி முகிழ்த்தெழும்வன் கொடுமையெ** [லாம்.

(இ-ள்.) பிராமணர்களுக்கடையாள மாவது மார்பின்கணிருக்கின்ற முப்புரிநூலொன்றுமேயாம். மிகுந்த சம்பத்துடையவர்களே குலத்தில் மிகச் சிரேஷ்டராவார்கள். அற்பமும் பொருளில்லார்கள் இழிந்தசாதியராவார்கள். நீதியென்பது சிறிதுமில்லாமல் மிக்க கொடுமைகள் அதிகமாக உண்டாகும். எ-று. (உ)

**மாற்றரியகொடுங்கலியின் மறையவர்க னிகைவிற்றுஞ்**
**சாற்றரியசுவையுணவு தகவிற்றும் வயிறோம்பிப்**
**பாற்றரியமறையொழுக்கங் கைவிட்டுப் படிற்றொழுக்க**
**மேற்றரியாதியர்பொருளென் றிசைத்துழலுந் திறனடைவார்.**

(இ-ள்.) நீக்குதற்கரிய கொடுமைகளையுடைய கலியுகத்திலே பிராமணர் கன்னிகைகளைத்தானஞ் செய்யாது விக்கிரயஞ்செய்தும், சொல்லுதற்கரிய அறுசுவையோடு கூடிய அன்னமுதலிய உணவுகளை அதிதிகளுக்குக்கொடாமல் விற்றுவயிறு வளர்த்தும், விடக்கூடாத வைதிகாசாரங்களைக் கைவிட்டுக்காபட்டியமான பாஞ்சராத்திராதி ஆசாரங்களைக்கைக்கொண்டு விஷ்ணுமுதலாகிய தேவர்களைப் பரம் பொருளென்று சொல்லிக்கொண்டு உழலுந்தன்மையராவார்கள். எ-று. (ரு)

தீரவாசிகள்தீர்த்த விசுவாசஞ் சிறிதுமிலா
தூரதேயத்தமர்வார் வாஞ்சையர்போற் சொற்றமர்வா
ராரவேயருகடையி லன்னரே யாயிடுவர்
பாரவேதாதியெலாம் பழிப்படையு மன்னவரால்.

(இ-ள்.) கங்கைமுதலிய புண்ணிய நதிக்கரைகளில் வசிக்கின்றவர்கள் தீர்த்த விசுவாசஞ் சிறிதுமில்லாதவராவார்கள். தூரதேசங்களில் வசிக்கின்றவர்கள் விசுவாசமுடையார்போல் வாயினாற்சொல்லிக்கொண்டிருப்பார்கள்; இவர்களும் அப்புண்ணிய தீர்த்தத்திற்குச் சமீபித்தால் மேற்சொல்லிய தீரவாசிகள் போல் விசுவாசமில்லாதவராவார்கள் மகிமையுடைய வேதாதிகலைகள் யாவும் அப்பியசிக்கத்தக்க வருணாச்சிரம வியல்பைக்கடந்து அரசர்களால் அவமதிக்கப்படும். எ-று. (ச)

முந்துமறைக்குலத்தவர்க ளித்தகைய ரெனமொழியிற்
பிந்துவருணத்தவர்த நிலைபேச வேண்டுவதோ
வந்துகொடுந் தீமையெலாம் வாட்டுகலியுகத்துவினை
சிந்துநிறனுடையதொரு திருக்காசி யலதிலையே..

(இ-ள்.) உயர்ந்த பிராமணகுலத்தோர் இத்தன்மையரென்று சொன்னால், அதன் கீழாயுள்ள சாதியார்தன்மையைப் பேசக்கூடுமோ கொடியதீமைகள்யாவுந்திரண்டுவந்து வருத்துதற்கிடமாகிய கலியுகத்தில் வினைகளை ஒழிக்கும் வல்லமையுடையது ஒப்பற்றுச் சிறந்த காசித்தலமல்லாமல் வேறேயில்லை. எ-று. (ரு)

ப-ம். ஏனையக்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், அநுலோமர், பிறிதிலோமர் முதலாயினோர் தங்கள் தங்கள் நிலைமையினின்றும் மிகவுந் தாழ்ந்துவிடுவாரென்னுங் கருத்தால் பிந்து வருணத்தவர்த நிலைபேசவேண்டுவதோ வென்றார்.

தீர்த்தவளமலிகாசித் திருநகரில் வசித்திடலே
யார்த்தபலந்தருமெனினு மறைகுவதொன் றுளதைய
போர்த்தவறத்தினனாகப் பொலிதருநற் சிந்தையனாய்ச்
சீர்த்தசிவதரிசனமுஞ் செய்தமரின் மிக்கபலம்.

(இ-ள்.) தீர்த்தவளம் நிறைந்த காசியென்னுந் திருநகரத்தில் வாசஞ்செய்தலே நிறைந்த பலங்களைத் தருவதாயினும், அவசியமாகச் சொலத்தக்கது ஒன்றிருக்கின்றது. தீபகனே (யாதெனில்) நிறைந்த சிவதருமங்களைச் செய்தலால் விளக்கமுற்ற சித்தசுத்தியுடையவனாகி மேலாகிய சிவதரிசனமுஞ்செய்து வசிப்பானாயின் அதிகபலனுண்டாகும். எ-று. (சா)

காசிநகரிடைவசித்துங் கடுங்கொலையாதிகள் புரிந்து
வாசிதருமறைநிந்தை மறையவராதியர் நிந்தை
மூசியளிமுரல்குழற்பான் முன்னவனாதியர் நிந்தை
பேசியுழிதருவனெனிற் பெறுவதுதுன் பலதில்லை.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்பவனாயினும், கொடுமையுள்ள கொலை முதலானவற்றைச்செய்து மேலாகியவேதநிந்தை,பிராமணர்முதலியோர் நிந்தை,

வண்டுகள் மொய்த்து ஒலித்தற்கிடமாயுள்ள கூந்தலையுடைய பார்வதிதேவியா ரை வாமபாகத்திற் கொண்டிருக்கும் சிவபிரான் முதலானவர்களுடைய நிந்தை இவைகளைப் பேசிக்கொண்டு திரிவாராயின் அவன்பெறுவது துன்பமல்லா மல் வேறேயில்லை. எ-று. (எ)

**இந்தவுரைக் கொருசான்று விருக்குமொருகதைகேட்டி**
**யந்தவளமலிகாசி யணிநகர மினிதாள்வோன்**
**பந்தமிகுபெரும்படையான் பருப்பதமே பணிதோளான்**
**வந்தபகை முழுதழிப்பான் மாசேனனெனும் பெயரான்.**

(இ-ள்.) இந்த வாக்கியத்துக் கொருசாக்ஷியாக இருக்கின்ற ஒருகதையைத் தீபகனேகேட்பாயாக வளப்பங்கள் நிறைந்த அந்தக் காசித்தலமென்னும் அழகிய நகரத்தை இன்பத்துடன் அரசாளுகின்றவன், கூட்டமாகத்திரண்ட பெருஞ் சேனைகளையுடையவன், ஆகிருதியால் மலையும் பணியத்தக்க தோள்களையுடையவன், எதிர்த்த பகைவர்கள் யாவரையும் அழிக்கத்தக்கவன், மாசேனனென்னும் நாமகரணத்தை யுடையவன். எ-று. (அ)

**நீதியலர்க்குணவாம தேவனெனுங் குருவுடையா**
**னோதியுணரவன்வார்த்தை யொன்றுங்கேளானாகி**
**மேதினிவாழுயிரெல்லா மிகத்தேம்ப வலைத்திடுவான்**
**மாதிய்லும்பாதியினான் மலர்ப்பாதந் தொழுதறியான்.**

(இ-ள்.) உத்தமகுணங்களையுடைய வாமதேவனென்னுந் திருநாமமுள்ளா ரை ஆசிரியராக உடையவன், பலகலைகளையும் வாசித்தறிந்த அவ்வாசிரியன் வார்த்தை யொன்றும் மகாசேனன் கேளாதவனாகி உலகத்தில் வாழும் உயிர்கள் யாவும் மிகவருந்தும்படி துன்பப்படுத்துவான், உமாதேவியார்தங்கிய வாமபாகத்தையுடைய சிவபிரானது தாமரைமலர்போலுந் திருவடிகளை ஒருக்காலும் வணங்கியறியாதவன். எ-று. (க)

**பிறனிலாடோள்சேரும் பெற்றியினனெப்போது**
**மறனிலாவியவலியாற் பிறர்பொருளும் வவ்வுவான்**
**றிறனிலார்தமையலைத்துச் சிதம்புபுரி தீமையினன்**
**புறனிலாவிய வொழுக்கம் போற்றியிவனமர்தருநாள்.**

(இ-ள்.) அன்னியன் மனைவியினது தோள்களைச் சேருந்தன்மையையுடையவன் சதாகாலமும் கொடுமைதழுவிய வலிமையினால் அன்னியர்பொருளை அபகரிப்பான், வல்லமையில்லாதவர்களை அலையச்செய்து பலவிததுன்பப்படுத்துங் கொடுமையினையுடையவன் விதிக்குத்தவறான பாபவொழுக்கங்களைப் பாதுகாத்து இவன் காசித்தலத்து வசிக்கும்போது. எ-று. (ய)

**சிவநேசமுடையானைச் சிவநாமம் புகல்வானைச்**
**சிவமாரும் வெண்ணீறே திகழ்தரப் பூசிடுவானைச்**
**சிவமார்கண்மணிமாலை செறிதரப் பூண்டிடுவானைச்**
**சிவமாருந்திருக்காசித் தெய்வவிருப்புடையானைப்.**

(இ-ள்.) சிவநேசமுள்ளவனும், சிவநாமத்தை யுச்சரிப்பவனும், சுபகரம் நிறைந்த திருவெண்ணீற்றை விளங்கும்படி தரிப்பவனும் சிவபெருமானுடைய திருநேத்திரமென்று சொல்லத்தக்க உருத்திராக்ஷமாலையை நெருங்கும்படி தரிப்பவனும், சர்வமங்களமுடைய சிறந்த காசிப்பதியில் எழுந்தருளியிருக்கும் விசுவேசரிடத்து அன்புடையவனும். எ-று. (மக)

காசிநகர்வசிப்பாரைக் காணில்வணங்கிடுவானுய்க்
கூசியவர்பணிவிடையே குறிப்பறிந்து புரிவானுய்ப்
பேசியமாமறைமுதலர்ப் பிறங்குநூல் வாஞ்சையனுய்
மாசியலாமனத்தானுய் வாழ்ந்தனனோர் புலமன்னன்.

(இ-ள்.) காசிப்பதியில் வாசஞ்செய்பவரைக்கண்டால் வணங்குகின்றவனும், அடக்கத்துடன் அக்காசித்தலவாசிகள் திருவுள்ளக்குறிப்பறிந்து பணிவிடைசெய்கின்றவனும், சொல்லத்தக்க பெருமையுள்ள வேதமுதலாக விளங்கும் கலைகளில் விருப்புடையவனும், களங்கமில்லாத மனமுடையவனுமாக வாழ்ந்திருந்தான் மறுதேசத்திலோரரசன். எ-று. (மஉ)

நினையவினித்திடுமவன்பேர் சுமேதனென நிகழ்த்திடுவா
ரனையன்மனு நெறிநடக்கு மறவலியை யுணரானுய்
வினையமிகு படைச்சிறுமை மேவியதொன்றே யுணர்ந்து
துனையவவன் மேற்பொருவான் சூழ்ந்தெழுந்தான்மாசேனன்.

(இ-ள்.) நினைத்தமாத்திரத்திற் களிப்பையுண்டாக்குகிற அவ்வரசன் நாமகரணம் சுமேதனென்று சொல்லுவார்கள். அப்புண்ணியவான் மநுநீதிவழிநடக்கின்ற தருமத்தின்வல்லமையைக் காசித்தலத்தையாளும் மகாசேனன் அறியாதவனுகி வினைய மிகுந்த சேனைகள் குறைந்திருக்குங் காரணம் ஒன்றையே யுணர்ந்து, அச்சுமேதவரசன்மேல் விரைவாக யுத்தஞ்செய்யும்படி ஆலோசித்தெழுந்தனன். எ-று. (மங)

தீயமாசேனனமர் குறித்தடைவன் செயல்கேட்டுப்
பாயசீர்சுமேதனும்வெண ணீற்றொடுகண் மணிபரித்து
மேயவெழுத்தைந்தனையும் விதிப்படி யுச்சரித்தெழுந்தான்
றூயகாசியில்வசிப்பா னென்பதுவு முளஞ்சூழ்ந்தான்.

(இ-ள்.) கொடிய மகாசேனன் யுத்தஞ்செய்யக்குறித்து வருகின்ற தீயசெயலைப் பரவிய சிறப்புள்ள சுமேதவரசனுங் கேள்வியுற்று விபூதி ருத்திராட்சந் தரித்து விரும்பத்தக்க ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி யுச்சரித்து யுத்தநிமித்தமெழுந்தவன், பகைத்து வருகிற மகாசேனன் பரிசுத்தமுள்ள காசித்தலத்தில் வாசஞ் செய்பவனுகவிருக்கின்றானே என்பதை மனதில்நினைத்தான். எ-று. (மச)

காசிநகர்வசிப்பானைக் கண்டாலும் வணங்கிடுநீர்ந்
தாகிரியாவகையடுபோ ராற்றுவதோ வெனக்கவன்றன்
பேசியமற்றவற்கிரங்கிப் பெருந்திறல் விச்சுவநாதன்
மூசியமாற்றலன்படைஞர் முரிந்தோடும் படிநினைந்தான்.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்பவரை நாம் கண்டால் வணங்குதலை யொழித்து, அவர்களுக்குத் துன்பமுண்டாகும் வண்ணம் கொல்லத்தக்க யுத்தஞ் செய்யலாமோவென்று சுமேதவரசன் கவலைகொண்டனன். இவ்வாறு கவலை கொண்ட சுமேதனிடத்து அளவிலாற்றலையுடைய விசுவநாயகர் கருணைசெய்து, சூழ்ந்தவிரோதியாகிய மகாசேனன் சேனைகள் தோற்று ஓடிப்போகும்படி திருவுள்ளத்தில் நினைத்தனர். எ-று. (கரு)

ஐயனிது நினைந்திடலு மறக்கடைசெய் மாசேனக்
கையணிரும் படைமுழுதுங் காற்றெதிர்ந்த துய்யேபோல்
வையமிசை நிலைகுலைந்து மதிமாழாந் தோடியது
வெய்யசெயலுடையானும் வெருவியுடைந் தோட்டெடுத்தான்.

(இ-ள்.) விசுவநாதர் இந்தப்பிரகாரம் கருதியவளவில், தருமத்தில் வழுவிய வஞ்சகனாகிய மகாசேனனுடைய பெரும்படைகள் முழுவதும் பெருங்காற்றிலெதிர்ப்பட்ட மெல்லிய பஞ்சினைப்போல், பூமியின்மேல் நிலைகலங்கி மதிமயங்கி யோடின. கொடுஞ்செய்கையுள்ள மகாசேனனும் பயந்து தோற்று ஓடிப்போனான். எ-று. (கசா)

போற்றுபெருநகாசிநகர் புகுந்துபராபவத்தினை
மாற்றும்வகையறியானாய் வாமதேவனைக்கூவிப்
பாற்றுபடைசிலவுடையான் பாற்பலவென்பெரும் படையு
மேற்றுமுயலாதிரிதற் கேதுநீயுரையென்றான்.

(இ-ள்.) துதிக்கப்படும் மகிமையுள்ள காசிநகரத்தை மகாசேனனடைந்து தோல்வியினாலே சுடுகின்ற அவமானமென்னும் நெருப்பை அணைக்கும் வகையறியாதவனாகி வாமதேவரென்னும் ஆசாரியரையழைத்து ஓடிவிடத்தக்க சில சேனைகளையுடைய சுமேதனிடத்து என்னுடைய பெருஞ் சேனைகள் பலவு மெதிர்த்து யுத்தஞ்செய்யமுயலாது ஓடிவிடுதற்குக் காரணம் தேவரீர் சொல்லவேண்டுமென்று கேட்டனன். எ-று. (கஎ)

உரையெனலுங் குரவனுணர்ந் துவகையகத்தேயடக்கி
யரையர்பிரானீயனைய னரையன்மிகு படையுடையான்
விரைகெழுதார் நீயனையான் மேவுசிறுபடையுடையான்
புரையின்மிகுவலியோனீ புகலவனஃதிலனெனினும்,

(இ-ள்.) சொல்லவேண்டுமென்றவளவில் ஆசாரியர், திருவருளாலறிந்து சந்தோஷத்தை மனத்திலடக்கிக்கொண்டு, நீ அரசர்க்கரசனானவன். சுமேதனோ ஓர் தேசத்தரசன். வாசனைபொருந்திய மாலையணிந்த நீ அதிகசேனைகளையுடையவன். அவன் சில சேனைகளையுடையவன். நீ குற்றமில்லாத பராக்கிரமத்தையுடையவன். அவன் அஃதில்லாதவனாயினும். எ-று. (கஅ)

காசிநகர்வசிப்பாரைக் கண்டுபணிபவன்வேத
வாசியுடையகிலேசன் மலரடிக்கேயன்புடையான்

பேசியநல்லொழுக்குடையான் பெருந்தெய்வவலியுடையான்
வீசிய்காமாதியினான் மேதகையகல்வியினான்.

(இ-ள்.) அச்சுமேதன் காசித்தலத்தில் வாசஞ்செய்பவரைக்கண்டு வணங்குகின்றவன். வேதங்களால் எடுத்துக்கூறும் விசுவநாதருடைய தாமரை மலர் போன்ற திருவடிகளுக்கு அன்புசெய்பவன். சொல்லத்தக்க நல்லொழுக்கங்களையுடையவன். தெய்வபலத்திற் சிறந்தவன். காமாதிதுர்க்குணங்களை யொழித்தவன் மேலாகிய கல்வியை யுடையவன். எ-று. (கசு)

அன்னவனுக் கெதிர்மறையா வமைந்தவனீயாதலினான்
மின்னகுவாட்படைபிடித்து விறன்மிகுநின் பெரும்படைக
ளென்னவுமற்றவற்கெதிரா பேகுவதெக்காலுமிலை
முன்னரியவுண்மையிது மொழிந்தன னென்றான்குரவன்.

(இ-ள்.) அச்சுமேதனுக்கு விரோத ஒழுக்கத்திலுள்ளவன் நீ யாதலால், மின்போலும் விளங்குகின்ற வாளாயுதத்தைப் பிடித்துக்கொண்டு மிகுந்த பராக்கிரமமுள்ள உன்னுடைய பிரபல சேனைகள் யாவும் அச்சுமேதனுக்கு எதிர்த்து யுத்தத்திற்குச் செல்வது ஒருக்காலுமில்லை, நினைத்தற்கரிய சத்தியமிதுவாகுமென்று ஆசாரியராகிய வாமதேவமுநிவர் கூறினார். எ-று. (உ0)

குருவாமதேவன்மொழி யுண்மையெனக் கொள்ளானுப்
மருவாத கொடுந்துயர்க்கே யாளானமாசேனன்
பெருவாழ்வும் பெருவலியும் பெரும்புகழுங் காசிநகை
யொருவாதசுமேதனுக்கே யுளவாக வுளவாக.

(இ-ள்.) வாமதேவனென்னும் ஆசாரியர் திருவாக்கை உண்மையென்று கொள்ளாதவனாகி சகிக்கப்படாத கொடியதுயரங்களுக்கே ஆளாகிய மகாசேனனென்பவன், அதிகசம்பத்தும் பிரபல பராக்கிரமமும் பெரும் புகழும் காசிப்பதியினிடத்து அன்பு நீங்காத சுமேதனுக்கே உண்டாகுக உண்டாகுக. எ-று.()

மறைநெறியுங்காசிநகர் மான்மியமுங் கற்பனையே
யிறையிலவன்றன்னொடுபோ ரேற்றடைவன்வாகையென
முறைநிறுவு குரவனெதிர் மொழிந்துசினந் ததிர்ந்தெழுந்தான்
பறைகெழுபல்படையினொடும் பண்டுபோற் போய்வளைந்தான்.

(இ-ள்.) வேதங்களில் விதித்த நல்லொழுக்கமும், காசித்தல மகிமையும் கற்பனையாகும், கணகாலத்துக்குள் அச்சுமேதனோடு யுத்தஞ்செய்து வெற்றியடைவேனென்று விதிவழியாகக் கட்டளையிட்ட ஆசாரியரெதிரே சொல்லிக்கோபித்து ஆரவாரத்துடனெழுந்த மகாசேனன் வாத்தியங்களையுடைய பலசேனைகளோடும் முன்போல அச்சுமேதனைச்சூழ்ந்து கொண்டான். எ-று. (உஉ)

சிவநாமமெழுதுபடைக் கலமேந்தித்தீராதச்
சிவநாம முச்சரித்துச் சினந்தெழுசில் படையுடையான்

சிவநாமமே பொருளாத் தெளிந்தவனாதலினாலச்
சிவநாமமே நவின்றான் சிதைந்தது மாற்றவன்படையே.

(இ-ள்.) சிவநாமங்களை எழுதிய ஆயுதங்களை எடுத்துக்கொண்டு எப்பொழுதுஞ் சிவநாமத்தை யுச்சரித்துக்கொண்டு கோபித்தெழுந்த அற்பசேனைகளையுடைய சுமேதன் சிவநாமமே உண்மைப்பொருளென்று தெளிந்தவனாதலால் அச்சிவநாமத்தையே கூறிக்கொண்டெதிர்த்தனன் விரோதியாகிய மகாசேனன் சேனைகள் முறிந்தோடின. எ-று. (உ௩)

முன்போலப்படைசரிந்து முடுகியோடிடக்கண்டு
பின்போய்நின்றிடவென்று பேசவுநில்லாதோடத்
துன்போடுபராபவமுஞ் சுட்டிடலான்மாசேனன்
வன்போடுமனம்புண்ணாய் மருவுகாசியிற் புகுந்தான்.

(இ-ள்.) முன்னோடியதுபோல சேனைகள் நடுங்கியோடுதலை மகாசேனன் பார்த்து பின்னேயோடி நிற்பீர்களென்று சொல்லவும், அவைகள் நில்லாது ஓடிப்போக, துயரத்தோடு அவமானத்தீசுடுதலால் தைரியமில்லாத மனம்புண்ணாகித்தான்வசிக்குங் காசித்தலத்திற் புகுந்தனன். எ-று, (உ௪)

இவனிலைமையிதுவாக வினிபதுவாபரத்தினொடு
கவாமனவஞ்சகத்திறல்சால் கலிவாதம் புரிந்தெழுந்து
தவர்நிலைமை யறச்சாய்ப்பேன் றராதலநன் கோம்பிடுவா
ரவர்நிலையுமற்றாக வாக்குவலென்றுடன்றறைந்து.

(இ-ள்.) மகாசேனன் செய்கை இவ்வண்ணமாகிமுடிய மேலான துவாபரயுகதேவதையோடு வேறுபட்ட மனமும் வஞ்சகத்திலேமிகுந்த திறமையுமுள்ள கலியுகபுருஷன் விரோதங்கொண்டெழுந்து தபசிகளுடைய தன்மையை முழுதுங்கெடுப்பேன் பூவுலகத்தை செவ்வையாகக் காக்கின்ற அரசர் தன்மையையும் அவ்வாறாக்குவேனென்று கோபித்துச்(சபதம்)சொல்லிக்கொண்டு. எ-று. (உ௫)

விரும்புசுமேதனைச்சார மிக்கநாள் காத்திருந்து
மரும்புசமைபங்கிடையா தச்சமிகுந்தெதிர்வந்து
பெரும்புவிபாண் மன்னவநிற் பேணியடைதரமுயன்றே
னிரும்புனிதத்திடங்கொடா திருந்தனையாலிதுதகுமே.

(இ-ள்.) நல்லவர்களால் விரும்பத்தக்க சுமேதனென்னும் அரசனையடைதற்குக் கலிபுருஷன் நெடுநாள் காத்திருந்தும் அவ்வரசனிடத்து அனுசாரமின்மையால் நெருங்கச் சமையங்கிடையாது மிகுந்தபயங்கொண்டு எதிரே வந்து தமது வடிவத்தைக் காட்டி பெரியவுலகத்தை யாளுகின்ற சுமேதவரசனே யுன்னை விரும்பித் தொடர முயற்சித்தேன் நீ மகாபரிசுத்தனாதலால் எனக்கு இடங்கொடாதிருந்தனை இச்சுத்தம் உனக்குத் தகுதியுள்ளதாக விருக்கின்றது. எ-று. (உ௬)

என்றுமொழிதலுநீயா ரென்றரசன் வினவுதலு
நன்றுவினைவினையறத்தை நாசஞ்செய்திடுகலிநா

ஞென்றுவினையடைவாஞ்சை யுள்ளேனென்றுரைத்திடலுங்
கன்றுசினங் கொடுபிடித்துக் கால்யாப்புமிடுகென்முன்.

(இ-ள்.) இப்படியென்று கூறியவளவில் நீயாரென்று சுமேதவரசன்கேட்க நல்ல வினைசெய்தலை தருமத்தைக் கெடுக்கின்ற கலியுகபுருஷன் நான், சன்மார்க்கமுள்ள உன்னை யடையுமாசைகொண்டு வந்தேனென்று சொன்னவளவில் பெருங்கோபங்கொண்டு இக்கலியைப்பிடித்து கால்விலங்கு போடுங்களென்று தனது பரிசனங்களுக்குத்திரவுசெய்தான். எ-று. (உஎ)

இதுசெயவுமிவன்வல்ல னெனவெருவிக் கலிவணங்கி
முதுபுகழோய் சிவநாம மொழிவாரை யான்சாரே
னதுபெரிதோ நின்னும மறைகுநரை யுஞ்சாரேன்
கதுமெனவென் றனைவிடுத்தி யெனவேண்டக் கழிகென்முன்.

(இ-ள்.) விலங்கிடுதற்கு இவன் வல்லவனென்று பயந்து கலிபுருஷன் சுமேதனைவணங்கி, பெரும்புகழுள்ளவனே சிவநாமத்தை யுச்சரிப்பவர்களை யான் சாரமாட்டேன் அது பெரிதாமோ உன்னுடைய நாமத்தைச் சொல்பவர்களையும் அணுகமாட்டேன், சீக்கிரமாக என்னை விட்டுவிடவேண்டுமென்று வேண்டிக்கொள்ள அச்சுமேதவரசன் (இரங்கி) போவென்றனன். எ-று. (உஅ)

கழிந்தகொடுங் கலியஞ்சிக் காசியொடு சிவநாம
மொழிந்தவரை யடையும்வலி முக்காலத் தினுமிலையென்
றிழிந்தமுக மொடுஞ்சாம்பி யிருந்ததாற் சுமேதனொடு
பொழிந்தசமர் பொரப்போந்த பொல்லாத புரவலன்போல்.

(இ-ள்.) நீங்கிவிட்டகொடிய கலிபுருஷன் பயந்து காசித்தலத்தையும் சிவநாமத்தையும் உச்சரிப்பவர்களைச் சேரும் வல்லமை திரிகாலத்திலும் நமக்கில்லையென்று தொங்கிய முகத்துடன்வாடி இருந்தனன் (சன்மார்க்கமுள்ள) சுமேதவரசனோடு சரமாரிபொழிகின்ற யுத்தஞ்செய்யும்படிசென்ற துஷ்டனாகிய மகாசேனனைப் போல. எ-று. (உகூ)

மானத்தான் மனமழிந்த மாசேனனாராய்ந்து
மோனத்தாலுயர்ந்தகுரு முன்சென்று பணிந்துமதி
யீனத்தா னின்வார்த்தை யிகந்தேனிங் ஙனமெழுமஞ்
ஞானத்தாற் கெடுவேனே நல்காயென் றுறவிரந்தான்.

(இ-ள்.) அவமானத்தால் மனச்சோர்வையடைந்த மகாசேனன் ஆலோசித்து, ஞானத்தாலுயர்ந்த ஆசிரியராகிய வாமதேவமுனிவர்முன்னே போய்ப்பணிந்து மதிகேட்டால் தேவரீருடைய திருவாக்கைக்கடந்தேன் இப்படி உண்டாகின்ற அஞ்ஞானத்தினால் கெட்டுவிடுவேனோ, இனி பிழைக்கும்வண்ணங் கட்டளை இடுமென்று குறையிரந்தனன். எ-று. (௩௦)

இரந்தவனைநோக்கிமன மிரங்கி மெலியாதவருள்
சுரந்துகுரவன்புகல்வான் றுட்டனாகியசேனா

நிரந்தரமிக்காசியைநீ நினைவிசுவேசனைப்பணிமெய்
வரந்தருகங்கையிற்படிநின் வல்வினைதீர்தருமென்றான்.

(இ-ள்.) குறையிரந்தமாசேனனைப் பார்த்து மனமிரங்கி பூரணகிருபை வைத்து ஆசாரியர்கூறுவார், துஷ்டனாகிய மகாசேனனே எப்பொழுதும் இக் காசித்தலத்தை நீ சிந்தனைசெய் விசுவநாதனைவணங்கு நல்லவரங்களைத்தருகின்ற கங்கையில் ஸ்நானஞ்செய், உன்னுடைய வல்வினை ஒழிந்துவிடுமென்று கட்டளையிட்டனர். எ-று. (௩௧)

உண்மையாசிரியன்வா யுரைத்தமொழி யுட்கொண்டு
வண்மைசேர் மகன்புயத்து மாநிலந்தாங் குறுபார
மெண்மையாம் வகையிருத்தி யிடர்முழுது மிரித்திடுவான்
தண்மையார் குணத்தினொடு சஞ்சரிப்பானாயினான்.

(இ-ள்.) சத்திய ஞானத்தையுடைய ஆசாரியர் திருவாக்கால் கட்டளையிட்ட வாக்கியத்தை மனதிற்கொண்டு உதாரத்துவமுள்ள தன்குமாரன் புயங்களில் பெரியபூமியைத் தாங்குகின்ற பாரத்தை விதிப்படி இருத்தி, ஈஷணாத்திரயங்களையும் நீக்கும்படிக்கு சாந்தமுதலிய குணங்களோடு பழகத்தொடங்கினன். எ-று. ()

கதிருதிக்கு முனமெழுந்து கங்கைநீ ரிடைப்படிந்து
பிதிர்தலில்வெண் ணீறணிந்து பிறங்குறுகண் மணிபூண்டு
மதியமையும் விசுவேசன் மலரடிகள் வழிபட்டுப்
பொதியருள்செய் தருளன்ன பூரணியை யும்பணிந்து.

(இ-ள்.) சூரியோதயத்துக்கு (ஐந்து நாழிகைக்கு) முன்னமெழுந்து, கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, சரீரமுழுதும் விபூதியணிந்து, விளக்கமுற்ற உருத்திராக்ஷமாலிகை தரித்து, மனத்திலெழுந்தருளத்தக்க விசுவநாதர், தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, நிறைந்தகருணையைச் செய்கின்ற அன்னபூரணித்தாயாரையும் பணிந்து. எ-று. (௩௩)

மன்னுகா சியைவிருப்பின் வலஞ்செய்து சிவநாமம்
பன்னுவா ரடிபணிந்து பற்றுவே றில்லானாய்
முன்னுமா சிரியனையு முனிவின்றிப் போய்த்தொழுது
துன்னுபே ரன்பினனாய்த் தூயனாய்ப் பயிலுவான்.

(இ-ள்.) நிலைபெற்றகாசிப்பதியை, அதிக பிரியத்தோடு பிரதக்ஷிணஞ்செய்து சிவநாமத்தை உச்சரிக்கின்ற பெரியோர்களுடைய திருவடிகளில் வணங்கி, வேறுபற்றுக்களைச் சிந்தியாதவனாகி (யாவரும்) சிந்திக்கத்தக்க ஆசாரியராகிய வாமதேவ முனிவரையும் அன்புடன் போய்வணங்கிக்கொண்டு, நிறைந்த அன்பையுடையவனாய்ப் பரிசுத்தநடையோடு பழகியிருந்தனன். எ-று. (௩௪)

இன்னபடி சிலநாளங் கினிதுபயில் வதுதெரிந்து
நன்னலமார் விசுவேசர் நாளுமரு டரப்பெற்றுப்

பன்னரிய தீமையெலாம் பாழாக்கிப் ப்ரகதியுற்
றுன்னரிய பேரின்ப முற்றிருந்தான் மாசேனன்.

(இ-ள்.) இந்தப்பிரகாரம் சிலநாள் அக்காசித்தலத்தில், மகாசேனன் உத்தம மார்க்கத்தில் இன்பமாகத் தினந்தோறும் நடந்துவருவதை, நிறைந்த ஆநந்த ரூபராகிய விசுவநாதர் அறிந்து அநுக்கிரகஞ்செய்ய, அவ்வநுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு சொல்வதற்கரிய (சஞ்சிதமுதலிய) வினைகளையெல்லாம் பாழ்ப்படுத்தி மேலாகிய பரஞானத்தையுடையவனாய் நினைத்தற்கரிய முத்தியின்பத்தையடைந்தனன். எ-று. (ருரு)

மருவுகொடுந்தீமைபுரி மாசேனனென்பவனும்
வெருவுதவிர்ந் தடைவரிய வீட்டின்ப மடைவனெனிற்
பொருவுதவிர் காசிமான் மியம்புகலற் கெளிதாமோ
வருவுருவச் சிவபெருமாற் கத்தலத்தே மிகுவிருப்பம்.

(இ-ள்.) தங்கிய மகாபாதகங்களையேசெய்த மகாசேனனென்னும் அரசனும் அப்பாதகப்பலனுலுண்டாகும் அச்சமொழிந்து, மோக்ஷ இன்பத்தைப் பெறுவானாயின், சமானமில்லாத காசித்தலத்தின் மகிமைசொல்வதற்கு அருமையாகும். அருவத்திருமேனியையும் உருவத்திருமேனியையுங் கொண்டிருக்கிற சிவபிரானுக்கு அக்காசிப்பதியில் அதிகவிருப்பமாகும். எ-று. (ருசு)

ஆதலினாற் காசிநகர் வசிப்பவர்க ளறம்புரிந்து
காதலினா லுறவேண்டும் வேறொன்று கருதினரேற்
பாதகமார் தருமிவன்போற் படாதபாடுறுவரென
மேதகுமா மறைத்தருமன் விரித்துரைத்தான் றீபகற்கே.

(இ-ள்.) ஆனபடியினால் காசிப்பதியில் வாசஞ்செய்பவர்கள் சிவதருமங்களைச்செய்து (நன்மார்க்கத்தில்) விருப்பமுடையவர்களாக வசித்தல்வேண்டும். அதற்குமாறாக நினைப்பார்களானால் நிறைந்த பெரும்பாவமுள்ள இம்மகாசேனனைப்போல வேறொருவரால் அநுபவிக்கப்படாத அவமானமுதலிய துயரப்பாடுகளை அனுபவிப்பரென்று பெருமையுள்ள வேததருமமுனிவர் மாணாக்கனாகிய தீபகனுக்கு விரிவாகக் கூறினர். எ-று. (ருஎ)

மகாசேனன் முத்தியடைந்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ரு-க்குத் திருவிருத்தம் உஉக.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# சூ-வது நரநாராயணர் நாரதருக்குபதேசித்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரியனடிக டேபகன்பணியா வையனேதத்துவ விசாரஞ்
சீரியயோகம் யாகநற்றவநற் றீர்த்தயாத்திரைசெபவிரதங்
கூரியதரும தானமாதிகளைக் கூயிற்றிடவல்லமை யில்லா
னேரியன்முத்தி யடைதருதரும மிதுவெனவுரைத்திடல்வேண்டும்.

(இ-ள்.) வேததருமனென்னும் ஆசாரியர் திருவடிகளை மாணாக்கனாகிய தீபகன்வணங்கி சற்குருவே தத்துவவிசாரணை செய்தல், சிறந்த யோகாப்பியாசஞ்செய்தல், யாகஞ்செய்தல், மேலாகியதவஞ் செய்தல், உயர்ந்ததீர்த்தயாத்திரை செய்தல், ஜெபஞ்செய்தல், நல்லவிரதங்களை அனுட்டித்தல், நுட்பமாகிய தருமஞ்செய்தல், உத்தமதானமாதிகளைச்செய்தல், மேற்சொன்னவைகளில் ஒன்றுஞ் செய்ய வல்லமையில்லாதவன் அழகியமோக்ஷத்தை அடையத்தக்க உபாய தருமமிதுவென்று திருவாய்மலரவேண்டும். எ-று. (க)

கலியுகத்துயிர்கண் ஞானமுமதனாற் கைவரு முத்தியுமடையு
மெளிவறவென்ற சொல்லிறும் பூது விளைத்திடு மருடியென்றிரப்ப[வன்
வொலிபுகழ்க்குரவ னுணர்த்துவன்மைந்தா உண்மைசேர் கபிலமாமுனி
வலிகெழுமரிசொரூபியென்றெவருமதித்திடப்படுமுயர்பெரியோன்.

(இ-ள்.) கலியுகத்தில் ஆன்மகோடிகள் உண்மைஞானத்தையும், அதனால் சித்திக்கின்ற முத்தியையும் எளிதாக அடையுமென்கிற வாக்கியம், ஆச்சரியத்தை உண்டுபண்ணும், (அதனுண்மையைத்) திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று, (தீபகன்) குறையிரப்ப, வியாபித்த புகழையுடைய வேததருமமுனிவர், சீடனே கேட்பாயாக. உண்மைஞானத்தையுடைய மகிமையுள்ள கபிலமுனிவரென்பவர் வல்லமைதங்கிய விஷ்ணுசொரூபியென்று யாவராலேயும் மதிக்கத்தக்க கெம்பீரமுள்ள பெரியவர். எ-று. (உ)

ப-ம். வஞ்சனைக்கிடமாகிய கலியுகத்தில், உண்மைஞானமும் அதன்பிரயோசனமாகிய முத்தியும் அடைதல் அருமையிலருமையாதலின், "ஞானமுமதனாற் கைவருமுத்தியுமடையு மெளிவறவென்ற சொல்லிறும்பூது விளைத்திடு" மென்று கூறினார்.

அனையமாமுனிவன் பாற்சிலமுனிவ ரடைந்தனர் வணங்கியீதுரைப்பார்
வினையமார்மனசுத்தியையலரன் ஞானம்விளைவதின்றத்தகைஞானம்

**புனையவெய்தாது பவம்பலகோடி பொருந்தினு முத்திசாராது**
**துனையவச்சுத்தி யுறும்வகையெமக்குச் சொல்லெனக் கபிலனோதிடுவான்.**

(இ-ள்.) அக்கபிலமஹா முனிவரிடத்து சில முனிவர்கள்வந்து, பணிந்து இதைச்சொல்லுகின்றார்கள். வினையசம்பத்துள்ள சித்தசுத்திவந்தா லல்லாமல் உண்மைஞானமுண்டாகமாட்டாது. அவ்வுண்மைஞானம் வராமல் பலகோடிசரீர மெடுத்தாலும் முத்திவாராது (ஆதலின்) விரைவாக அச்சித்தசுத்தி உண்டாகிற மார்க்கத்தை யெங்களுக்குத் திருவாய்மலரவேண்டுமென்று கேட்க, கபிலமுனிவர் கட்டளையிடத்தொடங்கினர். எ-று. (ந)

**சித்தியென்பதுதான் சத்தியசொரூபஞ் சேய்த்ததா லணிமையாகாது, முத்தியின்விருப்பம் வைத்தவர்பெறுவான் முயன்றிடல் வைகலும் வேண்டும், பொத்தியமாயை தனைச்சயங்கோடல் புவியிடத்தெளியதோவன்று, சத்தியஞானந்தமாமுதல்வன்றனையுபாசித்தலேவேண்டும்.**

(இ-ள்.) சித்தியென்று சொல்லத்தக்கது சத்தியமாயுள்ள சொரூபாநுபவமாகும், அச்சொரூபாநுபவம் தூரமேயன்றிச் சமீபமாகாது. அவ்வநுபவத்தில் விருப்பம்வைத்தவர்கள் அதைப்பெறும்பொருட்டு சதாகாலமு முயற்சிக்கவேண்டும். மூடிக்கொண்டிருக்கின்ற மாயையை வெல்லுதல் பூமியினிடத்து எளிதன்று. (அதை) வெல்லுஞ்சாதகம் யாதெனில் சச்சிதாநந்தரூபராகிய முதற்கடவுளை உபாசனைசெய்யவேண்டும். எ-று. (ச)

ஆசையொழிந்தால் விஷயவாசனை யொழியும். விஷயவாசனையொழிந்தால் மனோலயம்வரும். மனோலயம்வந்தால் மாயையொழியுமாதலால் எளியதோவன்றென்றுகூறினர்.

**கொடியவர்தனையி லழுந்தியவுயிர்கள் குறிக்கொளும் பிறப்பிறப்பஞ்சாக்**
**கடியதோர்குணத்தை நினைதொறும்வருத்தங் கலப்புறுதிருந்திடவில்லைப்**
**படியவாம்விடைய வாதனைநீத்தல் பயிலுதலுயிர்க்கரிதாகு**
**நெடியமாமுனிவீர் மென்மெலவதனை நீத்தலேதுணிபென வுணர்மின்.**

(இ-ள்.) கொடுமையான பிரபஞ்சவாதனையிலழுந்திய ஆன்மாக்கள் குறிக்கப்படுகின்ற உற்பத்திலயத்துக்குப் பயமுறுர்கள். அச்சமுள்ள இவ்விழிகுணத்தை நினைக்குந்தோறும் வருத்தமுண்டாகாதிருக்கவில்லை. உலகத்தை விரும்புகிற விஷயவாசனை நீங்கும்படி சுத்தவாசனையிற் பழகி வருதல் உயிர்களுக்கு அருமையாகும் பெருந்தவமுள்ள முனிவர்களே உபாயமாக அவ்விஷயவாசனையை நீக்குதலே துணிபென்று தெரிவீர்களாக. எ-று. (ரு)

**முத்தியென்பதற்கு மூலமொன்றதுதான் முன்னவன்றிருவருளதுவும்**
**பத்தியிற்குரவன் பணிவிடைபுரிந்து பளகறுநூல்பலபயின்று**
**சித்திபெற்றவருக் கெய்திடுமென்றித் திருவிலாமூடராய்த்திரியும்**
**புத்திகெட்டவருக் கெய்துமோவிந்தப் பூரணமானசாதனமே.**

(இ-ள்.) முத்தியென்று சொல்வதற்கு மூலகாரணமாயுள்ளது சிவபெருமான் றிருவருளாகும். அத்திருவருளும் பத்தியோடு ஆசாரியர் பணிவிடைசெய்து குற்றமற்ற ஞானசாத்திரங்கள், பலவற்றிலும் பழகி, ஒழுக்கம் சித்தித்த

வர்களுக்குக் கிடைப்பதன்றி இச்சம்பத்தை யடையாமல் அஞ்ஞானமுடையராய பிரபஞ்சத்திலுழலகின்ற மதிகேட்டை யுடையவருக்கு இப்பூரணமான சாதனை கிட்டுமோ (கிட்டாது.) எ-று. (சா)

வளிதடவரினு மினிதுபாட்டெடுக்கு மகதியாழ் முனிவரனளவா
வொளிகெழுநரநா ராயணர்மருவு மொப்பிலாச் சிரமத்தையுற்றுத்
தெளிதருபெரியீ ரெந்நியமத்தாற் சித்தியுஞ் சுத்தியுமுண்டா
மளிகெழுவிடைய வாதனையெதனு லழிதருமுரைத்திடல்வேண்டும்.

(இ-ள்.) (அனுபவமான ஒருகதை சொல்வேன் கேளுங்கள்.) காற்று நரம்பின்மேற் படினும் சுரங்களோடமைந்த கானத்தையுண்டாக்கும் மகதியாழையுடைய நாரதமுனிவர் அளவில்லாத ஞானப்பிரகாசத்தையுடைய நரநாராயணர் வீற்றிருக்கின்ற சமானமற்ற ஆச்சிரமத்தையடைந்து தெளிவுள்ள மஹானுபாவரே எந்த நியமத்தால் சித்தசுத்தியும் அனுபவசித்தியுமுண்டாகும். பழகியவிடைய வாதனை எந்தசாதனத்தாலழிந்துவிடும். (தேவரீர்) கட்டளையிடவேண்டும். எ-று.

யாவரும்பெண்டு பிள்ளையாதியர்பா லியற்றபிமானமென்றுரைக்கு
மேவருமராக்கோட் பட்டவராகி வெய்துயிர்த் துழிதருகின்றார்
தாவருமகங்கா ரத்தினற்குரவன் சாத்திரம் வருணமாசசிரமம்
பாவருநியம மாதிகளிழந்து படுதுயர்க் களவிலையென்றும்.

(இ-ள்.) (இஃதன்றியும்) எல்லோரும் மனைவி மக்கள் முதலானவரிடத்து வைக்கும், அபிமானமென்று சொல்லத்தகக விருப்பமென்னும் பாம்பினல், கடிக்கபபட்டவராகி பெருமூசசுவிட்டுத் திரிகின்றார்கள். கெடுதலில்லாத அகஙகாரத்தையுடையவர்களாய குருவாக்கியத்தையும், சாததிர உணர்வினையும், வருணச்சிரம நிலைகளையும், பரவிய நல்ல நியமமாதிகளையும், கைவிட்டுச் சதாகாலமும் படுகிற துயரங்களுக களவில்லாதவராகி. எ-று. (அ)

மற்றுமொவ்வொருகோட் பாடுளங்கொண்டு மருப்பெரும் வாதமே
யியற்றிச், சற்றுமோர்சாந்தந் தழுவிலார்திரிவார் தவலருங் கட்டுமுற்றொ
ழிய, விற்றுமாமுத்தி கலப்பதென்றுரைப்பீ ரென்னலுமுகமிகமலர்ந்து
பற்றுமாதரத்தின்றுந்துழாய்ப்படலைப் பண்ணவரினிதெடுத்துரைப்பார்.

(இ-ள்.) வேறுவேறாயுள்ள ஒவ்வொருகோட்பாடுகளை மனத்திற்கொண்டு மாறாமல் பிரபலவாதமிட்டவர்களாயச் சாந்ததை லேசமுந்தழுவாமல் உழல்வார்கள். கெடுதலில்லாத அப்பந்தம், முழுவதும் விட்டொழிந்து மேலாகியமுத்தியையடைவது, எக்காலமென்று நாரதமுனிவர் கேட்க, நல்ல துளசிமாலையணிந்த நரநாராயணர் உண்டாகிய அன்பினல், மிகுந்த முகமலர்சசிகொண்டு இனிமையுடன் எடுத்துரைக்கின்றனர். எ-று. (கூ)

* பருவருங்கலியின் விடலரிதாய பந்தபாசஙகளைப் போக்கி
யொருவருமுத்தி யடைதராரடையு முபாயமொன் றுண்டதுகேட்டி

* பருவரல் = துன்பம்.

**மருவருமறைமா முடிநடுப்பொலிந்து வைகுறுங்காசிமாநகரில்
வெருவருந்திடத்தின் வசித்தலேயின்ப வீடுபேறுறுவதற்குபாயம்.**

(இ-ள்.) துன்பத்துக்கிடமாகிய கலியுகத்தில் விடுதற்கரிதாகிய சம்பந்தமுள்ள பாசங்களையொழித்து ஒருவரும் முத்தியடையமாட்டார்கள். (ஆனால்) அடைகின்ற உபாயமொன்றிருக்கின்றது அவ்வுபாயத்தைக் கேட்பாயாக கிட்டுதற்கரிய வேதங்களின் (ஆதி) மத்தி அந்தங்களில் விளக்கமாகப் பிரதிபாதிக்கின்ற மகத்தான காசித்தலத்தில் அச்சமில்லாமல் திடத்துடன் வாசஞ்செய்தலே இன்பமயமாகிய மோக்ஷவீட்டை அடைவதற்கு உபாயமாகும். எ-று. (௧௦)

**மறைமுடியமர்மா தேவனும்யாமு மலர்ப்பொருட் டணையிருப்பவனுங்
கறைகெழுகுலிசத் தண்ணலும்வானோர் கணங்களும் வித்தியதாரு
முறைகருடருங்கிம் புருடருநஞ்ச முமிழெயிற் றுரகரும்பிறரு
நிறைகெழுவாஞ்சை யொடுபிரியாது நிகழ்தரப் படுவதக்காசி.**

(இ-ள்.) வேதமுடிவில் தங்குகின்ற சிவபிரானும், விஷ்ணுவாகியயானும், தாமரைமலர்ப்பொருட்டை இடமாகக்கொள்ளும் பிரமனும், (சத்துருக்களுடைய) உதிரந்தோய்ந்த வச்சிராயுதமேந்திய தேவேந்திரனும்,தேவகூட்டங்களும், வித்தியாதரர்களும், கருடரும், கிம்புருடர்களும், விஷத்தைக்கக்குகின்ற தந்தங்களையுடைய நாகலோகத்தவரும், மற்றையோர்களும், பூரணமாக நிறைந்த பிரியத்தோடு சதாவசிக்கப்படுவது அக்காசித்தலமாகும். எ-று. (௧௧)

**முத்தியாவருக்குங் கொடுப்பமென்றுலகின் முகிழ்த்தபல்தலங்களினுள்
சித்திசேர்பவருக் களித்திடுங்காசித் திருத்தலம் போலுவதில்லைப் [ளுஞ்
பத்திசெய்பரம சிவத்தலமென்றும் பரவுவிட் டுணுத்தலமென்று
மொத்தியல்பிரமத் தலமென்றுமுரைப்ப வோங்குமவ் வானந்தக்கானம்.**

(இ-ள்.) (வந்து வசிப்பவர்கள்) யாவருக்கும் மோக்ஷத்தைத் தருகிறோமென்று (புராணங்களால் தெரிவிக்கின்ற) உலகத்திலுண்டாயிருக்கும் அனேக தலங்களுக்குள் மோக்ஷாநுபவசித்தியை, அடைபவருக்குக் கொடுக்கின்ற சிறந்த காசித்தலத்துக்குச் சமானமொன்றுமில்லை. பத்திசெய்தற்கிடமாகிய உயர்வுள்ள ஆனந்தகானம் என்னும் அக்காசிப்பதியை பரசிவத்தலமென்றும் விஷ்ணுத்தலமென்றும் பிரமதேவருடைய தலமென்றும் சொல்லுவார்கள். எ-று. (௧௨)

**சிற்சிலர்காசி மான்மியந்தெரிந்து நீர்தராதாவயின் வசிப்பார்
சிற்சிலர்கங்கை நறும்புனலாடித் தேவதேவனைப்பணிந் தமர்வார்
சிற்சிலரன்ன பூரணியுமையைத் தெரிசனஞ் செய்துவீற்றிருப்பார்
சிற்சிலர்நம்மைத் துழாய்கொடுபோற்றித் திருத்தகுபத்திசெய்துறைவார்.**

(இ-ள்.) சிலபேர் காசித்தலத்தின் மகிமையை யுணர்ந்து விட்டுநீங்காமல் அத்தலத்தில் வாசஞ்செய்வார்கள். சிலபேர் கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தேவதேவராகிய விசுவநாயகரை வணங்கி வசிப்பார்கள். சிலபேர் உமாதேவியாராகிய அன்னபூரணியாரைப்பணிந்து வசிப்பார்கள். சிலபேர் விஷ்ணுவாகிய நம்மைத் துளவங்கொண்டு அருச்சித்துச் சிறப்புற்ற பத்திசெய்து வசிப்பார்கள். (௧௩)

சிற்சிலர் துண்டி விநாயகர் தம்மைத் தினந்தொறும் போற்றியேத்தெடுப்
பார், சிற்சிலர் குமரக் கடவுளை வணங்கித் தீவினையொழிந்தினி தமர்வார்
சிற்சிலர்கால வயிரவற்போற்றிச் சிந்தனைமுற்றிடக் காண்பார்
சிற்சிலர் தண்ட பாணியையவணங்கித் திருவொடும்பொலிந்தினி தமர்வார்.

(இ-ள்.) சிலபேர் துண்டிவிநாயகக்கடவுளைத் தினந்தோறும் அருச்சித்துத் துதிப்பார்கள். சிலபேர் முருகக்கடவுளை வணங்கிக் கொடியவினைகளை நீக்கிச் சுகமாக வசிப்பார்கள். சிலபேர் காலவயிரவனை வணங்கி எண்ணிய எண்ணங் கைகூடக்கண்டு (வசிப்பார்கள்.) சிலபேர் தண்டபாணியைப்பணிந்து ஞானசம்பத்தோடுவிளங்கியின்பத்துடனிருப்பார்கள். எ-று. (கச)

சிற்சிலரழலைப் போற்றியேத்தெடுப்பார் சிற்சிலர்பரிதியைத் தொழுவார்
சிற்சிலர்வசிப்போர்க் கிடமுதற்பலவுந் திருத்தகக்கொடுத் துபசரிப்பார்
சிற்சிலர்மறையோ ராதியர்க்குணவு செறிசுவையொடும்படைத்துவப்பார்
சிற்சிலரெல்லை வலம்புரிந்தமர்வார் சிற்சிலர் தியானஞ்செய்திருப்பார்.

(இ-ள்.) சிலபேர் அக்கினிதேவனை வணங்கித் துதிப்பார்கள். சிலபேர் சூரியதேவனை வணங்குவார்கள். சிலபேர் அத்தலத்தில் வாசஞ்செய்பவருக்கு விடுதிமுதலாகிய பலவற்றையும் சிறப்போடுகொடுதது உபசாரஞ் செய்வார்கள். சிலபேர் பிராமணர் முதலானவர்களுக்கு உண்டியை (ஆறுவகையாக) நெருங்கிய சுவையோடும் படைத்துக் களிப்பார்கள். சிலபேர் காசித்தலத்தைப் பிரதக்ஷணஞ்செய்து வசிப்பார்கள். சிலபேர் (காசிப்பதியைத்) தியானஞ்செய்து வசிப்பார்கள். எ-று. (கரு)

சிற்சிலர்பிரம சரியமாநிலையிற் சேர்ந்துதீவினைமுழு தொழிப்பார்
சிற்சிலர்கிரக நிலையடைந்தடைந்தார் திறம்பலற் றிடவுபசரிப்பார்
சிற்சிலர்வானப் பிரத்தமாநிலையிற் சேர்ந்துமாதவத் தினைவளர்ப்பார்
சிற்சிலர்சந்நி யாசபேதத்திற் சிறந்துபற் றறுத்துவீற்றிருப்பார்.

(இ-ள்.) சிலபேர் உயர்வுள்ள பிரமசரிய ஆச்சிரமத்தைப்பெற்று கொடிய வினைமுழுவதையும் ஒழித்துவிடுவார்கள். சிலபேர் கிரகத்தாச்சிரம நிலையைப்பெற்று அத்தலத்துக்கு வந்தவர்களுடைய துன்பமொழியும்படி உபசாரஞ்செய்வார்கள். சிலபோ மகத்தான வானப்பிரஸ்த்தாச்சிரம நிலையைப்பெற்று பெருந்தவத்தை விருத்திசெய்வார்கள். சிலபேர் சந்நியாச ஆச்சிரமபேதங்களில் சிறந்தவராகி பாசபந்தங்களையறுத்து முத்தியின்பத்தையடைந்து வசிப்பார்கள். எ-று. (கசு)

இல்லறத்தமர்வோர் விதித்தகாலத்தி லிணைவிழைச்சுற்றலாக்காலத்
தொல்லறம்பயிலும் பிரமசாரியரா யுற்றகிலேசனைப்போற்றி
நல்லறம்பொருந்தித் தீவினைகழித்து நாடுபேரின்பத்தினமர்வா
ரல்லறங்கெடவிக் காசிமான்மியத்தை யறிதராருழலுவரெங்கும்.

(இ-ள்.) இல்லற தருமத்தை விரும்பி வாழ்வோர்கள் விதித்த காலத்தில் மனையாளுடன் சேர்ந்து விதியாதகாலத்தில் தருமநூலிலே பழகுகின்ற பிரமசாரியனைப்போல் மனைவியுடன் கூடாதிருந்து விசுவநாயகனை வணங்கி நல்

சிவதருமங்களைச்செய்து தீவினையையொழித்து அறிவுடையோரால் குறிக்கின்ற பேரின்பாநுபவத்தையடைந்து அத்தலத்தில் வசிப்பார்கள். இக்காசிமான்மியத்தை யறியாதவர்கள் அல்லலுண்டாகும்படி எவ்விடங்களிலும் திரிந்தலைவார்கள். எ-று. (கஎ)

காசிமேவுதலே முத்திகாரணமாக் கண்டனம்வேறொன்றுங்காணே
மாசிலாமணியாய் வயங்ககிலேசன் வாய்மொழிந் திடுவதையன்றிப்
பேசினல்லாமோ பிறர்தன்பெருமை பெட்புறுநாரதமுனிவா
வாசிசால்காசி மான்மியஞ்சிறிது மலரவனாதியோர் தெளிந்தார்.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்தலே முத்தியடைதற்குக்காரணமென்று (அநுபவமாகக்) கண்டோம். வேறொரு சாதனமுங் காணவில்லை. களங்கமில்லாத இரத்தினம்போற் பிரகாசிக்கின்ற விசுவநாதர் அத்தலத்தின்பெருமையைத் திருவாய்மலர்ந்தாலன்றி மற்றையோர் சொன்னால் அத்தலப்பெருமை அடங்குமோ, அன்பையுடைய நாரதமுனிவனே மோக்ஷலாபத்திலுயர்ந்த காசிமகிமையைப் பிரமதேவன் முதலானோர் சிறிது தெளிந்திருக்கின்றார்கள். எ-று. ()

ஆதலிற்பிரம ஞானியரானா ரத்தகுதலத்தடைவொன்றே
காதலிற்சிறந்த முத்தியென்றுரைத்தார் கலைதெரிநாரதமுனிகேட்
டோதலிற்பொலியு மறைமுடியுண்மை யுரைத்தனிரென்றுகைதொழுது
சாதலிற்றுயர்ந்த காசிமாநகரஞ் சார்ந்துவாழ்ந் திருந்தனன்மாதோ.

(இ-ள்.) ஆனபடியினால் பிரமஞானியராயுள்ள நரநாராயணர் அத்தன்மையான காசிப்பதியில் வசிப்பதாகிய ஒரு சாதனத்தையே இன்பத்தாற் சிறந்த முத்தியென்று சொன்னார். கலைஞானங்களை யறிந்த நாரதமுனிவர் கேட்டு அத்தியயனத்தால் விளங்குகின்ற வேதாந்தத்துண்மையைக் கட்டளையிட்டீரென்று கைதொழுது வணங்கி (விடைபெற்றுக்கொண்டு) எக்காலத்திலும் லயமின்றி உயர்ந்த மகத்தான காசித்தலத்தையடைந்து வசித்து முத்தியின்பம் பெற்றனர். எ-று. (கக)

முனிவிர்காடெளிந்தீர் கொல்லெனக்கபில முனிவரனுரைத்தனன்கேட்
பனிவிராங்கணரா யவர்களுங்காசிப் பதியகமேவிவீற்றிருந்தார் [டுப்
நனியவாமிதனை யுணர்ந்தனைகொல்லோ நலமலிதீபகவென்று
னினியவாசிரியன் றீபகன்மகிழ்பூத் திணையடிதொழுதுவாழ்ந்தனனே.

(இ-ள்.) முனிவர்களே (நரநாராயணர் நாரதமஹாமுனிவருக்கு உபதேசித்த காசிப்பதியின் மகிமையைத்) தெளிந்தீர்களோவென்று கபிலமஹாமுனிவர் கட்டளையிட்டனர். அதைக் கேள்வியுற்று ஆனந்த பாஷ்பம்பொழிகின்ற கண்களையுடையராய அம்முனிவர்களும் காசித்தலத்தையடைந்து முத்தியின்பம் பெற்று வீற்றிருந்தார்கள். யாவரும் பெருமகிழ்ச்சிகொள்ளத்தக்க விம்மகிமையைத் தெரிந்தனையோ நன்மைநிறைந்த தீபகனேயென்று இன்பவடிவாகிய வேததருமுனிவனென்னும் ஆசிரியர் கூறினர். தீபகன் களிகூர்ந்து அவ்வாசிரியர் உபய திருவடிகளையும் வணங்கி இன்புற்றனன். எ-று. (உ0)

நரநாராயணர்நாரதருக்குபதேசித்தஅத்தியாயம்முற்றியது.

ஆக அத்தியாயம் கூ-க்கு திருவிருத்தம் உசக.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது

# பரமசிவன் பார்வதிதேவியாருக்கு உபதேசித்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்,

முனிவரர் விடைகொடு முத்திமேவுவான்
றனிவளக்காசியைச் சார்ந்து வாழ்ந்தபின்
கனிமனம்படைத்தவக் கபிலன்றன்னிடை
யினிதுசித்தர்கள்பல ரெய்திப்போற்றினர்.

(இ-ள்.) முனிகணங்கள் விடைபெற்றுக்கொண்டு மோக்ஷத்தை அடையும்பொருட்டு ஒப்பற்ற வளப்பங்களையுடைய காசிப்பதியைச் சேர்ந்து வாழ்ந்திருந்தார்கள். (அதன்) பின்பு, சீவகாருணியமுள்ள மனதையுடைய அந்தக கபில மகாமுனிவரிடத்து, இன்பவடிவாகிய சித்தர்கணங்கள்வந்து வணங்கினார்கள். (க)

சித்தர்காள் வந்தமை செப்பவேண்டுமென்
றுத்தமக்கபிலனுங் குரைத்தகாலையின்
முத்தலைக்கங்கைநீர் முழங்குகாசியின்
மெய்த்தவ மியற்றிட விருப்பம் வைத்துளேம்.

(இ-ள்.) சித்தர்கணங்களே (நீங்கள் என்னிடத்து) வந்தகாரியத்தைச் சொல்லவேண்டுமென்று உத்தமானுசந்தானபரராகிய கபிலமகாமுனிவர் கட்டளையிட்டபோது, முத்துக்களைக்கொழிக்கின்ற அலைகள் முழங்குங் கங்காதீர்த்தத்தையுடைய காசித்தலத்தில் உண்மைத்தவஞ் செய்யும்பொருட்டு விருப்பம்வைத்திருக்கின்றோம். எ-று. (உ)

ஆயிடையெத்தொழி லாற்றிவைகுறிற்
றூயமாதவமெனச் சுருதிகூறிடு
நாயகசாங்கிய நவின்ற மேலவ
மேயவிம் மந்தணம விளம்புகென்றனர்.

(இ-ள்.) அந்தக்காசித்தலத்தில், எந்தச்சற்காரியத்தைச்செய்து வசித்தால், பரிசுத்தமான மகாதவமென்று வேதங்கள்சொல்லும். ஞானநாயகனே சாங்கியயோக வியல்பைத் தெரிவித்த மேன்மையுடையோரே, நாங்கள் விரும்பிய இந்தரகசியத்தைத் திருவாய்மலர்வீரென்றனர். எ-று. (ங)

என்றலுங்கபிலனுள் ளிரங்கிக்கூறுவான்
கன்றலில்காசியைக் கருதுஞ்சித்தர்கா
ளொன்றமற்றவ்வயி னுறைதலேபல
னென்றருமறையெலா மெடுத்தியம்புமால்.

(இ-ள்.) இவ்விதமாகச் சொன்னவளவில், கபிலமகாமுனிவர் இரக்கங்கொண்டு, கட்டளை இடுகின்றனர். மங்களகரமான காசித்தலத்தைத் தியானிக்கின்ற சித்தர்கணங்களே அத்தலத்தில், நிரந்தரம் வாசஞ்செய்தலே, எல்லாப்பலனுந்தருமென்று அரியவேதங்களியாவும் எடுத்துக்கூறும். எ-று. (சு)

ஆயினும்வறிதவ ணமர்தலாகுமோ
தாயினுமினியதாந் தருமமொன்றனை
வாயினுமனத்தினு மதிக்குமெய்யினுங்
காயினு மியற்றுதல் கடமையாகுமால்.

(இ-ள்.) ஒருதொழிலுஞ் செய்யாது வாசஞ்செய்தலே பலனென்று கூறினும் அத்தலத்தில் சும்மாவசிக்கலாகுமோ தாயைப்பார்க்கிலும் இன்பத்தைத்தருவதாகிய ஒருதருமத்தை வாக்கினாலும், மனத்தினாலும், காயத்தினாலும், துன்பம்வரினுங்கைவிடாது செய்துவருதலே முறைமையாகும். எ-று. (ரு)

மூன்றினுமியற்றுற முற்றுறாதெனி
லேன்றிடுங்காயத்தா லேனுஞ்செய்தல்சீர்
சான்றிடும் பயன்றருந் தனங்கையுள்ளவர்
தோன்றியபடியெலாந் துணிந்துசெய்வரால்.

(இ-ள்.) மனம், வாக்கு, காயம் என்கிற திரிகரணத்தாலும் ஒருதருமஞ்செய்யமுடியாதெனில், பொருந்தியதேகத்தாலாவது செய்தால் (அது) சிறந்த பிரயோசனத்தைக் கொடுக்கும். கைவசத்திற்றிரவியமுள்ளவர்கள் மனத்திற்றோன்றிய உயர்ந்த தருமங்களையெல்லாம் விரைவாகச்செய்வார்கள். எ-று. (சு)

காயத்தாற்செய்யும் புண்ணியமாவன கங்காதீர்த்தமாடல், விசுவநாதனைத் தரிசித்தல், வலம்வருதல், வில்வமெடுத்தல், மாலைதொடுத்தல், விசுவநாயகருக்குச் சாத்துதல்முதலானவைகளாம்.

புகழ்மிகுகாசியிற் பொருந்தியோர்சிறு
திகழ்தரு மத்தினைச் செய்வரேலவ
ரிகழ்வினைநீத்துமே லின்பமெய்துவா
ரகழ்தலிலறமுமொன் றனந்தமாகுமால்.

(இ-ள்.) அதிகபுகழையுடைய காசிப்பதியில்வசித்து விளக்கமுற்ற ஒருசிறிய தருமத்தைச்செய்வார்களாயின் அவர்கள் யாவராலும் இகழ்தற்குரிய பாதகங்களையொழித்து தாங்கள்செய்யுந் தருமமும் ஒன்றனந்தமாகப்பெருகி மேலாகிய முத்தியின்பத்தைப்பெறுவார்கள். எ-று. (எ)

செயப்படுதருமத்தைச் சிறந்தகாசியில்
வயப்படுமன்பொடு வயக்குவாரெனி
னயப்படு நிலத்திடை நட்டவித்தெனப்
பயப்படுமுலகெலாம் பரவிச்சென்றரோ.

(இ-ள்.) செய்யத்தக்க உத்தமதருமங்களை, மேலான காசித்தலத்தில் நிறைந்த அன்போடு விளக்கமாகச்செய்வார்களானல் நல்லபூமியில் நட்டவிதைபலனைத் தருவதுபோல் அத்தருமம் சர்வலோகங்களும் வியாபித்து மோக்ஷபலனைக் கொடுக்கும். எ-று. (அ)

அறத்தினை யணுத்துணை யானுஞ்செய்பவர்
மறத்தினை யகழ்ந்தருள் வழங்குகாசியி
னிறத்தினையுறப்புகூஉ நிகழச்செய்வர்மா
திறத்தினையுற்றமர் சித்தர்காளினனும்.

(இ-ள்.) மிக்க தவவலிமையையுடைய சித்தர்கணங்களே பாவங்களையொழித்துத் திருவருள் பாலிக்கின்ற காசிப்பதியில் சிவதருமங்களை அணுவளவாயினுஞ்செய்பவர்கள் சிவசாரூபத்தையடைந்து அதை விளங்கச்செய்வார்கள். இஃதன்றியும். எ-று. (கூ)

செய்யுமவ்வறத்தினற் சித்தசுத்தியா
முய்யுமெய்ஞ்ஞானமு முதிக்கு மன்னதா
னையுமிப்பிறவிநோய் நாசமெய்திடு
மெய்யுமானந்தமிக் கெழுந்துபொங்குமே.

(இ-ள்.) செய்த அத்தருமத்தினல், சித்தசுத்தியுண்டாகும். அச்சித்தசுத்தியால் உய்யச்செய்கின்ற உண்மை ஞானமுமுதிக்கும். அவ்வுண்மை ஞானத்தால் வருத்துகின்ற இப்பிறவி வியாதி ஒழியும். பிறவியொழிந்தால் சிவாநந்தானுபவம் மேன்மேற்பொங்கித் தேகமும் அவ்வானந்த வடிவமாகக்காணும். எ-று. (கo)

இன்னது துணிதரற் கியைந்த வோர்கதை
நன்னயத்துரைக்குவ னயந்து கேட்டிரான்
மின்னருகாசியின் விருப்பமுட்கொடு
பன்னரும் வினையெலாம் பறித்த சித்தர்காள்.

(இ-ள்.) இத்தருமத்தை நிச்சயித்தற்பொருட்டு நடந்த ஒருகதையைப் பெருங்களிப்புடன் கூறுகின்றேன். விசுவாசத்துடன் கேளுங்கள். விளக்கமுற்ற காசித்தலத்தில் வசிக்கவேண்டுமென்கிற இஷ்டத்தை மனதிற்கொண்டிருப்பதால் சொல்வதற்கரிய தீவினைகள்யாவும் பறித்(தெறிந்த)சித்தர்கணங்களே. எ-று.(கக)

வெள்ளிமால் வரையமர் விமலநாயக
னுள்ளியபதமல ருமைபணிந்தெழா
வுள்ளியவறங்களெவ் வுத்தமத்தல
நள்ளியபுரிவது நவிறியென்றனள்.

(இ-ள்.) பெருமைபொருந்திய வெள்ளியங்கிரியில் விற்றிருக்கின்ற மலரகிதராகிய பரமசிவனுடைய விளக்கமுற்ற பாததாமரையில் உமாதேவியார் வணங்கியெழுந்து சிந்திக்கத்தக்க தருமங்களை எந்த உத்தமத்தலத்தில் விருப்பத்துடன் செய்யவேண்டியது கட்டளையிடவேண்டுமென்றனள். எ-று. (கஉ)

என்றலுங்கருணைகூர்ந் திரங்கிக்காசியே
யொன்றியவறம்பல வுஞற்றுதற்கிட
மன்றியுமணுத்துணை யானுமேருவாங்
கன்றியமருங்குலாய் கருதென்றோதுவான்.

(இ-ள்.) இப்படியென்று கேட்டவளவில் சிவபெருமான் கிருபைப்ரலித்து மனமிரங்கி பொருந்திய தருமங்களைச் செய்தற் கிடம் காசிப்பதியாகும். அதுவல்லாமலும் அணுவளவு தருமஞ்செய்தாலும் மேருமலையைப்போல, ஓங்கும். தளர்கின்ற இடையையுடைய உமையே இதைச் சிந்திப்பாயாகவென்று மேலுங்கட்டளையிடுகின்றனர். எ-று. (கா)

மாசில்யாமோங்கொளி யாகிவைகலாற்
காசியென்றொருபெயர் கரைவர்கற்றவர்
பேசுமக்காசியிற் பிறங்கிவாழ்பவ
ரேசினங் கணங்களௌன் றெண்ணுமாதராய்.

(இ-ள்.) களங்கமற்ற யாம் பிரபல ஜோதிவடிவமாக வாசஞ்செய்தலால் காசியென்கிற வொருதிருநாமத்தை அறிவுடையோர் சொல்வார்கள்; யாவரும் எடுத்துரைக்கத்தக்க அக்காசித்தலத்தில் விளங்கி வாழ்பவர்களைக் குற்றமற்ற நமது கணநாதர்களென்று உமையே சிந்திப்பாயாக. எ-று. (கச)

சாற்றுமத்தலத்திடைத் தடாகமாதிய
வாற்றுநர்புண்ணிய மளக்கும் வல்லர்யா
ரேற்றமார்புதியதொன் றியற்றும் பேற்றினும்
போற்றியபழையதைப் புதுக்கன் மிக்கதே.

(இ-ள்.) சொல்லுகின்ற அக்காசித்தலத்தில் தடாக முதலாகிய தருமங்களைச் செய்பவர்களுக்கு உண்டாகும் புண்ணியத்தை அளவிடவல்லோர் யாவர், உயர்வுள்ள புதியதருமங்களைச்செய்யும் பலனைப்பார்க்கிலும் முன்னோரால் பாதுகாத்துச் சிதைந்திருக்கின்ற பழைய தருமங்களைப் புதுப்பித்தல் மேலானபுண்ணியமாகும். எ-று. (கரு)

தளர்வறுகேள்வியான் றருமபாதனென்
றுளனொருவணிகனவ் வூரில்வாழ்பவன்
வளரொரு தன்மனை வாயுமூலையி
லுளரளிமலர்த்தட மொன்றுண்டாக்கினன்.

(இ-ள்.) அக்காசிப்பதியில் வைசியமரபிற்பிறந்து தருமபாதனென்று பெயர் பெற்றுச்சோர்வில்லாது தருமநூலைக்கேட்டு வாழ்பவனொருவனிருந்தனன். உயர்ந்த தனது மாளிகைக்கு வாயுமூலையில் வண்டுகள் மூக்காலுழுதற்கிடமாகிய மலர்களையுடைய ஓர் தடாகத்தை யுண்டுபண்ணுன். எ-று. (கசா)

அன்னதின் மறையவ ராதியாரொடு
முன்னரும் பாற்பசு முதன்மற்றுள்ளன
வென்னவும்வந்துவந் தினியநீர்கவர்ந்
துன்னருங்களிப்பொடு மொல்லையேகுவ.

(இ-ள்.) அத்தடாகத்தில் பிராமணர் முதலிய பெரியோர்களோடு நினைத்த ற்கரிய பால்கறக்கின்ற பசுமுதலானவைகளும் பறவைமுதலிய மற்றுள்ளபிராணி களும் (தாகத்தோடு) வந்து இன்பத்தையுடைய தீர்த்தத்தைப் பானஞ்செய்து அடங்கா மகிழ்ச்சியுடன் விரைவாகச்செல்லும். எ-று. (கஎ)

அத்தருசெல்வனு மமைந்தசெல்வத்து
மெத்தியபோகங்கள் விரும்பித் துய்க்குநாட்
பொத்தியமுற்பவம் புரிந்ததீமையா
லொத்தியல் வறுமைவந் துற்றதென்பவே.

(இ-ள்.) தகுந்த சம்பத்துள்ள அத்தருமபாதனும் தனது செல்வப்பெருக் கால் இன்பமயமாகிய நானாபோகங்களையும் பிரியத்தோடனுபவிக்குங் காலத்தில் மூடப்பட்டிருக்கின்ற முற்பிறவியிற் செய்த தீவினைப்பயனால் செல்வத்தைப் போல் ஒத்துவரும் இயல்பினையுடைய வறுமைவந்தடைந்தது. எ-று. (கஅ)

மிடியதுமேவலு மெலிந்துநாய்கனோர்
படியறு மறையவன் பான்மூந்நூறெனுங்
கடிதலில் வராகனைக் கைக்கொண்டானவ
னெடிதுநாள்கழித்தபி னோர்ந்துகேட்டனன்.

(இ-ள்.) தரித்திரம்வந்துசேர்தலால் தருமபாதனென்னும் வைசியன் தளர் ச்சியடைந்து சமானமற்ற வோர் பிராமணனிடத்து நீக்கப்படாத தொடர்பினை யுடைய முந்நூறுவராகன் கடன்வாங்கிக்கொண்டனன். கடன் கொடுத்த அப் பிராமணன் நெடுநாள்பொறுத்துச் சமீபித்துவந்து கடன்கேட்டனன். எ-று. (கசூ)

கேட்டலும் பொருளிலை கிடைப்பதெங்கினி
வாட்டமின் மறையவ மற்றுயான்புரி
தோட்டலர்க் குளத்தினைத் தோன்றக் கொண்டுநீ
வேட்டியான் கொள்கடன் வீட்டுகென்றனன்.

(இ-ள்.) கேட்டவளவில் பொருளோகிடையாது இனி எவ்வாறு கிடைக்கும் தளர்ச்சியில்லாத பிராமணரே நான் உண்டாக்கிய இதழ்களையுடையமலர்களுள்ள தடாகத்தை கடனுக்கு ஈடாகக்கொண்டு விருப்போடு என்கடனை ஒழித்துவிடு வீராகவென்று சொல்லிக்கொண்டனன். எ-று. (உ0)

என்றலுமவையுளா ரிடத்துவேதியன்
சென்றனனெட்டியன் செய்கை கூறியா
னென்றவிக் குளத்தினை யொப்பிக் கொள்வனேற்
கன்றலிலெத்துணை காலங்கொள்வது.

(இ-ள்.) இப்படியென்று தருமபாதன் சொன்னபோது அப்பிராமணன் தருமசபையாரிடத்துக்குப்போய், வைசியன் கடன்வாங்கியதும், அவன்வெட்டிய குளத்தைக் கடனுக்கு ஈடாகக்கொடுத்து விடுவதுமாகிய செயல்களைச்சொல்லி, தகுதியுள்ள இக்குளத்தினை கடனுக்கு ஈடாக வொப்புக்கொள்வேனுனல் குறை வற்ற எவ்வளவுகாலம் கொள்ளவேண்டுவது. எ-று. (உக)

கூறுதியென்றலுங் குழீஇயமேலவர்
மாறுதீர் வணிகனும் வரப்புரிந்து கேட்
டூறுதீர்குளத்திலோ ருறுகலிட்டிடிற்
பேறுசால்கடன்றின் மிதக்கும் பேணவே.

(இ-ள்.) தாங்கள் சொல்லவேண்டுமென்று கேட்டபோது அவ்விடத்துக் கூடியிருந்த மேலோர்கள் தங்களிடம்வந்த மாறுபாடில்லாத தருமபாத செட்டியாரை வரவழைத்துக்கேட்டு (உண்மை தெரிந்து) துன்பத்தைத் தணிப்பிக் கின்ற குளத்தில் ஒரு பெரியகல்லைப்போட்டால் வாங்கிக்கொண்ட கடன் கழியு மளவும் அக்கல் உள்ளழுந்தி கழிந்த உடன் யாவரும் மகிழும்படி மிதக்கும். எ.று.

அத்தனைநாள்வரை யய்யநின்னதா
மொத்தபின்னுளிவற் குரியதாகுமாற்
சித்தமுற்றொருகலைச் சேர்த்தியென்றன
ரத்தலையையனவ் வாறுசேர்த்தினன்.

(இ-ள்.) பிராமணரே அக்கல் அழுந்தியிருக்குங் காலத்தளவும் குளம் உம்மு டையதாகும். அதற்கு பிற்காலத்து இவ்வர்த்தகருக்கு உரியதாகும். மன உறு தியோடு ஒரு கல்லை குளத்திற் சேர்ப்பீரென்று சபையார்கூறினர் அவ்விடத்து (யாவருங்காண)பிராமண னவ்வாறு பெருங்கல்லையிட்டனன். எ-று. (உரு)

பரியகல்லாத்தடம் படிய விட்டவ
னுரியசான்றோரொடு முவந்துநின்றன
னரியகோதனத்தொடு மங்கனோர்பசுத்
தெரியவந்துண்டது தெளிந்தநீரினை.

(இ-ள்.) பருங்கல்லாகத்தூக்கிவந்து அப்பிராமணன் குளத்தில்முழுந்தும்படி விட்டு அவ்விடத்திலிருக்கின்ற பெரியோர்களோடு களித்து நின்றனன். அரிய கன்றோடு ஓர் பசுவந்து யாவரும் பார்க்கும்படி தெளிவுள்ளதீர்த்தத்தைக் குடித் தது. எ-று. (உச)

கன்றொடுகறவையான் கலந்துநீர்குடித்
தொன்றிய பெருங்கரை யுறுமுன்னிட்டக
லன்றதிசயமென வறன்மிதந்தது
பொன்றலி லூரிறும் பூதுகொண்டதே.

(இ-ள்.) கறவைப்பசு கன்றோடுகலந்து (வீட்டாய் நீங்கும்படி)தண்ணீர்குடித் து அருகிலிருக்கின்ற பெரியகரையை அடைதற்கு முன்னமே, (பிராமணனுற்

போட்ட) கல்லானது ஆச்சரியமென்று சொல்லும்படி நீரில் மிதந்தது. எப்போதுங் குறைவுபடாத காசித்தலத்தார்பெருங்களிப்பினைக்கொண்டார்கள். ()

செழுமறையவகடன் றீர்ந்ததேகுதி
வழுவறுநாயகவிம் மாமலர்த்தடம்
பழுதறு தின்னதே படர்தி யென்றனர்
செழுவியவவையுளா ரிருக்கை சேர்ந்தனர்.

(இ-ள்.) மேலாகிய பிராமணரே உம்முடைய கடன்றீர்ந்துவிட்டது. நீர் போவீராக. களங்கமற்ற செட்டியாரே இலக்குமி வசித்தற்கிடமாகிய தாமரை மலர்களையுடைய இக்குளம் களங்கமில்லாமல் உம்முடையதாய்விட்டது. நீர்செல்வீராகவென்று சொல்லி மேலாகிய சபையார்கள் தங்களுடைய வாசஸ்தானத்தை அடைந்தார்கள். எ-று. (உகூ)

ஆதலிற்காசிமா நகரத்தாற்றிடு
மேதகு தருமமே மிகுதியாவது
போதரு மன்னதாற் போதம் பூத்திடுங்
காதலினல்துறக் கலக்கு முத்தியே.

(இ—ள்.) ஆதலினால் பெருமைதங்கிய காசித்தலத்திற் செய்கின்ற சிறந்த தருமம் மேன்மேல் வளரும். அத்தருமத்தால் மெய்ஞ்ஞானமுதிக்கும். பிரியத்தைத் தருகின்ற அந்த மெய்ஞ்ஞானத்தால் முத்தி சித்திக்கும். எ—று. (உஎ)

உண்மையீதுணர்தியென் றும்பன்கூறினன்
வண்மைசேருமையவண் மகிழ்ந்து தாழ்ந்தெழீஇ
யெண்மையே முத்தியை யெய்துங் காரணந்
தண்மைகூர் காசியைச் சார்தலோ வென்றாள்.

(இ-ள்.) இது சத்தியமாகுமென்று சிவபெருமான் பார்வதி தேவியாருக்குத் திருவாய்மலர்ந்தனர். ஜீவகோடிகளுக்கு ஞானத்தை உதவுகின்ற அத்தேவியார் மகிழ்ந்து வணங்கி யெழுந்து அடைந்தோர்களுக்குப் பிரபலசாந்தத்தை யுண்டுபண்ணும் காசிப்பதியைச் சேர்தலே முத்தியடைதற்கு எளிமையான காரணமென்றனள். எ-று. (உஅ)

சித்தர்கா ளுமையவள் தெளியத்தேவனு
ரத்தலை யுணர்த்திய தறிந்து ளீரினிக்
கைத்தல நெல்லியிற் காசியேகியே
பொத்தலைத் திருமெனப புகன்றுபோக்கினன்.

(ஞ-ள்.) சித்தர்கணங்களே உமாதேவியார் தெளியும் வண்ணம் சிவபரஞ்சோதியார் அக்கயிலாசத்தி லுபதேசித்ததை யறிந்தீர்கள். இனிக் காசித்தலத்தையடைந்து உள்ளங்கை நெல்லிக்கனிபோலாகத் துன்பத்தை யொழித்துச் சுகமாக வசிப்பீர்களென்று கபிலமஹாமுனிவர் தெரிவித்து அப்பதிக்குப் பிரயாணைப்படுத்தினர். எ-று. (உகூ)

போக்கியமுனிவனைப் போற்றிவாழ்த்தியே
தேக்கிய மகிழ்ச்சியிற் காசிசேர்ந்தன
ராக்கியவறத்தொடு மமர்ந்து வாழ்ந்தனர்
மேக்குயர் முத்தியின் மேவினாரரோ.

(இ-ள்.) பிரயாணப்படுத்திய கபிலமஹாமுனிவனை வணங்கித் துதித்து நிறைந்த மகிழ்ச்சியோடு காசித்தலத்தையடைந்து சிவதருமங்களைச்செய்து ஞான சம்பத்தோடு வாழ்ந்து உயர்வுக்குள் உயர்வாகிய முத்தியின்பம்பெற்றார்கள். எ-று.

## பரமசிவன் பார்வதிதேவியாருக்குபதேசித்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் எ-க்கு திருவிருத்தம் (உஎக)

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# எட்டாவது பஞ்சக்குரோசப்பிரதக்கண மகிமையுரைத்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

**கருங்குழலுமையாண் மீளவுங்காள கண்டனைப் பணிந்தெழுந்தவனி**
**மருங்குழல்விடைய வாதனைப்பட்டு மயங்குவார்க் கின்பவீடில்லை**
**யிருங்குழல்வீணை முழக்கருக்காசி யிருக்கவு மினியவேதாந்த**
**மொருங்குழலடையாச் செவியராயுலோப முற்றமர் பாதகர்க்கில்லை.**

. (இ-ள்.) கரிய அளகபாரத்தையுடைய உமாதேவியார் திரும்பவும் நீல கண்டராகிய சிவபிரானை வணங்கியெழுந்து பிரபஞ்சத்தில் விடையவாதனைக் குள்ளாகி மயக்கங்கொண்டு உழல்பவர்களுக்கும் பெருமை பொருந்திய புள்ளாங்குழலோசையும் வீணுகானமும் மாருதிருக்கின்ற காசித்தலத்தைத் தரிசியாதவர்களுக்கும் இன்பமயமான வேதாந்த விசாரணைசெய்யாதவர்களுக்கும் உலோபத்தன்மையுடைய பாதகர்களுக்கும் முத்திகிடைக்கமாட்டாது. எ-று. (க)

**திருமலிதருமங் காசிமாநகரிற் செய்தலேசிறப்பெனத் தெரிந்தேன்**
**குருமலியதுசெய் யாதவராகிக் குலவுமக் காசியிலிருந்தே**
**யுருமலிபாவம் புரிபவர்க்கொழிவெ னுரைத்திடவேண்டுமென் றிரந்தாண்**
**மருமலிகடுக்கை மாலிகைப்பெருமான் மகிழ்ந்திது புகன்றிடலுற்றான்.**

(இ-ள்.) சிறப்பு நிறைந்த தருமத்தை மகத்தான காசிப்பதியிற்செய்வதே மேன்மையென்று தெரிந்துகொண்டேன். உயர்வுள்ள அத்தருமத்தைச் செய்யாதவர்களாகி விளக்கமுற்ற காசிப்பதியில் இருந்துகொண்டே கொடும்பாவம் செய்பவர்களுக்கு அப்பாபம் எவ்வாறு நீங்கும் தேவரீர் கட்டளையிடவேண்டுமென்று வேண்டிக்கேட்டுக்கொண்ட உமாதேவியாரைப்பார்த்து வாசனை நிறைந்த கொன்றைமாலிகைதரித்த சிவபெருமான் களிகூர்ந்து இதைச்சொல்லத் தொடங்கினர். எ-று. (உ)

**திரையெறிபரவை யுடுத்தமாநிலத்திற் செறிதரு முயிரெலாம்புரிந்த**
**கரையெறிபாவங் கழித்திடுதானங் காசியேமற்றதினிருந்து**
**புரையெறிமனத்தி னியற்றுபாதகமும் போக்கிடத்தக்கதொன் றுண்டால்**
**வரையெறிமுலையாய் காசியைங்குரோசம் வலஞ்செயலென்றுளங்கோடி.**

(இ-ள்.) அலைகளை வீசுகின்ற சமுத்திரஞ் சூழ்ந்த பெரிய பூமியின் கண்ணே நெருங்கிய எல்லா உயிர்களும் செய்த கரைகடந்த பாவத்தை நீக்குமிடம் காசித்தலமாகும், அக்காசிப்பதியிலிருந்து களங்க மிகுந்த மனதுடன் செய்யத்

தக்க தீவினைகளை நீக்குதற்குக் காரணமொன்றிருக்கின்றது. (அதுயாதெனில்) மலைகளை அவமதிக்கத்தக்க குஜங்களையுடைய பார்வதியே காசியில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்தலென்றே மனத்திற்கொள்வாயாக. எ-று. (ந)

**தண்ணியகுணத்தான் முன்னோட்சயகீ சவ்வியனென்றொரு முனிவன்**
**புண்ணியந்திரண்டாலன்னதோர்வடிவான்பொருந்துநம்மடித்தியானத்தா**
**னெண்ணியநமைவந்தேத்தெடுத்தொருநாளியம்புவானெனதுமாணாக்கன்**
**கண்ணியபலரு ளொருவன்வேதாதி கற்றனன் முற்றவுங்கனிந்தே.**

(இ-ள்.) பூர்வகாலத்தில் சயகீசவ்வியனென்னும் பெயர்பெற்ற ஒரு முனிவன் சாந்தகுணமுள்ளவன், புண்ணியங்கள் யாவுஞ்சேர்ந்து வொரு வடிவெடுத்ததுபோன்றவன், நமது திருவடியில் அழுந்திய தியானமுடையவன், அறிவுடையோர் கருதத்தக்க நம்மிடத்து ஒருநாள் வந்து தோத்திரஞ்செய்து சொல்லிக்கொண்டனன். (அது யாதெனில்) மதிக்கத்தக்க தனது மாணாக்கர் பலருக்குள் ஒருவன் வேதமுதலான கலைகளை மனம்பதிந்து முழுமையுங் கற்றுக்கொண்டனன். எ-று. (ச)

**கற்றதற்கியைந்த வொழுக்கமில்லவனாய்க் களவினாற் பிறர்பொருள்கவர்**
**முற்றவிற்றுழலு முலைமடமாதர் முயக்கிடையழுந்தியு மனைக்குஞ் [ந்து**
**செற்றமிக்காக்கும் தீயகள்ளுண்டுஞ் செறிபலதுரோகமே பயின்று**
**முற்றவெங்கொலையும் புரிதரத்துணிந்தா னுரைக்கருங் கொடியமாபாவி.**

(இ-ள்.) வாசித்தறிந்ததற்குத்தக்க நடையில்லாதவனாகி திருட்டினால் அன்னியர்பொருளை அபகரித்து (நாணத்தை) முழுதும் விலைசெய்து திரிகின்ற குஜங்களையுடைய மங்கையர்கள் கலவியில் முழுகியும், குணதோஷத்தை நாடாத (கருணையுள்ள) தாயாருக்கும் பெருங்கோபத்தை யுண்டுபண்ணுங் கொடுந்தன்மையுள்ள மதுபானஞ்செய்தும், அனேகமாயுள்ள விசுவாச பாதகங்களில் நிரந்தரம் பழகியும் உண்டாகிய கொடிய கொலைத்தொழிலையுஞ் செய்வதற்குத் துணிந்தனன் சொல்வதற்கரிய கொடும்பாவியாகிய மாணாக்கன். எ-று. (ரு)

**அனையவன்செய்கை யனைத்தையுந்தெரிந்தியா னச்சுறுத்திடவுமஞ்சானாய்**
**நினைவருங்கொடியபாவமேபுரிந்தா னெடுஞ்சினங்கொண்டொருதினத்திற்**
**றுனையமற்றவனை நோக்கிநீயிந்தத் தூயகாசியினைவிட்டகறி [முன்.**
**யினையவிங்குறையிற் சபித்திடுவேனென் றிசைத்திடக்கேட்டன னகன்**

(இ-ள்.) அக்கொடியவன் செய்கைகளனைத்தையும் நான் அநுபவமாகத்தெரிந்து பயப்படுத்தவும் அஞ்சாமல் நினைத்தற்கரிய மகாபாதகங்களையே செய்துவந்தனன். ஒருநாள் பெருங்கோபங்கொண்டு உடனே அப்பாதகனைப் பார்த்து பரிசுத்தமான இந்தக்காசித்தலத்தை விட்டு நீங்கிப்போ இனி இத்தலத்திலிருப்பாயானால் சாபங்கொடுப்பேனென்று, யான் சொல்லக்கேட்டு அவன், நீங்கிவிட்டனன். எ-று. (சா)

அகன்றவன்பேயு மகலருங்காசி யரும்பதிதனைவிடுத்தேகிப்
புகன்றுபல்லோர்சூழ் விந்தமால்வரைப்பாற் புகுந்துதிர் சருகுபக்கணஞ்
துகந்தவணமர்ந்து சிலபகறவஞ்செய் தோங்குகோதாவரிதீரத் [செய்
திகந்ததுன்மதியோடெய்தியாங்கமராவியற்றருந்தவஞ்சின்னாள்புரிந்தான்

(இ-ள்.) (என்னை)விட்டகன்றவன் பேயும் விலகிப்போவதற்கு எண்ணங் கொள்ளாத மகிமையுள்ள காசித்தலத்தைவிட்டு அப்பாற்போய், (தனது துன் பத்தைப் பலருக்குஞ்) சொல்லிக் (காசியில் வசித்த புண்ணியத்தால்) பல தபசிக ளுஞ் சூழ்தற்கிடமாகிய உயர்ந்த விந்தமலையை யடைந்து (காற்றினால்) உதிர்கி ன்ற சருகு பக்ஷணஞ்செய்து அவ்விடத்தில் விருப்புடனிருந்து சிலகாலந் தவஞ் செய்து (அவ்விடம்விட்டு) உயர்ந்த கோதாவரிக்கரையை யடைந்து அவ்விடத் தில் சித்தசுத்தியுடன் வாசஞ்செய்து(மற்றையோர்)செய்தற்கரிய அரியதவத்தைச் சிலகாலஞ்செய்தனன். எ-று. (எ)

ஆயிடைநீங்கி யேகுபுவீமை யருநதிதீரத்தையுற்று
மாயிருந்தவஞ்செய் தமர்ந்தனன்சின்னாண் மற்றுமவ்விடத்துநின்றேகித்
தூயவரேத்துஞ் சீபருப்பதத்தைத் தொழுதடைந்தாவயினமர்ந்து
பாயசீர்க்குமரக் கடவுளைமதித்துப் பல்பகலருந்தவம்புரிந்தான்.

(இ-ள்.) கோதாவரி நதிக்கரையாகிய அவ்விடத்தைவிட்டு மஹாநதியாகிய வீமை நதிக்கரையைச்சேர்ந்து பெருமையுள்ள அருந்தவங்கள் செய்திருந்தனன். சிலகாலம்பொறுத்து அவ்விடத்தைவிட்டுநீங்கி, பெரியோரால் துதிக்கத்தக்க திரு ப்பருப்பதமென்னுந் தலத்தைவணங்கி அவ்விடத்திற்றங்கி பரவிய சிறப்புள்ள முருகக்கடவுளைத் தியானித்துப் பலகாலம் அரிய தவஞ்செய்திருந்தனன். எ-று. (அ)

அன்னதோர்காலைக் காசியினமர்ந்த வகத்தியமாமுனியென்பான்
மின்னகுமோலித் தேவர்கடொழுது வேண்டலிற்றக்கணமடைவா
னன்னலம்பயக்குங் காசியைநீத்த நவிலொணு வருத்தமுட்கொண்டு
முன்னருங்காசி காசியென்றுரைத்து முன்னினன் பருப்பதவழியே.

(இ-ள்.) அக்காலத்தில் காசித்தலத்தில் வசித்த அகஸ்திய மகாமுனிவரென் பவர்,மின்னலைப்போலும் விளங்குகின்ற மகுடங்களையுடைய தேவர்கள் வணங்கி வேண்டிக்கொண்டமையால் தக்ஷணத்திலுள்ள பொதியமலைக்குச் செல்லும் பொருட்டு, நல்ல முத்தியின்பத்தைக் கொடுக்குங் காசித்தலத்தைப் பிரிந்த சொல்லுக்கடங்காத் துயரத்தை யுள்ளத்திற்கொண்டு, நினைத்தற்கரிய காசிகாசி யென்று சொல்லிக்கொண்டு திருப்பருப்பதவழியாகச் சென்றனர். எ-று. (கூ)

மரகதமயிலூர் குமரவேட்காணும் வாஞ்சையிற் காசியென்றுரைத்துப்
பரவுமாமுனிவன் சேறலுமனைய பருப்பதத்தமருமென்சிட்
னுரவுசேர்காசி காசியென்றுரைக்கு மொருதிரு மந்திரஞ்செவியின்
விரவலும்புரிந்த பாவமுற்றெழித்து விளக்கமார்தேசொடுமெழுந்தான்.

(இ-ள்.) மரகத நிறமுள்ள மயிலை நடாத்தும் முருகப்பெருமானைத் தரிசிக்கவேணுமென்கிற ஆவலோடு காசி காசியென்று சொல்லிக்கொண்டு துதிக்கத்தக்க பெருமையுள்ள அகஸ்திய மகாமுனிவர் செல்லும்போது, அத்திருப்பருப்பதத்தில் தவஞ்செய்கின்ற எனது மாணுக்கன் மெய்ஞ்ஞானந்தங்குதற்கிடமாகிய காசி காசி என்று சொல்லுகின்ற ஒப்பற்ற மகாமந்திரம் காதுகளில் கேட்டமாத்திரத்தில் செய்த கொடியபாவங்கள் முழுவதுமொழிந்து மிக்க ஒளிவீசுகின்ற அழகோடு மெழுந்தனன். எ-று. (௧0)

எழுந்தவன்குறிய முனிவரன்பாத மிறைஞ்சியான் காசியின்வசித்துத்
தழுந்தரமல்லாப் பாதகம்புரிந்தேன் சற்குரு வெறுத்தெனைக்கடியக்
கழுந்துகொண்மதியிற் காசியைநீத்துக் கருதுபற்பலதலம் வசித்தீங்
குழுந்தளவாக்கி யுததியுண்முனிவா வுற்றுநோற்றிருந்தனன் வருந்தி.

(இ-ள்.) அவ்வாறெழுந்த வெனது மாணுக்கன் அகஸ்தியமுநிவரது பாதங்களில் வணங்கி அடியேன் காசித்தலத்தில் வாசஞ்செய்து தாங்குந்தரமல்லாத தீவினைகளைச் செய்தேன் எனதாசிரியராகிய சயகீசவ்வியமுநிவர் கோபித்து எனை நீக்கிவிட தேய்ந்து முழுது மழுங்கிய புத்தியோடு காசித்தலத்தைவிட்டு சிந்தனைக்குரிய பலதலங்களிலிருந்து வருந்தி யருந்தவஞ்செய்தேன் சமுத்திரநீரை உழுந்தளவாக உள்ளங்கையில் வருவித்து ஆசமனம்போல உட்கொண்ட அகஸ்தியமுநிவரே என்றனன். எ-று. (௧௧)

ஆயதோர்காலை முன்னமெத்தவம்யா னாற்றினனோவலைதறியேன்
ப்ராயமாதவநீ காசியென் றுரைத்துப் படர்ந்தனையதுசெவியேறத்
தீயபாதகந்தீர்ந் தடியனேனளவாத் தேசுபெற்றுய்ந்தன னென்றுன்
மேயமாமுனியுங் கேட்டிறும்பூது விழைதரத்தன் னுளே மகிழ்ந்தான்.

(இ-ள்.) நான் பூர்வத்தில் என்னதவஞ்செய்தேனோ அறிந்திலேன் அதிப்பிரபலமாகிய பெருந்தவமுள்ள நீர் அந்தக் காலத்தில் காசி காசியென்று சொல்லிக்கொண்டு நடந்தீர் அம்மந்திரம் என்செவியடைந்த மாத்திரத்தில் கொடும் பாதகம் ஒழிந்து அடியனேன், அளவில்லாத விளக்கமுற்றுப் பிழைத்தனனென்றபோது விருப்பமுள்ள (அகஸ்திய) மகாமுநிவருங்கேட்டு மனதில் மேலுமேலும் ஆச்சரியமுண்டாகும்படி களித்தனர். எ-று. (௧௨)

இருவருமிவ்வா றளவளாய்மகிழு மெல்லையிலாயிரங்கோடி
யுருகெழுபரிதி யுதயமுற்றென்ன வொள்ளியகுமாரவேடோன்றத்
திருவமுற்றிருவ ரும்பணிந்தெழுந்து சென்னிமேற் கரதலங்குவித்துப்
பொருவரும்புளக மேனியிற்போர்ப்பப் போக்கருமகிழ்வொடு நின்றார்.

(இ-ள்.) அகஸ்தியமகாமுநிவரும் எனது மாணுக்கனும் இவ்வண்ணமாக ஒருவருக்கொருவரளவளாவிக்களிக்குங்காலத்துப் பிரகாசம்பொருந்திய ஆயிரங்கோடி சூரியர்கள் உதித்ததுபோல விளக்கமுள்ள முருகக்கடவுள் பிரசன்னமாக. உள்ளங்களித்து இருவரும் வணங்கியெழுந்து சிரமேலிரண்டு கரங்களைக் குவித்து மயிர்ப்புளகமென்னும் போர்வையுடையவர்களாய் நீங்குதற்கரிய மகிழ்ச்சியோடு நின்றார்கள். எ-று. (௧௩)

அந்தமில்குமரக் கடவுளுமருள்கூர்ந் தகத்திய முனிவனை நோக்கிச்
செந்தமிழ்மணக்குஞ் செய்யவாய் முனிவா திருத்தகுகாசியை நீத்து
வந்தவெந்துயருன் மனத்தினை வருத்த வருந்தினைபோலுமெய் யறிஞர்
சந்தவண்காசித் தலத்தினைநீங்கச் சம்மதியாரொருஞான்றும்.

(இ-ள்.) முடிவில்லாத முருகப்பெருமானும் கருணைகூர்ந்து அகஸ்திய முனிவரைப்பார்த்து செந்தமிழ்மாலை மணக்கின்ற சிவந்தவாயையுடைய முனிவனே சிறந்த காசித்தலத்தை விடுத்து வந்துவிட்ட கொடிய துன்பம், மனதினைத் துயரப்படுத்தலால் வருந்துகின்றதுபோலிருக்கின்றது. பேரறிவினையுடையோர்கள் அழகும் வளமுமமைந்த காசித்தலத்தைப் பிரிதற்கு ஒருக்காலும் சம்மதியார்கள். எ-று. (கச)

காசிமான்மியநீ முழுதுணர்தலினக் காசியைநீப்பதற்குள்ளங்
கூசியித்துயரங் கொண்டனையுணராக் கொடியமாபாவியர்க்காகிற்
பேசுபன்னகரோ டதுவுமொன்றாகிப் பிறங்கிடும் விசேடமாகாது
வீசுதெண்டிரைநீர்க் காசிநீத்தல் விண்ணவர்வேண்டலாலன்றே.

(இ-ள்.) நீ, காசிமகிமையை முழுவதும் அறிந்தமையால் அக்காசியை நீங்கினதற்கு மனம் நாணங்கொண்டு இத்துயரமடைந்தனை அம்மகிமையை அறியாத மகாகொடும்பாதகர்களுக்கானால் சொல்லத்தக்க பல நகரங்களோடு அக்காசியும் ஓரிடமாகி விளங்கும். விசேடங்காணாது. தெளிந்த அலைகளை வீசுகின்ற கங்காதீர்த்தத்தையுடைய காசித்தலத்தை நீ நீங்கிவிட்டது தேவர்கள் (குறை நீங்க அவர்கள்) வேண்டிக்கொண்டமையாலல்லவா. எ-று. (கரு)

காசியைநினைப்பார் காசியையுரைப்பார் காசியைக்காணுமாறடைவார்
காசியில்வசிப்பா ரிவரொலாமெமக்குக் கருதரும்பிரியமிக்கவர்காண்
காசியைநினைந்துவருந்தலைமுனிவ கழறுதிவேண்டுவதென்னக்
காசியையடியேன் பண்டுபோற்சேரக் கடைக்கணித்தருளுகவென்றான்.

(இ-ள்.) காசித்தலத்தைக் கருதுகின்றவரும், காசியென்று (வாயினால்) உரைப்பவரும், காசித்தலத்தைப் பார்க்கும் வண்ணஞ்செல்பவரும், காசித்தலத்தில் வசிப்பவரும், இவர்கள் யாவரும் எனக்கு சிந்தனைக்கரிய விசுவாசமுள்ளவர்கள். காசித்தலத்தைப் (பிரிந்ததை) நினைந்து முனிவனே வருத்தமடையாதே வேண்டியவரங்களைக் கேட்டுக்கொள்வாயென்று (முருகப்பிரான்) திருவாய் மலர காசித்தலத்தை முன்போல அடியேன் சேர்ந்திருக்கும்விதம் கடைக்கண் பாலித்தருளவேண்டுமென்றனன். எ-று. (கசு)

என்றலுங்கடப்ப மாலிகைத்தோளா னிமையவர்காரியமுடித்து
நன்றாநீபின்னர் வேட்டவாறடைதி நற்றவமுனிவவென்றுரைக்க
வன்றவன்றாழ்ந்து துதித்தனன்விடைபெற் றகன்றனன்மற்றையற்பா
ராக், கன்றலில்காசி நகரிருந்தொருநீ கருதரும்பாதகம்புரிந்தாய்.

(இ-ள்.) இப்படியென்று அகஸ்தியமுனிவர் கேட்டபோது கடப்பமாலையை யணிந்த தோள்களையுடைய முருகப்பிரான் நீ தேவர்கள் குறையைமுடித்துப்

பின்னர் அபேக்ஷித்தபடி (காசிப்பதியை) நலமர்க அடைவாயாக பெருந்தவமுள்ள முநிவனேயென்று திருவாய்மலர அப்போது அகஸ்தியமுநிவர் (முருகக்கடவுள்) திருவடிகளை வணங்கித் துதித்து விடைபெற்றுக்கொண்டு நீங்கினர். எனது மாணுக்கனை முருகக்கடவுள் பார்த்துக் கெடுதலில்லாத காசித்தலத்திலிருந்து நினைத்தற்கரிய மகாபாதகங்களைச் செய்தனை. எ-று. (கஎ)

அங்குநின்றகன்று பற்பலதலத்து மருந்தவமாற்றினையதனாற்
பொங்கும்பாவம் போயதன்றீங்குப் போந்துநீ தவமபுரிகாலை
மங்குதலில்லா வகத்தியமுனிவன் வாய்மொழி மந்திரங்கேட்டாய்
தங்குமவ்வறத்தா லன்னபாதகமுன் றனைவிடப் பொலிந்தனையன்றே.

(இ-ள்.) அக்காசியிலிருந்து நீங்கிப் பலவாயுள்ள தலங்களில் அரியதவங்களைச் செய்தனை அத்தவங்களால் அப்பெரும் பாதகம் போகவில்லை இவ்விடத்துவந்து நீ தவஞ்செய்யும்போது நித்தியவாழ்வைப்பெற்ற அகஸ்தியமுநிவன் வாயால் மொழிந்த காசி காசி என்னும் மந்திரத்தைக்கேட்டனை கேட்ட அத்தருமத்தால் காசியிற்செய்த பாவங்கள் உன்னைவிட்டகல நீ விளக்கமுற்றனை. எ-று. (கஅ)

காசியென்றுரைத்த மந்திரங்கேட்டக் கருதரும் புண்ணியப்பேற்றான்
மாசில்யாங்காட்சி தந்தனநினக்கு மற்றுநீகாசியுற் றருணூல்
பேசியகுரவன் பணிவிடையாற்றிப் பெட்டினிதமர்தியென் றுரைத்தான்
கூசிமற்றவனுந் திருவடிதொழுது குறித்தது வினவுதலுற்றான்.

(இ-ள்.) காசியென்றுசொல்லிய மந்திரத்தைக்கேட்ட நினைத்தற்கரும் புண்ணியபலத்தினாலே யாம் களங்கமில்லாத தரிசனங்கொடுத்தோம். நீ காசித்தலத்தையடைந்து திருவருள்வடிவாயுள்ள நூல்களை உபதேசித்த குருபணிவிடையை விருப்புடன் செய்து சுகமாக வாசஞ்செய்வாயென்று திருவாய் மலர்ந்தனர். எனது மாணுக்கன் நாணத்துடன் திருவடிகளை வணங்கி மேல் வருவதைக்குறித்து வினவினன். எ-று. (கக)

ஐயனேகாசிப் பதிவயினமர்வா ராற்றரும் பாதகம்புரிந்தாற்
செய்யலாங்கழுவா யாதஃதடியேன் றெளிதரவருடியென்றிரப்ப
மையனீத்தருளும் விச்சுவநாதன் மலரடிதொழினரு ளுவனென்
றெய்யமாமயில்வாகனப்பிரான்மறைந்தா னென்னைவந்தடுத்தனன்சீடன்.

(இ-ள்.) முருகக்கடவுளே காசித்தலத்தில் வசிப்பவர்கள் செய்தற்கரிய மகாபாதகங்களைச் செய்வார்களானால் செய்யத்தக்க பிராயச்சித்தம் யாது அடியேன் தெளியும்வண்ணம் கட்டளை யிடவேண்டுமென்று குறையிரந்து பிரார்த்திக்க மயக்கத்தையொழித்து அருள்கின்ற (காசி) விசுவநாதர் மலர்போன்ற திருவடிகளை வணங்கினல் இச்சந்தேகத்தை யொழித்தருள்வாரென்று வேகமாகச் செல்கின்ற பெருமையுள்ள மயில்வாகனத்தையுடைய முருகக்கடவுள் சொல்லி மறைந்தருளினர் சீடன் காசிப்பதிக்குவந்து எனை யடுத்தனன். எ-று. (உ0)

சீடன்வந்துரைப்ப யாவையுந்தெளிந்தேன் றெளிதரேன் யானிஃதொன்
பாடமையுயிர்கடுக்கமாந்தாகம் பாற்றிடப்பன்மறை யுரைக்கு [றும்

**மாடலங்காசியென் னுநீர்ப்பந்த லமைத்துளாய் சாதியாசாரந்**
**தேடருமறமற்றிவைகருதாது தெளிசிவஞானமாங் கழுவாய்.**

(இ-ள்.) எனது மாணுக்கன் வந்துசொல்ல அவ்விடத்து நடந்தவைகள் யாவுந் தெரிந்தேன். பெருமைவாய்ந்த ஆன்மாக்களுடைய துயரமாகிய தாகத்தைத் தணித்தருளும்பொருட்டுப் பலவாகிய வேதங்களாலெடுத்துரைக்கத்தக்க வெற்றி தங்கிய காசித்தலமென்னுந் தண்ணீர்ப்பந்தலை உண்டுபண்ணிய சிவபிரானே சாதியாசாரவியல்பையும் விட்டுதற்கரிய தருமவியல்பையுஞ் சிந்தியாது சிவஞானத்தாலறியத்தக்க இப்பிராயசித்தமொன்றையும் யானறிந்திலேன். எ-று. (௨௧)

**அடியனேன்வேதா கமபுராணங்க ளறிந்தவர்தம்மொடுகூடி**
**நெடியமாகாசித் தலத்துறப்பெற்றே னிகழறிவறிவிலாமையினுற்**
**கொடியவோர்பாவம் புரிதரினிதனைக் குறைத்திடப்படுகழுவாயா**
**தொடிதராததனை யருளியென்றிரப்ப வொண்கணு யாமுரைத்தனமால்.**

(இ-ள்.) அடியேன் வேதாகமபுராணங்களை யறிந்த பெரியரோடுசேர்ந்து பெருங்கீர்த்தியுள்ள காசித்தலத்தில் வசிக்கப்பெற்றுக்கொண்டேன். புத்திபூர்வமாயாவது அபுத்திபூர்வமாயாவது ஒரு கொடும்பாவஞ்செய்தால் அப்பாவத்தை நீக்கத்தக்க பிராயச்சித்தம் யாது. குறைவில்லாது அதனைக்கட்டளையிடவேண்டுமென்று அச்சயகீசவ்வியமுனிவன் பிரார்த்திக்க, விளக்கமமைந்த கண்களையுடைய பார்வதியே யாம் தெரிவித்தோம். (அது யாதெனில்.) எ-று. (௨௨)

**ஆனந்தமயமாயாமுறைதலினு லானந்தகானமென்றொருபேர்**
**தானந்தமின்றிப் புனைந்தமர்காசித் தலத்திடை வசித்திடப் பெற்று**
**லீனந்தாமில்லா மற்றையதலத்தி னியற்றியபாதகமிரியு**
**மோனந்தாமுற்றோர் விடலருங்காசி முழுத்தலத் தமர்ந்துசெய்தீங்கு.**

(இ-ள்.) ஆனந்தவடிவமாக யாம் அத்தலத்தில் வீற்றிருப்பதால் அக்காசி ஆனந்தகானமென்று ஒரு பெயர்பெற்று எக்காலத்திலும் லயமில்லாமலிருக்கின்றது அப்பதியில் வசிக்கத்தக்க புண்ணியங்கிடைத்தால் உயர்வுள்ள மற்றைய தலங்களிலிருந்து செய்தபாவங்களொழியும். ஞானுனுபவத்தையுடைய உத்தமர்கள் விட்டு நீங்குதற்கரிய காசித்தலத்திலிருந்து செய்கின்றபாவங்கள். எ-று. (௨௩)

**சிறியதேயெனினும் பெரியதேயெனினுந் தேய்த்திடப் படுகழுவாயொன்**
**றறிதரவுரைப்போங் கேட்டிமற்றதுவு மறிதராமந்தணமாமா**
**னெறிகொள்பாதலமே ழுருவிமேலெழுந்த நின்மலநங்குறிதங்குங்**
**குறிகெழுகாசித் தலத்தளவோரைங் குரோசமென்றருமறைகூறும்.**

(இ-ள்.) சிறிதாகவிருப்பினும் பெரிதாகவிருப்பினும் அவைகள் ஒழியத்தக்க பிராயச்சித்தத்தை யாவரும் தெரியும்படியாகக்கூறுவோம். நீ கேட்பாயாக அப்பிராயச்சித்தமும் ஒருவராலறியப்படாத இரகசியமாகும். (எல்லோரு) மதித்தற்குரிய காசித்தலத்தில் விதிவழியாகக் கீழேழுலகமும் ஊடுருவிமேலே காணப்படுகின்ற மலரகிதமான நமது வடிவமாயுள்ள சிவலிங்கங்கள் தங்குதற்கிடமாகிய பஞ்சக்குரோசமென்று அரியவேதங்கள் சொல்லும். எ-று. (௨௪)

அன்னதையொருகாற்சூழ்தரினொழியு மமைந்தசஞ்சிதமுமாங்கொழியும்
பின்னருமிருகால்வலஞ்செயினொருபான் பிறவிசெய்பாதகமாயு
மென்னரு முக்கால்வலஞ்செயினூறு மியல்பவப்பாதகங்கழியும்
பன்னரும்வருடந்தொறும்வலஞ்சூழ்வார் பலனெடுத்துரைக்கமுற்றுதே.

(இ-ள்.) (சிவலிங்கங்கள் நெருங்கியுள்ள) அப்பஞ்சக்குரோசத்தை ஒருதரம் பிரதக்ஷணஞ்செய்தால், காசியிற்செய்தபாவங்கள் நீங்கும் (அதுவன்றி) கட்டுப் பட்டிருக்கின்ற சஞ்சிதவினையும் ஒழியும். பின்பு இ[illegible]டுதரம் பிரதக்ஷணஞ் செய்தால் அக்காசியில் பத்துப்பிறவியிற்செய்த பாவங்களொழியும். மூன்றுதரம் பிரதக்ஷணஞ்செய்தால், அக்காசிப்பதியில் நூறு பிறவியிற்செய்த பாவங்கள் ஒழியும். வருஷங்கடோறும் பிரதக்ஷணஞ்செய்கின்றவர்கட் குண்டாகிய பலனை எடுத்துரைக்க முடியாது. எ-று. (உரு)

முனிவரவறிதி யென்றனங்கேட்டு முகிழ்த்தகை யொடுந்துதிபுரிந்து
நனிமகிழ்பூத்துத் தனையடுத்திரந்த நலங்கொள் சீடனுக்குமீதுணர்த்தித்
தனியவிர்காசி யைங்குரோசஞ்சூழ் தருதிறன் மேற்கொடம்முனிவன்
கனிதருமுத்தி கலந்தனன்மடந்தாய் கரைந்தவீதன்றிவேறிலையால்.

(இ-ள்.) முனிவனே நீ அறிந்துகொள்ளென்றும் அச்சயகீசவ்வியமுனிவன்கேட்டு இருகரங்களையுங்குவித்துத் தோத்திரஞ்செய்து அதிக சந்தோஷங்கொண்டு தன்னை அடுத்துப் பிரார்த்தித்த நன்மைவாய்ந்த மாணாக்கனுக்கும் இந்த ரகசியத்தைத்தெரிவித்து ஒப்பற்று விளங்குகின்ற காசித்தலத்தில் பஞ்சக்குரோசப்பிரதக்ஷணஞ்செய்யுந் தொழிலை மேற்கொண்டு அம்முனிவன் முத்தியடைந்தனன். பார்வதியே (காசியிலிருந்து செய்யும் பாவங்கட்கு மேற்கூறிய) பிராயச்சித்தத்தை யல்லாது வேறேகிடையாதென்றறிவாயாக. எ-று. (உசு)

கடிமலர்க்குழலாய் காசியைங்குரோசங் கருத்துறச்சூழ்ந்திடுகழுவாய்
முடிதரிற்காசியிற்றியபாவ முழுமையு மொழிதருமன்றி
மடிதராக்கால வயிரவதண்டம் வருத்திட வதனிடைப்படுவா
ரொடிதலின்முப்பானுயிரம்யாண்டென்றுரைத்திடுந்தெய்வவாண்டளவே

(இ-ள்.) வாசனைவீசுகின்ற மலர்களையணிந்த அளகபாரத்தையுடைய பார்வதியே காசிப்பதியில் பஞ்சக்குரோசத்தை மனவுறுதியுடன் பிரதக்ஷணஞ் செய்கின்ற பிராயச்சித்தம் முடியுமானால் காசிப்பதியிற்செய்த பாவங்கள்யாவும் ஒழிந்துவிடும். இதுவல்லாமல் வேறேபிராயச்சித்தம் யாதென்றால் குறைவுபடாத தெய்வவாண்டு முப்பதினாயிரம் வருடம் காலவயிரவதண்டனைக்குடன்பட்டு சகிக்கப்படாத துன்பத்தை யனுபவிப்பார்களென்பதேயாமென்றறிவாயாக. எ-று.()

பஞ்சக்குரோசப்பிரதக்கணமகிமையுரைத்த
அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் அ-க்கு பாயிரம் உள்பட திருவிருத்தம் (உகூஅ)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# ஒன்பதாவது மண்டபன் முத்தியடைந்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

மாலுமயனுங்காணாத வள்ளற்பெருமா னுமையம்மை
சாலுங்கருணை முகநோக்கித் தலத்திற்சிறந்த காசியிடைக்
காலுங்குணத்திற் பாதகஞ்செய் கடைஞர்கழுவாய் செயலுரைத்தர்
மேலுமதற்கோர் கதையுமெடுத் திசைப்பாங்கேட்டி யென்றிசைப்பான்.

(இ-ள்.) திருமாலும் பிரமதேவனும் அறியப்படாத அருள்வள்ளலாகிய சிவ பெருமான் உமாதேவியாரது பெருங்கருணையுள்ள திருமுகத்தைப்பார்த்து தலங் களுக்குள் மேலாகிய காசித்தலத்தில் குணசாமானியத்தால் தீவினையைச் செய்கி ன்ற இழிஞர்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்யவேண்டிய செய்கையைக் கூறி னோம் மேலுமதற்கோர் கதைசொல்லுகின்றோம் கேட்பாயென்று சொல்லத்தொ டங்கினர். எ-று. (க)

கோலமாருங்காசியுளான் கூசுமாண்ட முனிமைந்தன்
ஞாலமேவாக் கொடுங்குணத்தா னவின்மண்டபனென்றிடும் பெயரான்
சீலமருவாத்துட்டரொடுஞ் சேர்ந்து தீயவேபுரிவான்
சாலவருளினீன றெடுத்தோர் தம்மாற்றமுங்கொள்ளாதுழல்வான்.

(இ-ள்.) அழகு நிறைந்த காசித்தலத்தில் வசிப்பவனும் கூசுமாண்டமுனி வனுடைய குமாரனும் அறிவுடையோர்களால் ஒப்புககொள்ளப்படாத கொ டிய குணத்தையுடையவனும் மண்டபனென்னும் பெயரையுடையவனுமாகிய ஒருவன் நற்குணத்தோடு பழகாத துன்மார்க்கரோடு சேர்ந்து பாபங்களையே செய்து பேரன்போடு பெற்றெடுத்த மாதா பிதாக்களுடைய வாக்கியத்தையுங் கேளாது திரிவான். எ-று. (உ)

அயலார்பொருளைக் கவர்வதுவு மயலார்மனையைப் புணர்வதுவு
மியலார்குணமாக் கொண்டொழுகி யிலங்கும்வருணச் சிரமநிலை
மயலாகுணத்திற் கைவிட்டான் வளருந்தோறும் பாதகமு
முயலார்நெறிசற் றேனுமற உடனேவளர்ந்து பெருத்ததால்.

(இ-ள்.) பிறர்பொருளைத் திருடுவதும், பரதாரகமனஞ்செய்வதும், இயல் பான குணமாகக்கொண்டு அவ்வழியிலே நடந்து, விளக்கமுற்ற வருணச்சிரம நிலையை மயக்கத்தினுற் கைவிட்டு, தேகவளர்ச்சியோடு பாதகமும் வளர்ந்தோ ங்கி, சன்மார்க்கம் சற்றுமின்றி அத்தீவினை நாளுக்குநாள் பெருகியது. எ-று. (ஈ)

கூடாவொழுக்கந் தலைநின்று குறிக்குஞ்சிலநட் பாளரொடு
நாடாவரச னிற்புகுந்து நடுயாமத்திற் பொருள்கவர்ந்து
மாடாதரிக்கும் விலைமாதர் வைகுமனைக டொறும்புகுந்து
வீடாகிற்கு மவர்போக மிதப்பவுண்டு களித்திடுவான்.

(இ-ள்.) விரோத நடைகளுக்கு முதன்மையாகவிருந்து அந்நடைக்குத் தக்க சில சினேகிதரோடு யாவருமதிக்கத்தக்க அரசன் மனையில் பாதிராத்திரியில் பிரவேசித்துப் பெரும்பொருள்களைத் திருடிவந்து திரவியத்தையே விரும்பி நடக்கின்ற தாசிகள் வசிக்கும் வீடுகடோறுஞ்சென்று கெடுதிக்குக் காரணமாகிய அவர்களுக்குக் கொடுத்து அவர்களோடுஞ் சேருமின்பத்தை அடிக்கடி அநுபவித்துக் களிப்பானாயினன். எ-று. (ச)

ஒருநாள்விலைமா தொருத்திமனை யுட்போய்ப்பரியங் கத்தமர்வான்
செருகாநின்ற குழலனையாள் செய்யுந்தொழிலான் மதிமயங்கிப்
பருகாநின்ற பாலென்றப் பைம்பொற்கட்டிற் கீழிருந்த
முருகாதரத்திற் குடித்திட்டான் மூர்க்கர்க்காகா ததுமுண்டோ.

(இ-ள்.) ஒரு தினத்தில் ஒரு தாசிமனைக்குட்போய்க் கட்டிலின் மீதிருக்கின்றவன் செருகி முடிக்கின்ற கூந்தலையுடைய அத்தாசிசெய்யுஞ் சயித்திய உபசாரத்தால் புத்திமயங்கி குடிக்கத்தக்க பாலென்று நினைத்து பசும்பொற் கட்டிலின் கீழிருந்த கள்ளினை ஆசையுடன் எடுத்துக் குடித்தனன் கொடியோர்களுக்குச் செய்யப்படாத காரியமுள்ளதோ. எ-று. (ரு)

பின்னருணர்ந்து கீழிருப்ப தென்னையென்றான் பெருமகிழ்ச்சி
நன்னாரும்ப நின்னுடற்கே நலமாருறுதி செயநினைந்தே
முன்னமொருதாம் பிரக்கலத்து முருகுநிரப்பி வைத்திருந்தே
னின்னமருந்து சாமிநீ யென்றாளல்குல் விலைசெய்வாள்.

(இ-ள்.) பின்பு அம்மண்டபன் ஒருவாறு தெரிந்து கட்டிலின் கீழிருப்பது யாதென்றான் அவள் பெருமகிழ்ச்சிகொண்டு உம்முடைய உடம்புக்கு வலிமையுண்டாகும்படி நினைத்து ஒரு தாம்பிரபாத்திரத்தில் கள்ளை நிறைத்துவைத்திருந்தேன் இன்னமும் உண்பீராக சாமியேயென்று அல்குல் வியாபாரஞ்செய்யும் அத்தாசி கூறினாள். எ-று. (சு)

மீட்டுமருந்திக் களித்திருந்தான் விடியலுணர்ந்து வெளிவந்து
நாட்டுநண்பிற் குரியரொடு நவின்றானனைய ரதுகேட்டுப்
பாட்டுமறையோ துநர்குலத்துப் பிறந்தாய்பதித னுயினுய்
கேட்டும்வாளா விருப்போமோ கேட்டைவெளியேபுகன்றிடுவோம்.

(இ-ள்.) மறுபடியுங் குடித்துச் சந்தோஷங்கொண்டு படுத்திருந்த மண்டபன் விடிந்தபின்பு தாசிவீட்டைவிட்டு வெளியேவந்து தன்னிடத்திற் பழகிய சினேகிதரோடு கள்ளுண்டதைச் சொன்னான் அந்நண்பர்கள் அதைக்கேட்டு

அத்தியயனஞ்செய்கின்ற வேதப்பிராமணர் குலத்திற் பிறந்து பதிதனாகிவிட்டாய் நாங்கள் கேட்டுச் சும்மாவிருக்கமாட்டோம் உன்கெட்ட நடையை யாவருக்குந் தெரிவித்துவிடுவோம். எ-று. (எ)

**மறையோர்குலத்து மண்டபன்றான் மதுவுண்டனனிந் நகருறுமோர்**
**நிறையோராத பரத்தைமனை நேடிப்புகுந்தென் றுரைப்பேமேற்**
**குறைகூர்நின்னை யெவர்சேர்ப்பார் கோவுமொறுக்கு மெங்களுக்குக்**
**கறைதீர்செம்பொ னணிகொடுத்தா லுரையோங்கடிது தாவென்றார்.**

(இ-ள்.) பிராமணர் குலத்திற் பிறந்த மண்டபனென்பவன் இந்நகரத்தி லிருக்கின்ற முறைநிலைமையுணராத ஒருதாசி வீட்டுக்குத் தேடிப்போய் மதுபானஞ்செய்தானென்று தெரிவிப்போமானால் தோஷம் நிறைந்த உன்னையாவர் சேர்த்துக்கொள்வார்கள். அரசனும் தண்டனைசெய்வான். எங்களுக்கு அதிக திரவியங்கொடுத்தால் சொல்லமாட்டோம். சீக்கிரமாகத் தருவாயென்றார்கள். எ-று. (அ)

**என்றபொழுது சற்றிருமென் றேகியனைய பரத்தைமனை**
**யொன்றநுழைந்து நின்மனைக்க ணுண்டதடங்க விலைமடந்தாய் [க்**
**சென்றதினத்து நான்கொடுத்த செம்பொன்பாதங் கொடுவென்ன**
**கன்றலடைந்த மனமுடையக் கணிகைவெகுண்டு கட்டுரைப்பாள்.**

(இ-ள்.) இப்படியென்று சொன்னபோது சற்றுநேரமிருங்களென்று அம் மண்டபன் அத்தாசிவீட்டிற்குப்போய் உள்ளே நுழைந்து விலைமாதே நேற்றையதினத்தில் நான் கொடுத்த திரவியங்களில் நாலிலொருபங்கு கொடுப்பாயாக உன்வீட்டிற் கள்ளுண்டது வெளிப்படாதிருக்கு நிமித்தம் வேண்டுமென்று கேட்க குரூரம் தங்கிய மனமுள்ள அத்தாசியானவள் கோபித்துத் திடமாகக் கூறுகின்றனள். எ-று. (கூ)

**பித்தமுதிரப் பெற்றாயோ பேயாற்கொள்ளப் பட்டாயோ**
**சித்தமிலச்சை யில்லாயோ சீசீயென்ன வுரைசெய்தாய்**
**மத்தவெனது வனப்பினுக்கு மாரவேளும் வழிபடுவான்**
**முத்தநகைசெய் திடினுலக மூன்றுமடிமை யாய்விடுமே.**

(இ-ள்.) பெரும்பித்தங் கொண்டனையோ, பேய்பிடிக்கப் பட்டனையோ, மனதில் வெட்கமிலையோ, சீச்சீ! என்ன வார்த்தை கூறினை? அதிகரித்த எனது அழகினுக்கு மன்மதனும் வணங்குவான். முத்தையொத்த தந்தங்கள் வெளிப்படும்படி புன்னகைசெய்தால் திரிலோகமுமெனக்கு அடிமையாகிவிடும். எ-று.()

**இனிபதரய வாயூற லில்லார்க்கொருசற் றருத்தினனேற்**
**புனிதமாய வோரிலக்கம் பொன்னுங்கொடுத்து வழிபடுவார்**
**கனியவுள்ளார் தமக்கருத்திற் கணக்கேதனங்கா கமுணர்ந்தோர**
**தனியார்நகரு மிருந்தறியாய் தவாதென்போக மனுபவித்தாய்.**

(இ-ள்.) இன்பத்தைத்தருகின்ற அதரபானங்கிடையாத (காமுகர்க்கு) சற்றுநேரம் அதரபானங்கொடுத்தேனானால் பரிசுத்தமுள்ள இலக்ஷம்பொன் கொடுத்

து வணங்குவார்கள். மனங்கனிந்து விரகாக்கினியால் உருகுபவர்களுக்கு அத ரபானங்கொடுத்தேனுகில், அவர்கள் கொடுக்கும் பொன்னுக்குக் கணக்கேது, ஒப்பற்ற அனங்காகமமாகிய கொக்கோகநூலை அறிந்தவர்களிருந்த ஊரிலுங் குடியிருந்தறியாய் நீங்காத எனது சுகத்தை யனுபவித்தாய். (கக)

நென்னலெனைநீ சுகித்ததற்கு நிறைபொனின்னுந் தரல்வேண்டு
மன்னதுணராய் நேற்றளித்த வதனிற்பாதந் தருகென்று
மென்னமதியா லிதுசொற்று யெட்டிவெளியே போகின்றற் [றன்]
பின்னருறுதண் டமுங்கிடைக்கும்பெறவேண்டிடுமே னில்லென்று

(இ-ள்.) நேற்று என்னை நீ அனுபவித்ததற்கு இன்னமும் பெரும்பொருள் நீகொடுக்கவேண்டும். நீ அதை உணர்ந்தாயில்லை. நேற்றுக்கொடுத்த திரவி யத்தில் நாலிலொருபங்கு தரும்படி கேட்டனை என்ன புத்தியால் இந்தவார்த்தை கூறினை. வெளிப்பட்டுத் தூரத்தில் போய்விடு போகாதிருப்பாயானால் அதிக தண்டனை கிடைக்கும் பின்பு அதைப் பெறவேண்டுமானல் நின்றுபாரென் றனள். எ-று. (கஉ)

என்றபொழுதே வெளிவந்தா னிகலுவார்க்குப் பொன்னில்லை
கன்றவெதுசெய் யினுஞ்செய்மி னென்றானவர்கள் கடுங்கோபந்
துன்றநகரில் யாவருக்குஞ் சொற்றார்பெற்றார் முதலாக
வன்றன்னகரில் வாழ்நரெலா மழிமண்டபனை வெறுத்தார்கள்.

(இ-ள்.) இப்படியென்று சொன்னபொழுதே(பயந்து)வெளிவந்து விரோ தஞ் செய்தவர்களுக்குப் பொருளில்லாமையால் வருந்தும்படி யாதுசெய்யினுஞ் செய்வீர்களென்றுகூறினன். அவர்கள் பெருங்கோபத்தால் மூடப்பட்டு காசிப் பட்டணத்திலுள்ள யாவருக்கும் இந்தசங்கதியைச் சொன்னார்கள்பெற்ற மாதா பிதா முதலாக அந்நகரத்திலிருக்கின்ற யாவர்களும் அப்பொழுதே இழிந்த மண் டபனை வெறுத்தார்கள். எ-று. (கங)

* கடும்பாயுள்ளார் முதலாகக் காசிவாண ரியாவருங்கை
விடும்பான்மையினு லறவொடுங்கி மெலிந்தா னுணவுங் கிடையாமற்
றொடும்பாதகனென் றெல்லோருந் துணிந்துபலியு மிடாரானார்
நெடும்பாதகருக் கிதுவொன்றோ நிகழ்வவின்னு மனந்தமே.

(இ-ள்.) பந்துக்களாயுள்ளார் முதலாகக் காசிப்பதியில் வாழ்கின்ற யாவர் களும் (தூஷித்துக்) கைவிட்ட காரணத்தால் ஆகாரமுங்கிடையாமல் மிகவும் மெலிந்தொடுங்கிய அம்மண்டபனைப் பெரும்பாதகனென்று யாவரும் நிச்சயித் துப் பிச்சையும் போடாதவர்களானார்கள் கொடிய பாதகர்களுக்கு ஈதொரு துன்பமோ நேரிடும் இன்னும் அனந்தமுண்டாகும். எ-று. (கச)

"வேறு"

தீயமண்டபனிவ்வாறு திரிதருநாளின்முன்னு
ளாயதோர் களவிற்பாகம் பெறுதவரிருவாண்மி

* கடும்பு—உறவு.

**மாயமா வெமைவஞ்சித்த மறவனே யெங்கள்பாகம்**
**கேயமாய்க் கொடுகொடாயே னெருக்குவோம் விடாமலென்றார்.**

(இ-ள்.) கொடிய மண்டபனென்னும் பிராமணன் இவ்வண்ணமாகி யலையுங்காலத்தில் இதற்கு முன்னடந்த திருட்டுப்பொருளிலே பங்குபெறுமலிருந்த இரண்டு சோரர்கள் மண்டபனிடம்வந்து மோசமாக யெங்களை வஞ்சித்து வந்துவிட்ட கொடியவனே எங்களுக்குண்டாகிய பங்கை விருப்புடன் கொடுத்துவிடு கொடாமற்போவாயானல் உன்னைவிடாமல் (அடித்துத்) துன்பப்படுத்துவோமென்றார்கள். எ-று. (கரு)

**என்றலும் வெருவிநின்ற னின்றவன் பாங்கரெய்தி**
**யொன்றமுற் களவிற்பாக முன்மகனெங்கட்கீயா**
**னன்றவன் றன்பால்வாங்கித் தருதிநானெல்லேனென்னி**
**லின்றெமக் கொருங்குநீயே கொடுத்திட லியையுமென்றார்.**

(இ-ள்.) இப்படி என்று சொன்னவளவில் பயந்துநின்ற மண்டபனுக்குப் பிதாவாகிய கூசுமாண்டமுநிவரிடத்து இருவரும்போய் உம்முடைய குமாரன் கூடயிருந்து நாங்கள் திருடிய பொருளுக்கு உண்டாகிய பங்கை எங்களுக்குக் கொடாமற் போய்விட்டான் அவனிடத்தில் நீர் வாங்கித்தாரும் நான் சம்மதியேனென்றால் எங்களுக்கு முழுமையும் இப்போதே நீரேகொடுத்துவிடவேண்டுமென்றார்கள். எ-று. (கசு)

**இருவரு மினையகூற வென்செய்வான் கூசுமாண்டன்**
**வெருவரு நீவிர்யாவர் விளம்புமி னுண்மையென்ற**
**னொருவனு விதனென்ற னொருவன்கைக் கோளனென்றன்**
**பருவரு மிச்சொற்கேட்டுப் பதைபதைத் தொடுங்கிச் சொல்வான்.**

(இ-ள்.) இரண்டு சோரர்களும் இவ்வாறு சொல்லக் கூசுமாண்டமுநிவன் யாதுசெய்வான் அச்சத்தைத் தருகின்ற நீங்கள் யாவர் உண்மையைச் சொல்லுங்களென்றான். ஒருவன் நான் நாவிதனென்றான் மற்றொருவன் கைக்கோளனென்றான் துன்பத்தைத்தருகின்ற இவ்வாக்கியத்தைக்கேட்டு நடுநடுங்கி ஒடுங்கிச் சொல்லுகின்றனன். எ-று. (கள)

**என்மக னொடுமிங்கெய்தி னெய்தலாம் பாகமென்றான்**
**புன்மக னொடுமவன்பாற் போயினார் பாகம்வேட்டோர்**
**நன்மகன் சீறிநோக்கி நலிவுசெய் மூன்றுபேரு**
**மன்மகன் றன்பாற்சென்று வழக்குரை யாடுமின்கள்.**

(இ-ள்.) என்மகனோடு இங்குவருவீர்களானல் பாகம் பெறுவீர்களென்றனன் பாகம் விரும்பின அவ்விருவர்களும் இழிந்த மண்டபனோடு கூசுமாண்டமுநிவனிடத்துப்போனார்கள். அவ்வுத்தமன் அவர்களைக் கோபித்துப்பார்த்து வருந்துகின்ற நீங்கள் மூன்றுபேரும் அரசனிடத்துக்குப்போய் இவ்வழக்கைச் சொல்லிக்கொள்ளுங்களென்றனன், எ-று. (கஅ)

அனையவன் றண்டஞ்செய்வா னத்தகு தண்டந்தானே
யினைய்நுங் கொடியதீமைக் கியற்றிடு கழுவாயாகு
நினையுமக் கழுவாயாற்று திருந்திடி னிரயமேவுந்
துனையவீ தாற்றுமென்று சொற்றுமா முனிவர்கோமான்.

(இ-ள்.) நீதியுள்ள அரசன் உங்களுக்குத் தண்டனைசெய்வான் விதிப்படி செய்கின்ற அத்தண்டனையே இத்தன்மையான பெரும்பாதகஞ்செய்த உங்களுக்கு செய்தற்குரிய பிராயச்சித்தமாகும். சிந்திக்கத்தக்க அப்பிராயச் சித்தத்தைச் செய்யாதிருந்தால் உங்களுக்கு நரகம் சம்பவிக்கும் விரைவாக இப்பரிகாரத்தைச் செய்வீர்களென்று முநிவர்களுக்குத் தலைவனாகிய கூசுமாண்டன் கூறினன். எ-று. (கசு)

மண்டபன் வதனநோக்கி மைந்தனாகிய பொல்லாதா
யெண்டப முன்போலேயிவ் விருவரோ டேகிமன்னன்
றண்டனை செய்யப்பட்டாற் றவிருநீ செய்தபாவங்
கண்டனை யப்பாலென்பாற் கலந்திடல் கருமமென்றான்.

(இ-ள்.) மண்டபன் முகத்தைப்பார்த்து கொடிய குமாரனே விசாரம் நீங்கி முன்போலவே இவ்விருவரோடுசென்று அரசனுடைய தண்டனை செய்யப்படுவாயானால் நீ செய்த பாவம் கண்டிக்கப்படும் அதன்பின்னர் நீ என்னிடத்தில் சேர்ந்துவிடுதல் நியாயமாகுமென்றனன். எ-று. (உ௦)

அதுவரை யுனைநான்சேரே னகறியென் றகற்றிவிட்டான்
கதுமென நடுநிற்போர்கள் காதலனாதியாய
முதுநசை யாவரேனு முனிவொடு வெறுப்பதல்லாற்
பொதுநலந் தவிர்வார்கொல்லோ பொய்மையாம் பற்றுமேவி.

(இ-ள்.) இராஜதண்டனை யாகுமளவும் உன்னையான் சேர்க்கேன் அப்பாற் போய்விடென்று நீக்கிவிட்டனன் நடுநிலையில் நிற்போர்கள் புத்திரன்முதலாகிய அதிக இஷ்டத்தையுடையவர்கள் யாவராயினும் (தீமையைக்கண்டால்) கோபத்தோடு விரைவில் வெறுத்துவிடுவார்களேயல்லாமல் அசத்தியமாகிய பந்தத்துக்குடன்பட்டு நீதியாகிய பிரயோசனத்தைத் தவிர்வார்களோ. எ-று, (உக)

காசிமா நகரில்வாழ்வோர் காதலனாதி யாகப்
பேசியயாவரேனும் பெட்டனர் பாவமென்னிற்
சீசியென் றகற்றுநிற்பர் சேர்தினமக்கும் பாவ
வாசிவந்திடுமென்றஞ்சி மனமுதன் மூன்றுமொத்தே.

(இ-ள்.) மகத்தாகிய காசித்தலத்தில் வாழ்கின்றவர்கள் புத்திரன்முதலாகச் சொல்லுகின்ற (விருப்பமுடையோர்) யாவர்களானாலும் பாவத்தை விரும்பிச் செய்வார்களானால் இவர்களைச் சேர்ந்தால் நமக்கும் பாவம் வந்து சம்பவிக்குமென்று பயந்து மனம் வாக்குக் காயங்களென்னும் திரிகரணமுமொத்துச் சீசீ என்று நிந்தித்து அப்பாவிகளை நீக்கிவிடுவார்களென்று (பார்வதியே யறிவாயாக,) எ-று. (உஉ)

றன்றவ னொழித்தபின்ன ரிருவரு மவனைப்பற்றித்
தோன்றரு மிடமொன் றாய்ந்து துனையவவ் விடத்திலேகிச்
சான்றவெம் பாகந்தாராய் தண்டிக்கப் படுதியென்று
மான்றநெஞ் சவனைக்கட்டி யடித்தனா மயங்கிவீழ்ந்தான்.

(இ-ள்.) கூசுமாண்டன் நீக்கிவிட்டபின்பு வந்த விருவரும் மண்டபனைப் பிடித்து ஒருவரும் வாராத இடமொன்றை ஆலோசித்து அவ்விடத்திற்கு விரைவாக அவனைக்கொண்டுபோய் எங்களுக்குச்சேரவேண்டிய கிரமமான பங்கைக் கொடாதிருத்தலால் (எங்களால்) இப்போது தண்டிக்கப்படுவாயென்று பாபத்திலழுந்திய மனமுடைய அவனைக் கட்டியடித்தார்கள். (அவ்வடிபொறுக்கமாட்டாமல்) மயங்கி வீழ்ந்தனன். எ-று. (உரு)

வீழ்ந்தவ னுய்யானென்றே யிருவருமிதித்துப் போர்க்கி
யாழ்ந்தபே ரன்பாபோற்று மண்ணல்சித் தேசம்புக்குத்
* தாழ்ந்தன ரிருந்தர்பின்பு தரணிவங் துதிக்கும்போது
சூழ்ந்தசோ கத்தான்றன்மை தேருவான் றுனையவந்தார்.

(இ-ள்.) மயங்கி வீழ்ந்த மண்டபன் பிழைக்கமாட்டானென்று அவ்விருவர்களு மவனைமிதித்துக் கிடத்திவிட்டு நிறைந்த மெய்யன்பர்களால் வணங்கத்தக்க சிவபிரான் வீற்றிருக்கின்ற சித்தேசமென்னும் ஆலயத்தில் இரவில் தங்கியிருந்து மறுநாள் சூரியவுதயகாலத்தில் நீங்காத மூர்ச்சையையுடைய மண்டபனியல்பைத்தெரியும்பொருட்டு விரைவாக வந்தார்கள். எ-று. (உச)

இருவரும் வருதல்கண்டோ னின்னமு மடிப்பாரென்று
மருவரு மூர்ச்சைநீங்கி வல்விரைந் தெழுந்தோட்டந்து
பொருவருங் காசிமேன்மை புந்தியிற் றெளிந்தாராகித்
துருவரு மைங்குரோசஞ் சூழ்பவரொடும்போய்ச் சேர்ந்தான்.

(இ-ள்.) நேற்று அடித்துக்கிடத்திய இருவரும் வருவதைக்கண்ட மண்டபன் இன்னமும் அடிப்பார்களென்று எண்ணி பொறுத்தற்கரிய மூர்ச்சை நீங்கி விரைவாகவெழுந்து ஓடிப்போய், ஒப்பில்லாத காசித்தல மகிமையைப் புத்தியிற் றெளிந்தவரும் தேடுதற்கரிய பஞ்சக்குரோசத்தைப் பிரதக்ஷணஞ்செய்பவருமாகிய உத்தமர்களோடு சேர்ந்தனன். எ-று. (உரு)

அவரொடு மைங்குரோச மாகியவிலிங்கஞ் சூழ்ந்தா
னிவர்தரு பாவமுற்று மிரிதரச் சுத்தனாகிக்
கவர்படு மனமில்லானாய்க் கருத்தம கேச்சுரத்துத்
தவர்பலர் குழுமுந்தெய்வச் சாதிமண்டபமொன்றுற்றான்.

(இ-ள்.) அவர்களோடும் பஞ்சக்குரோசத்திலுள்ள சிவலிங்கங்களைப் பிரதக்ஷணஞ் செய்தான் அதிகரித்தபாவங்கள் முழுமையும் நீங்கப் பரிசுத்தத்தை

* தாழ்தல = தங்குதல்.

யடைந்து பேதிக்கின்ற மனமில்லாதவனாகி கர்த்தமகேச்சுர மென்னும் ஆலயத்தில் பெரியோர்கள் பலருங்கூடுகின்ற ஒரு தெய்வச்சாதி மண்டபத்தைச் சேர்ந்தனன். எ-று. (உசு)

அன்னமண் டபத்தையுற்ரோ னன்றிராத் துயிலானாகி
முன்னமாற் றியபொல்லாங்கு முழுமையு நினைந்துதேம்பி
யென்னநாஞ் செய்வோமென்றே * யினைந்தரகரவென்றார்த்துத்
† தன்னமும வேறொர்பற்றுச் சார்கிலா னெழுந்துநின்று.

(இ-ள்.) அத்தேவ கூட்டமண்டபத்தையடைந்தவன், அன்றிரவு நித்திரை செய்யாதவனாகி முன்னேதான் செய்தபாவங்கள் எல்லாவற்றையுங் கருதி, துயரப்பட்டு நாம் யாது செய்வோமென்று இரங்கி ஹரஹரவென்று ஆரவாரித்து அற்பகாலமும் வேறொன்றை நினையாதவனாகி, எழுந்து நின்றுகொண்டு.எ-று.()

சிவமூல கனைத்துமேவத் திகழுமோரிலிங்க நோக்கிச்
சிவசிவ தேவதேவ சிவசிவ வாமதேவ
சிவசிவ சிவமாதேவ சிவவரகரபுராண
சிவசிவ வெனநடித்தான் செறிந்தவ ருறைவார்கண்டார்.

(இ-ள்.) எல்லா உலகங்களுக்கும் மங்களமுண்டாவதாக விளங்குகின்ற ஓர் சிவலிங்கவடிவத்தைப்பார்த்து சிவசிவா தேவதேவனே! சர்வ மங்களத்துக்கும் மங்களமானவனே! வாமதேவனே! சிவசிவமஹாதேவனே! பழமையானோனே! அரஹரசிவனே என்று மண்டபன் கூத்தாடினான். அவவிடத்து நெருங்கி வசிப்பவர்கள் பார்த்தார்கள். எ-று. (உஅ)

மறையுணர் கூசுமாண்டன் மைந்தன்மண் டபனென்பேரா
னிறைபர சிவநேயத்தா னிகழுமைங் குரோசஞ்சூழ்ந்தான்
முறையிவ ணடைந்துபத்தி முதிர்ச்சியி னடியாநின்றான்
குறைவிலன் யாதுமென்று கூறியுண் மகிழ்ச்சியுற்றார்.

(இ-ள்.) வேதங்களை யுணர்ந்த கூசுமாண்ட முனிவருடைய குமாரன்,மண்டபனென்னும் பெயரையுடையவன், மேலாக நிறைந்த சிவபத்தி யுள்ளவன். விளக்கமுற்ற பஞ்சக்குரோசத்தை விதிவழியாகப் பிரதக்ஷணஞ்செய்தனன், இவ்விடம்வந்து சிவநேய முதிர்ச்சியினால் கூத்தாடுகின்றனன், யாதுகுறையுமில்லாதவனென்று அவ்விடத்திருக்கின்றவர்கள் சொல்லி உள்ளத்தில் மகிழ்ச்சிகொண்டார்கள். எ-று. (உகூ)

அன்னவர் மகிழ்தல்கண்டா னந்தணர் குலத்திற்றோன்றி
முன்னருங் கொடியபாவ முழுமையுஞ் செய்தேனைய
வென்னயா னினிச்செய்வேனென் றெழுந்துசண் டிகைமாதேவி
நன்னரா லயத்துட்புக்கான் பூசனை நயந்துசெய்தான்.

---

* இனைதல் = இரங்குதல். † தன்னம் = சிறுமை.

(இ-ள்.) அப்பெரியோர்கள் மகிழ்ந்து கூறியதைக்கேட்ட மண்டபன் (அவர்களைப்பார்த்து) ஐயரே நான் பிராமணகுலத்திற் பிறந்து நினைத்தற்கரிய கொடும் பாதகங்கள் எல்லாவற்றையுஞ்செய்தேன். இனி யாது செய்யப்போ கின்றேனென்று (சொல்லி) சண்டிகை மாதேவியினுடைய சிறந்த ஆலயத்துக் குள்ளே புகுந்து களிப்புடன் பூசை செய்தனன். எ-று. (௩௰)

துதியொடு நிருத்தமாங்குந் தோன்றிடச் செய்துமேவி
மதிமிக மூன்றுநாளின் மார்க்கத்துஞ் சிவநாமஞ்செய்
ததிவிரை வோடுமேவி யகனக ரத்தானத்துத்
திதிகொளு மொருமருப்புத் தெகளிமால் களிற்றைப் போற்றி.

(இ-ள்.) அச்சண்டிகை மாதேவி ஆலயத்தில் தோத்திரஞ்செய்து ஆனந் தக்கூத்தாடி புத்தி அதிகரித்தலால் மூன்றுநாளில் வருகிற, மார்க்கங்களெல்லாஞ் சிவநாமத்தை உச்சரித்துக்கொண்டு அதிசீக்கிரமாக விரும்பிவந்து மனங்களிந்து ருகுகின்ற அந்தமார்க்கத்தில் (பத்திசெய்வோரை) இரக்ஷிப்பவரும் ஒற்றைத்தந் தத்தையுடையவருமாகிய தெகளி விநாயகரை வணங்கி. எ-று. (௩௧)

வலியயா ரேனும்யாது கொடுப்பினும் வாங்கானுகி
மெலியவு மாகாரத்து விருப்பமு மில்லானுகி
மலிபுகழ்க் காசிகாசி யென்றுவா யுரைப்பச்சென்று
பொலியிரா மேசம்புக்கி ராமேசர் பொற்றுள்போற்றி.

(இ-ள்.) யாவராயினும் ஒருபொருளை வலியக்கொடுத்தாலும் வாங்காத வனுகி சரீரம் இளைத்தும் ஆகாரத்தில் இஷ்டமில்லாதவனுகி பெரும்புகழையு டைய காசிகாசி என்கிற திருநாமத்தை வாயினுற் சொல்லிக்கொண்டுபோய் விளக்கத்தையுடைய இராமேசமென்னும் ஆலயத்தில் புகுந்து இராமேசருடைய பொன்போன்ற திருவடிகளை வணங்கி. எ-று. (௩௨)

சோமநா தரையும்போற்றித் துதிமிகு பத்தியோடு
காமரு சிறப்புவாய்ந்த கபிலதா ரையின்கண்மூழ்கி
மாமரு தெய்வநாறும் வருணசங் கமத்துமூழ்கிப்
பூமலி விசுவநாதன் பொன்னடி வணங்கிப்போற்றி.

(இ-ள்.) சோமநாத சுவாமியை வணங்கிக்கொண்டு மிகுந்த பத்தியுடன் தோத்திரஞ் செய்தவனுகி (அதன் பின்பு) அழகிய சிறப்புள்ள கபிலதாரையில் ஸ்நானஞ்செயது பின்பு பெருமையுள்ள தெய்வமணம் வீசுகின்ற வருணசங்கமத் தில் ஸ்நானஞ்செய்து பொலிவுநிறைந்த விசுவநாதருடைய பொன்போன்றதிரு வடிகளை வணங்கித்துதித்து. எ-று. (௩௩)

முத்திமண் டபத்துமேவி முன்னியங் கமர்வோர்தம்மைப்
பத்தியின் வணங்கித்தான்செய் பாதக மெடுத்துக்கூறிச்
சித்திபெற் றவர்காளிந்தத் தீங்கெலாந் தீரத்தீர்த்துச்
சுத்திசெய் திடுவீரென்று சொற்றிட வவர்சொல்வாரால்.

(இ-ள்.) பின்பு முத்திமண்டபத்தை யடைந்து அங்குள்ள பெரியோர்களைத் தியானித்து பத்தியினால் வணங்கித் தான்செய்த பாதகங்களை யெடுத்துரைத்து சிவானுபவ சித்திபெற்ற பெரியோர்களே என்னுடைய தீமைகள் யாவும் நீங்கும்படி யொழித்து பரிசுத்தஞ்செய்தருளுவீர்களென்று பிரார்த்திக்க அப்பெரியோர்கள் கூறுகின்றார்கள். எ-று. (௩௪)

கொடியபா தகமும்பஞ்சக் குரோசஞ்சூழ் தலினான்மாயு
நெடியநீ யதுவுஞ்சூழ்ந்தாய் நிறைசிவ நாமம்வாயிற்
குடியவா யிருப்பமேவுங் கொள்கையை யாதலானின்
கடியபா தகங்களெல்லாங் கழிந்தன சுத்தனானாய்.

(இ-ள்.) மகாபாதகங்கள் யாவும் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணம் செய்தலினால் ஒழியும் உயர்வுள்ள நீ அந்தப் பிரதக்ஷணமுஞ் செய்தனை. அருள் நிறைந்த சிவநாமங்களைச் சதாகாலமும் வாயினால் உச்சரித்துக்கொண்டிருக்குந் தன்மையை யடைந்தனை. ஆனபடியால் உனது பெரும்பாதகங்கள் யாவும் நீங்கிப் பரிசுத்தமடைந்தனை. எ-று. (௩௫)

இனியொரு கழுவாய்கூறற் கிதற்குமே லொன்றுமில்லைப்
புனிதநீ போதியென்னப் புந்தியுண் மகிழ்ந்துதந்தை
நனியவாம் படிசொற்றென்னை நலத்தகச் சேர்மினென்றான்
கனிவின்மற் றவருன்றந்தை யிவண்வரக் கரைதியென்றார்.

(இ-ள்.) இதற்குமேல் பாவத்தை யொழிக்கும் வழியை எடுத்துரைப்பதற்கு வேறேயொன்றுமில்லையாது. பரிசுத்தத்தை யடைந்த நீ போகலாமென்று அவர்கள்சொல்ல, மண்டபன் மனதிற்களித்து என்பிதாவாகிய கூசுமாண்டமுனிவர் என்னை விரும்பும்படிசொல்லி நன்மையாக அவர் சேர்த்துக்கொள்ளச் செய்வீர்களென்று கேட்டுக்கொள்ள அப்பெரியோர் கனிவோடு உன் பிதாவை இவ்விடத்துக்கு வரச்சொல்வாயென்றனர். எ-று (௩௬)

என்றலுந் தொழுதுபோற்றி யிலங்குவெண் ணீறுபூசிக்
கன்றலி லுருத்திராக்கக் கலம்பலவெங்கும்பூண்டு
பொன்றலில் சிவநாமத்தைப் புகழ்பெற வுச்சரித்து
நின்றவ னவ்வாறேகி நெடியதன் மனைவாய்ப்புக்கான்.

(இ-ள்.) இப்படியென்று சொன்ன பெரியோர்களை வணங்கித் துதித்து சரீரத்தில் விளங்க வெண்ணீறுதரித்து மனோவருத்தத்தை யொழிக்கின்ற உருத்திராக்ஷமாலையைப் பலவாக விதிப்படி யணிந்து மரணத்தை யொழிக்கின்ற சிவநாமத்தைப் புகழ்பெறத்தக்கதாக உச்சரித்து நின்ற மண்டபன் அம்முத்திமண்டபத்திலிருந்து சென்று பெரிய தனது மாளிகை வாயலில் நுழைந்தான். எ-று. (௩௭)

வாயிடைப் புக்கபோது வருந்தியீன் றெடுத்தவன்னை
யாயிடைக் கண்டுகொண்க னடிபணிந் துன்துமைந்தன்

சேயிடைத் திரிந்துபாவந் தீர்ந்தனன் போலுமுற்று
னீயிடைத் தடைசெய்யாம னேர்ந்துகண் டிடுகவென்றாள்.

(இ-ள்.) வாசப்படியில் நுழைந்தபோது வருத்தமுற்றுப் பெற்றுவளர்த்த தாயார்பார்த்து நாயகனாகிய கூசுமாண்டமுனிவர் திருவடிகளில் வணங்கி உம்முடைய குமாரன் தூரமான இடங்களில் யாத்திரைசெய்து பாவமொழிந்து வந்தனன் தேவரீர் தாமதமில்லாமற்போய்ப் பார்த்தருள்வீரென்றனள். எ-று. (௩௮)

என்றலும் வெளிவந்தன்று னெழிற்சிவ சின்னத்தோடு
நின்றதும் பிறவுநோக்கி நெஞ்சஞ்சற் றிளகிநீயிங்
கொன்றிய தென்னையென்றான் முத்திமண் டபத்தினுற்று
ருன்றனை யழைத்தியென்ன வுற்றனனடியே னென்றான்.

(இ-ள்.) இப்படியென்று மண்டபனுடைய தாயார்சொல்ல, பிதா வெளியில்வந்து குமாரன் அழகுவாய்ந்த சிவசின்னங்களோடு நின்றிருப்பதும் மற்றக்குறிகளையும் பார்த்து மனது சற்றே இரங்கி நீ யிங்கேவந்தகாரணம் யாதென்றுகேட்க முத்திமண்டபத்தில் உள்ள பெரியோர்கள் உம்மை அழைத்துவரும்படி சொன்னமையால் அடியேன் வந்தேனென்றான். எ-று. (௩௯)

அன்னது கேட்டலோடு மருட்குண மனைவியோடு
முன்னருஞ் சிறப்புவாய்ந்த முத்திமண் டபத்தையுற்றுப்
பன்னரு மங்குமேயோ ரெவரையும் பணிந்துநின்று
னன்னல முறவிருத்தி யென்றலு நயந்திருந்தான்.

(இ-ள்.) மண்டபன்சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டவளவில் இரங்குகின்ற குணமுள்ள பத்தினியோடு கூசுமாண்டமுனிவன் நினைத்தற்கரிய சிறப்புள்ள முத்திமண்டபத்தைச் சேர்ந்து சொல்லுக்கடங்கா மகிமையுள்ள அம்மண்டபத்தில் இருக்கின்ற பெரியோர்களெல்லோரையும் வணங்கி நின்றபோது அப்பெரியோர் இருமென்றுசொல்ல விருப்புட னிருந்தனன். எ-று. (௪0)

இருத்தலு மவனைநோக்கி யெண்ணிலாப் பெரியோரியாருந்
திருத்தகு நினதுமைந்தன் செய்தபாதகங்க டீர்ந்தான்
பொருத்தம் துறவழைத்துப் போய்நின தில்லஞ்சேர்தி
வருத்தமொன் றேனுங்கொள்ளே லென்றலு மறையோன் சொல்வான்.

(இ-ள்.) அம்மண்டபத்திலிருந்த கூசுமாண்டமுனிவனை அளவில்லாத பெரியோர் யாவரும்பார்த்துச் சிறந்த உம்முடைய குமாரன், செய்த பாதகங்கள் ஒழிந்தனன். அவனை யன்புடன் அழைத்துக்கொண்டுபோய் உமது வீட்டில் சேர்த்துக்கொள்ளும் யாதொரு களங்கமு மெண்ணவேண்டாமென்றுசொன்னபோது அம்முனிவன் சொல்லுகின்றனன். எ-று. (௪௧)

அளவில்பா தகங்கள்செய்தா னறிவிலாவெனதுமைந்த
னளவிலா யுகமத்தீங்கிற் காற்றிடு கழுவாயாக

வளவிலர் நரகந்தோறு மழுந்தினுந் தீர்தராதா
லளவிலாப் பெரியீரெவ்வா றகன்றதுமொழிமி னென்றான்.

(இ-ள்.) அறிவில்லாத எனது குமாரன் எண்ணிக்கையில்லாத பெரும்பாதகங்களைச்செய்தனன் அப்பாவங்களுக்குத்தகும்படி செய்கின்ற பிராயச்சித்தமாக அனந்த யுகங்கள் அளவுபடாத கொடிய நரகங்கள் எல்லாவற்றிலும் அழுந்திக் கிடந்தாலும் நீங்காது அப்படியிருக்க எவ்வாறு அப்பாவம் ஒழிந்தது அளவில்லாத மகிமையுள்ள பெரியோர்களே சொல்லியருளவேண்டுமென்றனன். எ-று.()

என்றலுங் காசியெல்லை யென்னுமைங் குரோசஞ் சூழ்ந்தான்
பொன்றலில் பெருமானுமம் பொய்யற உச்சரிப்பா
னென்றவெண் ணீறுபூசிக் கண்மணி யுவந்துபூண்டான்
கொன்றனன் முன்னஞ்செய்த கொடியபாதக மனைத்தும்.

(இ-ள்.) இப்படியாகச் சொன்னபோது (உம்முடைய குமாரன்) காசிப்பதியிலுள்ள பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்து நித்தியராகிய விசுவநாதருடைய திருநாமங்களைக் களங்க நீங்கும் விதம் அன்புடனுச்சரித்துச் சரீரம் நிறைய விபூதிதரித்து ருத்திராக்ஷமாலிகையைப் பிரியத்தோடு பூண்டிருப்பதால் முன்செய்த கொடுமையுள்ள எல்லாப் பாவங்களையும் ஒழித்துவிட்டனன். எ-று. (௪௩)

அன்றியு முரைப்பதொன்றுண் டரகர முழக்கஞ்செய்து
வென்றிசெ யைங்குரோசம் விதிப்படி வலஞ்செய்வோருக்
கொன்றிய மறமுமுண்டோ வுரைத்ததிற் கழுவாயுண்டோ
கன்றிய வையங்கொள்ளேல் காதையொன் றுரைப்பாங்கேட்டி.

(இ-ள்.) அதுவல்லாமலும் உமக்குத் தெரிவிக்கத்தக்கது ஒன்றிருக்கின்றது (யாதெனில்) ஹரஹரவென்கிற தொனியை இடைவிடாதெழுப்பி பாவங்களை வெல்லத்தக்க பஞ்சக்குரோசத்தை விதிவழியாக வலம் வரத்தக்கவர்களுக்கு அப்பாவங்களுண்டாகுமோ சொல்லிய இதைப்பார்க்கிலும் வேறே பிராயச்சித்தமொன்றிருக்கின்றதோ வருத்துகின்ற சந்தேகத்தை நீர் கொள்ளவேண்டாம். (அநுபவமான) ஒரு கதையைச் சொல்லுகின்றோம் கேட்பீராக. எ-று. (௪௪)

முந்தியகிரேதந்தன்னின் முனிவில்சாண் டில்லியப்பே
ரந்தண னொருவனுள்ளா னறிவினு லையநீத்தான்
சந்தமா ரனையனுக்கோர் தனையைவந் துதித்தாளந்தக்
கந்தமார் குழல்விசாலக் கண்ணியென் றொருபேர் பெற்றாள்.

(இ-ள்.) முதலாகிய கிரேதாயுகத்தில் நல்லோரால் விரும்பத்தக்க சாண்டில்லியனென்னும் பெயருள்ள ஒரு பிராமணனிருந்தான் தனதறிவினால் சந்தேக விபரீதங்களொழிந்தவன் அழகுவாய்ந்த அப்பிராமணனுக்கு ஓர் பெண் பிறந்தனள் வாசனை தங்கிய அளகபாரத்தையுடைய அப்பெண் விசாலாட்சியென்கிற பெயர்பெற்றனள். எ-று. (௪௫)

அன்ன புத்திரியையன்று னவந்திமா நகர்வாழ்தீமை
துன்னருஞ் சுகுணனுய சுமந்தனென் பவனுக்கீந்தான்
பன்னரு மனையான்றன்னூர் படர்ந்தனன் படர்ந்தபின்றை
யென்னருங் காமந்தீர விருந்தனள் காசியந்நாள்.

(இ-ள்.) அந்தப்புத்திரியைப் பிதாவானவன் அவந்திமாநகரத்தில் வாழ்கின்ற தீமையில்லாத சுகுணவானுகிய சுமந்தனென்னும் பிராமணனுக்கு விவாகஞ் செய்து கொடுத்தனன். சொல்லுவதற்கரிய (பெருமையுள்ள) சுமந்தன் காசியை விட்டு தனது நகரத்திற்குப்போனான். போனபின்பு அரிய விரகாக்கினி சுடும்படி அப்பிராமணமாது காசியிலிருந்தனள். எ-று. (சசு)

காசியி லிருந்தமாது காமபா ணத்தாநொந்து
பேசிய மைந்தரென்பார் பல்ரையும் பெட்டுக்கூடி
வீசிய நாணத்தோடு மிகுபொரு ளுநகவர்ந்து
மாசியல் குணத்தினளாய் வைகினள் வைகுநாளில்.

(இ-ள்.) காசித்தலத்திலிருந்த அப்பெண் காமபாணத்தால் வருந்தி ஜாதிபேதத்தை யொழித்து காமுகர்கள் பலரையும் விரும்பிப் புணர்ந்து நாணத்தை யறவொழித்து பெரும்பொருள் பறித்துக் களங்கமுள்ள குணத்தையுடையவளாய் வசித்தனள் அவ்வாறிருக்குநாளில். எ-று. (சஎ)

மயன்முதிர்ந் திவட்குநல்கி வறியரே யானரியாரு
மயனக ரத்துளாரு மவாயிவ ளழகுகேட்டுப்
பயனுற வடைந்துவேண்டும பலவுநன் குதவிக்கூடிச்
செயன்மகிழ்ந் திருந்தாரிந்தத் தீமையிற் சிறந்தாளன்னாள்.

(இ-ள்.) காமுகர் யாரும் அதிக மயக்கங்கொண்டு இப்பிராமணமாதுக்குக் கொடுத்துக் கூடி வறியரானார்கள். சமீபநகரத்திலிருப்பவர்களும் இவளழகைக் கேள்வியுற்று விரும்பி காமசுகத்தைப் பெறும்படி யிவ்விடம்வந்து வேண்டிய பலவற்றையுங் கொடுத்துச் சேர்ந்து இவளுடைய செய்கையைக் களித்திருந்தார்கள். இவ்வண்ணமான கொடுமையில் அப்பிராமணமாது சிறந்தாள். எ-று. ()

தெள்ளிய மறையோர்மார்க்க சிரமதி யைங்குரோச
மொள்ளிதிற் சூழப்புக்கா ருதனினும் விருப்புளாள்போற்
கள்ளியு மனையார்மேனி கலத்தலுட் கொண்டுசென்றாள்
வள்ளிய துர்க்காகுண்டம் வதிந்தனர் மறையோரியாரும்.

(இ-ள்.) தெளிவுள்ள பிராமணர்கள் மார்கழிமாதத்தில் பஞ்சக்குரோசப் பிரதட்சணத்தை யறிவு விளங்கும்பொருட்டுச் செய்ய எத்தனித்தார்கள். அதனினும் விருப்பமுடையாள் போன்று அப்பிராமணருடன் கூடவேண்டுமென்னும் எண்ணத்தை மனதிற்கொண்டு அவ்வஞ்சகியும் யாத்திரைபோனாள். வளப்பமமைந்த துர்க்காகுண்டத்தில் அப்பிராமணர்கள் யாவருந் தங்கியிருந்தார்கள். எ-று. (சஅ)

அனையஞரும் பிரியாள்வைகி யவர்மனம் வசமாச்செய்து
நினைவரும் பொன்பூணுதி நினைந்தவா கவர்ந்துகொண்டு
துனையமற் றிரண்டாநாளிற் றொக்கவம் மறையோரோடுங்
கனைகட லுலகமேத்துங் கருத்தம கேசம்போற்றி.

(இ-ள்.) அவ்வஞ்சகியும் பிரியாம லவர்களுடனிருந்து சிலர் மனத்தை வசஞ்செய்து நினைத்தற்கரிய பொருள்களையும் ஆபரணுதி பலவற்றையும் நினைந்தவாறு கிரகித்துக்கொண்டு (அவருடன்கூடி) இரண்டாநாளில் சூழ்ந்த பிராமணருடன் ஒலிக்கின்ற கடலாற்சூழப்பட்ட உலகத்தாராற் றுதிக்கத்தக்க கர்த்தமகேசமென்னு மாலயத்தை விரைவாகவந்து வணங்கி. எ-று. (ருo)

திகழ்தரு மூன்றுநாளிற் றெகளியைச் சேவைசெய்து
புகழ்மிக நாலாநாளிற் பொலியிரா மேசம்போற்றி
யகழ்வினை வருணநான மவரொடுஞ் செய்துபின்ன
ரிகழ்தலில் காசிமாச்சீ ரிசைத்திடு மவர்பாற்கேட்டாள்.

(இ-ள்.) மூன்றுவது தினத்தில் தெகளி விநயகரை விளக்கமாகச்சேவித்து நாலாவது தினத்தில் மிக்கபுகழோடு விளங்குகின்ற இராமேசமென்னு மாலயத்திலிருக்கின்ற இராமேசரைவணங்கி அங்குள்ளதும் பாவத்தையொழிப்பதுமாகிய தீர்த்தத்தில் முழுக்காடுதலை அவர்களோடுசெய்து பின்னர் புகழுள்ள காசித்தலத்தின் மகிமையை விரித்துரைக்கும் பெரியோர்களிடத்துத் தானுங் கேள்வியுற்றனள். எ-று. (ருக)

வளமலி காசிவைப்பின் மான்மியங் கேட்கும்போது
கிளர்தரு காசிமேவிப் பாதகங் கெழுமச்செய்வோ
ரளவறுங் காலங்கால வயிரவ ராணையாற்றி
னுளபல துய்ரத்தாழ்வ ருண்மையே யென்றல்கேட்டாள்.

(இ-ள்.) வளப்பம் நிறைந்த காசித்தலத்தின் மகிமையை முறையாகக் கேட்கும்போது விளக்கமுற்ற காசித்தலத்திலிருந்து தீவினைகளைச் செய்பவர்கள் காலவைரவருடைய தண்டனைக்குட்பட்டு அளவில்லாதகாலம் பலவாயுள்ள துயரங்களில் சத்தியமாக மூழ்குவார்களென்பதையுங் கேட்டனள். எ-று. (ருஉ)

கேட்டலும் வெருவியந்தோ வென்செய்தேன் கெட்டேனேயென்
றோட்டரும் வருத்தமேவி யுற்றநல் லறிவுவாய்ப்புற்
றீட்டிய பொருள்களெல்லாம் யாவருங் கொளக்கொடுத்தாள்
வேட்டதன் றொழிலைநீத்து விப்பிரர் தமைவினவும்.

(இ-ள்.) இவ்வாறு கேட்டபோது மிகப்பயந்து ஐயோ என்னகாரியஞ் செய்தேன் கெட்டுவிட்டேனேயென்று நீங்காக்கிலேசத்தை யடைந்து புண்ணியபாவங்களைப் பகுக்கும் நல்லறிவுதோன்றி பாவவழியில் தான் சம்பாதித்த பொருள்கள் பலவற்றையும் நல்லோர் யாவருங் கொள்ளும்படி கொடுத்து

இதற்கு முன் விரும்பிய கொடுந்தொழிலைக் கைவிட்டு அப்புராணபடனஞ்செய்யும் பெரியோராகிய பிராமணரைப்பார்த்து வினவுகின்றனள். எ-று. (௫௩)

ஐயரே யடியேன்செய்த பாவத்துக் களவின்றாகும்
வெய்யவப் பாவம்போக்கும் விதமெனக் கருண்மினென்ன
மையலான் முன்னஞ்செய்த மறமெலா மொழிந்துபோய
தெய்யநீ யைங்குரோசஞ் சூழ்தலா லெம்மோடென்றார்.

(இ-ள்.) சுவாமிகளே எளியேன்செய்த தீவினைகளுக் களவுகிடையாது, கொடிய அப்பாதகங்களை ஒழிக்கத்தகும் வழியை அடியேனுக் கருளவேண்டுமென்று பிரார்த்திக்க பொருந்தும் விதமாக பஞ்சக்குரோசப் பிரதக்ஷணத்தை நீ எங்களோடுசெய்தலால் இதற்கு முன் மயக்கங்கொண்டு செய்தகொடும்பாவங்கள் யாவும் ஒழிந்தனவென்றனர். எ-று. (௫௪)

மேலுமிப் பாவச்செய்கை விழைதரல் வேண்டாவென்று
கோலுமம் மறையோர்கூறக் குணமெனக்கொடு பணிந்துபோற்றிச்
சாலுமற் றைந்தாநாளிற் கபிலதா ரையின்கண்வந்து
மாலும்வெம் பாவமெல்லா மாற்றினாள் விசாலக்கண்ணி.

(இ-ள்.) இனிமேல் இப்பாவத்தொழில்களை அணுவளவும் விரும்பவேண்டாமென்று கூடியிருந்த அவ்வேதியர் கூற குணமென்றுட்கொண்டு அவர்களை வணங்கித் துதித்து ஐந்தாவது தினத்தில் கபிலதாரைக்குவந்து ஸ்நாநஞ்செய்து மயக்கத்தாற்செய்த அக்கொடும்பாவங்களெல்லாவற்றையும் விசாலாக்ஷி என்னும் பிராமணமாது ஒழித்துவிட்டனள். எ-று. (௫௫)

மற்றுமந் நின்றாறுநாள் வருணசங் கமத்தில்வந்து
முற்றவங் கியற்றத்தக்க பூசையாதிகண் முடித்துக்
கற்றவர் புகழுமுத்தி மண்டபங் கலந்துபற்றொன்
றற்றவ ருளத்துமேய வகிலநா யகனைப்போற்றி.

(இ-ள்.) அக்கபிலதாரையிலிருந்து ஆறாவதுதினம் வருணசங்கமத்துக்கு வந்து ஸ்நாநஞ்செய்து அவ்விடத்துச் செய்யத்தக்க பூஜையாதிகளெல்லாவற்றையும்முழுவது முடித்து அறிவுடையார் புகழத்தக்க முத்திமண்டபத்திற்கு வந்து அகப்பற்று புறப்பற்றுக்களொழிந்த மெய்யடியாருள்ளத் தெழுந்தருளும் விசுவநாதனை வணங்கி. எ-று. (௫௬)

சுத்திமிக் கடைந்தாளூற்றார் வெறுத்திலர் சூழ்ந்துகொண்டார்
முத்தியு மடைந்தாள்பின்ன ரென்றனரதுபோன்மோக
சித்தியென் மகனுஞ்சுத்தி சேர்ந்தனன் கொல்லோவென்று
பத்திமா முனிவன்கேட்டான் யாவரும் பட்டாங்கென்றார்.

(இ-ள்.) விசாலாக்ஷியென்னும் பிராமணமாது மிகுந்த பரிசுத்தத்தையடைந்தனள். பந்துக்கள் வெறுக்காமல் சூழ்ந்து அங்கீகரித்தனர். பின்பு முத்தியடைந்தனளென்று அப்பெரியோர்கள் கூறக்கேட்டு சிவபக்தியுள்ள கூசு

மாண்டமுனிவன் அதுபோலப் பெருமயக்கமுள்ள எனது குமாரனும் பரிசுத்தத்தை யடைந்தானோவென்று கேட்டனன். பெரியோர்கள் யாவரும், இது உண்மை நூற்றுணிவென்றனர். எ-று. (௫எ)

உண்மையாயினு மன்னோ னுற்றுணக் கொள்ளல்வேண்டேன்
வண்மைசால் பெரியீரென்றான் மற்றவன் வார்த்தைகேட்டுத்
தண்மைசான் முனிவர்முத்தி மண்டபஞ் சார்ந்ததேவ
ரெண்மையே யுண்மைசொல்வா ரிரிக்கநின் னையமென்றார்.

(இ-ள்.) உண்மையானாலும் அம்மண்டபனாகிய வென்குமாரனுடனிருந்து போசனஞ்செய்யமாட்டேன். சததியத்திற் சிறந்த பெரியோர்களேயென்று கூறிய கூசுமாண்டமுனிவன் வார்த்தையைக்கேட்டு சாந்தசீலராகிய அப்பெரியோர்கள் இம்முததிமண்டபத்தில் வீற்றிருக்கின்ற தேவர்கள் உம்முடைய சந்தேகம் நீங்கும்படி சத்தியததை யெளிதாகத் தெரிவிப்பார்களென்றனர். எ-று ()

என்றலு மிரவிதுண்டி யேற்றமார் தண்டபாணி
மன்றவெவ் வரமுநல்கும் வயிரவர் திருமாலேனோ
ரொன்றவங் கொருசார்மேவி யுலகெலா முண்மைதேர்ந்து
கன்றல் செய்துயரநீங்கத் தனித்தனி கழறலுற்றார்.

(இ-ள்.) இவ்வாறாக அம்முத்திமண்டபத்திலிருந்து பெரியோர்கள் சொன்னபோது, எல்லா உலகத்தாரும் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணத்தின் மகிமையறிந்து வருத்துகின்ற துன்பத்தினீங்கி இன்பமுறும்வண்ணம் துண்டிராஜகணபதி, சூரியமூர்த்தி, பெருமைதங்கிய தண்டபாணி, எவ்வித வரங்களையும் பூரணமாகத்தருகின்ற வயிரவக்கடவுள், விஷ்ணுதேவர் முதலாகிய மற்றைத்தேவரும் அம்மண்டபத்தின் வேறுவேறிடங்களிலிருந்து தனித்தனியே சொல்லத் தொடங்கினர். எ-று. (௫௯)

மதித்திடு மைங்குரோசம் வலஞ்செய்யும் வலத்தினானுந்
துதித்திடு காசிமேன்மை சொற்றிடக் கேட்டலானும்
பதித்திடு கொடியபாவம் யாவும்போய்ப் பாறுமென்றான்
றிதித்திடு தொழின்மேற்கொண்ட திகிரியந் தடக்கைச்செம்மல்.

(இ-ள்.) உலகத்தை ரக்ஷிக்கின்றதொழிலை மேற்கொண்டு அழகிய அஸ்தத்திற் சக்கரமேந்திய விஷ்ணுதேவர், அறிவுடையரால் மதிக்கத்தக்க பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்த புண்ணியபலத்தினாலும், துதிக்கத்தக்க காசிமகிமையைச் சொல்லக் கேள்வியுற்றதனாலும், நிலைத்த கொடும்பாதகங்களெல்லா மொழிந்து மண்டபன் பரிசுத்தத்தை யடைந்தனனென்று கூறினர். எ-று. ()

பரசிவ நாமமென்றே பற்பல மறையுங்கூறும்
வரமிகு காசிநாமம் வாயுரை செய்தலானும்
புரகரன் விசுவநாதன் பொங்குசீர் கேட்டலானும்
விரவுபா தகமனைத்தும் வீதரு மென்றான்றுண்டி.

(இ-ள்.) துண்டிராஜகணபதியானவன் பலபல வேதங்களெடுத்துரைக்கின்ற பரசிவநாமமென்று சொல்லத்தக்கதும் பெருவரங்களைக கொடுக்கத்தக்கதுமாயுள்ள காசியென்னும் திருநாமமந்திரத்தை நிரந்தரம் வாயினாற்சொன்னமையாலும் திரிபுராரியாகிய விசுவநாதருடைய பெரும்புகழைக் கேட்டமையாலும் இம்மண்டபன் செய்த கொடும்பாதகங்களெல்லாமொழிந்து சுத்தனானனென்று கூறினன். எ-று. (சுக)

காசியி னிருந்துபாவங் கருதினோர் செய்தோர்யாரு
மாசியல் கும்பியெல்லாம் வதிவர்நம் விசுவநாதன்
பேசிய வைங்குரோசம் பேணுபு சூழ்வாராகிற்
றேசின்மேம் படுவரெல்லாந் தீர்ந்தென்றான் றண்டபாணி.

(இ-ள்.) காசித்தலத்திலிருந்து பாவஞ்செய்ய நினைத்தவர்களும் செய்தவர்களுமாகிய இவர்கள், குரூரமுள்ள கொடிய நரகங்களெல்லாவற்றினும் அழுந்தி வருந்துவராலும் நமது விசுவநாதரால் எடுத்துரைக்கின்ற பஞ்சக்குரோசத்தை விரும்பிப் பிரதக்ஷணஞ் செய்வாரெனின் எல்லாத் தீவினைகளுங் கழிந்து திருவருட் பிரகாசத்தில் மேலாவரென்று தண்டபாணிக் கடவுள் கூறினன். எ-று. (சுஉ)

மன்னிய காசிவைப்பின் வதிந்துபா தகஞ்செய்வோரைப்
பன்னிய கொடியதண்டம பண்ணலென் றன்மையேனுந்
துன்னிய வைங்குரோசஞ் சூழ்நரை யொன்றுஞ்செய்யேன்
மன்னிய வுணர்வீரென்று வயிரவன் விளம்பினனே.

(இ-ள்.) நிலைபெற்ற மகிமையுள்ள காசித்தலத்திலிருந்து பாவங்கள் செய்கின்றவர்களைப் பிரபலமாகக் கூறுகின்ற கொடுந்தண்டனைகளைச் செய்தல் எனதியற்கையாயினும் நிறைந்த மகிமையுள்ள பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்வாரை ஒரு துன்பமுஞ் செய்யேன் நிலைபெற்ற அறிவுடையோரே என்று வயிரவக்கடவுள் கூறினன். எ-று. (சுஙு)

நல்லினஞ் சேர்தல்காசி வலஞ்செய னருகாசிச்சீர்
புல்லிய கேட்டலன்ன பூரணி விசுவநாத
னல்லியங் கமலபாத மன்பொடு போற்றலின்ன
வல்லியல் பாவமெல்லா மாற்றுமென் றன்மார்த்தாண்டன்.

(இ-ள்.) சாதுசங்கசேவைசெய்தல் காசியில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்தல் காசிமான்மிய முழுவதுங் கேட்டல் அன்னபூரணியுடையவும் விசுவநாதருடையவும் அகவிதழ்களையுடைய அழகுவாய்ந்த தாமரைமலரையொத்த பாதங்களில் அன்புடன் வணங்கல் இவைகளைச் செய்யின் கொடும்பாதகங்கள் யாவும் நீங்குமென்று சூரியதேவன் கூறினன். எ-று. (சுச)

தனித்தனி யிவ்வாறோதி மண்டபன் றவாதபாவ
முனித்தலை மையரோயைங் குரோசஞ்சூழ் முயற்சியாதி

யினித்தமற் றெவையுஞ்செய்தா னிரித்தனன் பாவமெல்லா
மனித்தனென் றெண்ணறீது வானவனவன்காணென்றார்.

(இ-ள்.) வேறுவேறு தேவர்களுந் தனித்தனி இவ்வாறு சொல்லி முனிவர்களே இம்மண்டபன் பஞ்சக்குரோசப் பிரதக்ஷிணஞ்செய்தல் முதலிய நன்முயற்சிகள் யாவையுஞ் செய்தனன். ஆதலால் கொடிய கொடும்பாதகங்களை யொழித்தனன். இவனை மனிதனென்றெண்ணுதல் பாவமாகும். தெய்வத்தன்மைவாய்ந்தனனென்று கூறினார். எ-று. (௬௫)

முத்திமண் டபத்துவானோர் மொழிந்தசொற் கேட்டாங்குள்ளார்
சத்திய மென்றுதாழ்ந்தார் தந்தையு மகிழ்ச்சிபூத்துப்
புத்திரன் றனையழைத்துப் போயினன் குரோசச்சூழ்வே
சித்தியென் றுளந்தெளிந்தார் செகதலத் துள்ளாரியாரும்.

(இ-ள்.) முத்திமண்டபத்திலிருக்கின்ற தேவர்கள் சொன்ன வார்த்தையைக்கேட்டு அவ்விடத்திலிருந்தவர்கள் யாவரும் இது உண்மையேயென்று வணங்கினார்கள். பிதாவாகிய கூசுமாண்டமுனிவனும் பிள்ளையாகிய மண்டபனைப் பெருங்களிப்புடன் அழைத்துக்கொண்டுபோனான். உலகத்தாரெல்லோரும் மகாபாதகங்களை நாசஞ்செய்வது பஞ்சக்குரோசப் பிரதக்ஷிணமேயென்று துணிந்தார்கள். எ-று. (௬௬)

மண்டப னம்பொற்பாத மருவியின் புற்றுவாழ்ந்தான்
கொண்டலங் குழலாய்தேர்ந்தாய் கொல்லென வுரைத்தானையன்
பண்டரு மொழியாண்மிக்க மகிழ்ச்சியிற் பரவிப்போற்றி
யெண்டரு கழுவாயுண்மை யிற்றெனத் தெளிந்தேனென்றாள்.

(இ-ள்.) கரியமேகம்போலுங் கூந்தலையுடைய உமையே அம்மண்டபன் நமது அழகிய திருவடியிற்கலந்து முத்திபெற்றனன். இதைத் தெளிந்தனையோவென்று சிவபெருமான் கட்டளையிட சுரமமைந்த மொழிகளையுடைய உமாதேவியார் பேரன்போடு வணங்கித் துதித்து எளிதாகச் செய்யும் பிராயச்சித்தத்தினுண்மை இதுவாகுமென்று தெளிந்தேனென்றனள். எ-று. (௬௭)

## மண்டபன் முத்தியடைந்த அத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம் ௯-க்கு திருவிருத்தம். ௩௬௫.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# பத்தாவது பஞ்சக்குரோசப்பிரதக்ஷண வியல்புரைத்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆலமார்களத் தண்ணலை யடிதொழுதம்மை
கோலமார்தரு காசியைங் குரோசமுஞ் சூழ்தல்
போலவோர்கழு வாயிலையென்றருள் பூத்துச்
சாலவோதினை சூழ்தரு மியல்புஞ்சாற் றென்றாள்.

(இ-ள்.) காளகண்டத்தையுடைய மஹாதேவர் பாதங்களில் உமாதேவியார் வணங்கி அழகு நிறைந்த காசித்தலத்தில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ் செய்வதற்குச் சமானமான பிராயச்சித்தம் வேறே யில்லையென்று திருவருள் சுரந்து விபரமாகத் திருவாய்மலர்ந்தருளினீர் பிரதக்ஷணஞ் செய்யவேண்டிய முறையையுங் கட்டளையிடுமென்று பிரார்த்தித்தனர். எ-று. (க)

என்றபோதினி லெம்பிரான்முறுவலித் திமயக்
குன்றமாமக ளேகுறிக்கொண்டுநீ வினவ
னன்றவாமுல கிற்குபகாரமா நவில்வா
மென்றுகூறுத லுற்றனனெம்மையா ளுடையான்.

(இ-ள்.) இப்படியென்று கேட்ட காலத்தில் எம தாண்டவராகிய மகாதேவர் புன்னகைசெய்து இமாசலராஜகுமாரியே நீ லக்ஷியம் வைத்துக்கொண்டு வினவுதல் நன்மையாகும் உலோகோபகாரமாகத் தெரிவிப்போமென்று சொல்லி என்னை (அநுதியே) அடிமையாகவுடைய சிவபரஞ்சோதி திருவாய்மலரத் தொடங்கினர். எ-று. (௨)

பதவெனப்படு மெமக்கினிதாகிய பதியாய்க்
கதியளித்திடுங் காசியைங் குரோசமுஞ் சூழு
மதியுரைத்திடி லைப்பசிகார்த்திகை வயக்கம்
பொதியுமார்கழி யாய்விம்மூன்றுமே பொருந்தும்.

(இ-ள்.) பதிப்பொருளென்று வேதங்களாலுரைக்கத்தக்க நமக்கு இன்பமயமாகிய தலமாகவும் மோக்ஷத்தைக் கொடுப்பதாகவுமுள்ள காசிப்பதியில் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணம் செய்கின்ற மாதங்களைச் சொல்லுமிடத்து விளக்கமமைந்த ஐப்பசி, கார்த்திகை, மார்கழி ஆகிய விம்மூன்று திங்களே தகுதியாகும். எ-று. (௩)

மாசிபங்குனி சித்திரைமற்றவை காசி
யாசிசேருமித் திங்களும்பொருந்துமச் செயலை
நேசியாவெழு தலைச்செயுநாட்குமுன் னிகழ்நாள்
வீசிமோதகந் துண்டிமால்களிற்றினை விழைந்து.

(இ-ள்.) மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி இந்த மாதங்களிலும் பஞ்சக்குரோசப்பிரதக்ஷிணஞ் செய்யலாம். அந்தப் பிரதக்ஷிணத்தை உத்தேசித்துச் செய்கின்ற தினத்திற்கு முன்னுளில் பெருமைபொருந்திய துண்டிராஜகணபதிக்கு விருப்போடு மோதகநிவேதனஞ்செய்து. எ-று. (௪)

போற்றியன்றவி சுண்டிராப்பொருந்திணை விழைச்சு
மாற்றிபுத்தர நடவைநீர் மற்றைநாளாட
லாற்றிநம்மையு நின்னையும்பூசைசெய் தல்லல்
காற்றிநன்கருண் முத்திமண்டபத்தினைக் கலந்து.

(இ-ள்.) வணங்கித் துதித்து அன்று அவிசுபோசனஞ்செய்து இரவில் பத்தினியோடு சேராது தனியே சயனித்து, மறுதினத்தில் உத்தரவாகனியாகச் செல்லுகின்ற கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து நம்மையும் உன்னையும் பூசைசெய்து மனோவருத்தத்தை யொழித்து தரிசித்தோருக் கருளைத்தருகின்ற முத்திமண்டபத்தைச் சேர்ந்து. எ-று. (௫)

மறிதராமன மாதிமூன்றானும்வெம் மறங்க
ளறிதராதியற் றினும்றிந் தியற்றினுமவைகள்
செறிதராதழித் தருளுதியென் றுசிந்தித்துக்
குறிதராமிளிர் காப்பெனுஞ்சங்கற்பங்கூறி.

(இ-ள்.) தடுத்தற்கரிய மனம் வாக்குக் காயமென்னு மூன்று கரணத்தினுலுங் கொடிய பாதகங்களை அபுத்திபூர்வமாகச் செய்திருந்தாலும் புத்திபூர்வமாகச்செய்திருந்தாலும் அவைகள், (அடியேனை) அணுகாதிருக்கும்படி யருள் செய்யவேண்டுமென்று தியானித்துக்கொண்டு விக்கினம் வாராது பெருமையோடு பாதுகாக்கின்ற சங்கற்பத்தை (விதியாகச்)சொல்லிக்கொண்டு. எ-று.(௬)

பரோபகாரஞ்செய் தலங்குமிக் காசியிற்பஞ்சக்
குரோசயாத்திரை செய்கின்றேன் சோதியாய்க்குலவி
யரோவிளங்கிலிங் கத்தினையகத்துளே நினைந்து
சரோருகப்பதந் தந்துநன்கருளென்று சாற்றி.

(இ-ள்.) ஏழைகளுக்குப் பொருள்முதலியவைகளைக் கூடுமானது கொடுத்து அலங்காரமமைந்த இக்காசித்தலத்தில் பஞ்சக்குரோசயாத்திரை செய்யப்போகின்றேன் சோதிவடிவமாக வியாபித்து விளங்குகின்ற இலிங்கமூர்த்தியே யென்று மனதிற் சிந்தித்துத் தாமரைமலர்போன்ற திருவடிகளைத்தந்து பாதுகாத்தருள்வீரென்பதாகச் சொல்லி. (எ-று.) (௭)

கருதுதுண்டிமுன் னுய்வைம்பானறு கணேசர்
பொருதுசூர்முத றடிந்தவர் வயிரவப்புத்தேண்

மருவுமால்டி வதிபவர்மதிமுடிப் பிரானர்
வெருவுசூற்படை விளங்குகை யுருத்திரர் பிறரும்.

(இ-ள்.) அறிவுடையோரால் சிந்திக்கத்தக்க துண்டிராஜ கணபதிமுத லாகிய ஐம்பத்தாறு விநாயக மூர்த்திகளும், பெரும்போர் செய்து அச்சத்தை உண்டாக்குதற்கு முதல்வனுகியசூரனைக் கொன்ற முருகக்கடவுளும், வயிரவக் கடவுளும், கல்லாலவிருக்ஷத்தடியிற் றங்கிய தட்சிணமூர்த்தியும், சந்திரசேகர ரும், அச்சத்தைத் தருகின்ற சூலாயுதம் விளங்கிய கையையுடைய உருத்திர கண ங்களும். எ-று. (அ)

அன்னமூர்பவ னரியெனும் பதின்மர்மற் றுலோன்
பன்னருங்கதிர் பரப்பிடும் பன்னிருபதங்கர்
நன்னர்மேவிய கவுரிமு னெழுநலமாத
ரென்னரும்பிரி யாதுநாளுளும் வீற்றிருக்க.

(இ-ள்.) அன்னவாகனத்தை நடத்துகின்ற பிரமதேவனும், விஷ்ணுவின் தசாவதார மூர்த்திகளும், சந்திரமூர்த்தியும், சொல்லுவதற்கரிய கிரணங்களை விரிக்கின்ற தாத்துருமுதலிய பன்னிரண்டு சூரியர்களும், நன்மையை விரும்பி யகவுரிமுதலாகிய சத்தமாதர்களும், மற்றையர்களும் பிரியாது தினந்தோறுஞ் சூழ்ந்திருக்க. எ-று. (கூ)

விஷ்ணுவின் தசாவதாரமாவன மச்சம், கூர்மம், வராகம், நாரசிங்கம், வாம னன், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி என்பனவாம். பன்னிரண்டு சூரியர்களாவார் தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வரு ணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்திரு, துவட்டன், என்பவர்களாம். சத்தமாதர்களாவார் கவுரி, அபிராமி, மாயேச்சுவரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்பவர்களாம்.

இருக்கும்விச்சுவ நாதனையிருவினை யனைத்து
முருக்குமம்பிகை யன்னபூரணியைமுற் சூழ்ந்து
பெருக்குமன்பொடு பரவசமடைந்தருள் பெற்றுத்
* தருக்குநீங்குறக் குவித்தகை தலைமிசைக் கொண்டு.

(இ-ள்.) எழுந்தருளியிருக்கின்ற விசுவநாதரையும், இருவினைப்பகுதிகள் யாவையும் ஒழித்தருளும் அன்னபூரணியாரையும் முன்னே பிரதக்ஷணஞ்செய் துபேரன்பினல் பரவசமடைந்து அநுமதிபெற்றுக்கொண்டு அகங்காரம் நீங் கும்படி இருகரங்களையும் சிரமேற்குவித்து. எ-று. (ய)

தண்டபாணியைக் கேத்திரபாலனைத் தாழ்ந்து
வண்டறுமலர் மலிமணி கன்னிகை வதிந்து
கொண்டகாதலிற் படிந்துமே லெழுந்துகை குவித்துத்
துண்டமாமதி யணிசித்தி யானையைத் தொழுது.

(இ-ள்.) தண்டபாணியையும் வயிரவக்கடவுளையும் வணங்கி வண்டுகள் நீங்காதமலர்கள் நெருங்கிய மணிகர்ணிகையில் வசித்து நீங்காப் பிரியத்தோடு

* தருக்கு = அகங்காரம்.

மணிகர்ணிகா தீர்த்தத்தில் ஸ்நாநஞ் செய்து கரைமேல்வந்து இருகரங்களையும் குவித்து பெருமைதங்கிய இளம்பிறையணிந்த சித்திவிநாயகரைப்பணிந்து எ-று.

பாயமாமணி கன்னிகேசன்பதம் பணிந்து
தூயவப்புனற் கோட்டிடைத் துலங்குகங்கேசர்
நேயமாரில லிதைசரா சந்தநின் மலன்சீ
ராயபேரருட் சோமநாதரையடி வணங்கி.

(இ-ள்.) பரவிய பெருமையுள்ள மணிகர்ணிகேச்சுரர் திருவடிகளை வணங்கி பரிசுத்தமுள்ள அம்மணிகர்ணிகாதீர்த்தக் கரையில் விளங்கும் கங்கேச்சுரரையும் கருணைநிறைந்த லளிதாசத்தியையும் சராசந்த நின்மலரையும் சிறப்புற்ற பெருங்கருணையுள்ள சோமநாதரையும் திருவடிகளில் வணங்கிக்கொண்டு.எ-று

தூய்தாலப்பி யேசுரர் சூலடங்கேசர்
பாயசீருடைத் தெசாவசு மேதபண்ணவர்நன்
காயசீருடை வராகமூர்த் தியரடியார்க்குத்
தீயதீர்த்தருள் சண்டிகே தாரநாந்திருத்தர்.

(இ-ள்.) பரிசுத்தமுள்ள தாலப்பியேசுரரையும், சூலடங்கேசுரரையும், பரவிய சிறப்புள்ள தெசாவசுமேத பண்ணவரையும், நன்மையிற்சிறந்த வராகமூர்த்தியாரையும் அடியார்களுக்குத் துன்பங்களை யொழித்தருள்கின்ற சண்டிகேதார நாதரையும். எ-று. (கரு)

சங்கமேசுர ரனுமந்தே சுரர்நலந் தவாத
துங்கமேவுலோ லார்க்கேசர் தோன்றுமப்போர்முற்
றங்கமேவிய கணபதி முதலியோர் தம்மைப்
பங்கமேவுறு மலர்கொடு பூசனைபண்ணி.

(இ-ள்.) சங்கமேச்சுரரையும் அநுமந்தேச்சுரரையும் நன்மை மாறாது பரிசுத்தம்வாய்ந்த லோலார்க்கேசரையும் உண்டாகிய தேவர்களைச் சூழ்ந்து பரிவார தேவர்களாக வீற்றிருக்கின்ற விநாயகர் முதலான தேவர்களையும் பரிசுத்தமுள்ள புட்பமுதலிய உபகரண திரவியங்களால் பூசைசெய்து. எ-று. (கச)

மன்னுதுர்க்கைகுண் டத்துநீர் படிந்துமாநிலத்து
மின்னுதுர்க்கையைத் துர்க்கைவிநாயகன்றன்னைப்
பன்னுபூசனை புரிந்துவேதியர்க்கனம் படைத்து
முன்னுதோத்திர மாதியாணித்திரை முருக்கி.

(இ-ள்.) நிலைபெற்ற துர்க்காகுண்டதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பெரிய உலகத்தில் விளக்கமமைந்த துர்க்காதேவியையும், துர்க்கைவிநாயகரையும் விதிப்படி பூசைசெய்து பிராமணர்களுக்குப் போசனஞ்செய்வித்துச் சிந்திக்கத்தக்க தோத்திர முதலானவைகளால் நித்திரை செய்யாதிருந்து. எ-று. (கரு)

புரியும் யாத்திரை யூறொழித்தருளென்று புகன்று
விரியுமேன்மைசால் விடுவச்சேனரைப்பதம் பணிந்து

பரியுநெல்லெளாற் கருத்தமகேசனைப் பணிந்து
தெரியும் புண்ணிய கருத்தமதீர்த்தநீர்தோய்ந்து.

(இ-ள்.) செய்கின்ற பஞ்சக்குரோச யாத்திரைக்குவரும் விரோதங்களை நீக்கியருள்வீரென்று சொல்லி மேலானபெருமையிற் சிறந்த விஷ்வக்சேனருடைய பாதங்களில்வணங்கி விரும்பத்தக்க நெல்லினுலும் எள்ளினுலும் கர்த்தமகேசனை அர்ச்சித்து வணங்கி யாவரும் அறியத்தக்க புண்ணியவடிவமாகிய கர்த்தமதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து. எ-று. (௧௬)

கருத்தமப்பெயர்க் கூபத்தைக்கண்டுகை குவிப்போர்
வருத்த நீக்கிடுஞ் சோமநாதரைமணி மன்று
ணிருத்தமார்விரு பாக்கரைநீலகண் டரைக்கண்
டருத்தமார்தரு பூசனையன்புட ஞற்றி.

(இ-ள்.) கர்த்தமகூபமென்னும் பேர்பெற்ற கிணற்றையுந் தரிசித்து கைகுவித்து வணங்குகின்றவர்களுடைய கிலேசத்தைமாற்றியருளும் சோமநாதரையும், அழகிய சபையினிடத்து நடனஞ்செய்கின்ற விரூபாக்ஷரையும் நீலகண்டரையும் தரிசித்து நிறைந்தபலனைத்தரும் அவர்களை அன்போடு பூசைசெய்து. (௧௭)

அன்னதேத்தினுஞ் சிராத்தமோ மாதிகளாற்றி
யின்னறீர்தர மறையவர்க் கின்னமுதூட்டி
மன்னமேவிய கருத்தம கேசநின்னருளா
லென்னவூறுவந் திடினுநீங் குகவெனவிரந்து.

(இ-ள்.) அவ்விடத்தில் சிரார்த்தம் ஓமமுதலானவற்றைச்செய்து துன்பமொழியும்வகையாக பிராமணர்களுக்கு இனியபோசனஞ் செய்வித்து நிலையான பிரியத்துடன் வீற்றிருக்கின்ற கர்த்தமகேசரே அடியேனுக்கு என்னதுன்பம் வந்தாலும் உனது கருணையினுல் நீக்கியருள்கவென்று குறையிரந்து. எ-று. (௧௮)

பிராதகாமத்தை யடைந்தவட் பிறங்குநீ ராடித்
தராதலம்புகழ் தருகண நாதர் * சாமுண்டி
பராவுமோக்கவீ சுரர்கரு ணேசர்பத்திரரே
யொராதசீர்விக டாதேவி யுன்மத்த † வடுகர்.

(இ-ள்.) பிராதகாமமென்னும் தீர்த்தத்திற்குப்போய் பரிசுத்தமுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து உலகத்தாரால் துதிக்கப்படுகின்ற கணநாதரையும், சாமுண்டிதேவியையும், வணங்கத்தக்க மோக்ஷவீசுரரையும், கருணேசுரரையும், பத்திரேசுரரையும், மாருத சிறப்புள்ள விகடாதேவியையும், உன்மத்த வடுகரையும். எ-று. (௧௯)

மேயநீலேசர் காலகூடேசர் நல்விமலை
யாயநந்திகே சுரர்பிருங் கீசரை யடுத்து

* சாமுண்டி = காளிகாதேவி. † வடுகர் = வயிரக்கடவுள்.

நேயமார்தரப் பூசித்து நிறைநல மளிக்குந்
தாயதோயகந் தருவசாகரப்புன லுண்டி.

(இ-ள்.) விரும்பத்தக்க நீலேசரையும், காலகூடேசரையும், விமலாதேவியையும், நந்திகேசுரரையும், பிருங்கீசரையும், தரிசித்து பேரன்புடன் பூசைசெய்து பிரபல சுகத்தைத்தருகின்ற கந்தருவசாகரதீர்த்தத்தைக் கடந்துபோய். எ-று. (உ0)

வீமசண்டியில் வீமசண்டியைத் தொழுதாடிக்
காமர்சண்டவி நாயகன் பரிதிகந்தருவ
னேமவீசனி ராமனிரத்தாட்சியீசன்
றேமில்பூசனை புரிந்தவரருள்செயத் துதித்து.

(இ-ள்.) வீமசண்டிக்குப்போய் வீமசண்டியை வணங்கி வீமசண்டி தீர்த்தத்தில் முழுகி வனப்புவாய்ந்த சண்டவிநாயகரையும், சூரியதேவனையும், கந்தருவவீசரையும், நேமவீசரையும், இராமேசரையும், இரத்தாட்சியீசரையும், களங்கமற்ற பூசைசெய்து அவர்கள் அருளவேண்டுமென்று தோத்திரம்பண்ணி. எ-று. (உக)

அங்குநின்றுசென் றேற்றைத்தாட் கணேசனை யடைந்து
பொங்குமெள்ளினு லரிசியாற் பூசனை புரிந்து
தங்குமங் நின்று போய்ச்சிந்து நதியகஞ்சார்ந்து
நங்குதீர்மகா வீமேசர் வயிரவ நாதர்.

(இ-ள்.) அவ்விடத்து நின்றும்போய் ஏகபாதவிநாயகரையடைந்து மேலாகிய எள்ளினாலும் அட்சதையாலும் பூசைசெய்து அவ்விடத்து நின்றும்போய் சிந்துநதியையடைந்து குற்றமில்லாத மஹாவீமேசரையும், வயிரவநாதரையும். எ-று.(உஉ)

ஏயும்வைரவி யியல்பூத நாதர்சோமேசர்
வேயுங்காலநா தன்கவர்த் தீசர்காமேச
ராயுஞ்சுந்தர கணேசர்பத் திரரருட்கணேசர்
தேரயுமின்னர்பூ சனையெலாம் விதிப்படிதுலக்கி.

(இ-ள்.) பொருந்திய வயிரவிதேவியையும் அழகுள்ள பூதநாதரையும் சோமேசரையும் காலநாதரையும் கவர்த்தீசரையும், காமேசரையும் ஆராயத்தக்க சுந்தரகணேசரையும் பத்திரேசரையும் அருட்கணேசரையும் மேற்கண்ட இத்தேவர்களுடைய பூசைகள் யாவும் விதிவழியாக விளங்கச்செய்து. எ-று. (உ௩)

மாண்டதெகளி விநாயகர் பொன்னடிவணங்கி
நீண்டகன்னன்மோ தகமவலாதிக ணிரப்பிக்
கூண்டமற்றவர் பாற்பதினறுவரைக் கும்பிட்
டீண்டவுத்தண்ட ருக்கலே சுராடியிறைஞ்சி.

(இ-ள்.) மாட்சிமையுள்ள தெகளிவிநாயகருடைய பொன்போன்ற பாதங்களில் பூசித்து வணங்கி உயர்ந்த கரும்பு, மோதகம், அவல் முதலானவைகளை நிறைவாகவைத்து நிவேதித்து அவ்விநாயகர் சமீபத்திலுள்ள பதினறு

கணேசர்களையும் வணங்கி உத்தண்டேசரையும், உக்கலேசுரரையும் திருவடிகளில் வணங்கி. எ-று. (உச)

பரவுபார்ப்பதி தவம்புரி யிடமெனப்பட்டு
விரவுசீரிரா மேச்சுரஞ்சார்ந்தவண் விழைந்து
கரவுதீர்தர வருணா னங்கனிந்தியற்றி
யுரவுசால்பிண்ட தானமுஞ் சிராத்தமுமுஞற்றி.

(இ-ள்.) துதிக்கத்தக்க பார்ப்பதிதேவி தவஞ்செய்த இடமென்று சொல்லத்தக்க வியாபித்த புகழையுடைய இராமேச்சுரத்தையடைந்து அவ்விடத்துக் களிப்புடன் களங்கத்தை நீக்கத்தக்க தீர்த்தத்தில் முழுகி உறுதியைத்தரத்தக்க பிண்டப்பிரதானத்தையும் சிரார்த்தத்தையுஞ்செய்து. எ-று. (உ௫)

சோமநாதனைக் குளத்திலம் வில்வத்தாற்றுலங்கக்
காமர்பூசனை செய்தயிராவதே சுரர்கட்
டாமமார்சடைப் பரதேசர் சத்துருக்கேச
ரீமமாடிலக் குமணேச ரெழிலிராமேசர்.

(இ-ள்.) சோமநாதரை வெல்லம், எள், வில்வம் இவைகளால் அன்புடன் விளக்கமாகப் பூசித்து அயிராவதேசுரரையும், தேன்றுளிக்கும் பூமாலையணிந்த சடையையுடைய பரதவீச்சுரரையும், சத்துருக்கேச்சுரரையும் மயானத்திலாடல் செய்யும் இலக்குமணேசரையும், அழகுவாய்ந்த இராமேசரையும். எ-று. (உசு)

ஆன்றமேன்மைசால் பூமீசர்நகுடேசராதி
யேன்றதேவரைப் பூசித்துச் சந்திவந்தனையே
யூன்றமேவிடு தானம்வா சம்பலவுஞற்றித்
தோன்றவாய்புரா ணுதியாற் கண்டுயிறுறந்து.

(இ-ள்.) மாட்சிமையுள்ள பூமீசர் நகுடேசர் முதலாகத் தங்கிய தேவர்களைப் பூசைசெய்து பின்பு சந்தியாவந்தனைமுடித்து அழகுபெறும்படி விரும்பத்தக்க வஸ்திரமுதலிய பலவகையான தானங்களைச்செய்து அறிவுதோன்றும்படி ஆராயத்தக்க புராணுதி சிரவணத்தால் நித்திரையொழித்து. எ-று. (உஎ)

இராமனன்புசெய் தருச்சித்துப் போற்றிடவிருந்த
விராமநாதனை யெண்ணினும் வழுத்தினுமென்று
மிராமமார்பல வின்புமீ வானையாத்திரையூ
றிராமலாகநீ யருளெனவேண்டிமின் றிரந்து.

(இ-ள்.) ஸ்ரீராமன் அன்போடு பூசைசெய்து வணங்கத்தக்கதாக வீற்றிருந்தவரும் சிந்தித்தாலும் துதித்தாலும் அழகு நிறைந்த பலவாயசுகங்களையும் கொடுத்தருள்பவருமாகிய இராமநாதேச்சுரரை வணங்கி யாத்திரைக்கு இடையூறுவராமல் அருள்வீராகவென்று வேண்டிக் குறையிரந்து. எ-று. (உஅ)

வாரமேவினர் வழுத்தினின் றிறைஞ்சிடவருணு
தீரமேவிய லிங்கமெலாந்தொழல் செய்தே

யீரவானவர் பூசித்ததேவசங்கேசர்
சாரமாகிய திருவடி பூசித்துத் தாழ்ந்து.

(இ-ள்.) விரும்பத்தக்க அன்புள்ளவர்கள் துதித்துப் பணியும் வண்ணம் கங்கைக்கரையில் வீற்றிருக்கின்ற சிவலிங்கங்களெல்லாவற்றையும் விதிவழியே வணங்கி அன்பையுடைய தேவர்கள் பூசைசெய்த தேவசங்கேசர் இன்பமயமாகிய திருவடிகளை அர்ச்சித்து வணங்கி. எ-று. (உ௯)

பரசுபாணியாம் பிள்ளையைப் பூசித்தப்பாற்போய்
விரசுவண்பிரு துவீசன்மென் மலர்ப்பதமடைந்து
வரமிகுந்தொரு பிருதென்பான் பரிமகஞ்செயலாற்
கரவிலித்தலத் திறப்பவர் கதியுறக்கண்டு.

(இ-ள்.) மழுவாயுதத்தைக் கரத்திலுடைய வயிரவக்கடவுளைப் பூசைபுரிந்து அவ்விடம்விட்டப்பாற்போய் வியாபித்த புகழமைந்த பிருதுவீசருடைய மெல்லிய மலர்போன்ற திருவடிகளை யடுத்து ஒருபிருது என்பவன் அன்புமிகுந்து அசுவமேதயாகஞ்செய்த காரணத்தால் களங்கமற்ற இந்தக் காசித்தலத்தில் இறப்பவர்கள் முத்தியையடையத் திருக்கண்சாத்தி. எ-று. (௩0)

அருளுமண்ணனீ யெனத்துதித் தாயிடையமைந்த
வெருளிலாச்சுயூ பப்புனன் மேற்புரோக்கித்துத்
தெருள்சுயூபமா தம்பத்தைப் பரிசித்துத் தீர்ந்து
கருளுறுதருள் கபிலதாரையைச் சென்றுகண்டு.

(இ-ள்.) அநுக்கிரகஞ் செய்யுங்கடவுள்தேவரீரேயென்று தோத்திரம் பண்ணி அவ்விடத்திருக்கின்ற களிப்பைத்தரும் சுயூபதீர்த்தத்தையெடுத்து மேலே புரோட்சித்துக்கொண்டு தெளிவைக்கொடுக்கும் மகிமையுள்ள சுயூபதம்பத்தைக் கையினாற் பரிசித்து அப்பாற்போய் மயக்கத்தை ஒழிக்கின்ற கபிலதாரையைப்பார்த்து. எ-று. (௩க)

ஆடல்செய்தவிர் சிராத்தமா திகள்பலவாற்றிக்
கூடல்சாலிட பத்துவ சரைத்துதிகூறி
வீடநித்திரை யுறவசித்தவணின்று விழைந்து
நாடல்கூர்பிர தக்கணஞ் செய்வது நன்று.

(இ-ள்.) அக்கபிலதாரையில் ஸ்நாநஞ்செய்து சிரார்த்தமுதலாகிய பலவற்றையுந் திருத்தமாகச்செய்து அறிவிற்கலக்குந் தன்மையுள்ள ரிஷபத்துவசரைத் துதித்து அன்றிரவு நித்திரைநீக்கி அவ்விடத்திருந்து விருப்புடன் அக்கடவுளை நாடிக்கொண்டு வலம்புரிவது நன்மையாகும். எ-று. (௩உ)

சுவாலாநரசிங் கரையடைந்து தூயகபில தீர்த்தம்பார்த்
தவாவும்வருண சங்கத்தி னுடியாதிகேசவரைத்
தவாதசங்க மேசுரரைத் தழைக்குங்கருவ விநாயகரை
யுவாநலன்பிற்பூசித்தே யொளிரும்யவைதூவித்தழுவி.

(இ-ள்.) சுவாலா நரசிங்கரைஅடுத்து, பின்பு கபிலதீர்த்தத்தைச் சேவித்து விரும்பத்தக்க வருணசங்கத்தில் ஸ்நானஞ்செய்து ஆதிகேசவரையும் நித்தியராகிய சங்கமேசுரரையும் அருளைத்தழைக்கச் செய்கின்ற கருவவிநாயகரையும் பேரன்பினால் பூசைசெய்து விளக்கமூற்ற கோதுமையால் அர்ச்சித்துத் தியானித்து.

மருவுபிரக லாதேசர் வயங்குதிரிலோ சனவீசர்
வெருவில்விந்து மாதவர்மற் றிவரை விழைந்து பூசித்துக்
கருவதகற்றும் பஞ்சநதக் கவர்த்தீசுரர்மங் களகவுரி
பொருவிலிவரைத் தரிசித்துப் போற்றுநின்ற வசிட்டேசர்.

(இ-ள்.) அவிடத்திருக்கின்ற பிரகலாதேசரையும் விளங்குகின்ற திரிலோசன வீசரையும் களிப்பைத்தரும் விந்துமாதவரையும் அன்புடன் பூசை செய்து பிறவியை ஒழித்தருளும் பஞ்சநதக்கவர்த்தீசுரரையும் மங்களகவுரியுமாகிய இவர்களைத் தரிசித்துக்கொண்டு துதித்தற்குரிய வசிட்டேசரையும். எ-று. (௫௪)

பன்னுவாமதேவேசர் பருப்பதேசர் மகேசுரரே
யென்னுமிவரை நயந்தேத்தி யெழிலார்சித்திவிநாயகரை
மன்னுஞ்சத்தா வரணகண பதியைவணங்கிப் பூசித்து
மின்னுமணிகன் னிகையாடி விசுவேசுரரைத் தரிசித்து.

(இ-ள்.) சொல்லுகின்ற வாமதேவேசரையும் பருப்பதேசரையும் மகேசுரரையும் விருப்போடுவணங்கித் துதித்து அழகுநிறைந்த சித்திவிநாயகரையும் நிலைபெற்ற சத்தாவரண கணபதியையும், பணிந்து பூசைசெய்து விளக்கமுள்ள மணிகர்ணிகையில் ஸ்நாநஞ்செய்து விசுவநாதரைப் பணிந்து. எ-று. (௫௫)

ஆன்றமுத்திமண்டபத்தை யடைந்துதண்ட பாணிதனைச்
சான்றநெடுமா லினைத்துண்டித் தந்தியினைவெவ் வயிரவரை
யேன்றகதிரைப் பஞ்சவிநா யகரையிறைஞ்சிப் பூசித்துத் [ண்டும்.
தோன்றவொருமுத் தரஞ்சூழ்ந்து துதித்துத்தியானஞ்செயல்வே

(இ-ள்.) சுபகரம்நிறைந்த முத்திமண்டபத்தைச் சேர்ந்து தண்டபாணியையும் திருமாலையும் துண்டிவிநாயகரையும் வயிரவக்கடவுளையும் சூரிய தேவரையும் பஞ்சவிநாயகரையும் பூசித்து வணங்கி ஒரு பிரதக்ஷணஞ் செய்து தோத்திரம் புரிந்து தியானஞ் செய்யவேண்டும். எ-று. (௫௬)

தேவதேவவிசுவேச செகமேழினுக்குங் குருநாத
பாவநாசமாகாசிப் பதிநாயகநின் கிருபையினு
லோவவரிய பாதகங்க ளொழிப்பான்பஞ்சக் குரோசத்தை
யாவபிரதக் கணஞ்செய்தே னருளவேண்டுமடியேற்கே.

(இ-ள்.) தேவர்களுக்கு அருள்செய்யும் மஹாதேவரோ விசுவநாதரோ சத்தலோகங்களுக்கும் ஆசாரியரோ பாவங்களை யொழிப்பவரோ மகிமையுள்ள காசிப்பதிக்கு நாயகரோ தேவரீருடைய கருணையினால் நீங்குதற்கரிய பாவங்களை ஒழிக்கும் பொருட்டு, பஞ்சக்குரோசத்தைப் பிரதக்ஷணம் செய்தேன் அடியேனுக்கு அருள்செய்ய வேண்டும். எ-று. (௫எ)

**இந்தப்பிரதக் கணப்பய றெண்ணில்பவத்துப் பாதகமு**
**நந்தப்புரிதியிக்காசி நகரில்வசிக்கும் பேறருடி**
**முந்தக்கொடிய பாதகமேன் மூளையாவகைநன் மதியளித்தி**
**யந்தத்தொளிர்நின் னடிக்கலப்பு மருடியென்று தொழுதேத்தி.**

(இ-ள்.) அடியேன்செய்த இந்தப் பிரதக்ஷண பலத்தினாலே அளவிறந்த பிறவியிற்செய்த தீவினைகள் ஒழிந்துவிடும்படி செய்வீராக, இக்காசித்தலத்தில் நிரந்தரம் வசிக்கத்தக்க பாக்கியத்தை யருள்வீராக, இனிமேல் கொடிய பாதகங்கள் உண்டாகாதிருக்கத்தக்க நல்லவிவேகத்தை யருள்செய்வீராக, தேகமுடிவில், விளங்குகின்ற தேவரீர் திருவடிகளிற் சேர்த்தருள்வீராக, என்று வணங்கித் துதித்து. எ-று. (௩௮)

**மறையோருண்ண வமுதருத்தி மாண்பார்தக்க ணையுங்கொடுத்து**
**முறையேயிருக்கு மிடஞ்சார்ந்து முன்னுசுவைய வடிசிலமைத்**
**திறையார்கடும்பா யுள்ளவரோ டிருந்துபுசித்து விசுவேச**
**னறையார்கமலப் பதமுளத்தே நாட்டியிருத்தல் விதியாகும்.**

(இ-ள்.) பிராமணர் உணவுகொள்ளத்தக்க போசனஞ் செய்வித்து, மாட்சிமையுள்ள தக்ஷிணைகொடுத்து பின்பு தானிருக்குமிடத்தை யடைந்து அறுச்சுவையோடுங் கூடிய பதார்த்தங்களையும் அன்னத்தையுஞ் சமைப்பித்து பெருமை பொருந்திய பந்துக்களோடிருந்து போசனஞ் செய்து விசுவநாதருடைய தேன்றுளிக்கின்ற தாமரை மலரையொத்த பாதங்களை மனத்திலிருத்தி நிலைக்கச் செய்வது விதியாகும். எ-று. (௩௯)

**முதனாட்கருத்த மேசுரத்தை முற்றியமர்க விரண்டாநா**
**ளிதமார்வீம சண்டியகத் திருக்கமூன்று நாளடைந்து**
**பதமாரிராமே சுரத்தமர்க பற்றுநாலா நாளுறவச்**
**சுதமார்கபில தாரையிடைத் துன்னவைந்தா நாட்காசி.**

(இ-ள்.) முதற்றினத்தில் கர்த்தமகேச்சரத்தைச் சூழ்ந்து அன்றிரவு அங்கே வசிப்பாயாக. இரண்டாவது தினத்தில் இன்பம் நிறைந்த வீமசண்டியைப் பிரதக்ஷணஞ் செய்து அன்றிரவு அங்கேதங்குக. மூன்றுநாள் இராமேச்சுரத்தைப் பிரதக்ஷணஞ்செய்து அன்றிரவு அங்கேதங்குக. நாலாநாள் கபிலதாரையை வலஞ்செய்து அன்றிரவு அங்கேதங்குக. ஐந்தாநாள் காசிப்பதியை அடைந்து அன்றிரவு அங்கேதங்குக. எ-று. (௪0)

**வருணதீரஞ் சண்டிகேத் திரமாதுர்க்கை வளர்கோயி**
**லருணடினர்சேர் வீமசண்டி யருளிராமேச் சுரமிவற்று**
**ளொருநாளெதனின் வசித்தாலு மொழியாப்பாவ மனைத்தும்போய்த்**
**திருநாரணற்குமெட்டாத தெய்வக்கதிசேர்ந் தமர்வரால்.**

(இ-ள்.) வருணதீரம், சண்டிகேத்திரம், உயர்ந்து பெருமைபெற்ற துர்க்காதேவி ஆலயம், திருவருணட்டம் வைத்தவர்கள் சேரத்தக்க வீமசண்டி, அருக்

கிரகத்திற்குரிய இராமேச்சுரம், இவ்வைந்திடங்களில் ஒரு நாளாயினும் எவ்விடத்தில் வாசஞ்செய்தாலும் வேறுகாரணத்தால் நீக்கப்படாத தீவினைகளெல்லாம் ஒழிந்துபோய் இலக்குமிநாயகனாகிய விஷ்ணுதேவருக்கும் அணுகக்கூடாத தெய்வத்தன்மையுள்ள மோக்ஷத்தை விருப்புடனடைவார்கள். எ-று. ()

**என்னவருத்தப் பட்டேனு மெம்மாமறையு மெடுத்துரைக்கு**
**மன்னகாசித் தலத்தெல்லை யைங்குரோசஞ் சூழ்வாரேன்**
**முன்னமடைவர் சித்தசுத்தி முழுப்பாதகமு மொழிந்துபோம்**
**பன்னவரிய மெய்ஞ்ஞான பாலராகிக் கதியடைவார்.**

(இ-ள்.) எல்லாவேதங்களும் எடுத்துரைக்கத்தக்க அக்காசித்தலத்தெல்லையில் எவ்வித பிரயாசை எடுத்துக்கொண்டாயினும் பஞ்சக்குரோசப் பிரதட்சணஞ் செய்வார்களானால் முன்னே சித்தசுத்தியடைவார்கள் மகாபாதகங்களும் ஒழிந்துவிடும். பின்னர் சொல்லுவதற்கரிய உண்மைஞானத்தைப் பெற்று முத்தியின்பத்தைப் பெறுவார்கள். எ-று. (சஉ)

**மாறுதவிர்கா சியில்வாழ்வார் மாநீர்க்கங்கை நதிமூழ்கி**
**யூறுதவிர்விச் சுவநாத னேங்குமன்ன பூரணியென் [ந்தும்**
**றூறுமவித்தார் புகனமைத்தாழ்ந் தாண்டிக்கொருகாற் குரோசமை**
**பேறுநிரம்பச் சூழ்வாரேற் பிரமசொரூப மேயாவார்.**

(இ-ள்.) களங்கத்தைப் போக்குகின்ற காசித்தலத்தில் வாசஞ்செய்பவர்கள் பெருமைபொருந்திய கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, துன்பத்தை மாற்றியருளும் விசுவநாத ரென்றும் உயர்வுள்ள அன்னபூரணியென்றும் காமாதி ஆறுகுற்றங்களையும் நீக்கினவர்களாலே சொல்லத்தக்க நம்மிருவரையும் பணிந்து வருஷத்துக்கொருதரம் நிறைந்த பலனைத்தருகின்ற பஞ்சக்குரோசப் பிரதட்சணஞ் செய்வார்களானால் அவர்கள் சிவசொரூபராவார்கள். எ-று. (சங)

## பஞ்சக்குரோசப் பிரதக்ஷணவியல்புரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ச0அ.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# பதினோராவது காசிவாச நியமமுரைத்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

அண்ணலீ துரைத்தலோடு மம்மைகை குவித்துப்போற்றி
யெண்ணருங் காசிமேவி யிருப்பவர் குரோசஞ்சூழ்வோ
ருண்ணலம் பயப்பக்கொள்ளு நியமமுமுரைத்தியென்னக்
கண்ணக னுலகமுய்வான் கழறுவான் கருணைமூர்த்தி.

(இ-ள்.) சிவபெருமான் பஞ்சக்குரோசப் பிரதக்ஷிண வியல்பைத்திருவாய்மலர்ந்தபோது பார்வதிதேவியார் இருகரங்களையுங் குவித்துத் துதிசெய்து நினைத்தற்கரிய காசித்தலத்தில் விரும்பிவாழ்பவர்களும், பஞ்சக்குரோசப் பிரதக்ஷிணஞ் செய்பவர்களும் மனதுக்கு நன்மையைத் தரும்வகையாக அவர்கள் கொள்ளுகின்ற நியமங்களையும் கட்டளையிடுவீரென்று கேட்க இடமகன்ற உலகங்களெல்லாம் பிழைக்கும் பொருட்டுக் கிருபாமூர்த்தியாகிய மஹாதேவர் கட்டளையிடுகின்றனர். எ-று. (க)

பரர்மனை வசித்தல் செய்யார் பரரிடு மன்னமேலார்
பரர்மனை யியர்பால் வார்த்தை விளைதத்தும் பகர்தல்செய்யார்
பரர்பொருள் வாஞ்சைவையார் பாவிகளுறவு செய்யார்
பரரடை யிடுக்கணோக்கிற் பதைப்பாரற் காசிவாழ்வோர்.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்பவர்கள் அன்னியர் வீட்டில் வசிக்கமாட்டார்கள் பரான்னம் புசிக்கமாட்டார்கள், பிறர் மனைவியிடத்து விளைதவார்த்தையும் பேசார்கள், அன்னியர் பொருளில் ஆசைவையார்கள், பாவிகளிடத்துச் சிநேகஞ் செய்யார்கள், அன்னியர் படுந்துயரத்தைப் பார்ப்பாராயின் மனநடுங்குவார்கள். எ-று. (உ)

தீயவர்சேர்க்கையாலே சித்தத்துமலினமுண்டா
மாயசற்கருமமெல்லாந் தீயனவாக்குமற்றுற்
றூயவருடனேசேர்வார் சொற்றிடு நமக்குநம்பான்
மேயகேசவற்குமாகா வீணரோடுரைத்தல்செய்யார்.

(இ-ள்.) கொடியோருடன் சேர்தலினாலே மனதிற்களங்க முண்டாகும். அக்களங்கமனதுடன் செய்யும் புண்ணியத்தொழில்கள் யாவும் பாவங்களாக முடியும் ஆதலினால் காசியில் வாழ்பவர்கள் பரிசுத்தர்களோடுறவுசெய்வார் வேதங்

களா லெடுத்துரைக்கத்தக்க நம்மிடத்திலும் நம்மிடத்தில் விருப்பமுள்ள விஷ்ணுதேவரிடத்திலும் அன்பு செய்யாத வீணர்களோடு வார்த்தை சொல்லார்கள். எ-று. (௩)

**மறைநிந்தை குரவனிந்தை மறையுணர் பெரியோர் நிந்தை**
**நிறைசிவதருமநிந்தை நிகழ்தருதீர்த்தநிந்தை**
**யறைபவரோடுஞ்சேரா ரன்னதுங் கேட்ககில்லார்**
**கறைதபு காசிவாழ்க்கை கடைப்பிடித் தமராநின்றோர்.**

(இ-ள்.) களங்கமற்றகாசித்தலத்தில் வசிப்பதை உறுதியென்று பற்றிக்கொண்டு விருப்புடன் வாழ்கின்றவர்கள் வேதநிந்தை, ஆசாரியர்நிந்தை, வேதங்களையறிந்த பெரியோர்களுடைய நிந்தை, நிறைவாயுள்ள சிவபுண்ணிய நிந்தை, சித்தசுத்தியைத்தருகின்ற தீர்த்தநிந்தை இவைகளைக் காதினாற்கேளார்கள் அந்நிந்தைகளைக் கூறுவோரிடத்துஞ் சேரார்கள். எ-று. (௪)

**அன்னியதலத்துச் செய்த பாவங்களனைத்து மான்று**
**மன்னிய காசிமேவ மறியுமத் தலஞ்செய்பாவ**
**முன்னியவைங்குரோசஞ் சூழ்தலா லொழியுமாங்குத்**
**துன்னிய மறமொன்றானு மொழிதரா தொடிக்கைமாதே.**

(இ-ள்.) கடகமணிந்தகையையுடையஉமையே பிறதலங்களிற்செய்த பாவங்கள்யாவும் நிலைபெற்ற காசித்தலத்தில் வாசஞ்செய்தால் ஒழிந்துபோம். அக்காசிப்பதியிற்செய்த எல்லாப் பாவங்களும் சிந்திக்கத்தக்க பஞ்சக்குரோசப்பிரதட்சணஞ்செய்தால் நீங்கும். அப்பஞ்சக்குரோசப் பிரதக்ஷணகாலத்திற் செய்தபாவம் வேறொருகாரணத்தால் அழியாது. எ-று. (௫)

**மறையவரரசர் வாய்கர் சூத்திரர்வன்சண்டாளர்**
**பறையு மற்றியாவரேனும் பரகதியடைதல் வேண்டிற்**
**கறைதபுகாசிமேவிக் கனிவினங் குரோசஞ் சூழ்ந்து**
**முறைமையி னமைப்பூசிக்கின் முத்தரே யாவருண்மை.**

(இ-ள்.) பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், கொடியபஞ்சமர், சொல்லுதற்குரிய மற்றையர் யாவராயினும் மேலாகியமோட்சத்தைப் பெறவேண்டினால் களங்கமற்றகாசித்தலத்தைச்சேர்ந்து அன்புடன் பஞ்சக்குரோசப்பிரதக்ஷணஞ்செய்து விதிவழியாக நம்மைப் பூசிப்பார்களாயின் அவர்கள் நித்தியமுத்தராவார்கள். எ-று. (௬)

**குளிர்பொழிற் காசிமேவிக் குரோசஞ்சூழ் பவர்முன்னளே**
**யளிகெழுமறையோராதி மற்றுநம் மடியர்யார்க்குந்**
**தெளிதலில் குருடர்கூனர் செவிடர்கான் முடவருமர்**
**களியறுமிடியர்யார்க்குங் கைப்பொருள் கொடுத்தல்வேண்டும்.**

(இ-ள்.) குளிர்ந்த சோலைசூழ்ந்த காசித்தலத்தில் வசித்து பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ் செய்பவர்கள் வலஞ்செய்வதற்கு முன்னாளில் இரக்கமுள்ள பிராமணர் முதலிய நமதடியார் பலருக்கும், நேத்திர உணர்ச்சியில்லாத அந்தகர்

களுக்கும், கூனர்களுக்கும், செவிடர்களுக்கும், காலில்லாதமுடவர்களுக்கும், ஊமர்களுக்கும், களிப்பற்ற தரித்திரர்களுக்கும், மற்றையர்களுக்கும் கையிலுள்ள பொருளைக் கொடுக்கவேண்டும். எ-று. (எ)

**கேத்திரஞ் சூழ்வோர்மண்மேற் கிடைகொள றயிலமோவல்**
**சாத்திரம் புகன்முக்கால முழுகரும் பூலநீக்கல்**
**பாத்திர சிராத்தநித்தம் பணல்பிண்ட மிடுதல் வேண்டுந்**
**தோத்திர மிகுமிவ்வெல்லா மனந்தமாத் துலங்குமென்றும்.**

(இ-ள்.) பஞ்சக்குரோசப்பிரதக்ஷணஞ் செய்வோர்கள் பூமியிற் படுத்தல் எண்ணெயிட்டுக் கொள்ளாதிருத்தல், நியம விதியிற்சொல்லியவாறு திரிகாலங்களிலும் ஸ்நாநஞ்செய்தல், தாம்பூலம் போடாதிருத்தல், சற்பாத்திர சிரார்த்தத்தைத் தினந்தோறுஞ் செய்தல், பிண்டம்போடுதல் இவைகளைச் செய்யவேண்டும் புகழ்பெற்ற இக்கிரியைகள் யாவும் ஒன்று அனந்தமாகவிளங்கும். எ-று. (அ)

**வரமிகுகாசிமேவி வாழ்தரு பிரமசாரி**
**கிரகமதுடையோன்வானப் பிரத்தனே கிளர்சந்நியாசி**
**யுரன்மிகு யாவரேனு முறவலஞ் சூழல் வேண்டும்**
**விரவுபாதகங்கண் மூன்றும் விளித்திடுங் கழுவாயீதே.**

(இ-ள்.) அதிகமேன்மையுள்ள காசிப்பதியில், வாழ்கின்ற பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி ஞானத்தாலுயர்ந்தவர் யாவராயினும், விதிவழி வலஞ்செயல்வேண்டும். மனம், வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களாற் சேருகின்ற தீவினையை யொழித்தற்குப் பிராயச்சித்தம் இதுவேயாகும்.எ-று.(கூ)

**வானவர் பலர்சுவாக்க மரீஇநம தாணைபேணி**
**யீனமின்றிருந்துங்காசி யெய்திட முயலாநிற்ப**
**ரூனமில் வசித்தல்சூழ்த லுவையிரண்டற்குநந்த**
**மானமார்கருணைவேண்டி மாதவம் பயில்வார பல்லோர்.**

(இ-ள்.) தேவர்கள் பலரும், தேவலோகத்திலிருந்து நமது ஆக்கினையைப் பாதுகாத்துச் சுகமாகவசித்தாலும், காசியை யடையவேண்டுமென்று முயற்சிப்பார்கள். காசித்தலத்தில் வசிப்பதற்கும் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ் செய்வதற்கும் ஆகிய இவையிரண்டிற்கும் நமது கிருபை யுண்டாகவேண்டுமென்று அனேகர் பெருந்தவஞ்செய்வார்கள். எ-று (௧௦)

**திருத்தகு காசிவைபபிற் செய்தபுண் ணியபாவங்க**
**ளுருத்தகு சிறியதேனு முலகத்துப பெரியதாகும்**
**பருத்தறங் குடிகொளந்தர்க் கிரகத்திற் பண்ணும்பாவம்**
**வருத்தமிக் கியற்றிநாளும் வளர்தரு மறிதராதால்.**

(இ-ள்.) சிறப்புற்ற காசித்தலத்திற்செய்த புண்ணியபாவங்கள் சிறிதாயிருந்தாலும் உலகத்தினிடத்து மிகப்பெரியதாக ஓங்கும். தருமங்களதிகரித்து நிலைத்திருக்கிற விசுவநாதராலயத்திற்குள் பண்ணும்பாவம் பெருந்துயரங்களைச் செய்வித்து நாளுக்குநாள் வளருமேயன்றிக் கெடுதியுறாது. எ-று. (௧௧)

உற்றகேத் திரத்துச்செய்த பாவங்க ளொருஙகுமாய்க்கும
பொற்றநம் மிருக்கையாய புண்ணிய கேத்திரங்கள்
கற்றவர் புகழுமந்தக் கேத்திரங் கதித்தபாவஞ்
செற்றமின் றுயகஙகா தீரத்தின் முருஙகிமாயும்.

(இ-ள்.) அவரவர்கள் வசிக்கின்ற இடங்களிற்செய்த பாவங்கள்யாவும் நாம் வசிக்கின்ற புண்ணிய க்ஷேத்திரங்களை யடைந்தால் நீங்கிவிடும். அறிவுடையவரால் புகழப்படும் அந்த ஸ்தலங்களில், வளர்ந்தோங்கிய பாவங்கள் சாந்தத்தை யுண்டாக்கும் கங்கைக்கரையில் வசித்தால் நாசமாகும். எ-று. (கஉ)

திருவளர் தெய்வக்கங்கா தீரத்துச்செய்தபாவ
முருவளர் காசிநீக்கு மோங்குகா சியிற்செய் பாவந்
தருவளர் பொழில்சூழந்தர்க் கிரகத்தைச் சாரமாயு
மருவளர் மலர்நீரந்தர்க் கிரகஞ்செய் மாபாவந்தான்.

(இ-ள்.) ஞானசம்பத்தை யதிகரிக்கச்செய்கின்ற தெய்வீகமுள்ள கங்கைக் கரையிற்செய்தபாவங்கள் ஒளிவளர்கின்ற காசித்தலத்தில் வசித்தால் நீங்கிவிடும். அக்காசியிற்செய்த பாவங்கள் பலவிருக்ஷங்கள் வளர்கின்ற சோலைசூழ்ந்த விசுவநாதராலயத்தைச்சேர்ந்தால் நாசமாகும். வாசனைவீசும் மலர்களையுடைய தீர்த்தங்களமைந்த விசுவநாதராலயத்திற்செய்த மகாபாவமானது. எ-று. (கங)

வச்சிரப் பசைபோலொட்டி மற்றெத னாலும்போகா
தச்சுற வருத்துமஃது மைஙகுரோ சத்தைச்சூழ
நச்சுத லொழிந்துமாயு மாதலா னலமேவேட்டோர்
பச்சிரத் தங்கால்பாயும் படிவலம் புரிதல்வேண்டும்.

(இ-ள்.) வேறொருகாரணத்தால் நீங்காது ஆன்மாவைத்தொடர்ந்து வச்சிரப்பசைபோலச் சம்பந்தித்து துன்பப்படுத்தும். பஞ்சக்குரோசத்தைப் பிரதக்ஷணஞ்செய்தால் விரும்பித்தொடரும் அப்பாவம் ஒழிந்துபோம். ஆதலால் நன்மையை விரும்பினவர் பசிய உதிரங்காலிற்பரவும்படி பஞ்சக்குரோசத்தை வலஞ்செய்தல்வேண்டும். எ-று. (கச)

மன்னிய காசிமூதூர் வசித்துமோ ரிடையூற்றாலே
துன்னிய வைங்குரோசஞ் சூழ்தரா தொழியுமாயின்
மின்னிய வாஙகுமீட்டு மேவுபு சூழல்வேண்டும்
பன்னிய காசிவாசம் பயந்தா யிடைச்சேய்போலும்.

(இ-ள்.) நிலைபெற்ற புகழுள்ள அநாதித்தலமாகிய காசிப்பதியில் வாசஞ்செய்தவர்கள், எதோ ஒருவிதமான தடையினாலே சிவலிங்கங்கள் நிறைந்த பஞ்சக்குரோசத்தைப் பிரதக்ஷணஞ்செய்யாமற் போவார்களானால் விளக்கமுள்ள அத்தலத்துக்கு மறுபடியும்போய் விரும்பத்தக்க அந்தப் பிரதட்சணத்தைச்செய்ய வேண்டும். குழந்தை, பெற்றதாயாரை யடைவதுபோல் ஆன்மாக்கள் காசித்தலத்தை யடையவேண்டும், எ-று. (கரு)

அவிமுத்த நகரமேவி யனைவர்க்கு மிதமேயெண்ணுஞ்
சவிமுத்த னிகமுன்னுன சகலமு மடையாநிற்பன்
குவிமுத்த முலையாய்கேட்டி குலவுகேத் திரசந்நியாசி
செவிமுத்தக் கங்கையாடித் திருநகர் வலஞ்சூழ்காலை.

(இ-ள்.) அவிமுத்தமென்னும் காசித்தலத்தையடைந்து எல்லாச்சீவர்களுக்கும் இன்பத்தையே நினைக்கின்ற ஒளியுள்ள பக்குவன், இவ்வுலகவின்ப முதலிய வெல்லாச்சுகங்களையும் பெறுவன். முத்துமாலையணிந்து குவிந்த குஜங்களையுடைய உமையேகேட்பாயாக. இக்காசியில் சந்நியாசஞ்செய்பவன் சாலவிமுனிவன் காதினல் விடுத்த கங்காநதியில் ஸ்நாநஞ்செய்து சிறந்த காசிப்பதியை வலஞ்செய்யும்போது. எ-று. (கசு)

பாவமெப் படியுமேவும் பாறுவ தெவ்வாறென்னி
னுவைச் சந்நியாசிக் ககங்கார நாசமொன்றே
மேவருங் கழுவாயாகும் வேறென்றும் வேண்டுங்கொல்லோ
தாவரு மனையவொன்றே சகலபாதகமும் போக்கும்.

(இ-ள்.) எவ்வகையிலும் பாவம்வந்து சம்பவிக்கும் அது ஒழிவது எவ்வாறென்றால் அந்த சந்நியாசிக்கு அகங்கார நாசமொன்றுமே செய்தற்கரிய பிராயச்சித்தமாகும் அதைத்தவிர வேறேயொன்றுஞ் செய்யவேண்டுமோ சகலபாதகங்களையும் அவ்வகங்கார நாசமொன்றுமே யொழித்துவிடும். எ-று. (கள)

கேடருஞ் சாந்தம்வாய்ந்த கேத்திர சந்நியாசி
நாடருங் கங்கையாடி நம்மைநின்னெடு பூசித்துப்
பாடருந் துண்டிதண்ட பாணிகேத் திரம்புரப்போர்
வீடருந் துர்க்கைபஞ்ச விநாயக ரிவரைப்போற்றி.

(இ-ள்.) கெடுதலில்லாத பரமசாந்தத்தையடைந்த அந்த க்ஷேத்திர சந்நியாசி மகிமை குறித்தற்கரிய கங்காஸ்நாநஞ்செய்து நம்மையும் உன்னையும் பூசித்து பெருமையுள்ள துண்டிராஜ கணபதியும், தண்டபாணியும், வைரவக்கடவுளும், துர்க்காதேவியும்,பஞ்சவிநாயகரும் ஆகிய இவர்களைவணங்கி. எ-று. (கஅ)

நிலையசி வரணைமுன்ற நிகழுமா வரணமேழு
மலைவறச் சூழ்ந்துதேவ தேவியர் வணக்கஞ்செய்து
தலைமையன் பொடுமிராவொன் றிரண்டுமூன் றங்குத்தங்கிக்
கலையமை தண்டபாணி காமரு பதம்பூசித்து.

(இ-ள்.) நிலைத்தகாசித்தலத்தைச் சிந்தித்துக்கொண்டு விளக்கமுற்ற எழு ஆவரணங்களையும் வலம்வந்து ஆங்காங்குள்ள தேவதேவியர்களைப்பணிந்து முதன்மையான அன்புடன் மூன்றுராத்திரி இரண்டு ராத்திரி அல்லது ஒரு ராத்திரியாயினும் அவ்விடத்து வாசஞ்செய்து கலாவல்லவனுகிய அழகிய தண்டபாணியின் பாதங்களைப்பூசைசெய்து. எ-று. (கக)

பலமறை முழங்குதண்ட பாணியே யித்தலத்து
நலமிகு சந்நியாசம் புரிநர்பா னன்புமிக்காய்
நிலவுமிவ் வைங்குரோச யாத்திரை நிரப்புக்கென்று
குலவுற விரந்துபின்னர் நமைக்குணத் திறைஞ்சல்வேண்டும்.

(இ-ள்.) பலவேதங்களால் பிரதிபாதிப்பதற்குரிய தண்டபாணிக்கடவுளே காசிப்பதியில் நன்மைமிகுந்த சந்நியாசம் செய்பவர்களிடத்து அன்பு மிக்கவரோ விளக்கமமைந்த இப்பஞ்சக்குரோச யாத்திரையை முடித்தருள்வீரென்று குறையிரந்து அதன்பின்னர் நம்மை நற்குணத்தோடு பணியவேண்டும். எ-று. (௨௦)

ப-ம். நமைக்குணத்து என்பதற்கு, தண்டபாணிக்குக் கீழ்ப்புறத்திலெழுந்தருளிய விகுவநாயகரை என்று பொருள் கூறுவாருமுளர்.

பொலிதரு தண்டபாணி பூசனையெற்றுக் கென்னின்
மலிதரு காசியுள்ள வளமெலாம் வெளிப்போகாம
லொலிதரு வரங்கொண்டுள்ளா னெங்குநம் பாஙகரின்னுஞ்
சலிதரு தரமிலன்றன் கேத்திர சந்நியாசி.

(இ-ள்.) பேரறிவால் விளங்குகின்ற தண்டபாணிபூசையை யாதுநிமித்தஞ் செய்யவேண்டுமெனின் புண்ணியம்நிறைந்த காசியிலுள்ள வளப்பங்கள்யாவும் வெளியிற்போகாமல் பாதுகாக்கின்ற வரத்தை நம்மிடத்துப்பெற்றுக்கொண்டு நம்மைவிட்டு நீங்காது சலியாதமனத்துடன் இத்தலத்திற்கு அவன் சந்நியாசியாக இருத்தலால். எ-று. (௨௧)

ஆதலி னவனைபபோற்றி யநுஞைகொண் டிடுதல்வேண்டுங்
காதலிக் கழுவாய்வீணை முனிவற்குங் கட்டுரைத்தோ
மேதக வனையான்றண்ட பாணியை விழைந்துபோற்றிப்
போதலைவங் குரோசஞ்சூழ்ந்து பொருவருஞ் சித்திபெற்றான்.

(இ-ள்.) ஆதலினால் அத்தண்டபாணியை வணங்கி அநுமதிபெற்றுக்கொண்டு பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ்செய்தல்வேண்டும் விரும்பத்தகும் இப்பிராயச்சித்தத்தை வீணைவல்லவனாகிய நாரதமுனிவனுக்கும் உபதேசித்திருக்கின்றோம். மேன்மையுள்ள அம்முனிவன் தண்டபாணியைப் பிரீதியுடன் வணங்கிப் பஞ்சக்குரோசப்பிரதக்ஷணஞ்செய்து ஒப்பற்றசொரூபசித்தியடைந்தனன். எ-று (௨௨)

அறிந்தவ ருள்ளுஞ்சில்லோ ரைங்குரோ சமுஞ்சூழாராய்ச்
செறிந்தனர் விடயபோகந் தீவினை வேறற்பாற்றோ
முறிந்தவெம் பாசத்தோர்க்கே முயற்சியுண் டாகும்வெள்வே
லெறிந்தகண் மடவார்போகத் திழிந்துழி தருவரேனோர்.

(இ-ள்.) தெரிந்தவர்க்குள்ளே சிலபேர் பஞ்சக்குரோசப் பிரதக்ஷணஞ் செய்யாமல் விஷய போகங்களிலழுந்தினார்கள் தீவினையை அவர்களால் வெல்லமுடியுமோ முடியாது கொடியபாசத்தை யொழிக்குந்தரமுடையோர்க்கே

வலம்வரத்தக்க முயற்சியுண்டாகும் மற்றையோர் யாவரும் வெள்ளிய வேலைப் பழித்த கண்களையுடைய மாதர்போகங்களில்மூழ்கி யலைவார்கள். எ-று. (உ௩)

என்னசா தனஞ்செய்தாலு மென்னபா வனைசெய்தாலு
மென்னசாத் திரங்கற்றாலு மென்னபுண் ணியஞ்செய்தாலு
மென்னயா கஞ்செய்தாலு மெய்துறார் முத்தியின்ப
மென்னரும் புகழுங்காசி யெய்திடி னெய்தலுண்மை.

(இ-ள்.) யாதுசாதகத்திற் பழகினும், யாதுபாவனைபுரிந்தாலும், எந்த நூல்களை உணர்ந்தாலும், யாதுதருமஞ் செய்தாலும், எந்தயாகஞ் செய்தாலும், மோக்ஷசுகத்தைப் பெறமாட்டார்கள். யாவரும் புகழப்பெறுகின்ற காசித்தலத்தையடைந்தால் முத்திபெறுதலுண்மையாகும். எ-று. (உ௪)

அளவறுஞ் சன்மந்தோறு மாற்றிய புண்ணியத்தா
லளவறு பெருமைவாய்ந்த வரும்புகழ்ச் சைவனுவா
னளவறு காட்சிநம்மை யாற்றுபூ சனையாலெய்து
மளவறு ஞானானந்த மளித்திடு மெளிதிற்காசி.

(இ-ள்.) எண்ணிறந்த பிறவிகடோறுஞ்செய்த தருமபலத்தினால் அளவற்ற பெருமையோடு சிறந்த சைவனாகப் பிறப்பான் அவ்வாறு பிறந்தசைவன் நெடுங் காலம் நம்மைப்பூசித்தால் காசியைத்தரிசிக்கப் பெறுவன் அக்காசித்தலமானது அளவற்ற ஆனந்தத்தைக்கொடுக்கின்றஞானத்தை எளிதாகத்தரும். எ-று. (உ௫)

எத்தலத் துயிர்க்குநின்னோ டெண்மையி னொருநாஞ்சென்று
கைத்தல நெல்லிபோலக் காதிடை யுபதேசித்தன்
முத்தலம் புகழுநாளு முழுத்தல மாயகாசிக்
கத்தல மேயொப்பன்றி மற்றுண்டோ வறிதியென்றான்.

(இ-ள்.) வேறே எந்தத்தலத்திலாவது இறந்துபோன ஜீவகோடிகளுக்கு உன்னோடு நாம் எளிதாகப்போய் உள்ளங்கை நெல்லிக்கனிபோலக் காதினிடத்து உபதேசிக்கின்றோம் இல்லை திரிலோகத்தாரும் புகழ்தற்குரிய நிறைந்தமகிமையுள்ள காசிப்பதியில் சதாகாலமும் மேற்சொல்லியபடி உபதேசிக்கின்றோமாதலால் அத்தலத்திற்கு அதுவே சமானமல்லாமல் வேறொன்றுள்ளதோ நீயறிவாயென்று சிவபெருமான் பார்வதிதேவியாருக்குத் திருவாய்மலர்ந்தனர். (உ௬)

காசிவாசநியமமுரைத்த அத்தியாயம்முற்றும்.

ஆகபடலம் ௰க-க்கு திருவிருத்தம், சா௱௩௰௪.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பன்னிரண்டாவது மாதேசன் முத்தி யடைந்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெலா மீன்றசெல்வி யுமபர்தம் பிரானைத்தாழ்ந்து
விலகுபா தகங்களெல்லாம் வீத்திடு கழுவாய்சொற்றாய்
இலகுமக் கழுவாயாற்றற் கியல்பிலா முடவருமு
ரலகுதீா குருடர்கூன ராதியா யாதுசெய்வார்.

(இ-ள்.) சர்வலோகங்களையும் உண்டாக்கிய உமாதேவியார் தேவரே கிய மஹாதேவரை வணங்கி பாதகங்களெல்லாம் விலகி ஒழியத்தக்க பிர தத்தைக் கட்டளையிட்டீர் விளங்குதலுள்ள அப்பஞ்சக்குரோசப் பிரதட்சண ய்ய சக்தியில்லாத முடவர்களும், ஊமர்களும், அனேகமாயுள்ள குருடர்க் கூனர்முதலானோர்களும் யாதுசெய்வார்கள். எ-று.

தொழிலொன்று மியற்றாராகிச் சுகத்திருக் கின்றமன்னர்
பொழிகின்ற செல்வமிக்கோர் பூப்படிற் புலக்குமேனிக்
கழிகின்ற நுகபினல்லா ரிவரெது கடைப்பிடிப்பார்
பிழிகின்ற கடுக்கையண்ணல் பேசெனப பெருமான்பே

(இ-ள்.) பிரயாசையைத்தருகின்ற தொழிலொன்றையுஞ் ராகி சுகத்திலிருக்கின்ற அரசர்களும், அதிக சம்பத்தாற் சிறந்த பம் மேலேபடினும் வாடுகின்ற தேகத்தையும் நாளுக்குநாள் மடை யையும் உடைய மாதர்களும் ஆகிய இவர்கள் எந்த உறுதியைப்பற் ளுவார்கள். தேன் பொருந்திய கொன்றைமாலையணிந்த மஹாதேவரே தே வரீர் கட்டளையிடவேண்டுமென்று கேட்க, சிவபெருமான் சொல்லத்தொடங் கினர். எ-று. (உ)

சிறுபொருள் கைக்கொண்டோருஞ் செயத்தகு தருமஞ்செய்தா
லுறுபொருள் கைக்கொண்டோர்செ யறத்தினு முயர்ந்துதோன்று
முறுபொருள் கைக்கொண்டோரு முயர்வுறாத் தருமஞ்செய்யிற்
சிறுபொருள் கைக்கொண்டோர்செய் யறத்தினுஞ் சிறிதாய்த்தீரும்.

(இ-ள்.) பொருண் மிகுதியில்லாதவர்களும் செய்யத்தக்க தருமரகசியங்க ளை விசாரித்துச் செய்வார்களாகின் பெரும்பொருளை யுடையோர் செய்யத் தகும் தருமத்தைப் பார்க்கினும் மேன்மையுடையதாகத் தோன்றும். பிரபலசம்பத் தையுடையோர்களும் மேன்மையாகாத தருமங்களைச் செய்வார்களாயின் அற்ப திரவியங்களையுடையோர்செய்யும் தருமத்தினும் சிறிதாகமுடியும். எ-று. (ங)

பாத்திரங் காலந்தேயம் பகரிவை யாதியாய்ந்து
சாத்திர மறையினூற்றாற் றருமஞ்செய் பவர்யாரேனுந்
தோத்திர மருவுங்காசி துன்னுதற் கையமில்லை
நேத்திரம் புனைந்துதேம்பி நிரபபுறு மருங்குனல்லாய்.

(இ-ள்.) பட்டாடையணிந்து குஜங்களைத்தாங்காது வருந்தி நாளுக்குநாள் சிறுத்துவிடுகின்ற இடையையுடைய உமையே சற்பாத்திரத்தையும் புண்ணியகாலத்தையும் உத்தமதேசத்தையும் இவைகளெல்லாவற்றையும் ஆராய்ந்து வேதங்களிலுஞ் சாத்திரங்களிலும் விதித்தவாறாக உணர்ந்து தருமஞ்செய்பவர்கள் எக்குலத்தினரேயானாலும் புகழமைந்த காசித்தலத்தை யடைதற்குச் சந்தேகமில்லை. எ-று. (௪)

திருவளர் காசிதன்னிற் சிவலிங்கப் பதிட்டைசெய்தல்
குருவளர் தளியுண்டாக்கல் கூபத டாகஞ்செய்த
லொருவளர் கிரகங்கட்டி மறையவர்க் குதவலாதி
வெருவளர் பாவமெல்லாம் வீட்டிவீட் டுய்க்குமன்றே.

(இ-ள்.) ஞானசம்பத்தை மிகுதியாயுற்ற காசிப்பதியில் சிவலிங்கப் பிரதிட்டைசெய்தல், ஒளியுள்ள ஆலயங்கட்டுவித்தல், கிணறுகளையும் குளங்களையும் உண்டாக்குதல், அலங்காரமமைந்த வீடுகளைக்கட்டி வேதமுணர்ந்த பிராமணர்களுக்குதவுதன்முதலிய புண்ணியங்களைச்செய்தால் அச்சத்தைவளரச்செய்யும் பாவங்கள் எல்லாவற்றையும் நீக்கி முத்தியிற்சேர்க்கும். எ-று. (௫)

நாத்திகர் பாதகத்தர் நம்பொணுக் காசிவைப்பி
லேத்திடு மனையொன்றாக்கி மறையவர்க் கீவரென்னிற்
சாத்திர மறையோர்தங்கித் தனியமர் நாளொன்றற்குத்
தோத்திர மனுவோரெட்டுச் சொன்னநல் கிடுபேறெய்தும்.

(இ-ள்.) கடவுளில்லையென்கிற நாஸ்திகவாதிகளும் மகாபாதகஞ்செய்பவர்களும் உண்மையெனக்கொள்ளாத காசித்தலத்தில் புகழ்பெற்ற ஒரு வீடுகட்டி வேதப்பிராமணர்களுக்குக் கொடுப்பார்களானால் சாஸ்திரங்களையும் வேதங்களையும் உணர்ந்த அப்பெரியோர்கள் விரும்பி அக்கிரகத்தில் வசிக்கின்ற நாள் ஒன்றினுக்கு புகழ்பெற்ற மனுக்கள் எட்டுபேருடைய காலத்தளவும் பெரியோர்களுக்குச் சொர்ன்னதானங்கொடுத்த பலனை அவ்வீடுகட்டித் தானஞ்செய்தவர்கள் பெறுவார்கள். எ-று. (௬)

ஈனமில் காசிமூதூ ரொருமனை யியற்றிநல்கி
லூனமில் லறம்வாழ்நாண்மிக் கோங்குமா பாவந்தேயு
மானவத் தலத்திலங்கை யளவுமண் கொடுப்போர்தாமுங்
கானநற் கடிக்கையெங்கூ றெனமறை கரையாநிற்கும்.

(இ-ள்.) உயர்ச்சியுள்ள பெரும்பதியாகிய காசித்தலத்தில் ஒரு வீடுகட்டி கிரகஸ்த்தாச்சிரமத்திலுள்ள பெரியோர்களுக்குக் கொடுத்தால் அதில் அவர்கள்

வாழும்போது கொடுத்தவர்களுடைய பெரும்பாதகமொழிந்துபோகும் ஆயுள் வளரும். மகிமையுள்ள அத்தலத்தில் உள்ளங்கையளவு பூமியைச் சற்பாத்திரதானஞ்செய்தவர்கள் மணத்தோடு சிறந்த கொன்றைமாலையணிந்த நமது வடிவமாவார்களென்று வேதங்கள் கூறும். எ-று. (எ)

அன்னமெள் ளிழுதுகன்னி யான்மணி மறைபூணுடை
சொன்னமற் றுள்ளதானந் தலஞ்சுகா சியிற்கொடுப்பா
ரென்னரு மெமதுகூறே யெய்திடு மின்பமுத்தி
முன்னமோர் காதையுண்டா லதனையு மொழியக்கேட்டி.

(இ-ள்.) சாதம, திலம், நெய், கன்னிகை, பசு, நவமணி, வேதபுத்தகம், ஆபரணம், வஸ்த்திரம், தங்கம், மற்றுமுள்ளதானங்களை சிறப்புற்ற காசித்தலத்தில் சற்பாத்திரத்திற் செயவார்களானல் செய்பவர்கள் யாவராயினும் எனதுவடிவத்தைப்பெறுவார்கள். இன்பமயமான முத்தியுஞ் சித்திக்கும். இதற்கு முன்னடந்த கதை யொன்றிருக்கின்றது. அதனையுந் தெரிவிப்போங் கேட்பாயாக. எ-று. (அ)

வருகதிர்க் குலத்துவந்தான் மாதேச னென்னும்பேரான்
பொருவரு மரசர்செய்கை புந்தியுட் பேணுனகிக்
கருதுவா ணிபமேசெய்வான் கடுங்குணங் கைக்கொண்டுள்ளான்
மருவருஞ் செம்பொன்மேரு மலையெனக் குவித்துவைத்தான்.

(இ-ள்.) பரம்பரையாய் வருகின்ற சூரியகுலத்திற் பிறந்து மாதேசனென்னும் பெயருள்ளவன் சமானமில்லாத அரசருடைய நீதியை மனதில் விரும்பாதவனுகி சதாகாலமுஞ் சிந்தித்தற்குரிய வியாபாரமே செய்கின்றவன் கொடியகுணங்களை கைக்கொண்டவன் கிட்டுதற்கரிய திரவியங்களைச் சம்பாதித்து மேருமலையைப்போலக்குவித்தனன். எ-று. (கூ)

கங்கைநீ ராடனம்மைக் கண்டுதாழ்ந் திடுதலாதிப்
பங்கமி றொழிலெலாஞ்சொப் பனத்தினுஞ் செய்யாணுகி
யெங்குமொன் றனுக்குமூன்று யுறுதியோ டிசைத்துச்செம்பொன்
சிங்கலி லாதுசேர்த்தான் றீவினையோடுமாதோ.

(இ-ள்.) கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செயதல் நம்மை யன்புடன்கண்டு வணங்குதல் முதலிய குற்றமற்ற புண்ணியதொழில்களைக் கனவினுஞ் செய்யாதவனுகி யாவராயினும் ஒன்றுக்கு மூன்றுக வட்டிசேர்த்துக்கொடுக்கும்படி லாபம்பேசி பொருள்களைகொடுத்து திரவியங்களைச் சிதைவின்றி பாவக்குவியலோடு சேர்த்தனன். எ-று. (க0)

இனையனுய் வாழுநாளி லில்லவ ளிறந்தாளர்க
வினையமிக் கழகுவாய்ந்த விலைமக ளொருத்திதன்னை
மனையகஞ் செறியசேர்த்து மற்றவ ளோடும்வாழ்நா
ளனையனு மினையன்செய்கை யறிந்துள்ளே வெறுப்புவைத்தாள்.

(இ-ள்.) இத்தன்மையனாய் வாழுங்காலத்தில் அவன் மனைவி யிறந்துபோனாள். புத்திநுட்பமும் அழகுமுள்ள ஒருதாசியை தன்வீட்டில் மனையாளாகச் சேர்த்துக்கொண்டு அவளோடு வாழுங்காலத்து இவன் துர்க்குணத்தை அவளறிந்து மனதில் வெறுத்திருந்தனள். எ-று. (கக)

தருமமொன் றுனுஞ்செய்யான் றனம்வறி தீட்டிவைப்பா
னருமருந் தன்னார்பாற்போ யன்புசெய் துண்மைகேளான்
வெருவரும் பாவியென்றே மேதினி யிழிக்குமென்ன
கருமமீங் கிவனைக்கூடிக் காதலற் பேறுமற்றேம.

(இ-ள்.) யாதொரு தருமத்தையுஞ் செய்யாமல் திரவியத்தைச் சம்பாதித்து சேகரித்துவைத்திருக்கின்றான். அரிய தேவாமிர்தத்தையொத்த பெரியோர்களிடத்திற்குப்போய் அன்புவைத்து நீதியொன்றையுங் கேளாதிருக்கின்றான். அச்சத்தைத்தரும் மாபாவி இவனென்று உலகத்தார் நிந்தைசெய்கிறார்கள். இவனை கூடுதற்கு நான் என்ன பாவஞ்செய்தேன் புத்திரசம்பத்து மில்லாதிருக்கின்றேன். எ-று. (கஉ)

என்றுளத் தெண்ணிமாறுக் கவலையுற் றிருந்தாளாக
வொன்றுதன் கருமந்தீர்த்து மாதேச னுறையுள்வந்தா
னன்றவ ளிருக்கைநோக்கி யாவியே யனையாயென்னோ
வான்றலி றுயரமுற்று யட்டிலிற் புகையுங்காணேன்.

இப்படியென்று மனதில் சிந்தித்து நீங்காக் கவலைகொண்டு ...னள். மாதேசவரசன் தனது வியாபாரத்தொழில் செய்யுமிடத்...ட்டிற்குவந்து அவள் முகவாட்டத்துட னிருப்பதைப்பார்த்து என் ...யொத்தமாதே யாதுகாரணமாக நீங்காததுயரடைந்தனை சமையல் ... புகை யெழும்பவுமில்லை. எ-று. (கந)

பசிவயிற் றெழுந்ததென்னோ படர்ந்தது பகர்தியென்றான்
கசிவரு மனத்தினானைக் காரிகை நோக்கியட்டுப்
புசிவினை புரிந்தாலந்தோ பொருட்கேடுண் டாமேயென்றாள்
வசிநுனை வாளிற்பாயும் வார்த்தைமா தேசன்கேட்டு.

(இ-ள்.) வயிற்றிற்பசி அதிகரிக்கின்றது யாதுநடந்ததுசொல்வாயென்றனன். இரக்கத்துடன் கேழ்க்கின்ற மாதேசனை அவ்விலைமாதுபார்த்து சமைதது உண்டால் ஐயோ? பொருள் நஷ்டமாகுமேயென்றனள். கூர்மையுள்ளவாளைப் போல துயரப்படுத்தும் அவ்வார்த்தையை மாதேசவரசன்கேட்டு. எ-று. (கச)

என்னிது பகர்ந்தாயென்ன வெடுத்தநின் சன்மம்பாழே
நன்னிலை சிறிதுமில்லாய் நல்லவர் பாலுஞ்சேராய்
புன்னிலை யடைந்தாய்நின்னைப் புணர்வது தோடந்தோட
மென்னிலை யிதுவேயென்றாண் மாதேச னியம்புகின்றான்.

(இ-ள்.) இது என்னகாரணம் இவ்வாறுகூறினையென்றுகேட்க அருமையாகவெடுத்த உன் சனனம் வீணானது நல்லநடை சிறிதுமில்லாதிருக்கின்றனை. நல்லோர்களை யடுக்கவில்லை. அற்பத்தன்மை யடைந்தனை. உன்னைக்கூடுவது பாவம் பாவம் எனதுவருத்தம் இதுவாகுமென்ற மாதைப்பார்த்து மாதேசன் கூறுகின்றனன். எ-று. (கரு)

கருப்பையு முணவுநாடிக் கடிதனை யகத்துச்சேர்க்கும்
பொருப்பைநேர் பொருளானாலும் போக்குதல் செய்வாருண்டோ
விருப்பையப் பொருண்மேல்வைத்தால் விருத்தியா மின்றேலின்று
மருப்பைநேர் முலையாயெங்கோ வறிந்திது புகன்றாயென்றான்.

(இ-ள.) காரெலியும் ஆகாரத்தை யுததேசித்து சேர்த்துக்கொள்ளவேண்டியகாலங்களில் தானியமுதலியவற்றை வயலிடத்துள்ள வளைகளிற்சேர்த்துக்கொள்ளும் மலையையொத்த பெரும்பொருளானாலும் வேண்டாமென்று நீக்குவாரில்லை பொருளின்மீதுவிருப்பம்வைத்தால் விருத்தியடையும் இல்லாதிருந்தால் விலகிப்போம் தாமரை யரும்புபோலும் குஜங்களையுடைய மாதே நீ எவ்விடத்தறிந்து இவ்வார்த்தை கூறினையென்றான். எ-று. (கசா)

விலைமக ளதனைக்கேட்டு வெகுண்டுசே யாதியில்லாய்
நிலையமை காசிவைப்பி னிரம்புபா தகங்கள்செய்வாய்
தலைமைசற் றில்லாய்நின்னைச் சாரினு நரகஞ்சாரும்
கொலைஞரும் விரும்பாத்தீமை குயிற்றிநீ வாழ்தியென்றாள்.

(இ-ள்.) அந்த வாக்கியத்தை கணிகைகேள்வியுற்று கோபித்து குழந்தைமுதலிய சம்பத்தில்லா திருக்கின்றனை மகிமைதங்கிய காசித்தலத்து வசித்தும் மகாபாதகங்களைச் செய்கின்றனை உத்தமநடை சற்றுமில்லையாயினை கொலைத்தொழில் செய்வோரும் விரும்பத்தகாத உலோபமுதலிய கொடுமைகளைச் செய்து வாழ்கின்றனை உன்னைச் சேர்ந்தாலும் நரகம் சம்பவிக்கும் என்றாள். எ-று. ()

பிரியமார் மடந்தாயென்ன பிணக்குநீ கொண்டாய்வேண்டி
னரியதொன் றில்லையேநிற் காடையா பரணமாதி
விரியமற் றெதுசொன்னாலும் பொருட்செல வியம்பாதோம்பு
கரியகட் குயிலேயென்று மாதேசன் கரைந்துநின்றான்.

(இ-ள்.) இஷ்டமுள்ளமாதே நீயேன் உள்ளே வெறுப்படைந்தனை நீ வேண்டினால் அருமையான தொன்றுமில்லை. உனக்கு வஸ்திரம் ஆபரண முதலானவைகள் எது வேண்டுமென்று சொன்னாலும் அதிக பொருள் செலவாகாதிருக்கும்படி சொல்லுவாயாக கருவரிபடர்ந்த கண்களையுடைய குயிலையொத்தமாதேயென்று மாதேசன் இரக்கமாகக் கூறினன். எ-று. (கஅ)

மன்னர்தங் குலத்துவந்தாய் மாண்பொருண் மிகவும்பெற்றாய்
நன்னர்நின் மனையுண்மேவி நான்மறை யாளராதி

யென்னரு நுகரலாமே யெந்நாளேனு முண்டேர
பின்னரு முரைப்பதென்னோ பேதைநீ போதியென்றாள்.

(இ-ள்.) நீயரசர் மரபிற் பிறந்து மாட்சிமையுள்ள பெரும்பொருளுடையனுயினை அலங்காரமுள்ள உன்வீட்டில் நான்கு வேதங்களை யுணர்ந்த பிராமணர் முதலிய யாவரும் வந்து சுகபோஜனஞ் செய்யலாமே எந்தக்காலத்திலாவது அவ்வாறு நடந்திருக்கின்றதோ வீணுணவார்த்தையை மேலு மேலும் கூறுவதினுற் பயன்யாது அறிவில்லாதவனே அப்பாற் போவாயென்றனள். எ-று. ()

பொதுமகள் வார்த்தைகேட்டுப் புழுங்கிய மனத்தனுகி
யெதுநுவன் றாலுங்கேட்ப னினியொழி கவலையென்றான்
கதுமெனக் காசிமேன்மை கற்றவர் தம்பாற்கேட்டு
மதுமலர்த் தாரோயிங்கு வம்மெனப் போக்கினளே.

(இ-ள்.) அவ்விலைமாது சொன்னவார்த்தையைக் கேள்வியுற்று வருந்திய மனமுள்ளவனுகி நீ யெதைச்சொன்னுலும் சொன்னபடி கேட்கின்றேன் கவலையொழிவாயென்ற மாதேசனைப்பார்த்து காசிரகசிய தருமங்களை அறிந்த பெரியோர்களிடத்து விரைவாகச்சென்று கேள்வியுற்று தேன்துளிக்கின்ற மலர் மாலையணிந்தவனே பின்பு இங்குவருவாயென்று அனுப்பிவிட்டனள். எ-று. (உ0)

சிவகதை கேட்கப்புக்காற் செலவுவந் திடுமேயென்று
கவலைகொண் மனத்தனுகிக் கமழ்திரி லோசனைப்பே
ருவமையில் கட்டமுற்று ஞாங்குறை மேலோர்பாவி
நவவர வுணர்ந்துமிக்கு நக்கிறும் பூதுகொண்டார்.

(இ-ள்.) சிவ சரித்திரத்தைக் கேட்கப்போனல் ஏதாவது பணச்செலவு நேரிடுமென்று கவலையடைந்த மனமுள்ளவனுய் விளக்கமுற்றுச் சமானமில்லாத தாயதிரிலோசனை கட்டத்தைச் சேர்ந்தனன். அவ்விடத்திருக்கின்ற பெரியோர் ஒருககாலும் வராத பாவியாகிய மாதேசன் நூதனமாக வருவதைப்பார்த்து பெருநகை செய்து ஆச்சரியங் கொண்டனர். எ-று. (உக)

அனையவர் தனதுசெய்கை யறிந்தவ மதித்தல்கண்டும்
வினைகெடும் வருத்தத்தோடு மிக்கெழு கவலையோடுந்
துனையமா தேசநீங்கான் றூரத்தே யிருந்தானுகப்
புனையவாங் கதையுளொன்று போந்தது புகன்றானுர்.

(இ-ள்.) அப்பெரியர். தான் வருவதையறிந்து அவமதிக்கின்றார்களென்பதைத் தெரிந்தும் மேன்மேலுண்டாகிற கவலையோடும் தீவினை கெடுங்காலம் சமீபித்தலால் மாதேசன் நீங்கிப்போகாமல் தூரத்தில் உட்கார்ந்தனன். அச்சிவகதைகளுக்குள் விசித்திரமான ஒருகதை நேர்ந்தது அப்பெரியோர் அக்கதையைச் சொன்னுர்கள். எ-று. (உஉ)

குலவிய காசிவாழ்வான் குணமிகு தருமபால
னிலவிய பொருளைப்பேணு னெடும்புக முறமேபெட்டான்

கலவிய பத்திவாய்ந்தான் கனிசிவ தருமஞ்செய்வா
னுலவிய பவஞ்சவாழ்க்கை யுலப்பிலா துவப்பான்வேறு.

(இ-ள்.) விளக்கமமைந்த காசிப்பதியில் வாழ்பவனும், நற்குணமுள்ளவனும், பொருளாசை யில்லாதவனும், பெரும்புகழைத்தருந் தருமத்தை விரும்புவோனும், நிறைந்த சிவபக்தியுள்ளோனும், மனதைக்கனிவிக்குஞ் சிவபுண்ணியங்களைச் செய்பவனும் அதிகரிக்கும் பிரபஞ்ச வாழ்விலழுந்திக் கெடாது வேறாகிக் களிப்பவனுமாகிய தருமபாலனென்னும் பெயருள்ளானொருவனிருந்தனன். எ-று. (௨௩)

தருமமே யுலகம்போற்றச் சகலகா ரணமதாகுந்
தருமமே யழியாதென்றுந் தாபர மாகிநிற்குந்
தருமமே தனைவேட்டோர்க்குச் சவுக்கிய மனைத்துநல்குந்
தருமமே முத்திசேருஞ் சாதன மென்றுட்கொள்வான்.

(இ-ள்.) தருமமே அறிவுடையோர் பாதுகாக்கின்ற எப்பொருட்குங் காரணமாகும் தருமமே எந்நாளிலும் அழிவில்லாது நிலைத்து நிற்கும், தன்னை விரும்பிச் செய்வோர்க்குத் தருமமே எல்லாச் சுகங்களையுங் கொடுக்கும், தருமமே முத்தியைப் பெறுதற்குரிய சாதனமாகுமென்று உள்ளத்திற் சிந்தித்தனன். எ-று.

பொருள்விருப் புடையானேடிப் புகும்பெரு நரகமென்று
மருள்விருப் புடையானின்ப மார்ந்தினி தமருமென்றுந்
தெருள்விருப் புடையானுகிச் செகதல மறியச்சொல்வான்
மருள்விருப் புடையானுகான் மற்றவன் குணம்யார்சொல்வார்.

(இ-ள்.) பொய்ப்பொருளில் ஆசையுடையோன் (மரணம் வந்தால்) வேகமாகச் சென்று நரகத்தையடைவானென்றும் மெய்ப்பொருளாகிய திருவருளில் விருப்புடையோன், பேரின்பானுபவத்தைப் பூரணமாகப்பெற்று முத்தியடைவானென்றும் (புண்ணியப்பேற்றாலறிந்து) மெய்ஞ்ஞானத்தில் ஆசையுள்ளவனாகி விவேகிகளுணர்ந்து பயனுறும் வண்ணமாகப் போதிப்பான் ஒருக்காலும் மயக்கநெறியிற் செல்லான் அப்புண்ணியவானுடைய சற்குணவியல்பை யாவர் தெரிவிப்பார்கள். எ-று. (௨௫)

அன்னவன் பொருண்முன்யாவு மநித்திய மென்றுதேர்ந்து
பன்னரு மன்னதான முதற்பல தானஞ்செய்து
நன்னர்கொள் விசுவநாத நம்பனை யடைந்தானென்று
மன்னவன் கேட்கச்சொன்னர் மாணவை யிருந்தமேலோர்.

(இ-ள்.) அப்புண்ணியவான் செல்வமுதலியயாவும் அழிந்து போகத்தக்கனவாமென்று தெளிந்து சொல்வதற்கரிய மகிமையுள்ள அன்னதான முதலிய பலவகைத் தானங்களையுஞ் செய்து (பின்னர்) இன்பவடிவாகிய விசுவநாதர் பாதங்களைச் சேர்ந்தானென்று மாட்சிமைதங்கிய சபையிலுள்ள பெரியோர், மாதேசவரசன் கேட்கும்படி சொன்னர்கள். எ-று. (௨௬)

அன்னது கேட்டபோதே யரும்பொருட் செலவேசொற்ற
தின்னதென் றகத்துக்கொண்டான் றன்மனை யிடத்துவந்து
நன்னாகொள் புராணங்கேட்டே னவிலுவ துணர்ந்தேனங்கா
யின்னல மறையோர்க்கேற்ற சுவையறு தியற்றுகென்றான்.

(இ-ள்.) பெரியோர் கூறிய அக்கதையைக் கேட்டபோது இச்சிவகதை அரிய பொருட்செலவைக்குறித்தே சொல்லுகின்றதென்று, மனதில் எண்ணினவனாகித் தன்வீட்டிற்குவந்து நலத்தைக்கொண்ட சிவபுராணம் படிக்கக்கேட்டேன் அதிற் சொல்லிய விஷயங்களைத் தெரிந்தேன் பெண்களிற் சிறந்துள்ளவளே. இன்பவடிவமாகிய பிராமணர்களுக்குத்தக்க அறுசுவையோடுங் கூடிய அன்னத்தைச்சமைப்பா யென்றனன். எ-று. (உஎ)

கணிகையு மவ்வாறுக்கிக் கலத்தெதிர் படைத்துவைத்து
மணிகெழு தோளாயுண்க மாவென வுபசரித்தா
ளணிகிள ரதிதியாரோ ரடைந்துணி னுண்பேனென்றான்
பணியிடை மடந்தை சில்லோ ராவயிற் படரச்செய்தாள்.

(இ-ள்.) விலைமாதும் மாதேசன் சொல்லியபடி சமைத்து உண்பாத்திரத்திற் பரிமாறி அழகுதங்கிய புஜங்களையுடையோனே உண்ணக்கடவையென்று உபசரித்தாள். அதிகன்மையுள்ள அதிதிகளாயுள்ளோர் வந்து முந்திபோசனஞ்செய்தால் நானுண்பேனென்றனன். சுருங்கிய இடையினையுடைய அவ்விலைமாதும், சில நல்லோர் அவ்விடத்து வரும்படி செய்தனள். எ-று. (உஅ)

வந்தநல் லவர்கள்பொல்லா மாதேசன் முகத்தைநோக்கி
யிந்தமா பாவிவீட்டி லருந்திடே மென்றிரிந்தார்
மந்தவோர் பூனைதன்னை யழைத்திட மொத்துவானென்
றந்தமார்ச் சாலமோட வனையனு மிறும்பூதுற்று.

(இ-ள்.) உண்ணும்படிக்கு வந்த பெரியர் பாவியானமாதேசன் முகத்தைப்பார்த்து இக்கொடியோன் மனையிற் போசனஞ் செய்யமாட்டோமென்று போனார்கள். பின்பு ஒரு பூனையையழைக்க, அடிப்பானென்று எண்ணிக் கொண்டு, அப்பூனை ஓடிப்போக அம்மாதேசனும் ஆச்சரியத்தையடைந்து.எ-று(உகூ)

வெளிவந்து கொடியைநாயை விளித்தன னவையுமஞ்சி
யொளிவந்து போயதாக வொள்ளிழை மடந்தைநோக்கிக்
களிவந்த மனத்தாய்நாயுங் கைத்ததுன் சோற்றையென்று
தெளிவந்த வுணர்ச்சிசற்றே சிந்தைகைக் கொளவிருந்தான்.

(இ-ள்.) மாதேசன், வீட்டிற்கு வெளியில்வந்து காக்கையையும் நாயையும் அழைக்க அவைகளும் பயந்து ஓடி ஒளித்துக்கொண்டனவாக, விளக்கமுற்ற ஆபரணங்களைத்தரித்த அவ்விலைமாது பார்த்து செல்வச்செருக்குள்ள மனமுடையோனே உன்னன்னத்தை நாயும் வெறுத்து விட்டதென்றனள். தேர்ச்சியைத்தருகின்ற அறிவு பூர்வ புண்ணியத்தினாற் சற்றுநேரம் உதிக்க ஆலோசித்திருந்தனன். எ-று. (௩0)

காரிகை மிடியர்போலக் கவலற்க தெளிகவென்றாள்
சூரிய வுதயங்காறுந் துஞ்சிலா திருந்தவன்றேன்
வேரியங் கமலக்கங்கை விடியலி னணைந்துமூழ்கி
யாரியர் தங்குழாஞ்சேர்ந் தறம்பல கேட்டானன்றே.

(இ-ள்.) அவ்விலைமாது மாதேசனைப்பார்த்து தரித்திரர்களைப்போல கவலையடையாதே (புத்தியை) தேற்றிக்கொள்ளென்றனள். சூரிய உதயகாலமட்டும் நித்திரையில்லாதிருந்தவன் வாசனை தங்கிய அழகுள்ள தாமரைமலர்களையுடைய கங்காதீர்த்தத்தில் உதயத்துக்குப்போய் ஸ்நாநஞ் செய்து பெரியோர் கூட்டத்தை யடைந்து பலவாயுள்ள தருமங்களைக் கேள்வியுற்றனன். எ-று (௲க)

மறையவ னொருவனங்கு வதிபவன் சாந்தனென்பான்
குறையறு காசிமேன்மை முழுவதுங் குறித்துத்தேர்ந்தான்
பொறையின்மா தேசன்கேட்கப் புகலுவா னனந்தசன்ம
நிறைபெரும் புண்ணியத்தா னேர்ந்ததிக் காசிவாழ்க்கை.

(இ-ள்.) குறைவற்ற காசித்தலத்தின் மகிமை முழுவதும் நிதானமாகத் தெளிந்த சாந்தனென்னும் பெயருள்ள ஒரு பிராமணன் அத்தலத்தில் வாசஞ் செய்பவன் பொறுமையில்லாத மாதேசன் கேட்கும்படி போதிக்கின்றான் (யாதெனில்) அனந்த பிறவிகடோறும் நிறைவாகச்செய்த புண்ணிய பலத்தினால் இக் காசி வாழ்க்கை நேரிட்டது. எ-று. (௲உ)

ஈங்கியற் றறத்தினாலே யெய்திடுஞ் சித்தசுத்தி
யாங்கது மேவின்யோக மாமத னுவின்பாகும்
பாங்குசே ரிதனைத்தேராப் பர்தகர் பொருளையீட்டி
நீங்குவர் வறிதேயெல்லா நிரயத்துங் குளிப்பவென்றான்.

(இ-ள்.) இத்தலத்துச் செய்யும் தருமத்தால் சித்தசுத்தியுண்டாம். அச்சித்த சுத்திகிடைத்தால், சிவயோகங் கைகூடும். அந்தயோகத்தால் முத்தியின்பம் வரும் முறையாகக் கிடைக்கத்தக்க இதனைத் தெளியாத பாவிகள் பொய்ப்பொருளைச்சேகரித்து எல்லா நரகங்களிலும் முழுகுதற்கு வீணாக ஒழிந்து போவார்களென்றனன். எ-று. (௲௩)

என்றது கேட்டபோதி னின்னருள் சிறிதுண்டாகி
மன்றலங் குழலாள்பாங்கர் வந்தள வளாவிச்சொல்வான்
கன்றலி னின்றுமென்னை யேற்றனீ கருத்துட்கொண்டாய்
நன்றலென்றுரையேன்சொற்றநலமெலாங்கேட்பேனென்றான்.

(இ-ள்.) இப்படியென்றவார்த்தையைக்கேட்ட காலத்து இனிய சிவகடாட்சம் சிறிதுண்டாகி வாசனை வீசுகின்ற அளகத்தையுடைய அவ்விலைமாதினிடம் வந்து நண்பு பாராட்டிச் சொல்லுகின்றனன். துயரத்தில் நின்றும் என்னை நல்வழியிற் செலுத்தும்படி நீ எண்ணியிருக்கின்றனை இது நன்மையல்லவென்று ஒருக்காலுஞ் சொல்லேன் நீ சொல்லுகின்ற நன்னெறியாவுங் கேட்கிறேனென்றான். எ-று. (௲௪)

என்னலும் பதியிலாத மியைகுலத் துதித்தமாது
நன்னல நினக்குவாய்ப்ப நானுநற் கதியைமேவ
வின்னலங் கடல்யாமென்று மெய்துறு திருக்கவெண்ணி
மன்னவ வுறுதிசொற்றே னென்றனள் மகிழ்ச்சிபூத்தான்.

(இ-ள்.) இவ்வாறு சொன்னவளவில் கணிகையர் குலத்தில்வந்த அம்மாது (மாதேசனைப்பார்த்து) நல்ல சுகமுனக்குண்டாகவும், நான் நல்லகதியடையவும் துன்பமாகிய சமுத்திரத்தில் நாமிருவரு முழுகிப்போகாதிருக்கவும் ஆலோசித்து அரசனே உண்மையைத் தெரிவித்தேனென்றனள். (அதைக்கேட்டு) களிப்படைந்தனன். எ-று. (௫௫)

அற்றைநாண் முதன்மாதேச னலைபுனற் கங்கையாடிப்
பற்றைவே ரறுக்குநீறு கண்மணி யொடேபரித்துக்
கற்றைவார சடிலத்தெம்மைக் கைதொழு திறைஞ்சிப்போற்றிப்
பொற்றைமா ளிகைசேர்காசிப் புராணமுள் ளுவபபிற்கேட்பான்.

(இ-ள்.) அன்றுமுதலாக மாதேசவரசன் அலைகளையுடைய கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து பந்தமாகிய வேரைக் களையத்தகும் விபூதியையும் உருத்திராக்கத்தையும் பூண்டு கற்றையாக நீண்ட சடையையுடைய என்னைக் கைகுவித்து வணங்கித் துதித்து சாளரங்களையுடைய மாளிகை நெருங்கிய காசிமானமியத்தை மனங்களிப்புறக் கேட்பானயினன். எ-று. (௫௬)

காசிமான் மியமுந்தெய்வக் காசியின் வசிபபேர்பேறு
மாசிலா நம்மைபபூசை வயக்கலா லடையுமாண்புங
கூசியே காலன்காசி குறுகிடா தகலுஞ்சீரும்
பேசிய குரோசஞ்சூழப் பெற்றவ ரடையுமின்பும்.

(இ-ள்.) காசிப்பதியின் பெருமையும் தெய்வத்தன்மையுள்ள அப்பதியில், வாசஞ்செய்பவர்களடையும் பிரயோசனமும், களங்கமில்லாத நம்மைப் பூசை செய்தலாலுண்டாகும் பலனும், இயமன் பயந்து காசிப்பதிக்கு வராதிருக்கின்ற சிறப்பும், வேதங்கள் எடுத்துரைக்கத்தக்க பஞ்சக்குரோசப் பிரதட்சணஞ் செய்பவர்களடையுஞ் சுகமும். எ-று. (௫௭)

காசியி னிருந்துபாவங் கருதினோர் செயதோரியாரு
மாசிய லாதகால வயிரவர் தங்கைப்பட்டு
மூசிய தண்டமெல்லா முற்றுமேற் றழிந்துநொந்து
சீசியென் றியாருமெள்ளத் திகைத்துழ லளவாத்துன்பும்.

(இ-ள்.) காசித்தலத்திலிருந்து பாவஞ் செய்யவேண்டுமென்று நினைத்தவர்களும், நினைத்தவாறு செய்தவர்களும், குற்றமில்லாத காலவயிரவர் ஆக்கினைக்குடன்பட்டு நெருங்கிய பலவாயுள்ள தண்டனைகளை முழுமையுமடைந்து மிகுவருத்தத்தால் நொந்து சீசீ (துஷ்டனே) என்று யாவரும் நிந்திக்க மனந் திகைத்து உழலத்தக்க அளவுபடாத துயரத்தையும். எ-று. (௫௮)

மற்றுள வினைத்துந்தேர்ந்தான் போனநாட் கிரக்கம்வைத்தான்
சற்றுள வருண்மேலோங்கித் தழைத்தது தவாதுமேனி
முற்றுள தென்முகூற முகிழ்த்தது முதிர்ந்தவன்பு
கற்றுள முதியோர்பாங்கர்க் கலந்தது காமர்நெஞ்சம்.

(இ-ள்.) மற்றுமுள்ள துயரங்கள் யாவையுந்தெளிந்த மாதேசன், (புண்ணியஞ்செய்யாது பாவஞ்செய்து) கழிந்துபோன நாளைக்குறித்து இரக்கங்கொண்டனன். உள்ளடங்கியிருந்த திருவருள், மேலேயெழுந்து பரவியது, கெடுதலையடையாது சரீரமுழுவதும் வியாபித்ததென்று சொல்லும்படி பேரன்புதோன்றியது, வாசித்தறிந்த பெரியோரிடத்துச் (சதாகாலமும்) இருக்கவேண்டுமென்று அழகியநெஞ்சம் நினைத்தது. எ-று. (௩௯)

உண்மையின் மிக்கோனாய வொருசுய தேசன்மைந்தன்
வண்மைசற் றேனுமில்லேன் மாதேச னெனும்பேர் பெற்றேன்
பெண்மையிற் கழிந்தேனென்றும் பெற்றிலேன் பாவியேன்மிக்
கெண்மையிற் சிறந்தேனன்றோ விருந்ததென் சரிதமென்று.

(இ-ள்) சிறந்தசத்தியவானாகிய சுயதேசன் குமாரனாகப்பிறந்து, மாதேசனென்கிறபெயர்பெற்று சற்றும் பரோபகாரமில்லாதவனாகிப் பெண்மைக்குணத்தையடைந்து வீணாட்கழித்தேன் ஒரு நன்மையு மடைந்திலேன் பாவியானேன் இழிகுணங்களுக்குள் மிகவுமிழிந்த குணத்தைப்பெற்றேன், என்சரித்திரம் அழகாயிருக்கின்றது. எ-று. (௪0)

தனக்குப தேசஞ்செய்த தார்க்குழ லினைவியந்து
மனக்கினி தாயவெல்லா வறங்களும் வயங்கச்செய்வான்
புனக்கிளி யனையாய்நந்தங் கோயிலைப புதுக்கிநாளு
முனக்கினி தாயசெம்பொற் கோயிலை யொளிரச்செய்து.

(இ-ள்.) தனக்கு உண்மையுபதேசஞ்செய்த, புட்பங்களைச்சூடிய அளகபாரத்தையுடைய அவ்விலைமாதி னற்செய்கையை, நினைந்து உள்ளே ஆச்சரியங்கொண்டு, மனதிற்கு இன்பத்தைத்தரும் எல்லாத்தருமங்களையுஞ் செய்பவனாகி, தினைக்கொல்லையில்வாழுங் கிளிப்பிள்ளைபோன்ற உமையே நமது ஆலயத்தைக் கனகத்தாற்புதுக்கி சந்ததமுமுனக்குப் பிரியமாயுள்ள செம்பொன்மயமாகிய ஆலயத்தையும் விளங்கக்கட்டி. எ-று. (௪௧)

நந்தன வனங்களாக்கி நறுமலர்த் தடங்களாக்கி
யந்தமில் பொழில்களாக்கி யன்னசத் திரங்களாக்கிச்
சந்தநன் முனிவர்மேவத் தகுதிரு மடமுண்டாக்கிப
பந்தமுற் றறுநங்கோசப பதிட்டையும் பலவுண்டாக்கி.

(இ-ள்.) பூந்தோட்டங்களை யுண்டாக்கி, நல்ல (தாமரை முதலிய) மலர்களுண்டாகத்தக்க தடாகங்களை யுண்டுபண்ணி, அனேகவகையான சோலைகளை வைதது, அன்ன சத்திரங்களைக் கட்டி அழகுவாய்ந்த மகாமுனிவர்கள் வசிக்

கச், சிறந்ததிருமடங்களைக் கட்டி, (ஆணவாதி) பாசங்கண் முழுவதையு நீக்கத்தக்க நமது வடிவாகிய சிவலிங்கப்பிரதிஷ்டை பலவாகச் செய்து. எ—று. (சஉ)

சித்திரம் பிறங்குமாறு திகழ்மனை யொன்றுண்டாக்கிப்
பத்தரிற் சிறந்தோனாய் சுதபசி யென்பாற்கீந்து
கொத்தமை பாவமெல்லாங் கொழுந்தெரி படுபஞ்சாக
வித்தக வின்பமுற்றான் மின்னனை யாய்மாதேசன்.

(இ-ள்.) அனேக சித்திரங்கள் விளங்குமாறு பிரகாசிக்கின்ற ஒரு வீடுகட்டுவித்துச் சிவபத்தரிற் சிறந்தவனாய சுதபசி யென்பவனுக்குத் தானஞ்செய்து பாவக்கூட்டங்க ளெல்லாவற்றையும் கொழுந்துவிட்டு எரிகின்ற நெருப்பிற் பட்ட பஞ்சுபோலாகுமாறு தகித்து ஞானமயனாகி மாதேசன் முத்தியடைந்தனன். மின்போன்றொளிருமுமையே. எ—று. (சங)

ஈட்டிய பொருளான்முத்தி யெய்தின னொருமாதேசன்
கூட்டிய பொதுமின்னாளுங் கோதிலா முத்திபெற்றாள்
காட்டிய பொருளினாலே கைக்கொண்டார் நரகஞ்சில்லோர்
பூட்டிய் பொலங்கொம்பன்ன யுணரென்றான் பூதநாதன்.

(இ-ள்.) சம்பாதித்த திரவியத்தால் மாதேசன் ஒப்பற்ற முத்தியடைந்தனன். புண்ணியஞ் செய்வித்த விலைமாதும் களங்கமற்ற மோட்சத்தையடைந்தனள். உண்டாகிய பொருளில்வைத்த ஆசையாலே சிலபேர் நரகத்தையடைந்தார்கள். ஆபரணங்கள்பூண்ட பொற்கொம்பையொத்த உமையே அறிவாயாகவென்று ஆன்மவர்க்கங்களுக்குத் தலைவராகிய சிவபிரான் திருவாய் மலர்ந்தனர். எ—று. (சச)

மாதேசன் முத்தியடைந்த அத்தியாயமுற்றியது.

ஆக அத்தியாயம். கஉ-க்கு திருவிருத்தம். சாஎஅ.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பதின்மூன்றாவது சத்தபுரிமகிமையுரைத்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

எண்ணிலாவண்ட முழுதுமீன் றளித்த விறைவிநா யகனடிவணங்கித்
தண்ணிலாமோலிப் பகவவானந்த சங்கர சம்புமாதேவ
கண்ணிலாக்கொடிய கூற்றடைந்தறியாக் காசிமான் மியமினுமுரைத்தி
யுண்ணிலாவின்பமுயிருறவென் றுளும்பர்தம்பிரான்மகிழ்ந்துரைப்பான.

(இ-ள்.) அளவில்லாத அண்டங்கள் முழுவதையும் உண்டாக்கிக் காக்கின்ற பார்வதிதேவியார் ஸ்ரீகயிலாசநாதர் பாதங்களிற் பணிந்து குளிர்ந்த நிலவணிந்த சடாமகுடத்தையுடைய தேவே, ஆனந்த ரூபரே ஆன்மாக்களுக்குச் சுகத்தைச் செய்பவரே, சம்புவே மஹாதேவரே, தாட்சண்ணியமில்லாத கொடிய இயமன் வந்தறியமாட்டாத காசித்தலமகிமையை உள்ளத்தில் விளங்குமின்பத்தை ஆன்மாக்களடையுநிமித்தம் மேலுந் திருவாய்மலர்ந்தருள்வீரென்ற தேவியைநோக்கித் தேவதேவராகிய சிவபிரான் கட்டளையிடத்தொடங்கினர். எ-று. (க)

களவிலாமுனிவ ராதியோர்நெருங்குங் காசியா மானந்தகானத்
தளவிலாவிலிங்க மளவிலாத்தீர்த்த மமையுமத் தீர்த்தநீர்படிந்து [சார்
தளவிலாப்பொலியுஞ் செய்யவாய்மயிலே சாற்றியவிலிங்கங்கண் டிறைஞ்
துளவிலாத்திருமாலெனமயங்குறுவா தொலைப்பருமவிடையவாதனையில்

(இ-ள்.) வஞ்சனையில்லாத முனிவர்முதலியோர் நெருங்கி வசிக்கப்பெற்ற ஆனந்தகானமென்னுங் காசிப்பதியில், எண்ணிக்கையில்லாத சிவலிங்கங்களும் அளவிறந்த தீர்த்தங்களும் உள்ளனவாகும். தந்தங்களாகிய முல்லையரும்புகட்கு இடமாகவிளங்கும் சிவந்தவாயையும் மயில்போலுஞ் சாயலையுமுடைய உமையே அத்தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து அச்சிவலிங்கங்களைக்கண்டு வணங்காதவர்கள், பிருந்தையின் வடிவமாகிய துளவத்தைத் தரியாதகாலத்து திருமால் மயங்கினதுபோல நீக்குதற்கரிய உலகவாசனையில் மயங்கியலைவார்கள். எ-று. (உ)

காசியினளவீ றீர்த்தமுண்டவற் றுட் கரிசின்முக் கியமெடுத்துரைப்பா
மாசியினனைய தீர்த்தநீர்தோயா ரவரெலாங் கயவரேயன்றே
பேசியமந்தா கினியவற்றதிகம் பெருகுமந் நீர்படிந்தாடின்
மூசியசகல தீர்த்தமும்விதியின் முழுகினோ ரவன்மொய்குழலாய்.

(இ-ள்.) காசிப்பதியில் எண்ணிக்கையில்லாத தீர்த்தங்களுள்ளன அவைகளுக்குள் முக்கியமான தீர்த்தங்களைக் கூறுகின்றேன். அம்முக்கிய தீர்த்தங்களில்

ஸ்நானஞ் செய்யாதவர்களியாவரும் ஞானமில்லாதவர்களல்லவா அத்தீர்த்தங்களுக்குள் கங்கைமேலானதாகும் பிரவாகிக்கின்ற அந்தக் கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் சூழ்ந்த சர்வதீர்த்தங்களிலும் விதிப்படி மூழ்கினவனுவனென்று நெருங்கிய அளகபாரத்தையுடைய உமையே அறிவாயாக. எ-று. (௩)

மடியினாற்கங்கை யாடுதலொழிந்து மற்றைய செயிற்பயனில்லைக் [போங்
கடியினாற்பொலியு நடுப்பகன்மணிகன் னிகைப்புனன் மூழ்கிடின் மறம்
தொடியினாற்பொலிகை யாய்கதியுண்டாஞ் சுரர்மக பதியயன்கருடக்
கொடியினாற்பொலிமாலிருடியர்முதலோர்குடையமாதவம்புரிந்திருப்பார்.

(இ-ள்.) சோம்பலினால் கங்காஸ்நானஞ்செய்தலைக் கைவிட்டு மற்றைய புண்ணியங்களைச் செய்தால் பயனுண்டாகாது. புண்ணியகாலத்தால் விளங்குகின்ற நடுப்பகலிலே மணிகர்ணிகா தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்தால் பாவங்களொழிந்துபோகும். கங்கணத்தாற் பிரகாசிக்கும் கைகளையுடைய உமையே முத்தியுங்கிடைக்கும் அக்கங்காஸ்நானஞ் செய்யவேண்டுவதைக்குறித்து தேவர்களும், தேவேந்திரன், பிரமன், கருடக்கொடியினாலே விளக்கமுற்றிருக்கும் திருமால், முனிவர்கள், முதலாயினோர்கள் பெருந்தவஞ்செய்வார்கள். எ-று. (௪)

முருகலர்ப்பஞ்ச நதத்தினில்விடியன் முழுகினுஞ் சகலசித்திகளும்
பெருகுபாதகம்போய் முத்தியாங்கங்கை பேசிய வருணசங்கமத்தி
லுருகுபேரன்பி னாதிகேசவரை யுறுபுனல் படிந்துபோற் றெடுப்பிற்
கருகுமெய்யனையான்வைகுண்டஞ்சேர்ந்து களித்தினிதிருந்திடலுண்மை.

(இ-ள்.) வாசனைதங்கிய மலர்களையுடைய பஞ்சநதீர்த்தத்தில் உதயகாலத்தில் ஸ்நானஞ்செய்தால் சகலசித்திகளுமுண்டாகும், அன்றியும் பெரும்பாதகங்களொழிந்து முத்திசித்திக்கும். கங்காநதியோடு எடுத்துக்கூறுவதற்குரிய வருணசங்கம தீர்த்தத்தில் மனங்கனிந்துருகுகின்ற அன்பினாலே ஸ்நானஞ்செய்து ஆதிகேசவனைவணங்கித் துதித்தால் நீலநிறமுள்ள திருமேனிவாய்ந்த விஷ்ணுதேவர் வசிக்கும் வைகுண்டபதவியைப்பெற்று மகிழ்ச்சியோடு அவ்விடத்துச் சுகமாகவிருப்பது உண்மையாகும். எ-று. (௫)

சூலடங்கேச ரெதிர்பிரயாகை துளையினு மாவயிற்கங்கை
சீலமார்யமுனை சங்கமமுழுகிற் சிதைதருங் கருப்பமேவத்தை
ஞாலமேவசிசா னவிசங்கமத்து நானமெய் பந்தமுமொழிக்கு
மேலவேநல்ல தீர்த்தமிச்சிப்போ ரெய்துவர் சித்திகளனைத்தும்.

(இ-ள்.) சூலடங்கேசர் சந்நிதிக்கு எதிராக பிரயாகை தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தாலும் அவ்விடத்துக்கூடுகின்ற கங்கை யமுனை சங்கமத்தில் ஸ்நானஞ் செய்தாலும் பிறவித்துன்பம் ஒழிந்துபோகும். அசி என்னும் நதியும் கங்கையும் கூடுகின்ற இடத்தில் ஸ்நானஞ்செய்தால் எவ்வகைப்பந்தங்களும் ஒழிந்துபோகும். சிறந்த தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்ய விரும்புகின்றவர்கள் சர்வசித்திகளையும் அடைவார்கள். எ-று. (௬)

எறிதிரைக்கங்கா தீரத்தீர்த்தந்தோ யிரும்பலன் கங்கைதோய்பலனே
முறிதலிறீர்த்த மிலிங்கமிக்கலியின் முகிழ்த்திடு சுபலமுண்டாக்கு
மறிதருமிவைக ணித்திய தீர்த்தம் யாத்திரா தீர்த்தமுஞ்சிலவே
செறிபலகரும மிருப்பினுமினைய தீர்த்தநீர் துளைதலேவேண்டும்.

(இ—ள்.) அலைகளைவீசுகின்ற கங்காநதிக்கரையிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்பவர்கள் கங்கையில் ஸ்நானஞ்செய்கின்றபலனை யடைவார்கள். நிறைந்த மகிமையுள்ள தீர்த்தங்களும் இலிங்கங்களும் இக்கலியுகத்தில் பெரும்பிரயோசனத்தைக் கொடுப்பனவாகும் மேற்கூறிய தீர்த்தங்கள் நித்தியஸ்நானஞ்செய்கின்ற தீர்த்தங்களாகும். யாத்திராகாலங்களில் ஸ்நானஞ்செய்யத்தக்க தீர்த்தங்களும் சிலவுள்ளன. அனேக சற்கருமமிருந்தாலும் மேற்சொன்ன தீர்த்தங்களில் அவசியம் ஸ்நானஞ்செய்யவேண்டும். எ—று. (எ)

வாரணவாசி வசிப்பவர்தீர்த்த மகாலிங்கந் தேடவேண்டுவதி
ஞாரணன்முதல்வா னவர்முனிவருநாடொறுங் காசியில்வசிப்பார்
காரணவியவான் பொழினலப்புரிகள் காசியோடேழ்பலவரைக
ளேரணவியபுண் ணியத்தவாயங்க ணிருப்பவெக் காலமுமறிமோ.

(இ—ள்.) காசிப்பதியில் வாசஞ்செய்பவர்கள் தீர்த்தங்களையும் மகாலிங்கங்களையும் தேடவேண்டியதில்லை (எளிதாகநேரிடும்) விஷ்ணுமுதலான தேவர்களும் முனிவர்களும் மேற்சொன்ன விசேடத்தால் தினந்தோறுங் காசியில் வாசஞ்செய்வார்கள் உயர்வுள்ள மேகங்கள் சேரத்தக்கசோலைகளும் பலமலைகளும் காசியுள்பட சத்தபுரிகளும் சதாகாலமும் அழகுவாய்ந்த புண்ணியங்களை யுடையனவாகி அங்கேயுள்ளனவென்று உமையே அறிவாயாக. எ—று. (அ)

காசியுண்மேய வறுநகரத்துங் கார்தவழ் வரைபொழிலிடத்தும்
பேசியின்மொழிமா லயன்முதல்யாரும் பெட்டிடங் கொண்டுறைதரநா
மாசியினின்னே டானந்தமயமா யமருவநன்மைக் ளனைத்தும்
வீசியின்பளிக்குங் காசியின்மற்றை வியனகர் வரைபொழிலனைத்தும்.

(இ—ள்.) காசித்தலத்திற்றங்கிய துவாரகைமுதலாகிய ஆறுபுரிகளிலும் மேகங்கள் சஞ்சரிக்கின்ற மலைகளிலும் சோலைகளிலும் திருமாலும், பிரமன்முதலிய யாவர்களும் இன்பவாக்கியங்களைக் கூறிக்கொண்டு விருப்போடு வாசஞ்செய்யும்படி களங்கமற்ற நீயும் நாமும் ஆனந்தவடிவமாகப், பற்பல சுகங்களையுங்கொடுத்து நித்தியசுகத்தையுந் தருகின்ற காசித்தலத்திலும் மற்றைய புரிகளிலும் சோலைகளிலும் மலைகளிலும் அங்கங்கே வீற்றிருப்போம். எ—று. (கூ)

உரைதருகாசி நகரொருதட்டு முலகெலா மற்றொருதட்டும்
புரையறவைத்துப் பார்த்திடிற்காசிப் பொலிபெருங் கனம்வெளியாகு
மறைமகன்முதல்வா னவரெலாங்காசி வதிவர்நம்மருள்பெறவேண்டித்
திரைதவழனைய காசியைச்சென்று சேவியார் பிறப்பென்னபிறப்பே.

(இ—ள்.) எடுத்துரைக்கத்தக்க காசித்தலத்தை ஒருதட்டிலும் மற்றைய உலகங்கள் எல்லாவற்றையும் ஒருதட்டிலும் களங்கமறவைத்து நிறுத்துப்பார்த்தால்

காசித்தலத்தின்பாரம் யாவருக்கும் வெளியாகத்தெரியவரும் (உமையே) நமதுகிருபையைப்பெறவேண்டி பிரமன்முதலியதேவர்கள் யாவரும் காசித்தலத்தில் வாசஞ்செய்வார்கள் அலைகளையுடைய கங்காதீர்த்தத்தோடு கூடிய காசித்தலத்திற்குப்போய் சேவிக்காதவர்களுடைய பிறவி இழிவுள்ளதாகும். எ-று. (௧0)

**வேறு.**

நந்துசங் கோத்தாரம்மே துவரைநற் காஞ்சிமூதூர்
விந்துமா தவசமீபம் விளங்குகா ரரக்கர்வானோர்
வந்துசூழ் வடசாராதி வருணையின் காறுமேவு
மிந்துதாழ் தரமேலோங்கு மில்லஞ்சூழ் மதுரைமாதோ.

(இ-ள்.) விருத்தியாகின்ற சங்கோத்தாரமென்னுமிடமே துவாரகையாகும். விந்துமாதவர் ஆலயத்திற்குச் சமீபமான இடமே காஞ்சிப்பதியாகும். விளக்கமுற்றுக் கருநிறம்வாய்ந்த அசுரர்களும் தேவர்களும் நெருங்கி சூழ்தற்கிடமாகிய வடசாரமுதலாக வருணாதிரத்தளவுமுள்ளதும் சந்திரமண்டலம் தாழும்படி மேலுயர்ந்த மாளிகைகள் சூழப்பெற்றுள்ளதும் மதுராபுரியாகும். எ-று. (௧௧)

வளிகெழு திசைச்சோமேச சமீபமன் னுறுமயோத்தி
யொளிகெழு மிராமன்பூசை யுஞற்றிரா மேசமாகித்
துளிகெழு திரைநீர்க்கங்கா துவாரமு மாயதேத்துக்
களிகெழு வானோர்சூழுங் கவினுடை மாயைவைகும்.

(இ-ள்.) வாயுமூலையிலுள்ள சோமேசமென்னும் ஆலயத்திற்குச் சமீபத்தில் நிலைபெற்றுள்ளது அயோத்தியாபுரியாகும். ஒளியையுடைய ஸ்ரீராமன் பூசைசெய்த காரணத்தால் இராமேசமென்று பெயர்பெற்றுள்ளதும், துளிகளையுடைய அலைகள் நெருங்கிய கங்காதுவாரமென்று பெயர் பெற்றதுமாகிய இடமே விருப்பமுள்ள தேவர்கள் சூழ்ந்து போற்றும் அழகியமாயாபுரியாகும். எ-று. (௧௨)

விருத்தகா ளேசக்கீழ்மெய்க் கிருத்திவா சேசமட்டும்
பொருத்தமா ரவந்திமேவும் புகன்றவிந் நகரமாறுந்
திருத்தமார் காசிமேவ றெரிந்தய னுதிவானோ
ரருத்தமார் போகமோக்க மவாவியங் கமராநின்றார்.

(இ-ள்.) விருத்தகாளேசமென்னும் ஆலயத்திற்குக் கிழக்குமுதல் உண்மை ஞானத்தைத் தருகின்ற, கிர்த்திவாசேசமென்னும் ஆலயமட்டும் அவந்திகாபுரி தங்கியிருக்கும். மேற்சொல்லிய துவாரகை, காஞ்சி, மதுரை, அயோத்தி, மாயை, அவந்தி ஆகிய ஆறு நகரங்களும் *திருத்தமுள்ள காசித்தலத்திற் சேர்ந்திருப்பதை பிரமன் முதலிய தேவர்களறிந்து நிறைந்தபயனைத் தருவதாகிய போகமோக்ஷங்களைப்பெற விரும்பி அத்தலத்தில் வாசஞ்செய்கின்றார்கள். ()

தேவரு ளெம்மைப்போலுந் திகழ்தரு சத்திமாருட்
பூவரு நின்னைபபோலும் புருடருட் டிருமால்போலு

மேவருந் தீர்த்தந்தம்முள் வெண்டிரைக் கங்கைபோலுந்
தாவருந் தலங்கடம்முட் டலைமைபெற் றதுமாகாசி.

(இ-ள்.) தேவர்களுக்குள்ளே (சிவபெருமானாகிய) என்னைப்போலவும் விளக்கத்தைத் தருகின்ற அனேக சத்திகளுக்குள் அழகு தங்கிய (பார்வதிதேவியாகிய) உன்னைப்போலவும் புருஷர்களுக்குள்ளே விஷ்ணுவைப்போலவும் விரும்பியடைதற்கரிய தீர்த்தங்களுக்குள் வெள்ளிய அலைகளையுடைய கங்காநதியைப்போலவும் மகிமைநிறைந்த தலங்களுக்குள் உயர்வுபெற்றுள்ளது காசிப்பதியாகும். எ-று. (௧௪)

மன்னிய வருடகாலந் துவரைமா முத்திநல்கும்
பன்னிய சரக்காலங்காஞ் சிப்பதி சித்திபண்ணு
மின்னிய வசந்தகால மதுரைமெய்ப் பத்தியாக்கு
முன்னிய கிரீட்டிமத்தி னயோத்திமுத் தாபம்போக்கும்.

(இ-ள்.) நிலைபெற்ற வருஷருதுவாகிய ஆவணியும் புரட்டாசியும் துவாரகையில் வசித்தால் பெருமை தங்கிய முத்தியைக்கொடுக்கும். சொல்லப்படுகின்ற சரக்காலமாகிய ஐப்பசியும், கார்த்திகையும் காஞ்சிப்பதியில் வசித்தால் அஷ்டசித்திகளையும் கொடுக்கும். விளக்கமமைந்த வசந்தகாலமாகிய சித்திரையும் வைகாசியும் மதுராபுரியில் வசித்தால் உண்மைப்பத்தியை யுண்டாக்கும். சிந்தித்தற்குரிய * கிரீஷ்ம காலமாகிய ஆனியும் ஆடியும் அயோத்தியாபுரியில் வசித்தால் (ஆதி ஆன்மிகம், ஆதி தெய்விகம், ஆதி பௌதிகம்.) என்னும் தாபத்திரயங்களை ஒழித்தருளும். எ-று. (௧௫)

அவந்தியே மந்தகால மமைந்தபல் பிணியுந்தீர்க்குஞ்
சிவந்தரா சதமொழிக்குஞ் சிசிரகா லத்துமாயை
யுவந்தயாத் திரைநாள்சொற்ற முற்பத்திகாலமாதி
நிவந்தகா லங்கண்மூன்று நிலவுமூ ராறுங்காசி.

(இ-ள்.) ஏமந்தகாலமாகிய மார்கழியும் தையும் அவந்திகாபுரியில் வசித்தால் பலவியாதிகளும் ஒழிந்துவிடும். சிசிரகாலமாகிய மாசியும் பங்குனியும் மாயாபுரியில் வசித்தால் கோபத்தை யுண்டுபண்ணுகிற ராசதகுண மொழிந்துபோகும். அங்கங்கே பிரியத்தோடு யாத்திரைசெய்யவேண்டிய காலத்தைக் கூறினோம். உலக உற்பத்திகாலமுதல் மேலோங்கிய காலத்திரயத்திலும் விளக்கமுற்ற ஆறுபுரிகளையும் தன்னிடத்துடையது காசித்தலமாகும். எ-று. (௧௬)

ஆனபல் லுயிர்க்குமெந்தச் சாதனத் தகந்தைதீரு
மீனவெம் பாவமாயு மெண்ணருந் துக்கநீங்கு
மோனமெய்ஞ் ஞானானந்த முழுக்கதி யடையுமென்று
வானவர் முனிவர்முன்னைக் கிரேதத்து மதித்துவந்து.

(இ-ள்.) உண்டாகிய பலஜீவகோடிகளுக்கும் என்னசாதனத்தாலே அகங்காரம் போகும் இழிவைத்தருகின்ற கொடும்பாவங்கள் எவ்வாறுகழியும் கணக்

* கிரீஷ்மம் = மூதுவேனிற்காலம்.

கில்லாத துயரங்கள் எவ்வண்ணம் விலகும் மௌனநிலையிலுதிக்கின்ற சச்சிதா நந்தவடிவத்தைப்பெறறு பரிபூரணமுத்தியை எவ்வாறு அடையும் என்று சிந்தித்து முதலாவதாகிய கிரேதாயுகத்தில் தேவர்களும் முனிவர்களுந்திரண்டுவந்து.()

மறைமுடி புண்மைதேர்ந்த மலரவன் மாயோனுய
நிறையிரு வரையுமன்பின் விஞவினர் நெடியோனுய்ந்து
குறையற வவந்தியாதி யறுநகரமுங்கொள்காசி
யறைபரம் பிரமரூப மெண்ணிய வளிக்குமென்ருன்.

(இ-ள்.) வேதமுடிவிலுள்ள மகாவாக்கியார்த்தத்தைத் தெரிந்தவரும் ஞானநிறைவையுடையவருமாகிய பிரமவிஷ்ணுக்களிருவரையும் அன்போடு (பணிந்து) வினவினர்கள் திருமால் ஆராய்ந்து நிறைந்த மகிமையுள்ள அவந்திகாபுரி முதலாகிய ஆறு தலங்களையும் தன்னிடத்துடைய காசித்தலமானது பரப்பிரம வடிவமாகும் அத்தலமே சிந்தித்தவைகளைத் தருமென்று கூறினர். எ-று. ()

புண்ணியம் புரிந்தாரேனும் பாதகம் புரிந்தாரேனு
நண்ணிய துவரைவீந்தார் நாடரு முத்திசேர்வா
ரெண்ணிய மதுரைமூதூர் யாவர்போ யிறந்திட்டாலுங்
கண்ணிய யோகர்மேவு முத்திகைக் கொள்வாருண்மை.

(இ-ள்.) புண்ணியஞ் செய்தவராலும் பாவஞ் செய்தவராலும் துவாரகாபுரியில் மரணமடைவார்களானல் கிட்டுதற்கரிய முத்தியைப்பெறுவார்கள். சிந்தனைக்குரிய மதுராபுரியில் எத்தன்மையுடையோர் மரணமாலும் மேலான சிவயோகவான்களாலே விரும்புதற்குரிய முத்தியைப் பெறுவார்கள் இஃதுண்மையாகும். எ-று. (௧௯)

ஆயகாஞ் சியின்மாண்டாரே லட்டாங்க யோகர்முத்தி
தூயவ யோத்திமாளிற் றுளவிறை னுருவஞ்சேர்வர்
மேயசி ரவந்திமாயை வீதரின் முத்தியுண்டாம்
பாயபுண் ணியத்தின்வாசம் பண்ணினெப் பயனுநல்கும்.

(இ-ள்.) மகிமை யுடைத்தாகிய காஞ்சிபுரியில் மரணமடைவார்களானல் அஷ்டாங்கயோகத்தைப்பெற்றுப் பின்னர் முத்தியடைவார்கள். பரிசுத்தமுள்ள அயோத்தியாபுரியில் மரணமானல் துளசிமாலை யணிந்த விஷ்ணுசாரூப்பியத்தைப்பெறுவார்கள். விரும்பத்தக்க சிறப்புள்ள அவந்திகாபுரியிலும் மாயாபுரியிலும் மரணமடைவார்களானல் முத்தியைப்பெறுவார்கள் பரவிய புண்ணியத்திறல் மேற்கண்ட புரிகளில் வாசஞ்செய்பவர்கள் எல்லாப்பலனையும் பெறுவார்கள். எ-று. (௨௦)

பாதகர் காணத்தீண்டப் பன்னவெக் காலுமுற்று
தாதவி னிவையனைத்து மண்ணனம் பெருமான்ருன
மோதல்செய் நதிநதங்க ளுததிகண் முனிவர்வானேர்
மேதகு சித்திவேண்டிக் காசியை விழைதன்மெய்மை.

(இ-ள்.) பாவிகள், பார்க்கவாவது பரிசிக்கவாவது அத்தலங்களின் மகிமையைக் கூறவாவது எந்நாளும் கைகூடாது. ஆனபடியால் இப்புரிகள் யாவும் பெருமையிற் சிறந்த சிவபெருமான் வீற்றிருக்கின்ற இடங்களாகும். சொல்லுதற்குரிய நதிகளும், நதங்களும், சத்முத்திரங்களும், முனிவர்களும், தேவர்களும் மேன்மையுள்ள சித்தி முத்திகளை விரும்பி காசிப்பதியைச் சிந்தித்து வசிப்பது உண்மையாகும். எ-று. (உக)

என்னுடை மனமுமந்தக் காசிநீத் தேகிற்றில்லை
மன்னுடை யறத்தீர்தேர்மி னென்றுமா மறையோன்சொற்றுன்
பொன்னுடை யானைக்கஞ்சப் பூவனைப் போற்றிவாழ்த்திக்
கொன்னுடை யனையார்காசி குறுகிவாழ்ந் திருந்தாரன்றே.

(இ-ள்.) என்னுடைய நெஞ்சமும் அந்தக் காசித்தலத்தைவிட்டுப் பிரிந்ததேயில்லை நிலைபெற்ற தருமமேவடிவமாகிய நீங்களாராய்ந் தறிவீர்களென்று பிரமதேவன் (முனிவர்களுக்கும் தேவர்களுக்கும்) கூறினுன் இலக்குமி நாயகனாகிய விஷ்ணுவையும் தாமரை மலரிலிருக்கின்ற பிரமனையும் வணங்கித்துதித்து பெருமையிற் சிறந்த அவர்கள் காசித்தலத்தை யடைந்து இன்பமுற்றிருந்தார்கள். எ-று. (உஉ)

கனைதரு மவிமுத்தேசங் காண்பவர்க் கின்பநல்கும்
புனைதவிர் விசுவநாதம போற்றினுர் பாவம்போக்கு
முனைமணி கன்னிகேசந் தரிசிப்பார்க் குண்மைநல்கு
நனைவிடை வீரேசங்காண்ப வர்க்கற மாதிநல்கும்.

(இ-ள்.) சொல்லுதற்குரிய அவிமுத்தேசமென்னுமாலயத்தைத் தரிசிப்பவர்களுக்கு எல்லாச்சுகமுங் கிடைக்கும். குற்றமற்ற விசுவநாதத்தைத் துதித்தவர்களுக்கு பாவங்களொழிந்து போகும். புகழ்தற்குரிய மணிகர்ணிகேசத்தைத் தரிசிப்பவர்களுக்கு உண்மை ஞானமுண்டாகும். வெள்ளிய இடபவாகனத்தையுடையவீரேசர் வீற்றிருக்கப்பெற்ற வீரேசமென்னு மாலயத்தைத் தரிசிப்பவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பலனும் கிடைக்கும். எ-று. (உ௩)

கண்ணிய கேதரேசன் காட்சியான் மரபுநீடும்
புண்ணிய கிருத்திவாசன் காட்சியாற் புகுமேமுத்தி
நண்ணிய விருத்தகாளா காட்சியாற் கலிநசிக்குந்
தண்ணிய சந்திரேசன் காட்சியஞ் ஞானந்தாக்கும்.

(இ-ள்.) சிந்தித்தற்குரிய கேதாரேசுரர் தரிசனத்தால் சந்ததிவிருத்தியாகும். புண்ணிய கீர்த்தியென்னும் பாண்டியனுல் உண்டாக்கிய ஆலயத்தில் வீற்றிருக்குஞ் சிவபெருமானைத்தரிசித்தால் முத்திகைகூடும். சிந்திப்பவர் மனத்திலெழுந்தருளத்தக்க விருத்தகாளேசர் தரிசனத்தால் சம்பத்துண்டாகும், குளிர்ந்த சந்திரேசுரருடைய தரிசனத்தால் அஞ்ஞானங்கெடும். எ-று. (உ௪)

சீலமார் பிரமேசன்காட் சியாற்பல்பா தகமுந்தீரு
ஞாலமார் போகமெல்லாந் திரிலோச னேசனல்குவ
கோலமா ரோங்காரேசன் கொடுப்பனெண் ணியவனைத்தும்
பாலமா கட்கபர்த்தி பரவுதன் னுருவநல்கும்.

(இ-ள்.) தவவொழுக்கத்தை நிரப்புகின்ற பிரமேசருடைய தரிசனத்தால் பலதீவினைகளும் நீங்கிவிடும். உலகத்திலுள்ள நானாவித சுகங்களையும் திரிலோசனவீசர் தந்தருளுவர். அழகுநிறைந்த ஓங்காரேச்சுரர் சிந்தித்தவைகள் எல்லாவற்றையும் கொடுத்தருளுவர். நெற்றிக்கண்ணையுடைய கவர்த்தீசுரர் துதிக்கப்பெற்ற தனது சொரூபத்தைப்பெறச் செய்தருளுவர். எ-று. (உ௫)

அறத்தினை விருத்திசெய்வான் றருமேச னக்கினீசன்
றிறத்துய ரியாகமெல்லாஞ் செய்தமர் பலனைநல்கு
முறத்தழை யிலிங்கமின்னு முலப்பில கொண்டகாசி
மறச்செய லொழித்துவாழ்வார் மறலியைக் கடிந்துவாழ்வார்.

(இ-ள்.) தருமேசனைத் தரிசித்தால் அறம் தழைத்தோங்கும். அக்கினீசனைத் தரிசித்தால் மிகவும் மேலாகிய யாகங்களெல்லாவற்றையும் செய்து விரும்பத்தக்க பலன் கிடைக்கும். அருளை நிரம்பக்கொண்டிருக்கின்ற இலிங்கங்களை அளவில்லாமல் தன்னிடத்துடைய காசிப்பதியில் பாவச்செயலையொழித்து வாசஞ் செய்வார்களானால் இயமனைவென்று நித்தியானந்தத்தைப் பெறுவார்கள். எ-று. (உ௬)

ஆதலாற் காசிவாழ்க்கை யனைத்தினுஞ் சிறந்ததாகுங்
காதலா லுரைத்தேங்கண்டாய் கருங்குழற் செவ்வாய்வெண்பன்
மாதரா யென்றுசொற்றான் மாலயற் கரியவள்ளல்
கோதிலாக் கரும்புபோலுங் குளிர்மொழி மகிழ்ச்சிபூத்தாள்.

(இ-ள்.) ஆனபடியால் காசித்தலவாசம் முத்திசாதனங்களெல்லாவற்றிலும் சிறந்ததாகும். கரிய அளகபாரத்தையும், சிவந்த வாயையும், வெள்ளிய தந்தங்களையுமுடைய பார்வதியே நாம் உன்னிடத்துவைத்த பிரியத்தால் இவைகளைக்கூறினோமென்று திருமாலும் பிரமனும் காணுதற்கரிய அருள்வள்ளலாராகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தனர். குற்றமற்ற கரும்பினிரதம் போலும் இனிமையைத் தருகின்ற திருவாக்கையுடைய உமாதேவியார் களிகூர்ந்தனர். எ-று. (உ௭)

## சத்தபுரி மகிமையுரைத்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ௧௬-க்கு திருவிருத்தம். ௫௱௫.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பதினான்காவது பிரமன் முதல் மூவரும் பூசித்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

முற்றிய கேள்விச் சவுநகர்முதலா முனிவோர்மெய்
பற்றியசூதற் பார்த்தொருகாசிப் பதிமேன்மை
யொற்றியவின்னு முள்ளனவெல்லா முரையென்னக்
கற்றியலன்னா னுள்ளமுவந்து கரைகின்றான்.

(இ-ள்.) முதிர்ந்த கேள்வியையுடைய சவுநகர் முதலாகிய முனிவர்கள் உண்மை ஞானமுள்ள சூதமகாமுனிவரைப்பார்த்து, ஒப்பற்ற காசித்தலத்தின் மகிமை இன்னும் உள்ளன யாவையும் உரைத்தருள்வீரென்று கேட்க வாசித்தறிந்த அச்சூத முனிவர் திருவுள்ளமுவந்து அருளிச்செய்கின்றனர். எ-று. (க)

துன்னியமுந்தை யுகத்துநலத்த சுவாயம்பு
மன்னியகஞ்ச மலர்த்தவிசானமர் வாயுற்றுப
பன்னியவந்தனை நன்றுபுரிந்து பராயேத்த
மின்னியவன்ன பிதாமகனும்மிது விள்வானால்.

(இ-ள்.) நிறைந்த பெருமையுள்ள கிரேதாயுகத்தில் நன்மையுள்ள சுவாயம்பு மநுவானவர், தாமரை மலரை ஆசனமாகக் கொண்டவரும் நிலைபெற்றவருமாகிய பிரமதேவரிடத்துக்கு வந்து, விதிவழியான வந்தனைகளை நலமுறச்செய்து, வணங்கித்துதிக்க, விளக்கமுற்ற அப்பிரமதேவரும் இதைச்சொல்லத்தொடங்கினர். ()

சத்தறிவின்ப முதற்பெருமானரு டன்னாலே
யெத்தருமங்களு நன்றுதெரிந்துண ரியன்மைந்தா
மத்தமடைந்தவர் போலெதுவோமனம் வைத்துற்று
யொத்தகருத்துரை யென்றலுமம்மனு வுரைசெய்வான்.

(இ-ள்.) சச்சிதானந்த சொரூபரும் முதற் கடவுளருமாகிய மகாதேவர் கிருபையினாலே எல்லாத்தருமங்களையுஞ் செவ்வையாக வாராய்ந்தறிந்த வியல்புள்ளகுமாரனே உன்மத்தங் கொண்டவர்போன்று எதுவோ ஒரு எண்ணத்தை மனதில் வைத்திருக்கின்றனை உள்ளக்கருத்தைச் சொல்லென்றவளவில் அம்மனு கூறுகின்றனர், எ-று. (ஙு)

வேறு.

மறைமுத லனைத்துமோர்ந்து மாண்புடை யறஞ்சரித்து
விறையவ வருமையாகு மிதனினும காசியெய்தி

முறைமையின் வசித்தலொன்றுன் முற்றுமென் றுள்ளந்தேர்ந்தேன்
கறைதப விடைநல்கென்றுன் காமரு மனுவக்காலே.

(இ-ள்.) வேதமுதலிய கலைகள் யாவையுமுணர்ந்து மாட்சிமையுள்ள தருமங்களை நிலைபெறமுடிப்பது எனதிறைவரே அரியதாகும் இவ்வருத்த முறுவதைப்பார்க்கிலும் காசித்தலத்திற்குப்போய் விதியாக வாசஞ்செய்தலாகிய ஒரே காரணததால் எல்லாத்தருமங்களும் கைகூடுமென்று மனதில் நிச்சயித்தேன் சந்தேகம் நீங்கும்படி உத்தரஞ்சொல்லவேண்டுமென்று அழகிய மனுகேட்டுக் கொண்டனன் அந்தசமயத்தில். எ-று. (ச)

தென்றிசைக் கிறைவனங்குச் சேர்ந்தனன் வணங்கநோக்கி
யொன்றிய செங்கோற்றேவா வுற்றதென் னுரைத்தியென்று
நன்றியின் மலரோன்கேட்ப ஞாலத்து மாந்தர்சில்லோர்
கன்றிய பாவஞ்செய்து கடையரே யாயினுரால்.

(இ-ள்.) தென்றிசைக் கரசனுயுள்ள இயமன் அவ்விடம்வந்து பணிய பிரமதேவர் பார்த்து நிலைபெற்ற செங்கோலையுடைய தேவனே இவ்விடத்துக்கு நீ வந்தது யாதென்றுகேட்ப உலகத்தில் சிலமனிதர்கள் வருத்தத்தைத்தருகின்ற தீவினைகளைச்செய்து இழிஞரானுர்கள். எ-று. (ரு)

அனையரை முறையிற்றண்ட மாற்றிடத் தம்மினென்று
வினையம்வல் லவரேயாய படர்தமை விடுத்தேனுகத்
துனையமற் றவர்களெல்லாந் தொக்கபுண் ணியத்தராகி
வனையமேம் பட்டாரென்று வறிதுமீண் டனரென்றூதர்.

(இ-ள்.) அப்பாவிகளை விதிவழி தண்டனைசெய்வதற்குக் கொண்டுவாருங்களென்று சாமர்த்தியமுள்ள தூதர்களை யனுப்பினேன். அப்பாவிகளெல்லோரும் விரைவில் நிறைந்த புண்ணியத்தை உடையவராகி மிகச்சிறந்து விட்டனரென்று தூதர்கள் (அவர்களை) விட்டுச் சும்மாவந்தனர். எ-று. (சு)

சிலரொரு காசிரூபஞ் சிந்தித்துங் காசியென்றே
சிலரிடை யறுதுசொற்றுஞ் சிலரதை யடைந்தமர்ந்துஞ்
சிலரத னிடத்துத்தெய்வச் சிவப்பிர திட்டைசெய்துஞ்
சிலர்சிறு தானமங்குச் செய்தும்போக் கினராம்பாவம்.

(இ-ள்.) அந்தப்பாவிகளுட் சிலர் காசித்தலத்தைச் சிந்தனை செய்தும் சிலர் காசிகாசியென்று விடாதுசொல்லியும், சிலர் அந்தத்தலத்தை யடைந்து வாசஞ்செய்தும் சிலர் அத்தலத்தில் தெய்வத்தன்மையுள்ள சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தும் சிலர் உபாயதானங்களை அத்தலத்திற்செய்தும் பாவங்களையொழித்தனர்களாம். எ-று. (எ)

என்றனர் தூதரிவ்வா றிருக்கில்யான் யாதுசெய்கே
னென்றவென் னதிகாரத்தா லொருபய னில்லைக்கண்டாய்

நன்றிது நின்பாற்கூற நானிங்கு வந்தேனென்று
னன்றய னிருவருந்தன் னருகுறக் கயிலைபுக்கான்.

(இ-ள்.) தூதர்கள் இவ்வாறு சொன்னார்கள் இப்படிச் சிருக்குமானல் யான் யாது தண்டனைசெய்யக்கூடும் உண்டாகின்ற வெனததிகாரத்தினல் ஒரு பிரயோசனமு மில்லாதிருக்கின்றது இதை, தேவரீரிடத்துச்சொல்ல இவ்விடம் வந்தேனென்றனன். அப்போது பிரமதேவன் இயமனும் மனுவுங்கூடவேவரா கைலாசத்தை யடைந்தனன். எ-று. (அ)

நந்தித னநுஞைபெற்று நாயக னெதிரேசென்று
பந்தியின் வணங்கிநிற்பப் பராபரன் விதியைநோக்கி
யுந்திவந் தவநீமேய துரைமனு காலன்மேவச்
சிந்திய தென்னைசொற்றி யென்றலும் பிரமன்செப்பும்.

(இ-ள்.) ஸ்ரீ கைலாசபர்வதத்தில் திருநந்திதேவரை (வணங்கி) அநுமதி பெற்று கைலாசவாசரெதிரேபோய், வரிசையாக அம்மூவரும் வணங்கிநிற்க, சிவபெருமான் பிரமதேவரைப்பார்த்து விஷ்ணுவின் நாபிக்கமலத்துதித்த பிரமனே நீ வந்தகாரணத்தைச் சொல்வாயாக சுவாயம்பு மனுவும் யமனும் விரும்பிச் சிந்தித்துவந்த காரணம் யாது அதையுஞ் சொல்வாயென்று திருவாய்மலர்ந்தபோது பிரமதேவர் கூறுகின்றனர். எ-று. (௯)

ஆக்கிடு நாளிங்கெய்தி யடியனே னின்பாலன்பு
தேக்கிடு பவர்யாரென்றேன் றேவநீ யருளிச்செய்தாய்
தூக்கிடு மறைமுற்றோர்ந்து துணிந்துபா தகங்களெல்லாம்
போக்கிடு மவரேயென்று புகன்றது விரோதமாக.

(இ-ள்.) பிரதம சிருட்டிகாலத்தில் அடியேன் இவ்விடம் வந்து தேவரீரிடத்து அன்புநிறையச்செய்து சிவானந்தத்தை யனுபவிப்பவர் யாவரென்று வினவினேன் ஆராய்ந்துணரத்தக்க வேதங்கள் முழுமையும் தேர்ந்து வைராக்கியத்துடன் தீவினைகள் யாவையும் ஒழிப்பவர்களே (அதிகாரிக) ளென்று மகாதேவரே யருளிச்செய்தீர் அவ்வாறருளியதற்கு விரோதமாக. எ-று. (௧௦)

வேதமா கமங்கைவிட்டு விடையவா தனையிற்பட்டுப்
போதமா தரியாரெல்லாப் புன்மையும் புரிந்தோரெல்லாஞ்
சீதமா காசிமேவித் தீவினை யில்லாராயுன்
பாததா மரையின்மேவும் பரிசன ராஞரைய.

(இ-ள்.) வேதாகமவிதியைக் கைவிட்டுப் பிரபஞ்சவாசனையில் மூழ்கி ஞானத்தைப் பெறாதவராகி எல்லாக்கொடுமையுஞ் செய்துள்ளோரியாவரும் கங்காதீர்த்தத்தையுடைய காசித்தலத்தை யடைந்து தீவினைகளை யொழித்து எனதையரே தேவரீருடைய திருவடித்தாமரையைச்சேரும் அடியவரானார்கள். எ-று.

உள்ளநா ளளவும்பாவ முஞற்றினோர் காசிமேவி
யெள்ளரு முத்தராஞ லியமனென் செய்யவல்லான்

விள்ளரு மனுவும்வேத விதிநடத் தலினுங்காசி
மெள்ளயாஞ் செல்வாமென்று விளம்பினன் விமலவென்றான்

(இ-ள்.) ஆயுண்முடியுமளவுந் தீவினைகளைச் செய்தவர்கள் காசித்தலத்தை யடைந்து பெருமையைத்தரத்தக்க முத்தியடைவார்களானால் இயமன் யாதுசெய்ய வல்லவன். சொல்லுதற்கரிய சுவாயம்பு மநுவும் வேதவிதிவழியே நடந்து (தருமஞ்) செய்வதைப்பார்க்கிலும் எளிதாகக் காசித்தலத்தை யடையலாமென்று கூறினன். நிர்மலரே (கேட்டருள்வீரென்று) பிரமன்கூறினான். எ-று. (௧௨)

முதுமறைக் கிழவன்வார்த்தை முன்னவன் செவியினேற்று
மதுமலர்த் தவிசோய்கேட்டி யெதுதெரி தரின்மற்றுண்மை
யதுதெரி தருமற்றன்ன தறைபரம் பிரமமாகும்
பொதுவுறு மதனாலென்றுந் தொழிற்படும் புகலுமாயை.

(இ-ள்.) அநாதியாகிய வேதத்துக்குரிய பிரமதேவன் வாக்கியத்தை முதற்கடவுளாகிய சிவபெருமான் திருச்செவியிற்கொண்டு தேன்துளிக்கின்ற தாமரைமலரை ஆசனமாகக்கொண்ட பிரமனே கேட்பாயாக.ஒருவன் எதைத்தெரிந்தால் உண்மைப்பொருள் வெளியாகுமோ அதைத்தெரியவேண்டும் அவ்வுண்மைப்பொருளே வேதங்கள் பிரதிபாதிக்கின்ற பரம்பொருள். எல்லாவற்றுக்கும் பொதுவாயுள்ள அப்பரம்பொருளால் மாயாகாரியங்கள்யாவும் சேட்டித்து வருவனவாம். எ-று. (௧௩)

ஆயதோர் மாயைநின்று மகிலதத் துவமுமாய
காயமுன் னும்மாயா காரியம் பொருளாப்பற்றி
மேயபல் சீவரெல்லாம் விடயவா தனையிற்பட்டார்
பாயவீ தொழிக்குமாறே படைத்தனங் காசிவைப்பை.

(இ-ள்.) அவ்வண்ணமுண்டாகிய மாயையிலிருந்து சரீரமுதலிய பிரபஞ்ச தத்துவங்கள் யாவும் உண்டாயின.மாயாகாரியப்பிரபஞ்சத்தை உண்மைப் பொருளாகப்பற்றிக்கொண்டு விருப்பமுற்ற ஜீவகோடிகளெல்லாம் விடையவாதனைகளில் மூழ்கினார்கள் பரவிய இவ்விடையவாதனையை யொழிக்கும்விதமாகவே காசித்தலத்தையுண்டுபண்ணேம். எ-று. (௧௪)

காசிக்கு நமக்கும்பேத மிலையென்று கருதிநாளும்
வாசிக்கு மறைகளெல்லா மற்றது நஞ்சொரூப
நேசிக்கு மதனையுற்றா நெடும்பிழை யனைத்துநீங்கிப
பூசிக்குந் தகையராவார் புகலிதற் கையமின்றே.

(இ-ள்.) காசித்தலத்திற்கும் நமதுவடிவத்திற்கும் பேதஞ்சற்றுமில்லையென்றுசிந்தித்து வேதங்கள் எப்பொழுதும் பிரதிபாதித்துக்கொண்டிருக்கும் (ஆதலால்) அக்காசித்தலம் நமதுவடிவமாகும் விரும்பத்தக்க அத்தலத்தையடைந்தவர் கொடும்பாதகங்கள் யாவும் ஒழிந்துஅன்னியரால் பூசிக்கும் தரமுடையவராவார்கள். சொல்லத்தக்க இவ்வார்த்தைக்குச்சந்தேகமில்லை. எ-று. (௧௫)

புனிதமல் லாதயாவுங் காசியிற் புக்கபோதே
புனிதமாங் கங்கையாற் றிற் புக்கதீ தாயகள்ளும்
புனிதமாந் தீர்த்தமாகிப் புக்குமூழ் கினர்க்கென்றுன்றும்
புனிதமே கொடுத்துமேவும் புண்ணிய மறைவல்லோயே.

(இ-ள்.) கங்காநதிப்பிரவாகத்திற் சேர்ந்த கொடிதாகிய மதுவும் பரிசுத்தமான தீர்த்தமயமாகி அடைந்து முழுகுபவர்க்கு, எக்காலத்தும் பரிசுத்தத்தைத் தருவதுபோல் பரிசுத்தமில்லாத எப்பொருளும் காசித்தலத்தையடைந்தபோதே சுத்தமாகுமென்றறிவாயாக. புண்ணியரூபமான வேதங்களில் வல்லவனாகிய பிரமனே. எ-று. (கசு)

தேர்தரும் பரிசவேதி தீண்டிய வனைத்தும்பொன்னா
யோர்தரு மாறுபோல வீணையிலாக் காசிமேய
பேர்தரும் பலவுநந்தஞ் சொரூபமாய்ப் பிறங்குங்கண்டாய்
கார்தரு நிறத்தோனுந்தி யாயசெங் கமலத்தோயே.

(இ-ள்.) ஆராய்ந்தறியும் பரிசவேதியினாலே தொடத்தக்க எல்லாப்பொருள்களும் அழகுபெறும்படியான பொன்னாகு (விளங்கும்) தன்மைபோல காசித்தலத்தையடைந்த நாமரூபங்களையுடைய பலபொருள்களும் நமதுவடிவாக விளங்குமென்றறிவாயாக. கருநிறங்கொண்ட விஷ்ணுவின் நாபிக்கமலத்திலுண்டாகிய பிரமனே. எ-று. (கஎ)

காசியைப் புகழாராகி யிகழ்தருங் கயவரெல்லாஞ்
சீசியென் றியாருமெள்ளத் திரிதரு புழுத்தநாயாய்க்
கூசிய கரமாய்ப்பின்னுங் கொடியசூ கரமாய்நன்மை
வீசிய கொடியாய்மாய்ந்து வீழ்குவர் கும்பிதோறும்.

(இ-ள்.) காசியைத்துதியாமல் நிந்தனைசெய்கின்ற மூடர்களியாவரும் சீச்சீயென்று எல்லோரும் நிந்திக்கும்படி திரிகின்ற புழுத்தநாயாகவும், தொடுதற்கு நாணத்தைத் தருகின்ற கழுதையாகவும், பின்னுங் கொடுமையுள்ள பன்றியாகவும், நன்மையறியாத காகமாகவும் பிறந்திறந்து பின்பு நரகங்கடோறுமுழுகுவார்கள். எ-று. (கஅ)

அரியநஞ் சொரூபமாய வாரருட் காசியொன்றே
பெரியவா ரழலாய்த்தோன்றிப் பேணுவார் பாவக்காட்டைத்
தெரியவே தகித்துநீறு செய்திடு மென்றூற்பாவ
மிரியநீக் கிடுதலந்தத் தலக்கலா லெவற்றிற்குண்டே.

(இ-ள்.) அருமையாகிய நமதுவடிவமாகவும், நிறைந்த அருளைத்தருவதாகவுமுள்ள ஒப்பற்ற காசிப்பதியானது, விரும்புகின்றவருடைய பாவங்களாகிய அடவியைப் பிரபலாக்கினி வடிவாகி யாவருங்காணும்படி தகித்து நீறுக்குமானால், பாவ முழுவதும் நீக்குதல் அக்காசித்தலத்துக்கல்லாமல் வேறே எந்தத்தலங்களுக்குண்டு. எ-று. (கக)

இன்றுதொட் டியமன்காசி யென்றவ ரிருந்தவூருஞ்
சென்றிடல் கருதானுகச் சென்றிடின் முன்போனம்மாற்
பொன்றுத லொழியாதுள்ளத் தெண்ணிய படிபோய்மேவி
நன்றுசெய் மநுவும்வாசஞ் செய்தெல்லா நலமுமார்க.

(இ-ள்.) இன்றுமுதல் இயமன், காசியென்று சொன்னவர்கள் வசிக்கின்ற ஊரிலும் போவதற்கு எண்ணுதிருக்கக்கடவன்; போவானுகின் முன்போல நம் மாற்றண்டிக்கப்படுதல் தவருது நன்மையுள்ளசுவாயம்புமநுவும் மனதில் எண்ணி யபடி காசிக்குப்போய வாசஞ்செய்து எல்லாநன்மைகளையும் பெறக்கடவன். ()

நடுவனே மனுவேபூமே ஞன்முகத் தவனேநீவி
கடுகியக் காசிசென்று கங்கைநீ ராடிநம்மைப்
படுமலா கொண்டுபோற்றிப் பகருநங் குறிநும்பேரால்
வடுவறப பதிட்டைசெய்து தனித்தனி வயங்கப்போற்றி.

(இ-ள்.) இயமனே, சுவாயம்புமநுவே, தாமரைமலரில் வசிக்கின்ற நான்கு முகங்களையுடைய பிரமனே நீங்கள் (மூவரும்) விரைவாகக் காசித்தலத்தையடைந்து கங்காஸ்நானஞ்செய்து விசுவநாதரென்னும் நம்மை நல்லமலர்களைக்கொண்டர்ச்சித்து உங்கள்பேரால் நமதுவடிவான சிவலிங்கங்களைக்குற்றமறத் தனித்தனி பிரதிட்டைசெய்து அறிவுவிளங்கத்துதித்து. எ-று. (௨௧)

சிலபக லமர்ந்துபின்பு திகழுநும் பதவிசேர்மி
னலகிலா னந்தமுத்த ராகியின் புறுவீரென்று
பலதலை யரவம்பூண்ட பரஞ்சுட ரருளிச்செய்யச்
சலசமா மலரோனுதி மூவருந் தாழ்ந்துபோற்றி.

(இ-ள்.) சிலநாள்வாசஞ்செய்து பின்னர், விளங்கிய உங்கள்பதவியையடைவீர்கள். (அதன்பின்) அளவில்லாத ஆனந்தத்தைப் பெறுகின்ற சீவன்முத்தராகிச்சுகித்திருப்பீர்களென்று பலவாகிய சிரசுகளையுடைய அரவபூஷணரான சிவபரஞ்சோதி திருவாய்மலர்ந்தருள, நீரிலுண்டாகும் தாமரைமலரோன் முதலிய மூவரும் வணங்கித்துதித்து. எ-று. (௨௨)

விடைகொடு காசிபுக்கு வெண்டிரைக் கங்கையாடி
யடையவெண் ணீறுபூசி யக்கமா மணியும்பூண்டு
மிடையவைந் தெழுத்துமெண்ணி விச்சுவநாதனன்ன
நடைகெழு விசாலக்கண்ணி நற்பதம் பணிந்துபோற்றி.

(இ-ள்.) அனுமதிபெற்றுக்கொண்டு காசித்தலத்திற்குப்போய், வெள்ளிய அலைகளையுடைய கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, நன்மையடையுமாறு விபூதி தரித்து, பெருமையுள்ள உருத்திராக்க மாலையையணிந்து, ஸ்ரீபஞ்சாட்சரத்தைச் சதாகாலமும் உச்சரித்து விசுவநாதருடையவும் அன்னம்போல நடையுள்ள விசாலாட்சித் தாயாருடையவும் நல்ல திருவடிகளை வணங்கித்துதித்து. எ-று. (௨௩)

தனித்தனி தத்தம்பேரா லிலிங்கதா பனமுஞ்செய்து
பனித்தமென் கங்கையாட்டிப் பனிமல ரெடுத்துச்சூட்டி

யினித்தபல் லுணவுமூட்டித் தீபமு மெடுத்துக்காட்டி
யனித்தமாம் விடயவாழ்க்கை யகன்றுபூ சித்திருந்தார்.

(இ-ள்.) தங்கள் தங்கள்பேரினாலே தனித்தனி சிவலிங்கப்பிரதிட்டைசெய்து, குளிர்ந்த கங்காதீர்த்தத்தால் அபிஷேகித்து, நல்லமலர்கள் எடுத்து அர்ச்சித்து, இனிமையுள்ள பலவான உண்டிகளைநிவேதித்து, தீபாராதனைசெய்து அநித்தியமான விஷயசம்பந்தமாயுள்ள வாழ்க்கையொழிந்து பூசித்து வாசஞ்செய்திருந்தனர். எ-று. (உச)

இறையவ னுரைத்தவாறே யிங்ஙனஞ் சிலநாள்வைகி
மறையவன் முதன்மூவோரும் வயங்குதம் பதவிபுக்கு
நிறைமகிழ் திளைத்துக்காசி நினைத்தன்மா றுதுவாழ்ந்தா
ரறைகட லுலகிற்காசி போல்வதொன் றுமையுங்கொல்லோ.

(இ-ள்.) சிவபிரான் திருவாய்மலர்ந்தவண்ணமே இவ்வாறு சிலகாலம் காசியில்வசித்து, பிரமதேவர்முதலிய மூவரும் விளக்கமுற்ற தத்தம்பதவிகளைச் சேர்ந்து நிறைந்த இன்பத்தில் மூழ்கி மாறாது காசித்தலத்தைச் சிந்தித்துக்கொண்டு வாழ்ந்தார்கள். ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த உலகத்தில் காசித்தலத்துக்கு ஒப்பாக வேறொன்றிருக்கின்றதோ (என்று சவுநகாதிமுனிவர்களுக்குச் சூதமகாமுனிவர்) சொல்லியருளினர். எ-று. (உரு)

## பிரமன்முதன் மூவரும் பூசித்த அத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ௰ச-க்கு திருவிருத்தம், ௫௱௩௰.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# பதினாறாவது துச்சேதாமுத்தியடைந்த அத்தியாயம்.



திருச்சிற்றம்பலம்.

மழையுலாம்பொழின் மகததேயத்துறை மறையோன்
விழையுநூல்பல தெரிந்தொன்று பலவெனவிரிப்பான்
குழையுநெஞ்சமில் கொள்கையனும் துச்சேதா
வுழையடைந்தவர் வாயடங்கிடவெடுத் துரைப்பான்.

(இ-ள்.) மேகங்கள் தவழப்பெற்ற சோலைசூழ்ந்த மகததேசத்திலிருக்கின்ற ஒருபிராமணன், விரும்புதற்குரிய பலநூல்களை யுணர்ந்து ஒருபொருளைப் பல பொருளாக விரித்துக்கூறுவான் இரக்கமில்லாத மனமுடையவன். துச்சேதா வென்கிற நாமமுடையவன் தன்னிடத்துவந்த பண்டிதர்கள் வாயடங்கும்வகை யாக நியாயங்களெடுத்துக்கூறுவான். எ-று. (க)

கற்றகல்வியை மதித்துளச்செருக்கொடு களிப்பான்
கொற்றவாரிய னையுமவமதித்துமேற் கொண்டு
சுற்றமாமறை யவரெலாந்தோல்வியிற் றொலையப்
பொற்றவாதில்வென் றிணையிலைநமக்கெனப் பொலிந்தான்.

(இ-ள்.) தான்கற்ற கல்வியைத் தானேமதித்து உள்ளச்செருக்கினால் வியப் புறுவான் வல்லமையுள்ள ஆசிரியனையும் அவமதித்து வாதமிட்டுக்கொண்டது மன்றி, பெருமைதங்கிய பந்துக்களாயுள்ள பிராமணரனைவரும் தோல்வியினாலே விலகிப் போம்படிக்கு வீண்வாதில்வென்று நமக்கொருவருஞ் சமானமில்லையெ ன்கிற தருக்குடையவனானன். எ-று. (உ)

தருமநோக்கிலன் றருக்கினாற்சவுதசு மார்த்த
கருமம்யாவையும் வேறுசெய்தானகந் கரிப்பான்
பொருவிலாவொரு சாதுவேதியனொடும் பொருதூ
ரொருவவோட்டினு னித்தொழிலறமென வுவப்பான.

(இ-ள்.) தருமப்பார்வை யில்லாநாகித் தனது செருக்கால் வேதசம்பந்த மாயுள்ள சிரௌதமார்க்கத்திலும் ஸ்மிருதி சம்பந்தமாயுள்ள ஸ்மார்த்தமார்க்கத் திலும் விதித்த கருமங்களெல்லாவற்றினையும் ஒன்றை மற்றொன்றாக வேறுபட த்தக்க நூல்களைச்செய்து அதனால் அகங்காரம்வளர்ந்து சமானமற்ற மஹாபுரு ஷனான ஒருசாதுப்பிராமணனுடன் வாதிட்டு ஊனைவிட்டுப் (பயந்து) அப்பால் ஓடும்வகைசெய்து இப்பாவத்தொழில்களைத் தருமமென்று களிப்பவனானான். (௩)

நெறியலாநெறி யொழுகுபுகழ்கொடு மறையோன்
முறியமேலவ ரிட்டசாபங்களு மூள
வறியனுய்க்கொடும் பிணிகளுநெருக்கலால் வருந்தஞ்
செறியயாவரு முள்ளுளேயுவந்திடச் செத்தான்.

(இ-ள்.) விதிக்கு விரோதவழியில் தடையின்றி நடக்கின்ற அக்கொடிய பிராமணன் வருந்தும்படி பெரியோர்களால் இட்ட சாபங்களும்சூழ்ந்துகொள்ள வறுமையடைந்து கொடிய வியாதிகளும் மூடிக்கொண்டதனுல் அதிக துன்ப முற்று யாவரும் மனதிற்குள்ளே களிக்கும்படி இறந்தனன். எ-று. (ச)

செத்தவேதியன் பிரமராக்கதவுருச் சிவணி
யெரத்ததோரில வுவந்துமார்க்கத்துறு வோரைச்
சுத்தமாவச னித்தழைத்தவருயிர் தொலைத்துப்
பத்தமாமுடல் வீக்கிடத்தசைபறித் துண்பான்.

(இ-ள்.) அவ்வாறு மரணத்தையடைந்த பிராமணன் பிரமராக்ஷத ரூபத்தை எடுத்துக்கொண்டு வளர்ந்ததோரிலவமரத்திலிருந்து, அம்மார்க்கத்திற் போகின்றவர்களைப் பரிசுத்தமான (பிரிய) வார்த்தையால் வரவழைத்து அவர்களிறந்துபோகும்படி அஸ்திமாம்சங்களால் பந்தப்பட்ட தேகத்தைக்கிழித்துத் தசைகளை யெடுத்துண்பவனுனன். எ-று. (ரு)

இந்தவாறிவ னிலவின்மேலமர்தரு மேல்வைச்
சந்தமரமறைக் குலத்தினன் * பதிகனுய்த் தனித்தே
யந்தவோர்தரு வண்மையிற்காசியென் றறைந்து
முந்தவேகினன் கண்டனன்முதுகொலை மூர்க்கன்.

(இ-ள்.) இவ்விதமாக இப்பிரமராக்ஷதன் இலவமரத்திலிருக்குங்காலத்தில் அழகும் பெருமையுமுள்ள வேதப்பிராமண குலத்திற்பிறந்த ஒருவன் தனியே வழிச்செல்பவனுகி அந்த இலவமரத்தின் சமீபத்தில் வரும்போது காசிகாசி என்கிற திருநாம மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு நடந்தான். பெருங்கொலைபுரியுமூடனுகிய பிரமராக்ஷதன் இதைப்பார்த்தனன். எ-று. (சா)

காசிகாசியென் றறைந்தமந்திரஞ்செவி கலப்பச்
சீசியென்செய்தா மென்றுதநகொடுந்தொழில் சிதைத்துக்
கூசிமண்ணிழிந் தவனடிபணிந்துகை கூப்பி
யாசிகூறிநீ யாவனெங்கடைகுதி யென்றுன்.

(இ-ள்.) காசிகாசியென்கிற (மகா) மந்திரஞ்செவியில் நுழைந்தமாத்திரத்தில், இழிந்த நான் என்னகாரியஞ் செய்தேனென்று தனது கொடுந்தொழிலை விட்டு அவமானமுற்று பூமியிலிறங்கிவந்து வழிச்செல்லும் பிராமணன் பாதங்க

* பதிகன் = வழிசசெல்வோன.

ளில் வணங்கி, (இரு) கரங்களையுங்குவித்து வாழ்த்துதல்சொல்லி நீர் யாவர் எவ் விடத்திற்குப் போகின்றீரென்றனன். எ-று. (எ)

தீர்த்தயாத்திரை செய்பவன்றிருமறைக் குலத்தே
ஞர்த்தவண்புரு டோத்தமக்ஷேத்திர மகன்று
கார்த்தபைம்பொழிற் காசியையடைதரச் செல்வே
னீர்த்தநீயெவ னிவ்வுருவடைந்ததென் னென்றான்.

(இ-ள்.) நான் புகழ் நிறைந்த புருஷோத்தம க்ஷேத்திரத்திலிருக்கும் பிராமணன் அவிடம்விட்டுத்தீர்த்தயாத்திரை செய்து வருகின்றேன். மேகந்தங்கிய சோலைசூழ்ந்த காசித்தலத்தை யடையும்படி செல்கின்றேன் மனிதனைக்கிழிக் குந்தன்மையுள்ள நீ யாவன் உனக்கு இந்தவடிவம் வந்த காரணம் யாதென்ற னன். எ-று. (அ)

ஓங்குமாமகதத்துயர் மறைக்குலத் துதித்தேன்
றீங்குசால்குணஞ் செறிந்துளேனுமந்துச் சேதா
வாங்குகல்வியாற் செருக்கியாரையுமவ மதித்துத்
தேங்குசாபமும் பிணியும்வந்தடர்த்திடச் செத்தேன்.

(இ-ள்) உயர்வுள்ள இலக்குமி வசித்தற்கிடமாகிய மகததேசத்தில் மே லான பிராமண குலத்திற்பிறந்து, துச்சேதாவென்னும் பெயர்பெற்று, கொ டுந்தொழிலையே மிகுதியாகச்செய்து கல்விச்செருக்கால் எல்லோரையும் அவம தித்து, பெரியோர்களிட்ட, நிறைந்த சாபத்துடன் வியாதிகளும் வந்து துன்பப் படுத்தலால் இறந்துபோனேன். எ-று. (கூ)

கடியதீவினை யியற்றலாற்பிரமராக் கதனாய்
நெடியவித்தரு வுற்றுளேனினதுவாய் நிகழ்த்துங்
கொடியமாளிகைக் காசிநாமஞ்செவிக் குறுக
விடியலுற்றதென் னளவிலாவெவ்வினை யிருட்டே.

(இ-ள்.) ஆசாரியர் நிந்தை முதலிய மஹாபாதகங்களைச் செய்தமையால் பிரமராக்ஷத ரூபத்தையடைந்து பெரிய இவ்விலவமரத்தி லிருந்தேன் உமது வாயினாற்கூறிய கொடிகளையுடைய மாளிகைகணெருங்கிய காசியென்கிற மந் திரம் எனது செவியில் நுழைந்தமையால் என்னுடைய அளவில்லாத கொடும் பாவமாகிய இருளானது விடியத்தொடங்கியது. எ-று. (கக)

ஆதலானின தடியிணைபோற்றுதற் கமைந்தேன்
காதலாலெனை யுடன்கொடுசெல்லுதி காசிப்
போதலாற்பெரும் புண்ணியமுனக்குமுண் டாமே
சாதலாற்கதி யளிப்பதத்தலமன்றோ வென்றான்.

(இ-ள்.) ஆதலினால் உமது உபயபாதங்களையும் வணங்கலுற்றேன், காசித் தலத்திற்குத் தேவரீர் கருணையினால் அடியேனை உடன்கொண்டுபோ யருள்வீர்

இறந்தால் முத்தியைத் தருகின்றது அத்திருத்தலமாகலின் என்னையழைத்துக் கொண்டு போனாலுமக்கு அதிக புண்ணியங்கிடைக்குமென்றனன். எ-று. (௧௧)

என்றகாலையி னவனையுமழைத்துட னேகிக்
கன்றறீர்த்தருள் சோணபத்திரநதி கடந்து
மன்றவானவர் செறிதருவளம்பொலி காசி
வென்றவெல்லையுற் றனனவனோடும்வே தியனே.

(இ-ள்.) இப்படியென்றுசொல்லியபோது அப்பிரமராட்சதனையும் அழைத்துக்கொண்டுபோய், கிலேசத்தை யொழித்தருள்கின்ற சோணபத்திர நதியைத்தாண்டி, நிலைபெற்றதேவர்கள் நெருங்குதற்குரியதும், பலவளங்கள் நிறைந்ததும் தீவினையைவெல்வதுமாயுள்ள காசியெல்லையை வேதியனடைந்தனன்.()

இங்குநிற்றியென் றவனையாங்கியைபுற நிறுத்தித்
தெங்குதங்கிய தண்பொழிற்காசியுட் சென்று
பொங்குகங்கைநீர் தோய்ந்தகிலேசனைப் போற்றி
யங்குமண்சிறி தெடுத்துவந்தவன்மிசைத் தூவி.

(இ-ள்.) நீ இவ்விடத்தில் நிற்பாயென்று அப்பிரமராக்கதனை நிறுத்திவிட்டு, தென்னமரங்களையுடைய குளிர்ந்த சோலைசூழ்ந்த காசித்தலத்தினுள்ளே போய், பெருக்கெடுத்துவரும் கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து விசுவநாதனை வணங்கி அக்கங்கைக்கரையிலுள்ள மண்ணைக்கையிலெடுத்து வந்து அவன் மேற்போட்டு. எ-று. (௧௩)

சுத்திபெற்றனை யுட்புகுந்துய்யெனச் சொற்றான்
பத்திமிக்கவன் பதம்பணிந்துள்ளிடைப் படர்ந்து
சித்தியுற்றகி லேசனைச்சேவித்துத் தெளிந்து
முத்திபெற்றனன் பிரமராக்கதவுரு முடித்தே.

(இ-ள்.) பரிசுத்தத்தை யடைந்தனை, இனி உள்ளே புகுந்து பிழைத்துவிடுவாயென்று (அந்தப்பிராமணன்) சொன்னான். அன்பு மிகுந்த அவன் பாதங்களில் வணங்கி உள்ளேபோய் (கங்காஸ்நாநஞ்செய்து) விசுவேசுரனை வணங்கிச் சிலகாலமிருந்து சித்த சுத்தியடைந்து சித்திகளைப்பெற்று பிரமராட்சத வடிவையொழித்து முத்தியடைந்தனன். எ-று. (௧௪)

இழிவில்வேதியன் காசியென்றிசைத்திடு வார்த்தை
தழியபோறத் தாற்கொடுவினையெலாஞ் சாடிக்
கழியவென்றுயர் காசியுட்புக்ககி லேசர்
பொழியுமின்பத்து மூழ்கினனெனிற்புகலுவதென்.

(இ-ள்.) உயர்வுள்ள பிராமணன் காசியென்று சொன்னவாக்கியத்தை சூழ்ந்த பெரியதருமத்தால் செவியிற்கொண்டு மகாபாதகங்கள்யாவு முறிந்தோ மெபடி அவ்வாக்கியவலியால் வென்று மேலாகிய காசிப்பதியினுள்ளேபோய் விசுவநாதர் பொழிகின்ற பெருங்கருணையில் மூழ்கி (பிரமரர்ட்சதவடிவ) மொழிந்து முத்திபெற்றானென்றால் அத்தலத்தின் மகிமையை எவ்வாறு சொல்லக் கூடும் முனிவர்களே யென்று சூதமகாமுனிவர் திருவாய்மலர்ந்தனர். எ-று. (கரு)

## துச்சேதா முத்தியடைந்த அத்தியாயமுற்றியது.

ஆக அத்தியாயம். கரு-க்கு திருவிருத்தம், (௫௱சரு.)

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# பதினாறாவது நித்தியயாத்திரைவிதி யுரைத்த அத்தியாயம்.

---

திருச்சிற்றம்பலம்.

சத்தியமாமுனிவரர்கள சூதமுனிவரைப்போற்றித் தவர்தகாசி
நித்தியயாத்திரைவிதியை யுரைத்தியென பபெருமகிழ்ச்சி நிரமபிவாசம
பொத்தியமென்மலர்க்குழலா ளுமையம்மையிதுவினவப் புவனநாதன்.
மெத்தியவர்ன்கருணையொடுவிளம்பினனவ்வாறுமக்குவிளம்புகின்றேன்

(இ-ள்.) உண்மைஞானமுள்ள சவுநகாதிமுநிவர்கள் சூதமகாமுநிவரைவணங்கி, நித்தியமாயுள்ள காசித்தலத்தில் நாடோறு நடக்கவேண்டியநித்தியவிதியை உரைத்தருள்வீரென்று கேட்க, சூதமுநிவர் பெருங்களிபபடைந்து இந்நித்தியவிதியை வாசனைநிறைந்த மிருதுவான மலர்கள் முடித்த அளகத்தையுடைய உமாதேவியார் கேட்டபோது சிவபெருமான் பெருஙகருணையோடு திருவாய்மலர்ந்தனர் அந்தப்பிரகாரம் உங்களுககுககூறுகின்றேன் என்றனர். எ-று. (க)

அண்ணலேகாசிவசிப் பதற்கிடையூறளவிலவா மதனேடின்ப
நண்ணலேசெயுந்தருமம புரிபவர்க்குமூறுமிக நண்ணுநிறகு [டுங்
மெண்ணலேதேனுமிலா திருபபதற்கெத்தொழிலாற்றி யிருத்தல்வேண்
கண்ணலேயுடையேற்குப் புகறியெனச்சிவபெருமான் கழறலுற்றான்.

(இ-ள்.) பெருமையிற் சிறந்த மகாதேவரே காசித்தலத்தில் வாசஞ்செய்வதற்கு அளவிறந்த இடையூறு உண்டாகும் வாசஞ்செய்வதுடன் சுகத்தைககொடுககுந் தருமஞ்செயபவருக்கு விரோதம் அதிகமாகும் கவலையொன்றுமணுகாதிருப்பதற்குத தக்கமுயற்சி யாதுசெயய வேண்டுமென்கிற எண்ணமுள்ள அடியேனுக்கு ஈதென்றுகட்டளை யிடுவீரென்ற (உமாதேவியார்களிப்புறச) சிவபிரான் திருவாயமலரத தொடஙகினர். எ-று. (உ)

சூடருதயமெழுமுனமைங் கடிகையளவெழுந்திருந்து தூயவெண்ணீ
றிடாகலபபுனைந்துதுண்டி ராசவிநாயகன்பாத மிறைஞ்சியேத்திய
படர்கற்றுமவிசுவேச ரன்னபூரணியெனுநம் படிவமுள்ளி
யடர்விறற்றிண்காலவயி ரவாதண்டபாணியருளைங்கைப்புத்தேள்.

(இ-ள்.) சூரியோதயமாதற்கு ஐந்து நாழிகைக்கு முன்னமெழுந்திருந்து (விதிப்படிவிளைவித்துச்) சுத்தமமைந்த விபூதியைத் துயரமொழியும் வண்ணந்

தரித்துத் துண்டிராஜ கணபதியின் றிருவடிகளை வணங்கித்துதித்து (பிறவித்) து ன்பத்தை விலக்கும் விசுவநாதர் அன்னபூரணியென்கிற நமது திருவுருவங்களைத் தியானித்து நிறைந்த பராக்கிரமமுள்ள காலவயிரவர், தண்டபாணி ஐந்து கரங்களையுடைய கணபதி. எ-று. (௩)

கேசவன்செங்கதிர்பபரிதி சண்டிகைமற்றிவருருவங் கெழுமவெண்ணி
நேசமிகுசவுசதந்த தாபனநானமபுரிந்து நீறுபூசி
வாசமலிசந்திதருப் பணமாதியியற்றிமல ராதிநேடிப்
பாசமகனந்தியா னத்தொடுமுற் றுவிமண் டபத்தைச்சார்ந்து.

(இ-ள்.) திருமால், சிவந்த கிரணங்களையுடைய சூரியன், துர்க்காதேவி, ஆகிய இவர்கள் வடிவத்தை அழுத்தமாகச்சிந்தித்து அதிகபிரியத்தையுண்டாக்கும் சவுசம், தந்தசுத்தி, நீராடல் (இவைகளைவிதிப்படி) செய்து, விபூதிதரித்து, சந்தியா வந்தனம் தர்ப்பணம் (ஜெபம் தியான) முதலியவைகளைச்செய்து புட்பமுதலிய வைகளைச் சம்பாதித்துப்பாசத்தை யொழிக்கும் நம்மைத்தியானஞ் செய்தலோடு முத்தி மண்டபத்தைச்சேர்ந்து. எ-று. (௪)

அங்குமிகுமுகமனொடு துதிபுரிந்துதுண்டியைப்பினடுத்துப்போற்றிப்
பொஙகுமிடரனைத்துமொழிக் கெனவிரந்துவிசுவேசர் பூசையாற்றித்
தங்குபிரதக்கணங்தோத் திரம்புரிந்துதண்டபா ணியைடபின்சரர்ந்து
பொங்குதிருப்பூசைதுதி செய்துபின்புவிசுவேசர் திருமுன்போந்து.

(இ-ள்.) அம்முத்தி மண்டபத்தில் உபசாரத்துடன், நம்மைத்தோத்திரஞ் செய்து பின்னர் துண்டிராஜ கணபதியைச் சமீபித்து வணங்கி மிக்க கிலேசங் கள்யாவும் ஒழித்தருள்வீரென்று குறையிரந்து விசுவநாதராகிய நம்மைப்பூசித்து விதிப்படி பிரதட்சணஞ்செய்து தோத்திரம்பண்ணி பின்பு தண்டபாணியை யடைந்து விளக்கமுற்ற பூசையுந் தோத்திரமுஞ்செய்து அதன்பின் விசுவநாத ராகிய நமது சந்நிதியில்வந்து. எ-று. (௫)

பூசித்துமுனமைந்தே ழொன்பானபன் னொன்றுமுதற் பொருந்துமாறு
நேசித்துவலஞ்சூழ்ந்து விசுவேசமிருகதர நிமலதேவ
வாசித்துமறைமுழங்குஞ் சகநாதமாற்பிரிய வாமதேவ
வோசித்துருபமா தேவபத்தாக்கனுகூல வும்பர்நாத.

(இ-ள்.) நம்மைப்பூசைசெய்து ஐந்து, ஏழு, ஒன்பது, பதினொன்று, (பதினைந்து, இருபத்தொன்று) என்னுந் தொகைகளிற் கூடுமான பிரதக்ஷணத்தை அன்புடன் செய்து விசுவநாதரே, மானணிந்த கரமுடையோரே மலரகிதராகிய தேவரே, வேதங்கள் முழக்கத்தோடு பிரதிபாதிப்பதற் கிடமாகிய சகநாதரே திருமாற்பிரியரே, வாமதேவரே, மெய்ஞ்ஞான சொரூபரே, மஹாதேவரே, பக்தானுகூலரே தேவதேவரே. எ-று. (௬)

காரணகாரணமத்த கனவுநககமுனகருருக் காலகால
பூரணகாசியினுயிர்க ளெவைக்குமுத்திகொடுத்தருளும் புராணவென்று
நாரணனுதியர்விரும்புந் துதிபுரிதலறவிருத்தி நன்றுமேவப்
பாரணவுயாத்திரைசா லத்துமவுனம்புரிதல் பண்புகூடும்.

(இ-ள்.) பிரபஞ்சமாகிய காரியத்திற்குக் காரணமான மாயாகாரணரே, உன்மத்தரே, மேலானகடவுளே மூடர்களாலே அறியப்படாதவரோ, காலனுக்குக்காலரே, சர்வபரிபூரணரே, காசியிலிருக்கு மெல்லாச்சீவர்களுக்கும் மோக்ஷத்தையளிக்கின்ற புராணரே, என்று விஷ்ணுமுதலாயினோர் விரும்பத்தக்க தோத்திரங்களை வாயினாற்சொல்லாமல் மனதில்சிந்தித்துக்கொண்டு உலகத்தார் (புகழ்ந்து) சேர்தற்கிடமாகிய(பஞ்சக்குரோசப் பிரதக்ஷண)யாத்திரை காலத்தில் மௌனஞ்செய்வது விதியாகும். எ-று. (எ)

இந்நியமத்தினன்யாத் திரைக்குரியோனிடையூறென் றெய்தியாவு
நந்தவறம்பலபுரியுஞ் சிவத்துதியாலுலோபமெலா நாசமாகு
முந்தவதுகெடிற்றருமம் வளரும்வளரச்சித்தி முகிழ்க்குமந்தப்
பந்தமறுசித்தியாற் பரஞானவான்கதியிற் படர்வரன்றே.

(இ-ள்.) மேற்சொல்லிய நியமங்களையுடையவர் காசித்தலத்துவாசஞ் செய்யும் யாத்திரைக்கு அதிகாரியாவார் மேலும் இடையூறென்று வருபவைகள் யாவும் நாசமாகப் பலதருமங்களையுஞ் செய்வார். (அதுவன்றிப்) பரசிவதோத்திரத்தால் உலோபாதி துர்க்குணங்களெல்லாங் கெடுப்பர், அவ்வுலோபாதி குணங்கெட்டால், தருமம்விர்த்தியாகும். தருமம்வளர்ந்தால், அணிமாதி சித்திகளுண்டாகும். பந்தத்தை நீக்குகின்ற அந்தச் சித்திகளால் பிரமஞானமென்கிற மோட்சகதியிற் செல்லுவார்கள். எ-று (அ)

கலங்குபெருஞ்சமுசாரக் குழிவீழ்ந்துவினைப்பாம்பு கடிக்கபட்டோ
ரலங்குபெரும்புகழ்க்காசி யடைந்தன்றிமுத்தியுற லரியதாகும்
விலஙகுபறவைகள்கிருமி முதலானபல்லுயிரும் விலங்காவண்ண
மலஙகுதலில்காசிநகர் வதிதலானம்பதமே மருவலுண்மை.

(இ-ள்.) மனக்கலக்கத்தைத் தரும் பெரிய சமுசாரமென்கிற படுகுழியில்வீழ்ந்து தீவினையென்னும் பாம்பினாற் கடிக்கப் பட்டவர்கள், விளக்கமுள்ள பெரும் புகழையுடைய காசித்தலத்தை யடைந்தா லல்லாமல் முத்தியடைதல் அருமையாகும். மிருகங்களும் பக்ஷிகளும் புழுக்கள் முதலாயுள்ள பலசீவராசிகளும் நீங்காமலிருந்து அலைவற்ற காசித்தலத்தில் வாசஞ்செய்தால் நமது திருவடி யடைதலுண்மையாகும். எ-று. (கூ)

வானவரிந்திரனயன்மால் சித்தவித்தியாதரர்செம் மணிச்சூட்டுள்ளார்
தானவர்கின்னரர்கருடர் சாலகடங்கர்களியக்கர் தவாவசுக்க

ளானவர்கந்திருவர்முனி வரர்பெருஞ்சாரணர்முதன்மற் றகிலமேய
மானவாமற்றெல்லோருங்காசிநகரடைந்தொருவார்வாழ்வுமொன்றும்.

(இ—ள்.) தேவர்கள், தேவேந்திரன், பிரமன், திருமால், சித்தர், வித்தியாதரர் நாக லோகவாசிகள், அசுரர்கள், கின்னரர், கருடர், இராட்சதர், இயக்கர், அஷ்டவசுக்கள், கந்திருவர், முநிவர், சாரணர் முதலானோரும், பூலோகவாசிகளும், மற்றுமுள்ளவரும், காசிததலத்தை, யடைந்து எககாலத்திலுநீங்காது வாழ்ந்திருப்பார்கள். எ-று. (௬௦)

முத்திவிருப்புடையவரே காசியடைவார்மற்றை மூர்க்காசாரார்
சித்தியுறநூல்கள்பல கற்றாலுங்குரவன்மொழி செவியேற்றாலு
மத்தியிடையுயிர்படக்கிப பற்பலநாண் மூழ்கியமர்ந்தாலுமான்ம
சுத்தியுறலரிதொருகாற் காசியெனச்சொற்றிடினுந்தூய்மைமேவும்.

(இ-ள்.) மோக்ஷததில விருப்பமுடையோரே காசித்தலத்தை யடைவார்கள். மற்றையராகிய அறிவீனர் அடையமாட்டார்கள், சித்தியைக்கொடுக்கத்தக்க பலசாஸ்திரங்களை வாசித்தாலும் ஆசாரியர் உபதேச வாக்கியத்தைச செவியிற் கேட்டாலும், (சுழுமுனைநாடிவழியிலுள்ள) அஸ்தியில் பிராணவாயுதங்க, பல காலஞ் சமாதி யோகத்திலிருந்தாலும் ஆன்மசுத்தியாகிய முத்தியைப் பெறுதலருமையாகும், காசியென்று ஒருக்காற்கூறினால் ஆன்ம சுத்தியுண்டாம். எ-று

கொஙகுவிரி குழற்கோதாய நமமுருவங்காசியெனக் குறித்துக்கோடி
யங்குவிலகாதிருக்குந் தவமபேணிக்கால்வலிமிக் கடைந்துளோரும்
பங்குபெறமுயன்றிடுவ ரதைவிலகுமாறுமனம் பற்றுதென்றும்[வாரோ.
பொங்குசுவையமுதுண்போா மற்றதையுண்பதற்குமனம் பொருந்து

(இ-ள்.) வாசனை வீசுகின்ற அளகத்தையுடைய உமையே நமது வடிவமேகாசித்தல மென்று நீ மதித்துககொள்வாயாக, மிக்க கால்வலிமை யுள்ளோரும் அக்காசிததலததைப்பிரியாதிருகக வேண்டுமென்கிற தவத்தை விரும்பி முடவனதற்கு முயறசிப்பார்கள். அததலத்தைவிட்டு விலக மனம் ஒருககாலுஞ் சம்மதியாது மிக்கமதுரமுளள அமிர்தபானஞ் செய்தவர்கள், வேறுவகையான உணவுகளை உண்பதற்கு மனஞ்சம்மதிப்பாரோ (அதுபோலவென்றறிவாயாக)எ-று.

ஆன்றபெருங்காசிநக ரவி முத்தத்துறைவாரை யடையான்காலு
னேன்றபெருமாயைவசப் பட்டியமனால்வருந்து மெவருமேலாய்த்
தோன்றநமதருட்கலபப வாங்கருள்வோநீராடுந தொழின்மேறகொண்ட
லூன்றநகருறைவாரு மவிமுத்தருரைத்தனமீ துண்மையாமால்.

(இ-ள்.) மாட்சிமைதங்கிய மகிமையுள்ள அவி முத்தமென்னுங் காசிப்பதியில் வசிப்பவர்களை இயமன அணுகான்; வியாபித்த மகா மாயையிற்கட்டுப்பட்டு இயமனால் வருந்துகின்ற எல்லோரும் அத்தலத்தைச் சேருவார்களானால் அவர்களுக்கு நமது அருள்கிடைக்கும்படி அநுக்கிரகம் செய்வோம் கங்கா ஸ்நா

நஞ் செய்யுந்தொழிலைமேற்கொண்டவர்களும் காசித்தலத்தில் வசிப்பவர்களும் அவிமுத்தநாதரென்றே நாம்கூறினோம் இவ்வாக்கியம் உண்மையாகும். எ-று.

**பாரடிசில்புசித்திடுதல் பரதாரவாஞ்சையுறல் பரர்பொன்வௌவல்**
**பாரபவாதங்கோட லனுசாரந்துவேசமுறை படிமிராகம்**
**பரிகழப்புலாலுண்டல் கள்ளுண்டன்மறையவர்முற் பலரைக்கோறல்**
**பரருயிருந்தன்னுயிர்போற் பேணாமையிவையாதி பலவுங்குற்றம்.**

(இ-ள்.) அன்னியர்கள் அன்னத்தை உண்ணுதல், பிறர்மனை நயத்தல், அன்னியர் பொருளை அபகரித்தல் அன்னியர்களைபயழித்தல், அனுசாரதத்தை யநுஷ்டித்தல், துவேஷங்கொள்ளுதல், பொய்கூறுதல், வீணாசைகொள்ளுதல், அறிவுடையோர் நிந்தைசெய்யததக்க மாமிச போஜனம் பண்ணுதல், மதுபானஞ் செய்தல், பிராமணர் முதலாகிய பலரையுங்கொல்லுதல், அன்னிய உயிர்களைத் தன்னுயிர்போல விரும்பாமை, இவை முதலிய பலவுங் குற்றங்களாம். எ-று.

தீக்ஷையில்லாதவர்களிடத்திலும், திரவியங்களைப் பாவவழியில் சம்பாதிக்கின்ற வர்களிடத்திலும், குலாசார நிலைபேதிப்பவரிடத்திலும், நல்ல விரதங்களை விட்டுவிட்டவரிடத்திலும், போஜனஞ்செய்தால் பாவமென்று விதித்திருத்தலாலும்; இவைக ளில்லாதவர்களைப் பரிசோதித்தறிவது அருமை யாதலாலும பாரடிசில் புசித்திடுதல் குற்றமென்றும், அன்னியர் அக்கினிசாக்ஷியாக விவாகஞ்செய்த மனையாளைப் புணர்ந்தவர்களைக் காலதூதர்கள் யாதனா சரீரத்தில்விட்டு சகிக்கபபடாத துயரமுள்ள மார்க்கத்திலே இவர்களை யிழுத்துக்கொண்டு போய் செம்புப்பாவைகளைச் சிவக்கக்காயச்சித் தழுவிக்கொள்ளும்படி செய்வதுமன்றி, செபபூசிகளை நெருப்பிலிட்டு உரோமத் துவாரங்களிலோறும, உள்ளுருகும்படி குத்தித் துயர்செயவரர்களெனறும், விதித்திருத்தலின் பரதாரவாஞ்சையுறல் குற்றமென்றும்,

அவரவர் சவுக்கியநிமித்தம் சம்பாதித்த திரவியங்களை வஞ்சனையாரல் வாங்கிக்கொண்டு பின்னர் அவர் துயரககடலில முழுகும்படிசெய்வது பெரும்பாதக மாதலின், பரர்பொன் வௌவல் குற்றமென்றும்,

கொடியோர்களுடைய தீக்குணங்களைக் கூறுதலும்,பாவமென்று ஔவையார் கூறியிருத்தலாலும், நிந்தைகூறும் பழக்கமுடையோர், அப்பழக்கவாதனையால் நல்லோர்களை நிந்தித்து அதனால் அதிபாதகத்தை யடைந்து கொடுநரகங்களில் விழுவராதலாலும பாரபவாதங் கோடல் குற்றமென்றும்,

ஆசாரமிலலாது மலரெடுத்தல் திருமாலைகட்டல், ஆலயத்திற்குப்போதல், சிவபூசை செயதல், போஜனஞ்செய்தல், சாதுக்களுககுப் பணிபுரிதல் முதலிய சற்கருமஙகளைச் செய்தவர் அப்புண்ணியபலனை இழந்து துன்பத்தை யடைவரென்று விதித்திருத்தலாலும், "பூவுமுதகமும் பழுதேயாணலருட்கணுமுளவோ கணணி லருவருத்திடுவனைய" என்பதனாலும், அனுசாரங் குற்றமென்றும், துவேஷத்தைப் பாராட்டு கின்றவர்கள், பிறரிடத்துள்ள உத்தம குணங்களைக்

கண்டு கண்புசெய்து சுத்தவாசனையிற் பழகி இன்பத்தை யனுபவியாது தமது காலத்தை வீணாகக் கழித்துத் துன்புறுவராதலின், துவேசம் குற்றமென்றும் பிறருக்குத் துன்பத்தைத் தருமாயின், மெய்ம்மொழியும் பொய்யுடன் சேரு மென்று பெரியர் மொழிந்திருப்பதை யுணராது அன்னியருக்குத் துயரத்தை யுண்டாக்கும் பொய்ம்மொழியை மனந்துணிந்து கூறிப்பெரும் பாதகத்தை யடைபவரும் உளராகலின், படிறு குற்றமென்றும், ஆசைக்கடியான் அகிலலோகத்தினுக்கு மாசற்ற நல்லடியானென்றும், ஆமுனிச்சையே மேலுமேலும் பிறப்பளிக்கும் வித்தென்றும், ஆசையெனும் பெருங்காற்றூடிலவம பஞ்செனவு மனதலையுங்காலமோசம் வருமென்றும், "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅப்பிறப்பீனும் வித்தென்றும்," ஆசைக்கயிற்றிலாடும் பம்பரமென்றும், ஆசாபசாசத்தைத்துரத்தியென்றும், ஆசைநிகளத்தினை நிர்த்தூளிபடவுதறியென்றும் சான்றோர் திருவாய் மலர்ந்திருத்தலின், இராகம்குற்றமென்றும் அறிவுடையோர் நிந்தைசெய்யும்படி புலாலுண்ணுதல் பாவமென்பதற்குப் பிரமாணம்.

**பட்டணத்துப் பிள்ளையார் பாடல்.**

கொல்லாமற் கொன்றதைத் தின்னுமற்குத்திரங் கோள்களவு
கல்லாமற் கைதவரோடிணங்காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக்கேளாமற் றோகையர் மாயையிலே
செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பரதேசிகனே.

**சிவஞானதீபம்.**

கொலையாதி நெறியகன்ற ஞானந்தானே
கூறரிய மேலான ஞானமாகுங்
கொலையாதியகன்றொழுகுந் தவங்கடாமே
குற்றமிலா நற்றவமென் றுரைக்குநூலுங்
கொலையாதி யகற்றியநல் லறங்கடாமே
குவலயத்தி லொப்பரிய வறங்களாகுங்
கொலையாதி யகன்றுபெறுஞ் செல்வந்தானே
கூறினுயிர்க் கிதமான வாழ்வதாமே.

எவ்வுயிரும் பராபரன்சந் நிதியதாகு
மிலங்குமுயி ருடலனைத்து மீசன்கோயி
லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்றுநோக்கி
யிரங்காது கொன்றருந்து மிழிவினோரை
வவ்வியமன் றூதருந் தண்டஞ்செய்து
வல்லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்திமாறு
வேதனைசெய் திடுவரென வோதுநூலே.

பதிபசுபாசவிளக்கம்.

அம்மாவெனவலற வாருயிரைக் கொன்றருந்தி
யிம்மானுடரொல்லா மின்புற் றிருக்கின்று
ரம்மாவெனுஞ்சததம் கேட்டகன்ற மாதவர்களும் [தே.
பொய்ம்மாமிரயமென்றுற் புசித்தவர்க்கென் சொல்லுவ
கங்கையிற் படிந்திட்டாலும் கடவுளைப் பூசித்தாலு
மங்குல்போற் கோடிதானம வள்ளலாய் வழங்கினாலுஞ்
சங்கையி லாதஞான தத்துவ முணர்ந்திட்டாலும்
பொங்குறுபுலால்புசிபபோன்போய்நரகடைவனன்றே.
கொலையிலா னுதவுமன்னங் கூறிறபே ரமுதமாகுங்
கொலையுளா னுதவுமன்னங் கூறிற்பேர் விடமதாகும்
புலையர்த மனையிலுண்போன் புலையனு மாறுபோலக் [ன்றே.
கொலைஞர்த மனையிலுண்போன் கொலைஞனே யாவன
கலையெலா முணர்ந்தானேனுங் கரிசறத் தெளிந்தானேனு
மலையென வுயர்ந்தானேனு மனமய லகன்றானேனு
முலகெலாம்புகழப்பல்லோர்க் குதவியகையனேனு
மிலகியவிரக்கமின்றேலெழுநரகடைவனன்றே.

கொன்றைவேந்தன்.

நோன்பென்பது கொன்றுதின்னாமை.

திருக்குறள்.

கொல்லான்புலாலை மறுத்தானைக்கைகூப்பி யெல்லாவுயிருந்தொழும்.

இன்னும் பலநூலிலும் இவ்வாறே கூறியிருத்தலின் பராிகழப்புலாலுண்டல் குற்றமென்றும், அறிவுடையோர் நிந்திக்குமாறு கள்ளுண்டல் குற்றமென்பதற்குப் பிரமாணம்.

கூர்மபுராணம்.

கள்விலைபகர்வோர் கள்ளினைநுகர்ந்தோர்கள்ளருந்துதற்குடன்படுவோர்
கள்ளருந்துநரை மகிழுநர்நரகிற் கற்பகாலங்கிடந்தழுந்தி
யெள்ளுறுந்தீய மலப்புழுவாகி மலத்தினைநுகர்ந்துபின்னிறந்து
விள்ளருங்கொடிய ரௌரவநரகின் மீட்டுமீட்டழுந்துநாள்கழிப்பார்.

இவ்வாறே பலநூலிலுஞ் சொல்லி யிருத்தலின் கள்ளுண்டல் குற்றமென்றும் அநித்திய மாகவும் துக்கமாகவும் அசுத்தமாகவுமுள்ள உலகவாழ்க்கைக்கு விரோதஞ்செய்பவர் பிராமணரானாலும் அவர்களைக்கொன்று தாம் வாழ்ந்திருக்க நினைத்து அவ்வாறு செய்கின்றவர்களும் உள்ளனராதலின், கோறல் குற்றமெ

ன்றும், ஜீவகாருணிய மில்லையாயின், கடவுளிடத்துப்பகதியுண்டாகமாட்டாது கடவுட்பத்தி யில்லையாயின், பாசவைராக்கியம் நேரிடாது, பாசவைராக்கியங் கிடையாதாயின் சொரூபஞான முண்டாகமாட்டாது சொரூபஞான மில்லையாயின் முத்தி கைகூடாது ஆதலின் பரருயிருந் தன்னுயிர்போற் பேணுமை குற்றமென்றுங் கூறினுர்.

குற்றமில்லையொன்றேனுஞ் சாராமலவிமுததநகுடிகொள்வாரேற்
சொற்றவொருகுற்றமு மிலர்ராகியானந்த சொரூபராவார்
முற்றவவரேநமதுண்மை யைத்தெரிந்துபாவிக்கு முத்தராவார்
கற்றசெருக்காற்காசி யிகழ்ந்தவாகள்கடுநரகங் கைக்கொள்வாரால்.

(இ-ள்.) மேற்சொல்லிய குற்றங்களொன்று மணுகாமல் காசித்தலத்தில் வசிப்பார்களாகுல் முன்னுள்ள பாவமொழிந்து ஆநநத சொரூபராவார்கள். அவர்களே நமது உண்மையர்னவடிவம் முழுவதுமறிந்து பாவனைசெய்து முததிபெறுவாரர்கள். தாங்கள் கற்ற கல்விசசெருககால் காசியை அவமதிததவர்கள் கொடிய நரகத்தைப் பெறுவார்கள். எ-று. (௧௫)

மூலமுதலாதாரத் தருச்சனையாலவிரத்தியான் முதன்ஞானத்தாற்
சீலமிகுகுரவனுப தேசத்தாற்சிவநாம சிரவணத்தாற்
காலவிதிநிச்சயத்தாற் புனிதவுணவாற்கடுமை கடியின்சொல்லான்
மாலவெழுகாமாதி தியானதத்தானற்சரித வாஞ்சையாற்றால.

(இ-ள்.) மூலாதாரமுதல் ஆதாரம் ஆறிலுமுள்ள கடவுளர்களைப்பாவனையாக அருச்சிததலாலும் வைராககியததினுலும், முதன்மையான ஞானசாதகததாலும் தவவொழுக்கமுள்ள ஆசாரியர் உபதேசததைப் பெறுதலினுலும் சிவநாமங்களை நிரந்தரங்கேட்டலினுலும் காலந்தோறும் விதித்த நியமங்களைத்தவருது அநுஷ்டித்தலாலும், விதிவழியான ஆகாரத்தாலும், பிறர்கொடுமையையும் ஒழிககத்தகக இனியவார்ததையாலும், புத்திமயங்கும்படி யெழுகின்ற காமாதிகளை அடக்குதலாலும், நல்லசரியாநு சந்தானங்களை விரும்பிநடத்தலாலும் எ-று.()

பெரியரனுக்கிரகத்தாற் பேணுசதாசாரத்தாற் பிறங்குவோரே
யுரியவராகுவர்காசி வசிப்பதற்குத்தவமிலார்க் கொட்டாதாகும
பிரியமிகமலத்தழுந்திப் பன்றியதையுவபபதுபோற் பித்தவாழ்க்கை
யுரியதெனமயஙகியதை யுவந்திடுவோர்க்கொருகாலு மொழியாதுன்பம்.

(இ-ள்.) பெரியோர்களுடைய அனுக்கிரகத்தினுலும் விரும்பத்தக்கசதாகாலமுந் தவருத ஆசாரத்தாலும் விளங்குபவர்களே காசித்தலத்தில் நித்தியயாத்திரை செய்து வசிப்பதற்குரியராவார்கள். மேலேசொல்லிய தவமிலலாதவர்வாசஞ்செய்யக்கூடாது. பன்றியானது பகரவீகாரத்தைச் சதாநினைந்து அதுநேரிட்டால் பிரியப்படுவதுபோல,அறிவீனரால் விரும்பத்தக்க பிரபஞ்சவாழ்க்கையேநாமனுபவிக்கத்தக்கதென்றுமயங்கி அதுநேரிடும்போது களிப்புறுவோர்களுக்குத்துன்பம் எக்காலத்திலும் விலகாது, எ-று. (௧௭)

மண்ணாசைபெண்ணாசை பொன்னாசையுடையவர்கண் மதிமாழாந்து
விண்ணாசைகொளுங்காசி யாசையுறாரிம்மூன்றுள் விலகாவொன்றி
னண்ணாசையுடையவரு மதுவேண்டார்முன்னின்று நாஞ்சொற்றாலு
மெண்ணாசைகொள்ளார்மற் றவர்பிறவித்துன்பினுக்கோ ரீறுண்டாமோ.

(இ-ள்.) மண், பெண், பொன் என்னு மூன்றினும் விருப்பம் வைப்பவர்கள், தேவர்களாலே விரும்பத்தக்க காசித்தல ஆசையைப்புத்திமயங்கியுங் கொள்ளார்கள். மேற்சொன்ன மூன்றாசையில் இரண்டாசை புண்ணியவசத்தால் நீங்கி ஒன்றையுடையவர்களும் அக்காசித்தல விருப்பங்கொள்ளார்கள். நாமே பிரசன்னமாகி அத்தலமகிமையைக் கூறினும் அதைச்சிந்திக்கின்ற ஆசையுங் கொள்ளார்கள் அத்தன்மை யுடையோரது பிறவித்துயரத்தை அளவிடக்கூடுமோ (கூடாது) எ-று. (கஅ)

அருந்தவத்தாற்காசிநக ரடைந்துமுமையேசிறிது மறஞ்செயாராய்ப்
பொருந்தமறமேபுரிவர் சிறிதுமறமெண்ணாது புரிந்தபோதுந்
திருந்தவொருமுப்பதினா யிரவருடந்தீயவனார் செறிவார்பின்னு
மிருந்தவதற்கபராத ரெமக்கபராதமபுரிந்தோரொன்றுமுண்மை.

(இ-ள்.) உமாதேவியே சிலர் அரியதவத்தினால் காசித்தலத்தில் வாசஞ்செய்யப்பெற்றும் சிலபுண்ணியமுஞ் செய்யாதவராகி முழுவதும் பாவமேசெய்வார் பின்வருவதை எண்ணாது சிறிது பாவஞ்செய்தபோதிலும் முப்பதினாயிரந் தெய்வவருடம் காலவயிரவருடைய சூலத்தால் கொடுந்துயரத்தை யனுபவிப்பார்கள். எக்காலத்தும் ஈதுண்மையாகும். (சிலர்) அத்தலத்திற்கும் எனக்கும் அபராதஞ்செய்வார்கள். எ-று. (கக)

இன்னுமுயருனக்கும்வயி ரவற்குமிளிர்கணபதிக்கு மிமையோர்யார்க்கு
மன்னுமுலகுள்ளார்க்கு மபராதம்புரிந்தவராய் மயங்காநிற்பர்
துன்னுமிதனாற்காசித் தலவாசமெளிதன்று சொற்றேமின்னும்
பன்னுவதென்னேதருமா தருமவிசாரம்புரிதல் பண்புமேவும்.

(இ-ள்.) மேலும் மகிமையுள்ள உனக்கும் வைரவக்கடவுளுக்கும் விளக்கமுற்ற கணபதிக்கும் எல்லாத்தேவர்களுக்கும் பூலோகவாசிகளுக்கும் அபராதம் செய்பவர்களாகி மயங்குவார்கள். இந்தக்காரணத்தால் நெருங்கிய மகிமையுள்ள காசித்தலவாசம் எளிதல்லவென்று கூறினோம். விரிவாகச்சொல்லவேண்டுவதியாது அத்தலத்திலிருந்து பாவபுண்ணிய விசாரணை செய்வார்களானல் நற்குணமுண்டாகும். எ-று. (உ0)

சீர்த்தமுதல்யுகநகாசி ஞானமுளார்க்குதவுமுத்தி திருந்திரண்டி
லார்த்தமகந்தானமுளா ரடைவர்மூன றிலெமை யருச்சித்தேத்தி
யோர்த்தபெருந்தானமினி துதவுநர்மற்றதையுறுவ ருற்றநான்கிற்
கூர்த்தசிறுதானமா யினுங்கொடுபபோர்பரமுத்தி கூடுவாரால்.

(இ-ள்.) சிறப்புள்ள முதல் யுகத்தில் காசித்தலத்தில் வசிப்பவர் ஞானத்தி ஞல் முத்திபெறுவார்கள். இரண்டாவது யுகத்தில் நிறைந்த யாகமும் தானமும் அத்தலத்திற் செய்பவர்கள் முத்தியடைவார்கள். மூன்ருவது யுகத்தில் நம்மை யருச்சித்துத் துதிபுரிந்து மகாதானங்களை அத்தலத்தில் செய்தால் முத்தியடை வார்கள். நான்காவது யுகத்தில் எளிய தானங்களாலும் செய்பவர் முத்திபெ றுவார்கள். எ-று. (உக)

சுத்தியெனலாசையற லதுசிறிதுண்டாமெனினுந் துயரத்தாழ்த்தும்
பத்தியுறக்காசிவசிப் பவர்வயிறேம்பிடும்பொருட்டுப் பண்புசான்ற
நித்தியுடையவர்பாலே சென்றிரக்கக்கடவர்மிகச் சேர்ப்பாரெண்ணி
லெத்திசையுமெடுத்திழிக்க வளற்றழுந்துவாருணர்தி யிலங்கிழாயே.

(இ-ள்.) காசித்தலத்தில் வசிப்பவர்களுக்குச் சுத்தமாவது ஆசையொழி தலாம். அவ்வாசை சிறிதிருந்தாலும் துயரக் (கடலி) லாழ்த்தும், விசுவநாதருக்கு அன்புசெய்பவர் பசியைநீக்கும்பொருட்டு உத்தம குணத்தாலுயர்ந்த கிரகஸ்த் ரிடத்திற்குப்போய் (வேண்டியவைகளை) யாசித்து வரக்கடவர்கள். அதை விட்டு ப்பொருளைச் சேர்த்துக்கொள்ளும்படி எண்ணி (அலைவார்களாளுல்) எவ்வுலக த்தாரு மெடுத்து நிந்திப்பதற்குரிய நரகத்தழுந்துவ ரென்றறியக்கடவாய் விளக்க முற்ற ஆப ரணங்க ளைத்தரித்த பார்வதியே. எ-று. (உஉ)

நித்தியயாத்திரை விதியுரைத்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம். கசு-க்கு திருவிருத்தம். ருசுஎ.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# பதினேழாவது காசிதேவி வரம்பெற்ற அத்தியாயம்.



திருச்சிற்றம்பலம்.

**புதும்திமுடித்த செஞ்சடைப்புராணன் பொன்னடித்தாமரைவணங்கி**
**முதுபுகழரிகே சவவனத்துமையாண் முன்னிருந்தெங்கள்வாழ்முதலே**
**குதுகலப்பஞ்சக் குரோசமாவிலிங்கங் குவலயங்காசியென்றுரைக்க[ன்.**
**மதுமலர்க்குழலி பெயரொடுமபொலிய வந்ததென்னுரையெனவுரைப்பா**

(இ-ள்.) மூன்றாம்பிறையணிந்த சிவந்த சடையையுடைய பழையோனு கிய மஹாதேவரது அழகியதாமரை மலர்போலுந் திருவடிகளைப் பெரும்புகழு ள்ள அரிகேசவவனத்தினிடத்து, உமாதேவியார் பணிந்து, முன்னின்று அடியே ங்களுடைய இன்பவாழ்வுக்கு முதற்பொருளே, இன்பத்தை விளைவிக்கும் பஞ் சக்குரோசத்திலுள்ள சிவலிங்கங்களை அறிவுடையோர் காசியென்று சொல்ல தேனொழுகு மலரணிந்த கூந்தலையுடைய (ஒரு) பெண்பெயர்பெற்று விளங் குங்காரணம் யாது. (அவ்வுண்மையைதேவரீர்) திருவாய்மலர்ந்தருள்வீரென் று பிரார்த்திக்க, சிவபிரான் கட்டளையிடுகின்றனர். எ-று. (க)

**தரைபுகழிமய மடைந்தைகேளுமே சத்தியசொரூபமாமிலிங்க**
**முறைபெறுசத்தி யோனியாம்யாமே யோதரும்பெரும்புகழிலிங்கம்**
**புரைதவிரிவையே புகல்பிரகிருதி புருடனுமினையமந்தணமே**
**வரையறவெல்லா மறைகளுமுரைக்கு மற்றிதற்கையமொன்றின்றே.**

(இ-ள்.) உலகத்தார் புகழப்பெற்ற, இமாசலராஜகுமாரியே கேட்பாயாக, நாமிருவரும் உண்மைவடிவாகிய அடையாளமாக விருப்போம், புகழப்பெற்ற சத்தியாகிய நீயே ஆவுடையார் வடிவமாக விளங்குகின்றனை. சொல்லுக்கடங்கா ப்பெருமபுகழமைந்த நாமே இலிங்கவடிவாக விளங்குகின்றோம். களங்கமற்ற இவ்வடிவங்களே பிரகிருதியாகவும புருடதத்துவமாகவும் விளங்கும். இந்த இரக சியத்தை அளவற்ற எல்லாவேதஙகளும் எடுததுக்கூறுவனவாம் இதற்கு யாதொ ருசந்தேகமுமில்லை. எ-று. (உ)

**நிறைபரசிவமே நிகழ்பரம்பிரம நிலவுவண்புகழ்ப்பரமான்மா**
**கறைதபுகாட்சிக் கவுத்துவமார்பன் கமலமேலிருப்பவனென்று**

மறைதருமாயை வித்தையோடவித்தை யருளுமையலைகடற்பிறந்தாள்
குறையறுகலைமா னென்றுநாடோறுங் கூறுமால்வீறுமாமறையே.

(இ-ள்.) எவ்விடத்தும் நிறைந்த பரசிவமானது விளக்கமுற்ற பரம்பொரு ளெனவும் பரப்பிரம மெனவும், பெரும்புகழமைந்த பரமான்மாவெனவும், குற்றமற்ற காட்சியுள்ள கவுஸ்துபமணி மார்பனாகிய விஷ்ணுமூர்த்தி யெனவும், தாமரைமலர்மீதிருக்கின்ற பிரமனெனவும், சுத்தமாயாசத்தி எனவும் அசுத்தமாயாசத்தி எனவும் (ஆன்மாக்களுக்கு) அருள்செய்கின்ற உமாதேவி, எனவும் திருப்பாற்கடலிற்பிறந்த இலக்குமிதேவி, எனவும் நிறைந்த கலைஞானமுள்ள சரச்சுவதிதேவி எனவும், பெயர்பெற்று விளங்குமென்று பெரும்புகழுள்ள வேதங்கள் சதாகாலமும் கூறுவனவாம். எ-று. (௩)

நலமலிநாமே யனந்தமாவிருப்போ நவிலரும்பெரும்புகழ்க்காசிக்
கிலகுறுசத்தி யென்றுமோர்பேர்மற் றிலிங்கமென்றும்மொருபேரா
முலகமற்றிதனுன் மடவரற்பெயரிட் டுரைக்குமக்காசியைமறைகள்
குலவவிமுத்த மானந்தவனமைங் குரோசசொரூபமாவிலிங்கம்.

(இ-ள்.) நிறைந்த இன்பவடிவாகிய நாமிருவருமே அநந்தரூபமாக விருப்போம், சொல்லுதற்கரிய பெரும்புகழுள்ள அக்காசித்தலத்திற்கு ஒளியையுடைய சத்திரூபமென்றும் இலிங்கரூபமென்றும் பெயருண்டு. இந்தக் காரணத்தால் அறிவுடையார் அக்காசிக்குப் பெண்பெயரிட்டு மொழிவார்கள். அத்தலத்தை வேதங்கள் அவிமுத்தமென்றும், ஆனந்தவனமென்றும், பஞ்சக்குரோசசொரூப மகாலிங்கமென்றும். எ-று. (௪)

உருத்திரவாசம் விட்டுணுவாச முலகெலாம்படைத்தவன்வாசந்
திருத்தகுவ்வாரா ணசியெனவுரைக்குந் திகழதிட்டானமுநாளும் [ன்றும்
பொருத்தமார்திட்டா துருவுநின்னுடுநாம் போற்றுமெய்யடியவர்க்கெ
வருத்தமேவாம லோம்பிடவிந்த வண்ணமாவிருப்பதுமயிலே.

(இ-ள்.) உருத்திர வாசஸ்த்தானமென்றும் திருமால் வாசஸ்த்தானமென்றும் பிரமதேவன் வாசஸ்த்தானமென்றும் திருத்தமுற்ற வாராணசி யென்றும் கூறுவர், மயில்போலுஞ் சாயலையுடைய உமையே நம்மை வணங்கும் மெய்யன்பர்கள் வருத்தமுறாது பாதுகாப்பதற்கு நீ யெந்தத்திருமேனி கொண்டனையோ அந்தத் திருமேனிக்கு நாம் அதிஷ்டானமாக விளங்குவோ மென்றறிவாயாக. எ-று. (௫)

இளரொளிக்கங்கா கேசவர்திருமுற் கெழீஇயவிமுத்தநாயகனைத்
தளர்வறத்தியானஞ் செய்திடிற்காசி தந்திடும்வசித்தமாபலனை
வளமலிதருது வாதசியுதய மறிதிரைக்கங்கையைப்போற்றில்
விளர்தபுபுத்தி தருமத்திற்சென்று மிகப்பிரகாசிக்குமாதோ.

(இ-ள்.) பேரொளியை யுடைய கங்காகேசவர் திருமுன்னே சென்று அவிமுத்தநாயகனைச் சோர்வின்றித். தியானஞ்செய்தால் காசித்தலத்தில் வாசஞ்செய்ததனால் வந்த பெரும்பலனைக் காசிதேவி தருவள். நிறைந்த வளப்பத்தைத்தருகின்ற துவாதசி யுதயத்தில் அடுத்தடுத்துவரும் அலைகளையுடைய கங்கையில் ஸ்நாநஞ்செய்து அந்நதியைத் துதித்தால் கூர்ந்தபுத்தி சிவதருமத்தில் நிலைத்து மிகவும் பிரகாசித்துக் கொண்டிருக்கும். எ-று. (சு)

தக்கநாற்றோற்றத் துயிரெலாங்காசித் தாவரசங்கமமாகி
மிக்கவான்கதியை விரும்பியேயமரும் விளங்கியகாசிமாநகர்க்குத்
தொக்ககேத்திரமே மூர்த்தியேயென்று சொல்வதிற்பயனெவனதற்குப்
புக்கபேரதிகா ரம்மெவனென்று புகன்றிடிற்புகலுதுங்கேட்டி.

(இ-ள்.) பொருந்திய அண்டஜம் சுவேதஜம் சராயுஜம் உற்பிஜம் என்னும் நால்வகைத் தோற்றங்களையுடைய உயிர்களியாவும் பிறதலங்களிற் செய்த புண்ணியத்தால் காசித்தலத்தில் தாவரசங்கமங்களாகப் பிறந்து மிகச்சிறந்தமுத்தியை விரும்பி வசித்திருக்கும் விளக்கமுற்ற மகிமையுள்ள காசிப்பதிக்குப் பொருந்திய தலவிசேடத்தாற் பயன்யாது மூர்த்திவிசேடத்தாற் பயன்யாது அத்தலத்தில் வசிப்பவர்கள் தன்மை யெவ்வாறென்று சொல்லுமிடத்துக் கூறுகின்றோம் கேட்பாயாக. எ-று. (எ)

கேத்திரரூப மாகியகாசி கெழுமியசீவர்க்குப்பந்த
மாத்திரம்போக்கு மெவர்க்குமாதார மயமெனும்பகுதியேவயங்கு
மூர்த்திரூபகமா யவிமுத்தேச்சுரர்த முழுப்பெருஞ் சேவையாலின்பப்
பூர்த்திசெய்திடுமோன் மறத்தினுக்குறவு பூண்டவெங்கலியுகத்துதித்தோர்.

(இ-ள்.) தலவடிவாகிய காசியானது தன்னையடைந்த ஜீவர்களுக்குப் பந்தங்களை மாத்திரம் ஒழித்துவிடும். யாவருக்கும் ஆதாரமாகிய பிரகிருதியை விளக்கிக்கொண்டிருக்கும் அவிமுத்தேச்சுர மூர்த்தியானவர், தம்மைத்தரிசிக்கு மெய்யடியார்களுக்கு ஆனந்தபூர்த்தி செய்தருளுவார். பாவங்களை நண்புபாராட்டி வளர்க்கின்ற கொடிய கலியுகத்திற் பிறந்தவர்கள். எ-று. (அ)

சிற்சிலர்தரும வார்த்தைகேளாதார் சிற்சிலர்துக்கமேசுமந்தார்
சிற்சிலரடங்கா விடரெனத்திரிவார் சிற்சிலருலோபமேபூண்டார்
சிற்சிலர்பரதா ரந்திரவியத்துச் செறிதருவாஞ்சைமிக்குள்ளார்
சிற்சிலர்சாதி கருமங்கள்கெட்டார் சிற்சிலர்மறைநிந்தைபுரிவார்.

(இ-ள்.) சிலபேர் தருமச்சார்பாயுள்ள வார்த்தையுங் கேளாதவர்கள் சிலபேர் துயரங்களையே மனதிற் சுமந்தவர்கள் சிலபேர் முறைக்கடங்காத காமுகராய்த் திரிவார்கள் சிலபேர் உலோபகுணத்தை யுடையவர்கள் சிலபேர் பரதார கமனஞ்செய்பவர்கள் சிலபேர் அன்னியர் பொருளில் பேராசையுள்ளவர்கள் சிலபேர் ஜாதியாசாரங் கெட்டவர்கள் சிலபேர் வேதநிந்தை செய்பவர்கள். எ-று. (கூ)

இன்னராயுழலின் முத்தராகுதன்மற் றென்றெனத்தன் னுளத்துணர்ந்து
நன்னர்வான்காசி தனையடைந்தவர்க்கு நம்மருளான்மறம்போக்கி
முன்னர்வான்கதியைத் தந்திடுநெடிய முடியுடைவானவாபலரு
மன்னவாகனனை யடைந்துதாழ்ந்தெழுந்தீ தறைதரலுற்றனாமுன்னுள்.

(இ-ள்.) இத்தன்மையராக உழலுவாராகளானல் இவர்கள் முத்தியடைதல் எக்காலமென்று நன்மையும் பெருமையுமுடைய காசிதேவியானவள் தன் மனத்தி லுணர்ந்து தன்னிடத்துவந்து சேர்ந்தவர்களுக்கு நமது கிருபையினால் பாவததை யொழித்து மேலாகிய முத்தியை முன்னேகொடுப்பாள். பூர்வகாலத்தில் நீண்டமுடியையுடைய தேவர்க ளெல்லோரும் பிரமதேவனை யடைந்து பணிந்தெழுந்து இதைச்சொல்லத் தொடங்கினர். எ-று (௧௦)

பன்னருநலஞ்சார் காசியென்றுரைக்கும் பைந்தொடிவந்துதற்சார்ந்தார்
முன்னருமறையோர்க் கொன்றவரோனு மூடராயுழல்பவரோனும்
பன்னரும்பார்ப்பார்பசுத்துரோகஞ்செயபாதகரேனும்வெவ்வினைசா [ர்.
லென்னரும்ருவவிடங்கொடுத்தளிப்பதென்னையோமுத்தியென்றிசைத்தா

(இ-ள்.) சொல்லுவதற்கரிய நன்மையுள்ள காசிதேவியென்று சொல்லப்படும் பசியவளையலே யணிந்தமாது, தன்னை அடுத்தவர்கள் நினைத்தற்கரிய பிராமணக்கொலை செய்தவர்களானாலும் அஞ்ஞானத்தால் உலகநடையிலுழல்பவரானலும பிராமணருககும் பசுக்களுக்குந் துரோகஞ் செய்கின்ற பாவிகளானாலும் அதிகரிதத கொடும் பாவங்களைச் செய்பவர்கள் யாவரானாலும் வசிக்க இடங்கொடுத்துப் பின்னர்முத்தியுங கொடுக்கின்ற காரணம் யாதோவென்றுகூறினார். எ-று. (௧௧)

மறைநெறியொழுக்கி னொழுகினுமொழுக மற்றதுதவிரினுந்தவிக[தார்.
நிறைபுகழ்க்காசி தனையடைந்தவாக்கு நெடுமறம்போக்கிவீடளிக்கு
மிறைவனுக்காமா காதென்றுென்றுளதோ விரும்புகழ்க்காசியுமற்றே
குறையறவுணாமி னெனறயன்சொற்றுன்கோலவானவருளந்தெளிந்தாா.

(இ-ள்.) பெரும் புகழையுடைய காசிதேவியானவள் வேத விதிவழியில் நடப்பவர்களும் நடவாதவர்களும் தன்னை யடுப்பார்களாயின் பெரும்பாதகங்களை யொழித்து முத்திகொடுப்பள். சிவபிரானுக்கு இன்ன பொருளாகுமென்றும் ஆகாதென்று முளதோ (இல்லை) பெரும்புகழையுடைய காசியு மவ்வாறேயாகும் உள்ளக்குறை யொழியும்படி தெரிந்து கொள்வீர்களென்று பிரமன் கூறினன், அழகியதேவர்கள் மனந்தெளிந்தார்கள். எ-று. (௧௨)

முன்னைநாளியமன் மநுவொடுவந்த முளரிவானவற்கிஃதுரைத்தோ
மன்னதுமீயு மறிந்திருக்கின்று யாதலாலுலகெங்கும்பரந்த
துன்னருங்காசிப பெரும்புகழ்நமக்கு மொழிவறவிருப்பமுண்டாக்கு
மென்னநாமுரைக்கிற்பிறர்க்கெவனுரும்மழைபொலியிளமுலைக்கொடியே.

(இ-ள்.) பூர்வகாலத்தில் இயமனோடும் மநுவோடும் நம்மிடம்வந்த பிரமதேவனுக்கு இவ்வுண்மைகளை யுபதேசித்தோம் அதை நீயும் தெரிந்திருக்கின்றனை ஆதலால் எல்லா உலகங்களும் பரவியதும் நினைத்தற் கரியதுமாயுள்ள காசிமகிமை நமக்கு நீங்காத பிரியத்தை உண்டாக்குமானால் பிறர்கடெவ்வாறுக முடியும் ஆபரணங்களால் விளங்கி இளமை மாறாத குஜங்களையுடைய பூங்கொடி போன்ற உமாதேவியே. எ-று. (௧௩)

நீருறுந்திவலை நீரிடைவீழ்ந்தா னீரதேயாவதுபோலப
பாருறுமுயிர்கள் காசியையுற்றாற் பரவியபெருமபுகழ்க்காசி
யேருறுசொரூப மாமொருகாலத் திசைகெழுகாசிநாமழைப்ப
வாருறுமுலையோர் மாதெனத்தோன்றிவந்துநமமுன்வணங்கியதே.

(இ-ள்.) சலத்திலுண்டாகிய திவலைகள் அச்சலத்தில் விழுமானால் சலவடிவமாவனபோல, உலகத்திலுள்ள ஆன்மாக்கள் காசித்தலத்தையடைந்தால் எவ்விடத்தும்பரவிய பெருங்கீர்த்தியுள்ள அழகிய காசிவடிவ மாவார்கள். முன்னொரு காலத்தில் பெருமையுள்ளகாசியை நாமழைத்தபோது கச்சணிந்தகுசங்களையுடைய பெண்வடிவமாகத்தோன்றி நமதுமுன்வந்து வணங்கினறது. எ-று. (௧௪)

ஒருமடமகளை நோக்கியாமிலிங்க ரூபிநீயோனிரூபியுநீ
வெருவரும்பாவ முழுவதுமபோக்கி வீட்டின்பம்யாவர்க்குமளிக்குஞ்
சொரூபிநீயென்று முகத்திடைமகிழ்ச்சி தோற்றிலளென்னெனவினவக்
கருகுப்விளர்த்தை யரிபடர்ந்தொளிரக் கட்குயிலுணர்த்திடலுற்றாள்.

(இ-ள்.) இளமைதங்கிய ஒப்பற்ற அம்மாதை யாம்பார்த்து நாம் இலிங்கவடிவமாகின்றோம் நீ அதைத்தாங்கும் ஆவுடையார் வடிவமாவாயாக நீ இவ்விடத்திருந்து, வருபவர்களியாவருக்கும் அச்சத்தைத்தருகின்ற பாவமுழுவதை யுமொழித்து முத்தியின்பத்தைத்தருகின்றசொரூபத்தைப்பெறுவா யென்றோம் அதைக்கேட்டு அம்மாது மூகமலர்ச்சிகொள்ளாதவளானாள் நாம் யாதென்று வினவ நடுவே கறுத்துச் சுற்றிலும் வெளுத்து அழகிய இரேகைகள் படரப்பெற்று விளங்குங்கண்களையுடைய அம்மாது சொல்லத்தொடங்கினள். எ-று. (௧௫)

எனையடைந்தவர்க்குப் பாதகம்போக்கி யின்பமாமுத்திநல்குவதே
நினைவரும்விரத மென்றுயானினைந்தே னினைந்ததற்கோரிடையூறாக்
கனைகடலுலகிற் கலியினில்லளவாக் கடியபாதகம்பலபுரிவா
ரனைவருமடைவாரியானெவன்செய்கோவறைந்தனையுறுதியாக்கென்றாள்

(இ-ள்.) எனையடுத்துவந்தவர்களுடைய பாவங்களை யொழித்து சுகமயமான முத்தியைக்கொடுப்பதே நினைத்தற்கரிய விரதமென்று யான் எண்ணியிருந்தேன். அவ்வெண்ணத்திற்கு விரோதமாக ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட உலகத்தில் கலியுகத்திலே அளவுபடாத மகாபாதகங்களைச் செய்பவர்களியாவ

ரும் இவ்விடம் வருகின்றார்கள் யான் யாதுசெய்வேன் இவிடம் வந்தவர்களுக்கு முத்தியென்று தேவரீர் திருவாய்மலர்ந்த வாக்கியத்தை உறுதிப்படுத்த வேண்டு மென்றனள். எ-று. (கரு)

**கன்னிநீயெதனை விரும்பினையதையே கடவுளர்பலருமுன்னொருநாட்**
**டுன்னிவந்திறைஞ்சிவேட்டனரவர்க்குத்தோல்வியிலவ்வரங்கொடுத்தோ**
**மின்னினிநீயுமிரத்தலாலுலகி லெத்துணைப்பாதகம்புரிந்து**
**மன்னிநிற்சாரி னவையெலாமாற்றி வரந்தருவலிமுழுதளித்தோம்.**

(இ-ள்.) காசிதேவியே நீயெதைவிரும்பிக்கேட்டனையோ அதையே முன்னொருகாலத்தில் பலதேவரும் நிறைந்துவந்து வணங்கிக்கேட்டார்கள் அவர்களுக்குப் பழுதின்றி யவ்வரத்தைக் கொடுத்துளோம் இப்போது நீயுங் கேட்டலால் உலகத்தில் எவ்வளவு பாதகஞ் செய்துள்ளவர்களானாலும் உன்னைவந்தடைப்பாரகளானல் அப்பாவங்களை யொழித்து முத்தியைத்தருகின்ற வல்லமைமுழுவது முனக்கே கொடுத்தோம் அஃதன்றியும். எ-று. (கள)

**அன்னியதலத்திற் பாதகமாற்றி யடைந்தவர்தமக்கதையறுபபேன் [னிற்**
**றுன்னியிங்கமர்ந்து பாதகம்புரியிற் றுணிந்தியான்செய்வதென்னென்**
**பன்னியகால வயிரவாதண்டம் பண்ணியபின்புநீகொடுத்தி**
**மன்னியவளவா வின்பினையென்றே மற்றவுளிகேட்டுளமகிழ்ந்தாள்.**

(இ-ள்.) பிற தலங்களில் பாவஞ்செய்து இவ்விடம் வருவார்களானல் அப்பாவங்களை நீக்குவேன் இத்தலத்திலிருந்து மகாபாதகங்களைத் துணிந்து செய்வார்களானல் யான் யாதுசெய்யககூடுமென்று கேட்டனையாயின் காலவைரவர் பாபத்திற்குத் தக்கதண்டனையைச் செய்தபின்னர் நிலைபெற்றுள்ளதும் அளவுபடாததுமாகிய முத்தியின்பத்தைத் தருவாயென்று கட்டளையிட்டோம் அதைக்கேட்டு காசிதேவி மனமகிழ்ந்தனள். எ-று. (கஅ)

**சிறந்தமாகாசி வாழ்நருட்பாவஞ் செய்நரைத்தெறுகலிவருத்து**
**மறந்தவாவனைய காசியுட்கலியு மணுகுமோவெனினணுகாதா**
**லுறந்தசீவர்களாங் கிருந்துசெய்மறமே யுறுகலியாய்வருத்திடுமாற்**
**பிறந்தவக்கலியை மாற்றுவான்கால வயிரவப்பெரும்பெயாத்தோன்றல்.**

(இ-ள்.) மேலான காசித்தலத்தில் வாழ்பவர்களுள் பாவஞ்செய்பவர்களை கலிபுருஷன் வருத்தப்படுத்துவான் தருமம்நீங்காத அத்தலத்தில் கலிபுருஷன்வருவானோவென்று (உமாதேவியே) கேட்பாயானல் கலிவரமாட்டான் அக்காசியில் வசிக்கும் ஆன்மாக்கள் செய்யும்பாவமே கலிபுருஷ ரூபத்தைப்பெற்று துன்புறுத்தும் காலவைரவக்கடவுள் தக்கதண்டனைசெய்து கலிவடிவங்கொண்ட பாபத்தை நீக்குவன். எ-று. (கசு)

**கஞ்சத்துச்சாம்பர் கலந்திட்ப்புனிதங் கவின்றெனக்கையுளபொருளை**
**நெஞ்சத்துப்படிறின் மேலவாகாத்து நேர்ந்திடல்கலந்திடபபுனிதங்**

**தஞ்சத்துக்கிடைக்கு மதுபலவினுக்குஞ் சாதனமாமதேமுத்தி**
**யஞ்சத்துநடையா யுணரெனத்தெரித்தா னருளுருவாகியபெருமான்.**

(இ-ள்.) சாம்பராற் சுத்திசெய்யின் வெண்கலம் பரிசுத்தத்தையடைவது போல, கையிலுள்ள பொருள்களை மனத்திற்களங்கமில்லாத சாதுக்களுக்குக் கொடுத்தால் ஆதரவான சித்தசுத்தியைப் பெறுவார்கள் அப்புண்ணியமே பல வாயுள்ள சுகங்களுக்கும் காரணமாகும் அதுவே முத்தியின்பத்தைக் கொடுக்கும் அன்னம்போலும் நடையையுடைய உமையேதெரிவாயாகவென்று திருவருள்வடி வாகிய சிவபெருமான் திருவாய்மலர்ந்தனர். எ-று. (உ0)

## காசிதேவி வரம்பெற்ற வத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம். கஎ-க்கு. திருவிருத்தம். ருஅஎ.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

# பதினெட்டாவது காமகலஸ் வரலா றுரைத்த வத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

காசிமடந்தை முகமலர்நதென் செய்தாளவட்கென்கட்டுரைத்தாய்ப்
பேசியருள வேண்டுமெனப் பிராட்டிகேட்ப வெதிர்நின்ற
வாசிபயிலுங் காசிமகட் கறைந்தகதையொன் றுண்டென்று
வாசிமறையாக் கொண்டபிரான் வகுத்துக்கூறத் தொடங்கினான்.

(இ-ள்.) தேவரீர் கொடுத்தவரத்தால், காசிதேவி முகமலர்ச்சிகொண்டு யாதுகாரியஞ் செய்தனள் அவளுக்கு என்ன உறுதி வாக்கியத்தைக் கட்டளையிட்டீர் (அடியேனுக்குத்) திருவாய் மலரவேண்டுமென்று பார்வதிதேவியார் கேட்க, அடுத்தோர்களை வாழச்செய்கின்ற காசிதேவிபணிந்து என்னெதிர் நின்றபோது அக்காசிதேவிக்கு யாங்கூறிய கதை ஒன்றிருக்கின்றது அதை உமையேகேளென்று வேதத்தைக் குதிரையாகக்கொண்ட சிவபெருமான் விரித்துச் சொல்லத் தொடங்கினார். எ-று. (௧)

பேரானந்த கேத்திரமாய்ப் பிறங்குநின்பால் வசித்திடுத
றீரானந்த மருளுடையா தமக்கேகிடைக்குஞ் செயிர்முழுதுஞ்
சாரானந்த வகங்கரிப்பார் தமக்கென்ஞான்றுங் கிடைப்பரிது
பாரானந்த வுறிற்றண்ட பாணிநமதா ணையிற்றடுக்கும்.

(இ-ள்.) நித்தியாநந்தத் தலவடிவாகவிளங்கும் உன்னிடத்துவந்து வசித்தல் நமது கருணை நீங்காத அடியார்களுக்கே கிடைக்கும். எல்லாப்பாவங்களையுஞ் செய்து அகங்கார மேற்கொண்டவர்களுக்குச் சதாகாலமும் வசிக்க நேரிடமாட்டாது. உலகத்திலுள்ள பாவிகள் அதிகமாக வரத்தொடங்கினால் தண்டபாணிக்கடவுள நமதுகருணையினாற்றடுக்க, வராது தடைப்படுவர்கள். எ-று. (௨)

மன்னுகாசி நகர்வசித்து மறையினொழுக்கந் திறம்பிடுவோ
ருன்னுஞ்செயிரி னுறவழுந்தி யுனையுமெய்யு மறந்திடுவார்
பன்னுந்தவத்தால் யோகத்தாற் பத்தியான்மற் றனையடைவார்
கொன்னுங்கொடும்பாதகமனைத்துங்குமைத்துமுத்தியடைவாரால்.

(இ-ள்.) நிலைபெற்ற காசித்தலத்தில் வாசஞ்செய்யப்பெற்றுஞ் (சிலர்) வேதவிதிதவறி நிறைந்தகுற்றங்களிலழுந்தி உனையும் எனையும் மறப்பார்கள் சிலர் அத்தலத்தில் வசித்து வேதங்களா லெடுத்துரைக்கத்தக்க தவத்திலும் யோகத்திலும் மெய்ப்பத்தியிலும் பழகி, அசசத்தைத் தருகின்ற மகாபாதகங்களெல்லாவற்றையு மொழித்து முத்தியடைவார்கள். எ-று. (ரு)

முந்தநினது மான்மியங்கண் முழுதுநகேட்டும் பாதகமே
நந்தவறிவி லாகொடிய நரகத்தழுந்தி யிடர்ப்படுவார்
சந்தமுதனீண் டடைப்பெற்றோர் தவாதவிருப்பி னின்னையுமற்
றந்தமிலா நம்மையும்பூ சித்துமுத்தி யடைவாரால்.

(இ-ள்.) முதன்மையான (காசிப்பதியென்று பெயர் பெற்று விளங்கும்) உன்னுடைய மகிமைகள்யாவுங் கேட்டறிந்தும் பெரும்பாதகத்தைச் செய்யும் அறிவில்லாதவர்கள் மகாநரகங்களில்விழுந்து (நீர்க்ககாலம்) துயரமுறுவார்கள். சாந்தமுதலியகுண சம்பத்தை யடைந்தவர்கள், பேதியாத பேரன்பினால் உன்னையும் அழிவற்ற நம்மையும் பூஜைசெய்து மோட்சசுகத்தைப் பெறுவார்கள்.

என்றுபுகல வெனையடைவா ரியல்புசிறிது தெரித்தியெனக்
கன்றுசெறிகைக் காசிமகள் கரைந்துவேண்ட மனையாதி
துன்றுபொருளி லாசையிலார் சுருதியொழுக்கந் தவறாதார்
வென்றுமிளிாநம் பேரருளே விருமபாநின்ற மேன்மையார்.

(இ-ள்.) இப்படியென்று நாம்தெரிவிக்க தலவடிவாகிய வென்னிடம்வந்து வசிப்பவர்களுடைய தன்மையைச்சிறிது தெரிவிப்பீரென்று வளையலணிந்த கைகளையுடைய காசிதேவியிரங்கி வேண்டிக்கொள்ள, வீடுமுதலாக நெருங்கிய பொருள்களில் ஆசையில்லாதவரும் வேதவிதிகளில் தவறாதவரும், தீவினையை வென்று விளங்கத்தக்க நமது பெருங்கருணையையே விரும்புகின்ற மேன்மையுடையோரும். எ-று. (௬)

அளவாநமது தலங்கடொறுஞ் சென்றுபோற்று மார்வமுளா
ரளவாமேன்மைத் தீர்த்தங்க ளனைத்துமாடி யமர்தருவா
ரளவாவருள்சா னம்புராணங் களனைத்து மாய்ந்திடுவார்
ரளவாத்தவத்தாற் பணிபூண்டா ரடிமைசெய்வா ரிவர்கண்டாய்.

(இ-ள்.) அளவில்லாத நமது தலங்கடோறும்போய் துதிக்கும் விருப்பமுடையவரும், அளவில்லாத மகிமையுள்ள தீர்த்தங்களெல்லாவற்றிலுஞ் சென்று ஸ்நாநஞ்செய்பவர்களும், அளவுபடாத திருவருள்வடிவாயுள்ள புராணங்களெல்லாவற்றையும் ஆராய்பவரும், அளவில்லாத தவத்தினால் (நமக்கு ஆலயமுதலிய) பணிவிடைசெய்பவர்களும, அகத்தடிமைசெய்பவரும் ஆகிய இவர்களெல்லாம் காசிதேவியாகிய உன்னிடத்துவந்து வாசஞ்செய்வதற்குரிய ராவார்கள். எ-று.()

இன்னும்புகலப் படுகதையொன் றினிமேனடப்ப தநுகேட்டி
முன்னும்விதர்ப்ப நாடாளு முதல்வன்வீர சேனனெனப்
பன்னும்பெயரா னெஞ்ஞான்றும் பத்திசிரத்தை மிகவளர்பபோன்
மன்னுமனையா னமைச்சர்முதன் மற்றோர்களுமத் தகையினரே.

(இ-ள்.) இனிமேல் நடக்கப்போகிற கதை ஒன்றிருக்கின்றது அதைக்கூறுவேன் கேட்பாயாக. யாவருஞ் சிந்திக்கத்தக்க விதர்ப்பதேசத்தை அரசாக்ஷி செய்யும் வீரசேன மஹாராஜனென்பவன் நம்மிடத்து அன்பையும் விசுவாசத்தையும் அதிகமாகச்செய்பவன். அவ்வரசனுடைய மந்திரி முதலாயினோரும் அதுபோலு, நல்லொழுக்கமுள்ளவரோயாம். எ-று. (எ)

அனையன்முனிவர் சிலரடைய வன்பிற்போற்றி யடிபணிந்து
புனையவிளங்கு நம்பகவன் பொலியுந்தலமெத் தலமாகும்
வினையமிகுந்தீ ருரைத்தருள வேண்டுமெனவம் முனிவாருங்
கனையும்புகழ்சா றலமனைத்துங் கருதியீது தெரிந்துரைப்பார்.

(இ-ள்.) சில முநிவர்கள் அவ்வீரசேன மகாராஜனிடத்துவர, அவர்கள் பாதங்களில் அன்போடு வணங்கித்துதித்து அன்பு செய்பவர்களுக்கு அருள்கின்ற நமது சிவபிரான் விற்றிருக்கின்ற தலங்களுள் விளக்கமாக இருப்பது யாது கூர்ந்தபுத்தியுள்ள பெரியோரே உரைத்தருளவேண்டுமென்று கேட்க, அம்முனிவர்கள் பெரும்புகழுள்ள தலமஹிமைகளெல்லாவற்றையுஞ் சிந்தித்துத்தெளிந்து இதைச்சொல்லத் தொடங்கினர். எ-று. (அ)

மன்னுவீர சேனுகேண் மறையுமுணரா நம்பகவன்
முன்னுநின்ற பெருங்கலைக ளனந்தமென்று மொழிந்திடுவா
ரன்னவற்றுட் கலையொன்றே டமர்வா னகிலதலங்களினு
மென்னுமுறைப்போ மற்றுமுள கலையோடமர்வா னெழிற்காசி.

(இ-ள்.) வீரசேன மஹாராஜனே கேட்பீராக வேதங்களால் அறியப்படாத நமது சிவபெருமானுடைய மஹிமையுள்ள கலைகள் சிந்திக்கத்தக்க அனேககோடியென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். எல்லாத்தலங்களினும் அக்கடவுள் ஒவ்வொருகலையுடன் வீற்றிருப்பார். அழகிய காசிப்பதியில் எல்லாக்கலைகளோடு மெழுந்தருளியிருப்பர். ஆதலான் அக்காசிப்பதியின் மகிமையை நாங்கள் யாதென்று கூறுவோம். எ-று. (கூ)

ஆயதிறத்தாற் காசிநக ரொன்றேயதிக மத்தலத்தே
மேயகிருமி கீடமா தேவன்வடிவம் விளங்கியெழும்
பாயபுகழத் தலம்வசிப்போா பாவமனைத்து மொழிந்துயர்வார்
தூயவதன்சீ ருரைப்பரிதா லென்றுசிலசொற் றனர்முனிவர்.

(இ-ள்.) ஆனபடியால் காசித்தலமே மேன்மையுடையதாகும். அத்தலத்திலுண்டாகிய கிருமிகீட முதலிய எல்லாச்செந்துக்களும் மஹாதேவர் வடிவமாக

விளங்கும். பரவிய புகழையுடைய அத்தலத்தில் வாசஞ்செய்பவர்கள் பாவமுழுதும் நீங்கி உயர்வையடைவார்கள் பரிசுத்தமுள்ள அத்தலமஹிமையைச்சொல்வதற்கரிதாமென்று முனிவர்கள் சிலபர்கத்திற் கூறினார்கள். எ-று. (கo)

அன்னபொழுதே காசிநக ரடையும்வாஞ்சை யுடையானாய்
மன்னனிருந்தா னவனாட்டு வாழ்க்கையுடையா ளொருதாசி
நன்னர்மனத்தாள் காமகலை யென்றுநவிலு நாமத்தாள்
பன்னவரிய காசிநகர்ப் பழமான்மியங்கள் சிலகேட்டு.

(இ-ள்.) அம்முனிவர்கள் கூறியபொழுதே காசித்தலத்திற்குப் போகவேண்டுமென்கிற ஆசையுடையனாகி அவ்வீர சேனமகாராஜனிருந்தனன். அவ்விதர்ப்ப நாட்டில் வாழ்கின்ற ஒருதாசி, காமகலையென்று சொல்லத்தகும் நாமகரணமுடையவள் நல்லமனமுள்ளவள் உரைப்பதற்கரிய அநாதித்தலமாகிய காசிப்பதியின் மகிமையில் சிலவற்றைக் கேள்வியுற்று. எ-று. (கக)

என்றுகாசி நகர்புகுவே மென்றுகாசி நகர்வசிப்போ
மென்றுகாசி நகாசூழ்வோ மென்றுகங்கை யாடிடுவோ
மென்றுவிசுவே சனைத்தொழுவோ மென்றுசிவபுண் ணியத்துயாவோ
மென்றுபிறவித் துயரொழிவோ மென்றுகருதி யேக்குறுவாள்.

(இ-ள்.) காசித்தலத்தை என்றைக்குப்போவேன்; அந்நகரில் எப்போது வசிப்பேன் அக்காசியை என்றைக்குப்பிரதக்ஷணஞ் செய்வேன். கங்காதீர்த்தத்தில் எப்பொழுது ஸ்நானஞ்செய்வேன் விசுவநாதனை என்றைக்கு வணங்குவேன் சிவபுண்ணியங்களால் எப்போது மேன்மையடைவேன் பிறவித்துயரத்தை என்று நீங்கப்பெறுவேன் இவ்வாறாகக்கருதி யேக்கத்தையடைவாள்.எ-று. (கஉ)

அனையகாம கலையொருநா ளகத்தாரொடுஞ்சொல் லாதெழுந்து
துனையவொருகா சியையடையத் துணிந்துமுனிவர் விடைபெற்றுப்
புனையவொளிர்பொன் முதற்றானம் பொற்பார்மறையோர் கொளக்கொ
நனையபொழில்சூழ் திருக்காசி நகரநோக்கி வழிக்கொள்வாள். [டுத்து

(இ-ள்.) அவ்வண்ணமுள்ள காமகலை ஒருதினத்தில் வீட்டிலுள்ளவர்களோடுஞ் சொல்லாமல் விரைவாக எழுந்து ஒப்பற்ற காசித்தலத்துக்குப்போக நிச்சயித்து அத்தலத்தின் மகிமையைப்போதித்த முனிவர் அநுமதிபெற்றுக்கொண்டு விளக்கமுற்ற பொன்முதலிய தானப்பொருள்களை சாஸ்திர உணர்ச்சியால் அழகுவாய்ந்த பிராமணர் விரும்பிக்கொள்ளும்படி கொடுத்து தேன்றுளிக்கின்ற சோலைகள் சூழ்ந்த காசித்தலத்திற்குப்போகும்படி வழிக்கொண்டனள்.()

ஆறுநடக்கத் துணிந்தாளா யைந்தாறடிவைப் பாளப்போ
தாறுமெடுத்த பவப்பாவ மொன்றுமில்லா தொழிந்தகலு
மேறும்புகழ்மாப் பெருநகாசி யெய்தலொடுமுற் பலபவத்துச்
சீறுங்கொடிய பாவமெல்லாந் தேய்ந்துமாய்ந்து சிதைதரும்மால்.

(இ-ள்.) வழிநடக்கத்துணிந்து காசியையெண்ணித்துஐந்தாறடிவைத்தபோது, பிறந்தநாட்டொடுத்துச் செய்தபாவங்கள் நீங்கிவிட்டன. இலக்குமி வசித்தற் கிடமாகிய பெரும்புகழுள்ள காசிப்பதியை அடைந்தமாத்திரத்தில் பலபிறவியி லுஞ்செய்த கொடும்பாவங்கள் யாவும் நாசத்தை யடைந்தன. எ-று. (கச)

வள்ளங்கவற்றும் பூண்முலையாள் வயங்குகாசி யெய்துதலு
முள்ளங்குளிர மெய்குளிர வோங்குமணிகன் னிகைமூழ்கிக்
கள்ளமகல மறையோர்க்குக் கையினுளவெ லாங்கொடுத்து
விள்ளமுடியா விரத்தியளாய் விரும்பியாங்கே தலைமழித்து.

(இ-ள்.) தங்கக்கிண்ணத்தை யவமதித்து ஆபரணங்களையணிந்த குசங்க ளையுடைய அக்காமகலை விளக்கமுற்றகாசியையடைந்தபோது மனோதாபம் நீங் கவும் சரீரங்குளிரவும் மேலான மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து களங்கத் தை யொழிக்கும் பிராமணர்களுக்கு கையிலுள்ள வெல்லாப்பொருளையுந் தா னஞ்செய்து சொல்லஅடங்காத விரத்தியுடையளாய் விருப்புடன் தலைமொட் டையிட்டுக்கொண்டு. எ-று. (கரு)

மந்தாகினிவண் புனன்மூழ்கி வயங்குநீறு கண்மணியோ
டுந்தாநின்ற விருப்பினணிந் துலவாவன்பு தலைக்கொள்ள
முந்தாநமது தரிசனமு மூவாநினது தரிசனமுஞ்
சந்தார்வனமென் முலைத்தோகாய் தவிராதாற்றி வருவாளால்.

(இ-ள்.) ஞானவளத்தைத்தருகின்ற கங்காதீர்த்தத்தில் முழுகி ஒளியை யுடைய விபூதி உருத்திராக்ஷத்தை அதிகரிக்கின்ற அன்போடு தரித்து பேதியாத பத்தியுடன் நம்மையும் உன்னையுந் தரிசித்துச்சந்தனக்கோலத்தையணிந்த அழகிய குசங்களையுடையமாதே இந்நியமங்களைத்தவிராதுசெய்துவருவாளாயினள். எ-று.

தீராவருளி னெனைக்காத்தி தேவதேவ மாதேவ
போராதொளிரித் தலத்தமரப் பெருகுஞ்சிரத்தை மிகக்கொடுத்தி
யாராவமுதே யெனத்துதிப்பா ளழுவாள்விழுவா ணகைப்பாளொன்
றோராதெழுந்து நடம்புரிவா ளுருகியுருகிப் பாடுவாள்.

(இ-ள்.) நீங்காக்கருணையால் அடியேனைப் பாதுகாப்பாயாக தேவர்களுக் குத்தேவராயுள்ள மஹாதேவரே, ஒளிநீங்காத காசித்தலத்தில் நான்வசிக்க அதிக சிரத்தையைக் கொடுப்பீராக அளவுபடாத சுகத்தைத்தருகின்ற தேவாமிர்தம் போன்றவரே என்று துதிசெய்வாள், பிரிவுநேரிட்டால் யாதுசெய்வேனென்று அழுவாள், சோர்ந்து விழுவாள், பின்னர் நகைசெய்வாள், ஒன்றுஞ்சிந்தியாதெழு ந்து ஆடுவாள், நம்மைநினைந்து கனிந்துருகிப்பாடுவாள். எ-று. (கஎ)

சொற்றவிங்குப் பரமான்ம சொரூபமான விலிங்கத்தை
முற்றவுணர்ந்தே னிந்தியோ சனையாநீள மொழியகல
முற்றவொருயோ சனையாமென் றுரைப்பாளிதையா னடைந்தமையாற்
பெற்றபேறு சொலற்பாற்றோ வென்றுபெரிது பேசுவாள்.

(இ-ள்.) இத்தலத்தில் பரமான்ம சொரூபமாக எழுந்தருளியிருக்கின்ற சிவலிங்கத்தினியல்பை முழுவதும்றிந்தேன். ஐந்துயோசனை நீளமும், ஒரு யோசனை யகலமுமாக உள்ளதென்று கூறுவார். இதை யான் சமீபித்துத் தரிசித்தமையால் நானடைந்த பிரயோசனத்தைச் சொல்லக்கூடியதோ வென்று மிகவு மெடுத்துரைப்பாள். எ-று. (௧௮)

தீயபுரியும் பாதகர்காள் செகமோரேழும் புகழ்காசி
யாயதலத்தை யடையீரோ வரியாதியர்க ளுபாசிக்க
மேயவிசுவ நாதனடி விரும்பித்தொழுதேத் தெடுக்கீரோ
தூயபுரிந்து நிற்பீரேற் றுயருண்டாமோ வெனச்சொல்வாள்.

(இ-ள்.) கொடுமையா யுள்ளவைகளைச் செய்யும் பாதகர்களே சத்தலோகத்தாரும் துதிக்கப்பெற்ற காசியென்கிறதலத்தைச்சேர்வீர்களாக. விஷ்ணுமுதலாகிய தேவர்களாலே உபாசனைசெய்ய விரும்பி எழுந்தருளியிருக்கும் விசுவநாதருடைய பாதங்களில்அன்புவைத்துவணங்கித் துதிப்பீர்களாக பரிசுத்தமாகிய சற்கருமங்களைச்செய்து அத்தலத்திலிருப்பீர்களானால் உங்களுக்குத் துயரமுண்டாகுமோவென்று கூறுவாள். எ-று. (௧௯)

காமகலையிவ் வாறெழுகல் கண்டுநீயோர் முனிவர்குலத்
தாம்நறும்பூங் குழன்மாதரய்ச் சுரசையெனும்பேர் தாங்கிமிக
வேமம்விழைவாண் முன்புகுவா யிவையநீயார் பெயரென்னை
நாமமெதுநின் றேயத்திற் கெனநீவினவ வவணவில்வாள்.

(இ-ள்.) காமகலைஎன்னுந் தாசி இவ்வாறு நன்னடையிலிருப்பதை நீயறிந்து பிராமணர்குலத்திற்பிறந்த மலரணிந்து விளக்கமுற்ற நல்ல அளகபாரத்தையுடைய கன்னிகைவடிவெடுத்து சுரசையென்னும் பெயர்பூண்டு பேரின்பத்தை விரும்புகின்ற அக்காமகலை முன்னே பிரசன்னமாகி இவ்வாறு தவஞ்செய்கின்ற நீயார். உன்பெயர்என்னை உனதுதேசம் எது என்று நீகேட்க அவள்கூறுவாள்.

செய்யநெறிசே ரொருவிதர்ப்ப தேயம்வாழு மொருதாசி
வெய்யகாம கலையென்று விளம்புவாரெற் கொருநாமம் [ழிந்
பொய்யவாவிப் புன்னெறிபோய்ப் புரிந்தகொடும்பா தகங்களொ
துய்யவினைய் காசிநக ருற்றேனுள்ள திதுவென்பாள்.

(இ-ள்.) சன்மார்க்கத்தை யுடையோர் தங்கிய ஒப்பற்ற விதர்ப்பதேசத்தில் வாழுகின்ற தாசியாகிய என்னை கொடியகாமகலையென்று சொல்லுவார்கள் பொய்ப்போகங்களை விரும்பிக் கொடுந்தொழிலைச் செய்ததனால் வந்த மஹாபாதகங்களெல்லாம் விலகி நான்பிழைக்கும் வகையாக இக்காசித்தலத்தை யடைந்தேன் இதுவே உண்மையாமென்று கூறினள். எ-று. (௨௧)

என்றபொழுது பருவமுடனெழிலும்வாய்ந்தாய் குலதருமமொன்றவியற்றாய் தலைமழித்திங்குறுதற்குமோ வென்பாய்நீ

ருக்க இவ்வுண்மையினையறியாது ஜீவகோடிகள் இழிந்த நரகமெல்லாவற்றிலு மழுந்தித்திரிகின்றார்களென்று சூதமஹாமுனிவர் மேலுஞ் சொல்லத்தொடங்கி னார். எ-று. (உக)

என்றுசூத முனிமுனிவி லெல்லாமுனிவ ருங்கேட்ப
நன்றுநவின்ற னவருவந்து நன்றாயிருந்த திக்காசி
யொன்றுமகிமை யின்னுநீ யுரையாக்குறையு முரைத்தருடி
கன்றுதலைதீர் தரவென்று கரைந்தார்முனியுங் கட்டுரைக்கும்.

(இ-ள்.) இப்படியென்று சூதமுநிவர் களிப்புள்ள சமஸ்த்தமுனிவருங் கேட்கும்படி செவ்வையாகக் கட்டளையிட்டனர். அம்முநிவர்கள் விரும்பி இக்காசியின் மகிமை சிறப்பாகவிருக்கின்றது. இன்னும் இதன் மகிமையைத் தேவரீர் திருவாய்மலர்ந்து எங்கள் மனோவருத்தத்தைத் தணித்தருளுவீரென்று பிரார்த்தித்தனர். அதைக்கேட்ட சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௩0)

## காமகலை வரலாறுரைத்த வத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் கஅ-க்கு திருவிருத்தம். ௬௧௭.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# பத்தொன்பதாவது வீரசேனன் முத்தி பெற்ற அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

காசிமான்மியங் கேட்டுக்கருத்தில்வைத்
தாசிலாதுவிதர்ப்ப நன்காண்டிடுந்
தேசினுன்வீர சேனனெனுமன்னன்
மூசும்வாழ்க்கை துறக்கமுயன்றனன்.

(இ-ள்.) விதர்ப்பதேசத்தை விதியாக அரசாட்சிசெய்யும் அழகுள்ள வீரசேனமகாராஜன் காசித்தல மகிமையைப் பேரியோரால் கேட்டு மனத்தில் நீங்காது வைத்திருந்தானுதலால் நானாவிதசுகவடிவமாக வியாபித்திருக்கும் உலகவாழ்க்கையைத் துறக்கும்படி முயற்சித்தனன். எ-று. (க)

மானமிக்குயர் மைந்தனெனும்பிர
சேனனுக்குத் திருமுடிசூட்டிமு
னைதன்மனை யாளொடுமன்பொடு
மூனநீக்கவி முத்தம்வந்துற்றனன்.

(இ-ள்.) பெருமையிற்சிறந்த பிரசேனனென்னும் குமாரனுக்கு மகுடாபிஷேகஞ்செய்வித்து நீதிவழுவாது அரசாளும்படி செய்து மனதுக்கொத்த மனையாளோடும் புறப்பட்டுப் பிறவியை யொழிக்கின்ற காசிப்பதிக்கு அன்புடன்வந்துசேர்ந்தனன். எ-று. (உ)

வருணைமூழ்கினன் வண்புகழ்க்கேசவன்
திருமுன்சென்று திகழ்தரபூசித்துப்
பரததீர்த்த முழுகிநடுபகற்
கறிசிலாமணி கன்னிகைமூழ்கினன்.

(இ-ள்.) வருணசங்கம தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து வியாபித்த புகழையுடைய கேசவன் சந்நிதியிற்சென்று அறிவுவிளங்கப் பூசைசெய்து பின்னர் பரததீர்த்தத்தில் முழுகி உச்சிக்காலத்தில் களங்கமற்ற மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்தனன். எ-று. (ங)

மன்னுசீர்விசு வேசர்மலர்ப்பத
மன்னபூரணி யம்மைதிருவடி

புன்னியேத்தியொண் மாதவர்கேசவர்
பொன்னடித்துணை யும்புகழ்ந்தேத்தினன்.

(இ-ள்.) நிலைபெற்ற சிறப்புவாய்ந்த விசுவநாதருடைய தாமரைமலர்போன்ற திருவடிகளையும் அன்னபூரணித்தாயார் பாதங்களையும் சிந்தித்துத் துதித்து ஒளியுள்ள ஆதிகேசவருடையவும் பெரியோர்களுடையவும் பொன்போன்ற திருவடிகளை வணங்கித்துதித்தனன். எ-று. (ச)

அன்னதான மருங்கல தானநற்
சொன்னதானந் தொகுபசுத் தானமு
னென்னதானமும் வேதியர்க் கீந்தனன்
கன்னதானக் களிறுடை யண்ணலே.

(இ-ள்.) மதநீர் பெருகுகின்ற கன்னத்தையுடைய யானையை நடாத்தும் வீரசேனவரசன் வேதமறிந்த பிராமணர்களுக்கு அன்னதானத்தையும் அரிய பூஷணதானத்தையும் சுவர்னதானத்தையும், கூட்டமான கோதானத்தையும் மற்றுமுள்ள எல்லாத்தானங்களையுஞ் செய்தனன். எ-று. (ரு)

பொறி யடக்கிப் புகலும் புலனொரு
நெறிநடத்தி நிகழ்தரு மன்னவ
னறிவினிங்ங னமர்தருநாளையிற்
குறிகொள்காம கலைவந்து கூடினுள்.

(இ-ள்.) தத்தம் வழிகளிற்செல்லாது இந்திரியங்களையடக்கி அறிவை விதிவழியே நடத்தி விளங்குகின்ற வீரசேனமஹாராஜன் அறிவாலுயர்ந்த சாதுக்களோடு இவ்வாறு வசிக்கும்போது முத்திலக்ஷியத்தில் மாருதகாமகலை யென்பவள்வந்து கண்டனள். எ-று. (சு)

வந்தகாம கலைதனை மன்னவன்
சந்தமார்தவக் கோலந் தெரிந்துதான்
முந்தவேயுப் சார மொழிந்தன
னிந்தநாளிவ ணென்செய்கின் றுயென்றான்.

(இ-ள்.) தன்னிடம்வந்த காமகலையினுடைய அழகுநிறைந்த தவக்கோலத்தை வீரசேன மன்னவன்பார்த்து மேலான உபசாரவார்த்தைகூறி இத்தலத்தில் இப்போது யாது செய்கின்றனை யென்றனன். எ-று. (எ)

பத்தியோடென் பதிக்குப் பணிசெய்துஞ்
சித்திசாலவி முத்தந் தெரிசித்தும்
புத்திமேவும் புராணங்கள் கேட்டுமொண்
முத்திமேவ முயலுகின்றேனென்றாள்.

(இ-ள்.) அன்போடு எனது நாயகனுக்குத் தொண்டுசெய்தும், மோட்ச சித்தியைத்தருகின்ற காசியைத்தரிசனஞ்செய்தும், விவேகத்தை விளக்குஞ் சிவபுராணங்களைக் கேள்வியுற்றும், அருள்விளங்குகின்ற முத்தியைப்பெறுவதற்கு முயற்சிக்கின்றேனென்றனள். எ-று. (அ)

என்றபோது விதர்ப்பத் திறையவ
னென்றநின்பதி யாருறு பேரொவ
னன்றவாவின ஞனவில் வாயெனக்
கன்றலின்றி யக்காம கலைசொல்வாள்.

(இ-ள்.) இவ்வாறு சொன்னபோது விதர்ப்பதேசாதிபதியாகிய வீரசேனவரசன் உனக்குத்தகுந்த நாயகன்யார் அவர் நாமகரணம்யாது அதைக்கேட்க விரும்பினேன் தெரிவிப்பாயென்று கூற. மனோவருத்தமில்லாத காமகலை கூறுவாள். எ-று. (௯)

ஆன்றவேதமு மாகம மும்பயன்
றோன்றமேவு புராணமுஞ் சொற்றவ
னேன்றகாதலி னெங்கு மிருப்பவ
னூன்றவுள்ளத் தொதுங்குத லில்லவன்.

(இ-ள்.) பொருள் நிறைந்த வேதங்களையும் ஆகமங்களையும் சரியை யாதிப்பயன்கள் தோன்றத்தக்க புராணங்களையுந் திருவாய்மலர்ந்தவர். உண்டாகிய பேரன்புடன் எவ்விடத்து நிறைந்திருப்பவர்.ஆராய்ந்தறியும் உள்ளத்தைப் பிரியாதுவசிப்பவர். எ-று. (௧0)

அளவிலாற்றல னன்றவர் சொற்றிடு
மளவினமத் தனன்பர்க் கெளியவ
னளவில்சீர்த்திய னற்புதன் சிற்பர
னளவிலாத குணங்க ளமைந்தவன்.

(இ-ள்.) அளவுபடாத வல்லமையுள்ளவர் பெரியோரால் எடுத்துரைக்கத் தக்க அனந்த நாமங்களையுடையவர் அன்புசெய்கிறவர்களுக்கு எளிமையானவர் அளவிறந்த புகழுள்ளவர் ஆனந்தமேவடிவமாயுள்ளவர் ஞானநீங்காத பரப்பிரமமாயுள்ளவர் அளவுபடாத உத்தமகுணங்களுள்ளவர். எ-று. (௧௧)

பெண்டுபிள்ளையிற் பெட்டவர் காண்கிலான்
கண்டுநேர்மொழிக் கன்னியோர் பாகத்தான்
விண்டுவாற்றொழு விச்சுவ நாதனே
யண்டுமென்பதி யென்றறைந் தாளரோ.

(இ-ள்.) மனைவிமக்களிடத்துப் பிரியம்வைப்பவரால் காணப்படாதவர். கற்கண்டினைப்போலும் மதுரம்வாய்ந்த வார்த்தைகளையுடைய உமாதேவியாரை வாமபாகத்திலுடையவர் விஷ்ணுதேவரால் வணங்குதற்குரிய விசுவநாயகரே என்னைப்பிரியாத பதியென்று கூறினாள். எ-று. (௧௨)

மன்னனுள்ள மகிழ்ச்சி யுடையனு
யன்னனைத்தெரி வாரொவ ராயிழாய்

நன்னரோதுக வென்றன னன்றெனக்
கன்னன்மென்மொழிக் காமகலை சொல்வாள்.

(இ-ள்.) கேட்ட அரசன் களிப்படையும் உள்ளத்தினையுடையனாகி, அம் மஹாநுபாவனைத் தெரியத்தக்கவர்கள் யாவர் ஆராய்ந்த ஆபரணங்களணிந்த காமகலையே நலமாகக் கூறுவாயாக வென்றனன். கரும்பினது இரதம்போலும் மதுரவாக்கியங்களையுடைய அக்காமகலை நல்லதென்று சொல்லத்தொடங்கினள். எ-று. (௧௩)

வேதநீதி விடாதுகைப் பற்றினோர்
போதவாகமம் புந்திதெளிந்தவ
ரோதவாய்ந்த புராணங்க ளோர்பவர்
தாதமார்க்க முதலிய சார்பவர்.

(இ-ள்.) வேதங்களிலே விதித்தவிதியைத் தவறாது அநுஷ்டிப்பவர்களும் அறிவேவடிவாகிய ஆகமங்களை புத்தியிற் றெளிந்தறிபவர்களும் பாராயணஞ் செய்தற்குரிய பதினெண் புராணங்களையும் ஆராய்பவர்களும் தாசமார்க்கமுதலியவற்றையடைபவர்களும். எ-று. (௧௪)

சிவதலங்க டோறுஞ்சென்று போற்றுவார்
சிவனியற்றிய லீலை தெளிபவர்
சிவனையாதரிப் பார்க்கன்பு செய்பவர்
சிவனன்னாமஞ் செவியின் மடுப்பவர்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருக்கின்ற தலங்கடோறுஞ்சென்று வணங்குவோரும் சிவபெருமான் செய்ததிருவிளையாடல்களைத் தெளிந்தறிபவர்களும் சிவபெருமானை விரும்பும் அடியார்களுக்குப் பத்திசெய்பவர்களும் சிவநாமங்களைக் காதில் நிறைப்பவர்களும். எ-று. (௧௫)

பந்தபாச முழுமையும் பாற்றினோர்
வந்ததேபெற் றுவக்கு மதியினோர்
கந்தமார்குழற் காரிகை யார்முலைச்
சந்தமார்பிற் றழுவுத னீத்தவர்.

(இ-ள்.) பாசபந்தங்களை முழுவதும் நீக்கினவர்களும் கிடைத்தபொருளால் திருத்தியடையும் அறிவுடையோர்களும் வாசனைநிறைந்த கூந்தலையுடைய மடவார்குஜங்களை அழகியமார்பிற் றழுவவேண்டுமென்னுமாசையை யொழிந்தவர்களும். எ-று. (௧௬)

சாதுநீர்மையர் தூக்கு மிராகமுற்
கோதுநீத்தவர் கோணை வழிச்செலு
மேதுதீர்ந்தலி தின்றி யிருப்பவா
காதுபாதகங் காற்றியமர்பவர்.

(இ-ள்.) சாதுத்தன்மையுடையவர்களும் வாதிக்கின்ற ஆசைமுதலிய குற்றமொழிந்தவர்களும் பாபவழியிற் செலுத்துகின்ற தீயகன்மமொழிந்து அக்கன்மவினைவின்றி யிருப்பவர்களும் கொல்லுதற்குரிய தீவினை நீங்கியிருப்பவர்களும். எ-று. (கஎ)

காசிகாசி யெனச்சொலக் கற்றவர்
காசியேபொரு ளென்று கருதுவோர்
காசிமாநதி யிற்கலந் தாடுவோர்
காசிசூழும் விரதங்கைக் கொண்டவர்.

(இ-ள்.) காசிகாசியென்கிற திருநாமமந்திரத்தைச் சொல்லும்படி கற்றுக்கொண்டவர்களும் காசித்தலமே உண்மைப்பொருளென்று மதிப்பவர்களும் காசியிலுள்ள மகத்தான கங்காநதியையடைந்து முழுகுபவர்களும் காசியில் பஞ்சக்குரோசப்பிரதக்ஷண விரதத்தை அனுஷ்டிப்பவர்களும். எ-று. (கஅ)

இன்னரோமுத லியாருந் தெரிபவர்
மன்னர்மன்னவ வென்றனண் மன்னவ
னன்னவன்றனை யுானுந் தெரிவனோ
நன்னரோதென வோதுவ ணங்கையே.

(இ-ள்.) இப்படிப்பட்டவர் முதலாகிய உத்தமர்கள் யாவராலுந் தெரியத்தக்கவராவார். அரசற்கரசராயுள்ளவரே என்றுசொல்லிய காமகலைவார்த்தையை வீரசேனவரசன் கேள்வியுற்று அத்தன்மையுடையாரை நானறியக்கூடுமோ நலமாகச் சொல்வாயென்றுகேட்க அம்மாது கூறுகின்றனள். எ-று. (கக)

விந்தமால்வரை வாழொரு வேட்டுவன்
குந்தமாதிகைக் கொண்டு திரிபவ
னெந்தநாளு மிருங்கொலை யாற்றுவான்
வந்தபேரை வழிப்பறி செய்பவன்.

(இ-ள்.) (முன்னடந்த ஒருகதைசொல்வேன் கேட்பீராக) பெரியவிந்தமலையில் வாழ்கின்ற ஒருவேடன், கைவேல்முதலிய ஆயுதங்களைக் கையிற்பிடித்துத்திரிகின்றவன், எப்பொழுதும் மகத்தான கொலைசெய்பவன், வழிவந்தவர்களை யடித்துப்பொருள் பறிக்கின்றவன். எ-று. (உ0)

ஒருதினத்தி லொருவன மேவுழிப்
பொருவிலாமறை யோர்சிலர் போந்தனர்
திருவிலானெதிர் சென்று மறித்தனன்
வெருவினாரவர் மேலெவன் செய்வரே.

(இ-ள்.) ஒருநாள் ஒரு காட்டிற்போகும்போது சமானமில்லாத சில பிராமணர் வழியேவந்தார்கள் மூடனாகிய இவ்வேடன் எதிரேபோய் அவர்களைப் போகவொட்டாமற்றடுத்தான் அவர்கள் பயந்தார்களேயன்றி வேறே யாதுசெய்வார்கள். எ-று. (உக)

உள்ளயாவு முனக்குக் கொடுக்கின்றோங்
கள்ளமில்லாா கலப்புறுங் காசிக்கு
மெள்ளயாருசெல விட்டிடு வாயெனில்
வள்ளலாருனைப போலென்று வாழ்த்தினர்.

(இ-ள்.) கையிலுள்ள பொருள்யாவும் உனக்குக்கொடுத்து விடுகின்றோம், வஞ்சனையில்லாத பெரியவர்களாலே அடைதற்குரிய காசித்தலத்துக்கு நாங்கள் தடையின்றிப்போக விடுவாயானல் உன்னைப்போலுபகாரஞ் செய்பவர்கள் யாவருளரென்று ஆசிர்வதித்தார்கள். எ-று. (உஉ)

காசியென்று கரைந்தசொற் கேட்டலும்
பாசிநீத்த புனலிற் படிற்றினன்
வாசியுள்ளந் தெளிந்தது மாண்புற
மூசிஞான முகிழ்த்தது வேடற்கே.

(இ-ள்.) அவ்வேதியர் காசியென்றுசொல்லிய வாக்கியத்தைக் கேட்டவள வில் திருடனாகிய வேடன்மனது பாசிநீங்கிய தண்ணீரைப்போல் தெளிந்தது மாக்ஷிமையுள்ள புண்ணியபாவங்களைப் பகுத்தறியும் நல்லுணர்ச்சி தோன் றியது. எ-று. (உங)

ஐயரேயடி யேன்கொலை யேமுதல்
வெய்யபாவம் விடாது புரிந்துளே
னுய்யவாநெறி யோது திருப்பணி
செய்யயான்றொடா வேனென்று செப்பினன்.

(இ-ள்.) சுவாமிகளே அடியனேன் கொலைமுதலாகிய கொடும்பாதகங்களை நிரந்தரஞ் செய்திருக்கின்றேன் இனிமேற் பிழைக்கும்வழியைத் திருவாய்மலர் வீர்களாக. சாதுக்களாகிய தங்களுக்குப் பணிவிடைசெய்யும்பொருட்டு யான் பின்றொடர்ந்து வருகிறேனென்று கூறினன். எ-று. (உச)

கருதிவேதியா காசிக்கெம் மோடுநீ
வருதியோவென்று வாய்மலாந் தாரொது
புரிதியென்று புகலினும் போற்றுவன்
பரிதிபோல வருதிரென்று பன்னினன்.

(இ-ள்.) அவ்வந்தணர், சிந்தித்துக் காசித்தலத்துக்கு எங்களுடன் நீ வரு வாயோவென்று சொன்னர்கள் எந்தப்பணி செய்யும்படி தாங்கள் கட்டளையிட் டாலும் அவ்வாறே செய்வேனுக. என்து அஞ்ஞானவிருளைக் கெடுக்கத்தக்க சூரி யனைப்போல எழுந்தருளினீர்களென்று கூறினன். எ-று. (உரு)

அன்னதேலுடன் வாவென் றறைத்தனா
சொன்னபோது தொடாந்தனன் வேடனு
நன்னாநீழலி னுடுகைப போதொடு
பின்னர்மேயவற் பார்த்திது பேசுவாா.

(இ-ள்.) அப்படியானால் எங்களுடன் காசிக்கு வருவாயாகவென்று அவ்வ ந்தணரழைத்தார்கள். அவ்வார்த்தையைக் கேட்டவேடன் அவர்கள் சாயலைப் போல் பின்னேதொடர்ந்து கைகளில் மலரெடுத்துக்கொண்டு வருவதை அப்பெ ரியோர் பார்த்துக்கூறுகின்றனர். எ-று. (௨௬)

நல்லர்தம்மொடு சேருத லினினி
நல்லனாத லெவ்வாறென்று நாடுத
னல்லசாத்திரக் கேள்வி நசையுற
னல்லமாத்தலஞ் சேறன் விற்றிடல்.

(இ-ள்.) நல்லவர்களோடு கூடுதல் இனிமேலடியேன் நற்குணமுடையனா தல் எவ்வாறென்று மதித்திருத்தல், மேலான சாத்திரங்களைக் கேட்கும்படி இச் சையடைதல், மகிமையுள்ள சிவஸ்தலங்களையடைதல், அதன்மகிமையைக் கூறுதல். எ-று. (௨௭)

புனிதமான வுணவு புசித்திடல்
புனிதமாக விடயத்தைப் போக்குதல்
புனிதவானவா போற்றும் புராதனன்
புனிதமாரடிப பத்தி பொருந்துதல்.

(இ-ள்.) பரிசுத்தமான ஆகாரங்களை விதிவழியே அருந்தல் தனது காலத் தைப் பரிசுத்தநடையிற் கழித்தல், உயர்ந்ததேவர்கள் துதிக்கின்ற பழையோனா கிய சிவபிரானது சுத்தம்நிறைந்த திருவடிகளுக்கு அன்புசெய்தல். எ-று. (௨௮)

இன்னசாத்திரத் தாற்சுத்தி யெய்திடு
மன்னதெய்த வடையுமெய்ஞ் ஞானமு
மன்னமற்றது வாய்த்திட வாய்த்திடும்
பின்னமற்றொளிர் பேரின்ப முத்தியே.

(இ-ள்.) சாத்திரங்கள்கூறிய இவ்வாறான ஒழுக்கத்தால் சித்தசுத்தியுண் டாகும். அச்சித்தசுத்தியால் சத்தியஞானங்கிடைக்கும். சத்தியஞானம் நிலைபெற க்கிடைத்தால் அபேதமாக விளங்குகின்ற பேரின்பமென்னு முத்தியானது கைவ சமாகும். எ-று. (௨௯)

என்றுகூறி யிருந்தவ வேதியா
கன்றுவேட னொடுங்கடி தேகினா்
சென்றுகாசியைச் சேர்ந்தனர் பாதகங்
கொன்றுதீர்க்குங் கொழுங்கங்கை யாடினா.

(இ-ள்.) இவ்வாறுசொல்லிப் பெருமைவாய்ந்த தவநடையுள்ள அந்தண ர்கள் முன்செய்தபாவத்தை எண்ணிவருந்துகின்ற வேடனோடு விரைவாகக் காசி த்தலத்தையடைந்து மகாபாதகங்களைப் போக்கியருளுங் கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தார்கள். எ-று. (௩௦)

வேதநாதனை விச்சுவ நாதனைப
பாததாமரை போற்றிப் பணிந்தனர்
சீதமேவவர் சேர்க்கையுற் றுனுமெய்ப்
போதமேவப் புரிந்தன னப்படி.

(இ-ள்.) வேதங்களுக்குத் தலைவராயுள்ள விசுவநாதருடைய திருவடித்தாமரைகளை வணங்கித்துதித்தார்கள். கருணையுள்ள அப்பெரியோர்களை யடைந்த அவ்வேடனும் ஞானமுண்டாகத்தக்க நல்லநியமங்களை அவ்வேதியரைப்போற் செய்தனன். எ-று. (௫௧)

இந்தவாறு சின்னாளிங் கிருந்தனன்
பந்தபாசம் பறித்துய ரானந்த
நந்தமுத்தியை நண்ணினன் வேட்டுவன்
சந்தவேதியர் தாமிறும பூதுற்றா.

(இ-ள்.) இவ்வண்ணமாகச் சிலகாலம் இத்தலத்திலிருந்து பாசபந்தங்களையொழித்து அவ்வேடன் ஆனந்தமதிகரிக்கின்ற முத்தியடைந்தனன் சாந்தகுணமுள்ளவேதியர் ஆச்சரியங்கொண்டார்கள். எ-று. (௫௨)

வேட்டுவற்கும் விலக்கிவெம் பாதக
நாட்டுமுத்தி யருளிய நாயகன்
வாட்டுமைம்பொறி மன்ன நினக்கரு
ளூட்டுதன்மையி லையமு முண்டரோ.

(இ-ள்.) வழிப்பறிசெய்யும் வேடனுக்கும் மகாபாதகங்களைவிலக்கி நிலைபெற்ற முத்தியருளுகின்ற விசுவநாதர் பஞ்சேந்திரியங்களை யடக்கித் தவஞ்செய்கின்ற அரசனாகிய உமக்குத் திருவருள்பாலிக்கின்றதன்மையில் சந்தேகமுண்டாகுமோவென்று காமகலை கூறினள். எ-று. (௫௩)

என்றுகூறி யிருந்து சின்னாளரு
டென்றுவிச்சுவ நாதன் றுணையடி
நன்றுபோற்றி நவிலரு மாநந்த
மொன்றுமுத்தி யுற்றுளொரு மநகையே.

(இ-ள்.) இப்படியென்று வீரசேனவரசனுக்கு உறுதிகூறி, சிலகாலங்காசியில் வசித்துத் திருவருள்வடிவராயுள்ள விசுவநாதர் உபயபாதங்களையும் நலமாக வணங்கிச் சொல்லுதற்கரிய ஆனந்தத்தைத் தருகின்ற முத்தியை அக்காமகலையடைந்தனள். எ-று. (௫௪)

வீரசேன னிவ்விம்மித நோக்கியே
சாரமாகத் தவாதுசெய் பத்தியா
லாரவிச்சுவ நாத னடிமலர்
வாரமிக்க மனையொடுஞ் சேர்ந்தனன்.

(இ-ள்.) விதர்ப்பதேசாதிபதியாகிய வீரசேனமகாராஜன் காமகலை முத்தியடைந்த ஆச்சரியத்தைப்பார்த்து பேதியாமற் சிவபத்திசெய்துவிசுவநாதர் திருவடித்தாமரையை அன்பு மிக்கபத்தினியோடும் அடைந்தனன். எ-று. (௫௫)

வந்தயாரும் வறிய ராகாவண
நந்தம்விச்சுவ நாத னருளியே
யெந்தநாளு மிருத்தலிற் காசிதான்
சந்தமார்சிவ லோகஞ் சரதமே.

(இ-ள்.) தம்மிடம் வந்தயாவர்களும் பிறவியடையாவண்ணம் நமது விசுவநாயகர் திருவருள்பாலித்து எக்காலத்திலும் வீற்றிருப்பதால் இக்காசித்தலத்தை அழகுவாய்ந்த சிவலோகமென்று கூறுவது சத்தியமாகும். எ-று. (௫௬)

## வீரசேனன் முத்தியடைந்த வத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம் ௧௧-க்கு திருவிருத்தம். ௬௫௩.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்.

# உ௰ - வது புராணிகரியல் புரைத்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

திண்ணியவுலகிற் கதிபெறற்கேது சிரவணமச்சிர வணத்திற்
கண்ணியவேது மறைமுடிப்பிரான்சீ ரறைதருபுராண மப்புராண
நண்ணியவிருப்பிற் கூறுவோர கேட்போர்நயத்தகுமிலக்கணமுழுதுந்
தண்ணியகுணத்து முனிவசாற்றென்னச் சாற்றிடலுற்றனன்சூதன்.

(இ-ள்.) வலிமைதங்கிய உலகத்தில் முத்தியடைதற்கேதுவாயுள்ளது வேதாந்த விசாரணையாகும். அவ்விசாரணைக்குஎது. சந்திரஜடாதரராகிய சிவபிரானது சிறப்பைக்கூறுகின்ற புராணபாராயணமாகும் அப்புராணங்களை ஆவலோடு வாசிப்பவர்கள், கேட்பவர்களுடைய இலக்கணங்கள் முழுமையும் சாந்தகுணத்தையுடைய சூதமகாமுனிவரே தேவரீர்கட்டளையிடவேணுமென்று சவுநகாதிமுனிவர்கேட்க, சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (க)

ஆதிநாள்வாத ராயணமுனிவ னம்பிகா பதிபுராணங்க, ளோதிலா
வுரைப்போர் தமைநனிவிருத்தி செய்தன னின்னுமப்புராண, மோதி
யாதரவிற் கூறுவார்க்கமல னுவந்தரு ளவும்வரங்கொண்டான், சோதி
யார்கருணை யுயிர்ப்பொருட்டதுபோற் சொல்லுவார்கருணையுமாதோ.

(இ-ள்.) பூர்வகாலத்தில் வேதவியாசமகாமுனிவர் பார்வதிநாயகராகிய சிவபிரானுடைய புராணங்களை விதிவழியாகத் தெரிவிப்போர்களை விருத்திசெய்துவந்தார். அன்றியும் அப்புராணங்களை வாசித்து விருப்போடு போதிப்பவருக்கு மகாதேவர் பிரியத்துடனனுக்கிரகம் செய்யத்தக்க வரங்களையும் பெற்றுக்கொண்டார் சிவபிரான்கருணை ஜீவகோடிகளுக்கு உபயோகப்படுவதுபோல புராணரகசியங்களை போதிக்கின்றவருடையகருணையும் அவ்வாறுகும்.எ-று.(உ)

பாதகர்பதிதர் காமுகர்மூர்க்கர் படிறர்கோ யானருலோபா
மேதகுகுணமி லினையருமவிரும்ப விரித்துரைப் போன்புராணிகனுங்
காதல்செய்புராணக் கேள்வியாலெவருங் கரிசறு முத்தியின்படைவ
ராதலிற்புராணங் கேட்பவர்பலர்க்குமறைபவன்பெருங்குருவாவான்.

(இ-ள்.) பாவிகள், ஜாதிசமய ஆச்சிரமநிலைகடந்தவர், காமிகள், மூடர்கள், பொய்யர், வியாதியாளர், உலோபர், இழிகுணத்தையுடைய இவர்களெல்லோ

ரும் விரும்பிக்கேட்கும்படி விரித்துக்கூறுவோன் புராணிகனாகும். மேலு மேலும் விருப்பத்தைத்தருகின்ற புராணசிரவணத்தால் யாவரும் களங்கமற்ற மோட்சசுகத்தைப்பெறுவரர்கள், ஆனபடியால் பலருக்கும் பயன்படுவதாகப் புராணங்களை விரித்துக்கூறுபவனே மேலான ஆசிரியனாவான். எ-று. (௩)

குலனருடெய்வங் கொள்கைமாமேன்மை கோதிலாக் கலைபயிறெளிவு
வலனுயர்சிறப்பிற் கட்டுரைவன்மை வறப்பினும் வளர்தரசேற்றங்[ம்
கலவியவையங் கழிதரப்புகறல் கலங்குற வருத்தினுங்கடியா
துலவரும்பயனைகொடுத்திடலெவருமுவந்துமேற்கொண்டிடுஞ்சிறப்பு

(இ-ள்.) குலவானும், கருணையுள்ளவனும், தெய்வபக்தியுள்ளவனும், மேன்மையுள்ளவனும், குற்றமற்ற நூல்களிற்பழகிய தெளிவுள்ளவனும், போதிக்கின்ற வாக்கியங்களுக்கு போதுமான மேற்கோள்காட்டி நிலைநிறுத்தும் வல்லமையுள்ளோனும், கேட்கின்றவர்செய்யும் உதவிகுறையினும் அவர்களுக்கும் பேதியாது போதிப்பவனும், கீர்த்தியுள்ளவனும், உண்டாகியசந்தேகம்நீங்கும்படி பல நியாயங்களால் விளக்குபவனும், மனவருத்தஞ்செய்பவர்களுக்கும் பேதமின்றி பெரும்பிரயோசனத்தைக் கொடுப்பவனும், யாவருமகிழ்ந்து மேற்கொள்ளத்தக்க சிறப்புள்ளவனும். எ-று. (௪)

பெண்டுபிள்ளைகள்பா லுறுநசைதவிர்த்துப் பெருகுநற் கருமத்
துச்சிரத்தை, கொண்டுநின்றியற்றிப் பின்பதுநழுவுங்குறிபெறக் குறி
த்துரைத்திடுதன், மண்டுபற்பலர்க்கும் பரசிவதியானம் வயங்குறப்
போதித்தனன்மை, யுண்டுபண்ணுதன் மற்றிவைமுதற்பலவு முடைய
வன்புராணிகனாவான்.

(இ-ள்.) மனைவிமக்களிடத்துவைத்த பேராசையொழியும்படி போதித்து பின்பு சற்கருமங்களில் சிரத்தைவரும்படிசெய்து அதன்மேல் நிலையைத்தெரிவித்து அச்சற்கருமங்கள் வழுவத்தக்க யோகசமாதியில் அழுந்தும்படி செய்பவனும், நெருங்கியபலருக்கும் பரசிவசிந்தனை நிலைபெறுவதாகப் போதித்து நன்மார்க்கத்துள் நிறுத்துபவனும் இவைமுதலிய உத்தமகுணங்கள்பலவும் உடையவனாகிய ஒருவனே புராணிகனென்று சொல்பவனாகும். எ-று. (௫)

பாதகமெவைக்குங் காரணமாகப் பரதிர வியங்கவர்விருப்ப
மேதகுமயலார் மனைவியர்ப்புணர விரும்புதன் மடியுடைத்தாதல்
காதரம்பயக்குங் கடும்பழிமுதல்ராங் கரிசுக ளனைத்தையுங்கடிந்து
பூதரச்சிலையான் றிருவடிக்கன்பு பூண்டவர் புராணங்கேட்டிடுவோர்.

(இ-ள்.) எல்லாப்பாதகங்களுக்கு மூலமாகிய அன்னியர்பொருளை விரும்புதலையும், அன்னியர் மனைவியைக் கூடவேண்டுமென்றெழுகின்ற விருப்பத்தையும் சோம்பலடைதலையும், அச்சத்தையுண்டாக்கும் பிறர்பழிகூறுதல் முதலிய

பாவத்தொழில்கள் எல்லாவற்றையும் ஒழித்து மேருமலையை வில்லாகவுடைய மகாதேவர்திருவடிகளில் அன்புபூண்டவர்களே புராணங்கேட்பதற்கு அதிகாரி யாவார்கள். எ-று. (கூ)

இருவர்தமியல்புஞ் சொற்றனமளவா விரும்புக ழாக்கியவர்க்கர்
மருவியசீட ரிடத்தொருகாசி மான்மிய வாஞ்சைமேவியதோ
வொருவியதோவென் றுயந்துபதேச முஞற்றுவ ரொன்றுமாயாது[ற]
திருவியதத்தாத்திரேயர்சார்ந்தார்க்குத்திருந்துபதேசஞ்செய்திடுவோ

(இ-ள்.) புராணம்போதிப்பவர், கேட்பவராகிய இருதிறத்தோரிலக்கணங்களையுங்கூறினோம். அளவுபடாத பெரும்புகழையுடைய யாக்கியவர்க்கர் தமது மாணக்கரிடத்து ஒப்பற்ற காசித்தலத்துமகிமையைக் கேட்கவேண்டுமென்னும் ஆசைநிரம்பியதோ நீங்கியதோவென்று ஆராய்ந்தறிந்து ஆசையுள்ள மாணக்கர்களுக்கே உபதேசஞ்செய்வர் ஞானசம்பத்துள்ள தத்தாத்திரேயர் அடுத்தமாணக்கர்குணங் குற்றம் விசாரியாது காசிரகசியத்தை உபதேசஞ்செய்து வருவார். (எ)

திருந்துபதேசம் பெற்றமாணக்கர் தீமையாற் றுவரொனிற்றேடம்
பொருந்துமாரியற்கேபொருள்குறித்தேனும்புகழ்குறித்தேனும்வே
றுக, வருந்திறமற்றை யெதுகுறித்தேனு மருவுப தேசஞ்செய்திடுவா
ரிருந்திறனழிக்கும்பெருந்துயரடைவரொண்ணிலாப்பெருந்தவமுனிவீர்.

(இ-ள்.) திருத்தமான உபதேசத்தை சற்குருவினிடத்தில் பெற்றசீடர்கள் பாவஞ்செய்வாரானல் அப்பாவம் ஆசாரியனையடையும். பொருள்குறித்தாவது புகழ்குறித்தாவது வேறுசார்புள்ள எவைகளைக்குறித்தாவது உபதேசஞ்செய்வார்களானல் பெரியதவத்தை யழிக்கத்தக்க அதிக கிலேசத்தை யடைவார்கள் அளவில்லாத தவமகிமையுள்ள சவுனகாதி முனிவர்களே. எ-று. (அ)

மாதவர்புகழு மிதிலைமாநகர்வாழ் மன்னவன் சனகனென்றொருவன்
கோதகல்காசி மான்மியங்கேட்டுக் குணங்கெழு விசுவநாயகனை
மேதகவுபாசித் திருந்தனனதனல் விரத்திமேன் மேலுமுண்டாயிற்
றுதலிற்குரவ னெங்குளானென்றே யாய்ந்தினி திருந்தனனம்மா.

(இ-ள்.) பெரியோர்கள் புகழ்தற்குரிய மிதிலைமாநகரத்தில் வாழ்கின்ற சனகராசனென்று பேர்பெற்ற அரசன் களங்கமற்ற காசித்தலமகிமையைப் (பெரியவர்களால்) கேள்வியுற்று அத்தலத்தில் வீற்றிருக்கும் விசுவநாயகனை திடமாக உபாசனைசெய்து வநதனன் அவ்வுபாசனு பலத்தால் மேன்மேல் வைராக்கியம் பிறந்தது. அதனல் பரம்பொருளை யுணர்த்தும் ஆசாரியன் எங்கே நேரிட்ப் போகின்றானென்று விசாரித்திருந்தனன். எ-று. (கூ)

ஊனமார்பவஞசவாழ்க்கையினகப்பட்டுழலுவார்பிறப்பிறப்பொழியா
ரீனமாரதனை யொழித்தவரொழியா வின்பமா முந்திபெற்றிருப்பார்

தேனவாமலங்கன் மணிமுடிசூடிச் செய்யகோல் செலுத்திமாஞால
மானதாதரத்திற் புரப்பதிற்றுக்க மகலுமோ வென்றருவருப்பான்.

(இ-ள்.) கெடுதிநிறைந்த பிரபஞ்ச வாழ்க்கைக்குட்பட்டு அலைபவர்கள், ஜனனமரணத்தைக் கடக்கமாட்டார்கள். இழிவுள்ள அவ்வாழ்க்கையை விட்டவர்களே நீங்காத இன்பவடிவாகிய முத்திபெறுவார்கள். வண்டுகள் விரும்பத்தக்க மாலிகையணிந்த மணிமகுடந்தரித்துச் செங்கோல் செலுத்திப் பெரியஉலகத்தை ஆவலோடு அரசாட்சிசெய்வதால் கிலேசம் நீங்காதென்று அவ்வரசாளுதலில் அருவருப்படைந்தனன். எ-று. (௯௦)

தேடியபொருளில் வெறுப்புடையானாய்த் தெண்டிரைகொழுத்
திடுகங்கை, யாடியமறையோர் காசிவாசஞ்செய் யருந்தவர் முதலி
யோர்த்தேடி, நாடியபதினா யிரம்பசுமணிப்பூ ணக்கபொன் றுடை
முற்பிறவும், பாடியவிருபபிற் கொடுத்தனனனைத்தும் பற்றறத்துறப்
பதுகுறித்தோன்.

(இ-ள்.) சம்பாதித்த அகண்டசம்பத்திலும் வெறுப்படைந்து தெளிவுள்ள அலைகளையுடைய கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து வந்தவேதியர்களையும், காசித்தலத்தில் வாசஞ்செய்யும் பெரியோர் முதலானவர்களையும் ஆராய்ந்து கண்டு அவர்களுக்குப் பதினாயிரம் பசுக்களையும், இரத்தினபூஷணங்களையும் திரவியங்களையும் வஸ்திரமுதலிய பிறபொருள்களையும் பேரன்போடுகொடுத்தனன் எல்லாப்பற்றுக்களையுந் துறந்துவிடும்படி உத்தேசித்த அச்சனகமகாராஜன். எ-று. (௧௧)

அதுதெரிந்தடைந்தா ளுக்கியவர்க்க னவனடிதொழுதெழுந்தடிகேண்
முதுபுகழ்மறையின்முடிபடியேற்குமொழிதரவேண்டுமென்றிரந்தா
கதுமெனவவனும் விடையவாதனையிற்கலவுறுகிருக்குநிற்கன்றிப் [ன்.
பதியின்மற்றெவர்க்குப் புகல்வதென்றுள்ள படியுபதேசித்தானன்றே

(இ-ள்.) சற்குருநாட்டம் வைத்திருக்கும் சனகராசனிடத்து ஆக்கியவர்க்கர் வந்தனர். வந்தவருடைய திருவடிகளில் வணங்கியெழுந்து சுவாமிகளே பெரும்புகழுள்ள வேதாந்தத்துண்மையை அடியேனுக்கு உபதேசித்தருளவேண்டுமென்று குறையிரந்தனன். பிரபஞ்சவாதனையில் பற்றுறுதிருக்கின்ற உனக்கல்லாது உலகத்தில் வேறேயாவர்களுக்கு உபதேசிக்கத்தக்கதென்றுகட்டளையிட்டு அவ்வாசிரியரும்விரைவாக உள்ளவாறு உபதேசஞ்செய்தனர். எ-று. (௧௨)

தனியுபதேசம் பெற்றபின்ஞான சனகனென் றொருபெயர்பூண்டு
முனிதருமவத்தையனைத்தையுங்கடந்துமுடிவிலாவானந்தம்பெற்றுக்
கனிதருகாசி மான்மியங்கேட்ட காரணத் தாலிதுபெற்றே
னனியுலகுள்ளீரியாவருமதையேநயந்துகேட்டிடுமினென்றுரைப்பான்.

(இ-ள்.) மேலான ஞானோபதேசத்தை ஆக்கியவர்க்கரிடத்துப் பெற்றபின்னர் ஞானசனகமகாராஜனென்று ஒப்பற்ற திருநாமத்தைக்கொண்டு வெகுளி

யை விளைவிக்கும் எல்லா அவஸ்தைகளையும் ஒழித்து நித்தியானந்தத்தையடைந்து மனதையுருகச்செய்யுங் காசித்தலமகிமையைக் கேள்வியுற்றகாரணத்தால் இச்சுகத்தையடைந்தேன் உலகத்திலுள்ள (நண்பர்களே) நீவிர்யாவரும் அக்காசி மகிமையை விரும்பிக் கேட்பீர்களென்று அச்சனகவரசன் கூறிக்கொண்டிருப்பான். எ-று. (கரு)

**மன்னியசீவன் முத்தனுய்ச்சனகன் வதிதர விந்தமால்வரையோர்,முன்னியகுகைவாயருந்தவம்புரிந்தமுனிவர்கோனெனுந்தத்தாத்திரேயன், பன்னியபுகழ்சா னருமதாதீரம்பற்றிவீற்றிருந்து நால்வருணத்,துன்னியபலர்க்கு மோங்குபநிடதத் துண்மையைத்தெளித்தினிதிருந்தான்.**

(இ-ள்.) அச்சனகமகாராசன் நிலைபெற்ற ஜீவன்முத்தனுகி மிதிலையில் வசித்திருந்தனன். பெரிய விந்தமலைக்குகையில் அரியதவஞ்செய்திருந்த முனிவர்கோமானுகிய தத்தாத்திரேயர் பெரும்புகழமைந்த நருமதா நதிக்கரையில் வசித்து பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்குவருணத்திலுள்ள பலருக்கும் மேலான உபநிடதமுடிவிலுள்ள உண்மைப்பொருளை யுபதேசித்து இன்பத்துடனிருந்தனர். எ-று. (கச)

**சேகறுபுகழ்சா லாக்கியவர்க்கன் றிருந்திய தவத்தத்தாத்திரேயனுகியவிவராற் காசிமான்மியங்கேட் டருமறை முடிபினையுணர்ந்து போகியபந்த பாசமுள்ளவராய்ப் பொருவரு மவத்தையில்லவராய் மோகமிலான்ம சொரூபரோயாகி முழங்குபே ரின்பமுற்றிருந்தார்.**

(இ-ள்.) குற்றமற்ற பெருங்கீர்த்தியுள்ள யாக்கியவர்க்கர் திருத்தமான தவத்தையுடைய தத்தாத்திரேயர் ஆகிய இவர்களால் காசிமான்மியங்களைக் கேள்வியுற்று அரியவேதாந்தத்துட்பொருளை யறிந்து அனுதியே சம்பந்தித்துள்ள பாசங்களையொழித்து சமானமற்ற அவஸ்த்தைகளைக்கடந்து, இச்சையற்ற பிரமநிஷ்டர்களாகி அனேகர் பேரின்பானுபவத்தை அடைந்திருந்தார்கள். எ-று.

**அடுத்தவர்குணங்க ளாய்ந்துபதேச மருளினு மாய்தராதுண்மை கொடுக்கினுங்காசி மான்மியமுணர்ந்து குலவிய புண்ணியப்பேற்று லிடுக்கணென்றின்றிவிடையவாதனைநீத் தியாவருமுத்தராயிருந்தார் விடுப்பருங்காசி நினைத்தலுமவர்பான் மேவுவ ளன்னபூரணியே.**

(இ-ள்.) அடுத்தமாணுக்கருடைய குணங்களை ஆராய்ந்து ஆக்கியவாக்கர் உபதேசித்தாலும் குணகுற்றங்களை ஆராயாது அவ்வுண்மைப்பொருளைத் தத்தாத்திரேயர் உபதேசித்தாலும் எல்லோரும் காசித்தலமகிமையையறிந்து அதனுல்வந்த புண்ணியபலத்தை முன்னிட்டு விஷயவாசனையொழித்து அவஸ்த்தா

த்திரய துன்பங்களேக்கடந்து முத்தியின்பத்தைப் பெற்றிருந்தார்கள் விட்டு நீங்குதற்கரிய காசித்தலத்தை யார்சிந்திக்கின்றார்களோ அவர்களிடத்து அன்னபூரணித்தாயார் எழுந்தருளி தரிசனங் கொடுப்பார். எ-று. (கசு)

அன்னபூரணிபோ லகிலநாயகன்போ லம்மையு மபபனுமில்லைப
பின்னல்வார்திரையகங்கைபோற்றீர்த்தம்பிறக்குமுப்புவனத்துமில்லே
யென்னயாமுரைப்போங்காசிபோற்றலமற்றெவ்வகையண்டத்துமில்
லே, முன்னருமனைய காசியைநினைப்போர் மூடரா யுழல்வதுமில்லே.

(இ-ள்.) விசுவநாதனைப்போல் பிதாவும் அன்னபூரணியாரைப்போல் தாயாரும் எப்புவனத்திலுமில்லே நெருங்கிய அலேகளேயுடைய கங்காதீர்த்தம் போல் திரிலோகத்திலுமில்லே யாம் யாதென்றுகூறுவோம் காசியைப்போல் மகிமையுள்ள தலம் எந்த அண்டத்திலுமில்லே சிந்தனேக்கரிதாகிய அக்காசியை நினைப்பவர்கள் மூடர்களாகி பிறவியில் உழல்வது ஒருக்காலுமில்லே. எ-று. (கஎ)

ஆனந்தசொரூபி யாகியவெங்க ளன்னபூரணி யினைத்தழுவி
யானந்தகான மெனும்பெயர்க்காசி யகிலநாயக னெனுமளவா
வானந்தரூப னடியராயுள்ளா ரமாதரு மிடந்தொறுமணுகி
யானந்தரூப மாகவேயருள்வா னஃதள வுரைக்கமுற்றுவதோ.

(இ-ள்.) ஆனந்தவடிவமுடைய எனது தாயாராகிய அன்னபூரணியாரை வாமபாகத்திருத்தி ஆனந்தகானமென்று பெயர்பெற்ற காசித்தலத்தில் விசுவநாதர் அளவுபடாத ஆனந்தவடிவராயிருத்தலின் காசியில் வசிக்கின்ற அடியவர் உள்ளந்தோறு மெழுந்தருளி அவர்கள் ஆனந்தவடிவமாகும்படி திருவருள்பாலிப்பர், அவ்வாறு அருள்செய்வது அளவுபடாது. எ-று. (கஅ)

விருப்பமார்காசி விச்சுவநாதன் விளங்கரு ளாதலினேய, பருப
பதமகளேப பார்முழுதீன்று பரிந்தருள் புரியுநற்றாயைத், திருப்பதந்
தொழுவாருள்ளுளேயொளியாய்த்திகழ்தருமன்னபூரணியைக், கருப்
பயமிரித்துப்புரந்தருள்விசாலக்கண்ணியைத்துதிசெயல்வேண்டும்.

(இ-ள்.) நிறைந்தபிரியமுள்ள காசித்தலத்தில் எழுந்தருளியிருக்கும் விசுவநாதருடைய கருணேயே திருமேனியாகக்கொண்டு இமாசலராசகுமாரியாகி எல்லா அண்டங்களேயும்பெற்று அவ்வண்டங்களிலுள்ள உயிர்களிடத்துப் பிரியம் வைத்துத் திருவருள்பாலிக்கின்ற நல்லதாய்போன்றவரும் திருவடியைவணங்கும் அடியார்கள் உள்ளத்தில் விளங்குகின்ற அன்னபூரணியாரும் பிறவிப்பயத்தையொழித்து அருள் செய்கின்ற விசாலாக்ஷித் தாயாருமாகிய பரதேவதையைத் தோத்திரஞ்செய்யவேண்டும். எ-று. (கசு)

இந்திரனயன்மான் முதலியபலர்க்கு மெண்ணரும் பேருணேக்க
மூந்துறக்கொடுத்துப் புரக்குநற்றுயே மூவுலகேத்துமோர் முதல்வி

பந்தமற்றவரோ பரவிடப்படுவாய் பராபரன் பிரியநாயகியே
யந்தமில்காசி வளம்பதிசேர்த்தி யடியனேற் புரத்தலுன்கடனே.

(இ-ள்.) தேவர்க்கரசன், பிரமன், திருமால் முதலாகியபலருக்கும் அளவிறந்த கருணையுள்ள நோக்கத்தை முன்னேகடாட்சித்துப் பின்னர் அவர்களைப்பாது காத்துவருகிறமாதாவே,மூவுலகத்தாரும் துதிக்கத்தக்க ஒப்பற்றபரதேவியே,பந்த மொழிந்த பெரியோர்களால் வணங்கப்படுபவளே, மேலாகிய சிவபெருமானுக்கு இன்பவடிவமுள்ளமாதே லயமில்லாதவளப்பங்களையுடைய காசித்தலத்தை யடியேன் அடையுமாறுசெய்து பாதுகாப்பதுனது கடமையாகும். எ-று. (உ0)

அங்குசபாசம் வேலொடுசூல மைங்கணைமலரொடு கழைவில்
சங்குசக்கரமே மணிவடஞ்சிருக்குத்தரித்தெலா வுயிர்களும்புரப்பாய்
கங்குலும்பகலு நின்னடிக்கன்பே கசிவிலாக் கடையனேற்கருளிப்
பொங்குபேரருளாற் காசியில்வாசம் புரியுமா புரிந்திடல்வேண்டும்.

(இ-ள்.) அங்குசத்தையும், பாசத்தையும், வேலாயுதத்தையும், சூலாயுதத்தையும், பஞ்சபாணங்களையும், கரும்புவில்லையும், சங்கையும், சக்கரத்தையும், உருத்திராக்ஷமாலையும், சிருக்கையும், பத்துக்கையிலுந்தரித்து எல்லாச்சீவர்களையும் பாதுகாக்கின்ற பரதேவியே, இரவும்,பகலும், உனது திருவடிக்கன்புசெய்து மனங்கனியாத இழிஞனாகிய எனக்குத்திருவருள்செய்து உனது கடாக்ஷத்தால் நான் காசிப்பதியில் வாசஞ்செய்யுமாறு பிரியம்வைத்தருள வேண்டும். ()

என்றுதோத்திரஞ்செய்திறந்திடுவாருக்கெண்ணிய வெண்ணியாங்கெ
ய்துங், கன்றுதலொழியக் கங்கைசூழ்கிடந்த காசிமாவாசமும்பலிக்கு
மொன்றுதாரகமந் திரமிடையூறுரன் றுறுவகை யருளலுமாகு
நன்றுதேர்ந்திடுமி னென்றுரைசெய்தா னலத்தகு சூதமாமுனிவன்.

(இ-ள்.) இவ்வாறு துதிசெய்து அவரவர் இருக்குமிடங்களில் மரணத்தை யடைகின்றவர் நினைத்த புவனங்களில் திவ்யசரீரங்கிடைத்து நானாவிதசுகங்களையும் அனுபவித்து மனோதாபத்தை யொழிப்பார் கங்காநதிசூழ்ந்த பெருமை வாய்ந்த காசித்தலவாசமும் நேரிடும் அத்தலத்தில் பிறவித் துன்பமொழியுமாறு சிவபிரானால் உபதேசிக்கப்படுகின்ற தாரகமந்திரோபதேசமும் சித்திக்கும் சௌநகாதிமுனிவர்களே இவைகளைச் செவ்வையாகத் தெரிந்தறிவீர்களென்று சூதமஹாமுனிவர் கட்டளையிட்டனர். எ-று. (உஉ)

## புராணிகரியல் புரைத்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம் உ௰-க்கு திருவிருத்தம் ௬௱௭௫.

திருச்சிற்றம்பலம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# இருபத்தோராவது புண்ணியகீர்த்தி முத்திபெற்ற அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

வாதராயணன் பாதம்போற்றியே
யோதன் மேயினர் போதமாதவர்.

(இ-ள்.) ஞானசம்பன்னர்களாகிய சவுநகாதி மகாமுனிவர்கள் வேதவியாசருடைய திருவடிகளைச் (சிந்தித்துத் துதித்துச்) சொல்லத்தொடங்கினர். எ-று. (௧)

ஐயனாங்கணன், குய்யு மாறொரு
பொய்யின் மாக்கதை, மெய்யினோதென்றார்.

(இ-ள்.) சூதமகாமுனிவராகிய ஐயரோநாங்கள் கடைத்தேறும் வண்ணம் உண்மையுள்ள ஒருகதை உபதேசிக்க வேண்டுமென்றனர். எ-று. (௨)

என்று போற்றலு, நன்று நன்றெனாத்
துன்று வான்குணக், குன்று கூறுமால்.

(இ-ள்.) இவ்வாறு துதித்துச்சொன்னவளவில் நல்லதென்று சம்மதித்து பரிசுத்தமுள்ள உத்தமகுணங்கள் நிறைந்த மலைபோலும் சலனமில்லாத சூதமகாமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (௩)

காசி மான்மிய, மாசிலா மணி
பேசு கேனும, தாசு தீரவே.

(இ-ள்.) களங்கமில்லாத இரத்தினம்போற் பிரகாசிக்கும் விசுவநாதரெழுந்தருளிய காசித்தலமகிமையை உங்களைப்பற்றி இருக்கும் ஆணவாதிகுற்றங்கள் ஒழியும்விதந்தெரிவிக்கின்றேன். எ-று. (௪)

குரவன்பத்தியும் விரதமேன்மையுஞ்
சரதமேயினருவர்கேட்கவே.

(இ-ள்.) ஆசாரியபக்தியும், மேன்மையுள்ள விரதமும், சத்தியமும், ஞானமும் உடைய சவுனகாதிமுனிவர்கள் கேட்கும்படியாக. எ-று. (௫)

முத்தி வித்தெனற், கொத்த மான்மியஞ்
சித்த நன்குடைச், சத்தர் கேட்பவர்.

(இ-ள்.) முத்திக்கு விதையென்று சொல்லத்தக்க காசித்தலமஹிமையை நின்மலசித்தத்தையுடைய சாதுக்களே கேட்பதற்குரியராவார்கள். எ-று. (௬)

காசி யுள்ளுநர், காசி கேட்குநர்
காசி காணுந, ராசின் முத்தரே.

(இ-ள்.) காசித்தலத்தைச் சிந்திப்பவரும், அத்தலத்தின் பெருமையைக்கேட்பவரும், அத்தலத்தைக் (கண்குளிரப்) பார்ப்பவரும் களங்கமற்ற முத்தியடைவார்கள். எ-று. (எ)

காசி மான்மியம், பேச வோர்ந்தவர்
வீசுமற் றொன்றி, னேசம் வைப்பரோ.

(இ-ள்.) காசித்தலமகிமையை விளங்கச்சொல்லுமாறு அறிந்தவர்கள் விலக்குதற்குரிய மற்றொன்றினிடத்து ஆசைவைப்பாரோ (வையார்கள்.) எ-று. (அ)

முன்னை நாளையின், மன்னுவர்னவர்
துன்னுதானவர், நன்னர் கூடியே.

(இ-ள்.) பூர்வகாலத்தில் நிலைபெற்றதேவர்களும் நிறைந்த அசுரர்களும் நலமாகக் கூடிக்கொண்டு. எ-று. (கூ)

விலங்கன் மத்தரா, வலங்கொளுண்மதி
யிலங்கு தூணென, வலங்கச் சேர்த்தியே.

(இ-ள்.) மந்தரகிரியை மத்தாகக்கொண்டு இருளை வெற்றிகொள்ளும் பூர்ண சந்திரனாகிய தூணினிடத்து வாசுகியென்னுங் கயிற்றினால் அழகுபெறச் சேர்த்து. எ-று. (௧௦)

விடலி லாதுதோம், படல்கொளாதமு
துடல் விராவப்பாற், கடல் கடைந்தனர்.

(இ-ள்.) மத்தியில் விடாமலும், யாதொருகுற்றமும் சம்பவியாமலும் சந்திரனுடைய அமிர்தசரீரம் உராயும்விதமாகத் திருப்பாற்கடல் கடைந்தார்கள். (௧௧)

என்னை யாளுடை, யன்னை பாகனு
ரின்னருட் டிறந், துன்ன மேவலால்.

(இ-ள்.) என்னையடிமையாகவுடைய தாயாராகிய உமாதேவியை இடப்பாகத்திற்கொண்டிருக்கும் சிவபெருமானது திருவருள்வல்லபத்தினலே. (௧௨)

மணிதன் மந்திரி, யணியு மாமகள்
பிணியிலாப பசுத், தணிவில் வான்சுதை.

(இ-ள்.) கவுஸ்த்துவமணியும், தன்மந்திரியென்னுந் தேவபண்டிதரும், விஷ்ணுதேவர் திருமார்பிலாதரிக்கப்பெறும் பெருமையுள்ள திருமகளும், வியாதியற்ற காமதேனுவென்னும் சுரபியும், குறைவுபடாததும் பெருமையுள்ளதுமாகிய அமிர்தமும். எ-று. (௧௩)

இனையதோன்றின, வனையகாலையில்
வினையமார்கலாங், துனையமூண்டதே.

(இ-ள்.) இவ்வாறுயுள்ளவைகள் அத்திருப்பாற்கடலில் உண்டாயின அந்தகாலத்தில் விசித்திரமான ஒருகலகம் விரைவாகச்சூழ்ந்தது. எ-று. (௧௪)

அன்னதோர்ந்துமா, னன்னர்மாதென
முன்னா நின்றனை, னின்னறீரவே.

(இ-ள்.) அதையறிந்த விஷ்ணுதேவர் அதிரூபமுள்ள மோகினியாகத்திரு வுருக்கொண்டு அக்கலகத்தைமாற்றும்படி பிரசன்னமானார். எ-று. (௧௫)

சிதைவின்மோகினி, யிதையமெண்ணுமுர்.
பதைகொடானவர், சுதைமறந்தனர்.

(இ-ள்.) மேன்மேல்வளர்கின்ற அழகுள்ள மோகினியைப்பார்த்து துடிதுடிக்கின்ற அசுரர்கள் மனதிலமுந்தச்சிந்தித்து அமிர்தத்தை மறந்தார்கள். (௧௬)

பராவுவான்சுதை, விராவுவானர்கொண்
டராவென்றுண்பொழு, திராகுவென்பவன்.

(இ-ள்.) துதிக்கத்தக்க உயர்வுள்ள அமிர்தத்தைக்கூடியிருந்த தேவர்கள் கைக்கொண்டு அரகரவென்று சிவசிந்தனைசெய்து உண்ணுங்காலத்து இராகு வென்னும் பேருள்ள அசுரன். எ-று. (௧௭)

பரவுதேவர்போற், கரவின்மேவியாங்
கிரவினுண்பொழு, துரவுவார்கதிர்.

(இ-ள்.) துதிக்கத்தக்க தேவர்களைப்போல் வடிவமெடுத்து வஞ்சனையாக வந்து இராத்திரிகாலத்தில் அமிர்தபானம் செய்யும்போது கூர்ந்தமதியுள்ள சூரிய தேவர். எ-று. (௧௮)

காட்டவோர்ந்துமால், வீட்டவாளராக்
கூட்டமாகியோ, யோட்டமேயினான்.

(இ-ள்.) இராகுவென்னும அசுரன் தேவர்களைப்போல வடிவங்கொண்டு வந்துண்பதைக்காண்பிக்க, விஷ்ணுதேவர் தண்டித்தபோது அவ்விராகு சர்ப்ப ங்களாக வடிவங்கொண்டு ஓடத்தொடங்கினான். எ-று. (௧௯)

பரவுகாசியி, னுரவுமேவுற
விரவுபெற்றியாற், கிரகமாயினான்.

(இ-ள்.) எல்லோருந்துதிக்கப்பெற்ற காசிப்பதியையடைந்தபோது பேரறிவு விளங்கியகாரணத்தால் நவக்கிரகத்திலொன்றானான். எ-று. (௨௦)

ஆயினன்புடைப், பாயபானவா
மேயினார்சுரைத், தீயதூட்டுவான்.

(இ-ள்.) நவக்கிரகத்தில் ஒன்றாகிய அந்த இராகுவினிடத்து அசுரர்கள் விரும்பிப்போய் அவ்விராகுவை மதுபானஞ்செய்யும்படி முயற்சித்து. எ-று. (௨௧)

நல்லதிச்சுரா, வல்லதன்மையாம்
புல்லகண்டம்போன், மெல்லமாந்தென்றார்.

(இ-ள்.) இக்கள் நன்மையுள்ளது சரீரத்துக்கு உறுதிசெய்வது சருக்கரையைபோல மெல்லவாக உண்பாயாகவென்றார்கள். எ-று. (௨௨)

அந்தவார்த்தைதன், புந்திகொண்டிலா
னிந்தைகூறினு னந்திராகுவே.

(இ-ள்.) அசுரர்கள் சொன்னவார்த்தையை அந்த இராகுவானவன் மன திற் கொள்ளாமல் அந்தக் கள்ளினுக்குண்டாகிய குற்றங்களை எடுத்துக்கூறி னான். எ-று. (உ௩)

வேறு.

மானநீக்கிடும் வருந்திநேடிய
ஞானமுங் கெடுநன்மைசற்றிலே
யீனமென்பன யாவுநல்கிடு
மூனமாமதுவுண் டறீமையே.

(இ-ள்.) இழிவுள்ளதும் பாவத்தை விளைவிப்பதுமாகிய மதுபானமானது மானத்தையொழித்து விடும் வருந்திச்சம்பாதித்த அறிவைக்கெடுக்கும் நன்மைகளை ஆனிசெய்யும் இழிவென்றுரைக்கத்தக்கவைக ளெல்லாவற்றையுங்கொடுக்கும். எ-று. (உ௪)

ஈன்றவன்னையு மிகழ்ந்துநீக்கிடுஞ்
சான்றமேலவர் தனமைசொல்வதெ
னேன்றகள்ளுணு வென்னுந்தீமையான்
மான்றதும்பியெ வாய்ப்பதுண்மையால்.

(இ-ள்.) தன்னைப்பெற்ற தாயாரும் நிந்தித்து நீக்கிவிடும்படி செய்விக்குமானல் சாதுக்களாயுள்ள பெரியோர்களுடைய தன்மையைச் சொல்லவேண்டுவதியாது கட்குடித்தலென்கிற கொடுமையால் நிலையாயுள்ள நரகங்கள்யாவும் வந்து சம்பவிப்பது உண்மையாகும். எ-று. (உ௫)

என்றிராகுமிக் கிகழ்ந்துகூறிடக்
கன்றுதானவர் கடுகநக்குநீ
யொன்றுமற்றிதன் குணமுணர்ந்திலாய்
பொன்றுநீரும் போற்றத்தக்கதே.

(இ-ள்.) இராகு எனபவன் இவ்வாறு கள்ளை நிந்தித்துரைக்க மனவருத்தமுள்ள அசுரர் உடனே சிரித்து இம்மதுவினுடைய குணத்தை நீ ஒன்றுமறியவில்லை உயிரிழந்து போகின்றவர்களும் உட்கொள்ளத்தக்கது எ-று. (உ௬)

மானமோங்கிடும் வன்மைதேங்கிடு
மூனமென்பன வொன்றுமெய்துறு
தானவூனொடு மருந்துகள்ளொடு
ஞானமில்லவர் நவின்றுவேணடினு.

(இ-ள்.) பெருமை உயரும் வலிமை அதிகரிக்கும் இழிவென்று சொல்லத்தக்கவைகள் ஒன்றும் நேரிடா மதுவையும் மாமிசத்தையும் களிப்போடு அருந்துவாயென்று மூடர்களாகிய அசுரர்கள் சொல்லி வேண்டிக்கொண்டனர். ()

அறிவிருனவ ரவாவிவேண்டலு
முறிவிலின்சுதை முன்னமுண்டவன

செறிகொடுஞ்சுரை சிறிதுமுண்பனே
நறியதன்றென நவின்றுதள்ளினன்.

(இ-ள்.) அறிவற்ற அசுரர் விரும்பி வேண்டிக்கொண்டபோது, கெடுதலில்லாத அமிர்தத்தை முன்னே யுண்டு தெளிவுபெற்ற இராகு கொடுமை நிறைந்த கள்ளினை இலேசமும் குடிப்பானே நன்மையல்லவென்று தோஷங்கள் சொல்லி நீக்கிவிட்டனன். எ-று. (உ௮)

மறுத்ததோராந்தனர் மண்டுதானவா
கறுத்தசிந்தையுங் கலந்தநாணமும
பொறுத்துநீங்கினர் புகரிலாதகட்
குறுத்தமேன்மைசற் றுணர்ந்திலானென்றே.

(இ-ள்.) நிறைந்த அசுரர்கள் அவ்விராகு மதுபானஞ்செய்யே னென்பதையறிந்து மனம்புழுங்கி நாணங்கொண்டு குற்றமில்லாத கள்ளினுக்குள்ளமகிமையைச்சற்று மறியாமற் போய்விட்டானென்று நீங்கினார்கள். எ-று. (உ௯)

இராகுமுன்சுதை யென்ப துண்டலால்
விராவுதீயகள் வெறுத்துநீக்கினன்
பராவுமற்றிதன் பான்மைபோலவே
தராதலத்திடைச் சாருமயாவரும்.

(இ-ள்.) இராகு என்பவன் முந்தி அமிர்தபானஞ்செய்தமையால் கொடுமை நிறைந்தசுராபானத்துக்குத் தோஷஞ்சொல்லி நீக்கிவிட்டான். துதிக்கத்தக்க இந்தநியாயம்போலவே உலகத்தில் வாசஞ்செய்பவர்கள் யாவர்களும். எ-று. (௩௦)

வேறு.

திருந்துகாசியின் மான்மியம, பொருந்துதன்மையி னோர்ந்தவா
வருந்துமற்றுள யாவையும, விருந்துநஞ்சின் விலக்குவார்.

(இ-ள்.) திருத்தமான காசித்தலத்தின் மகிமையை முற்பிறவியிற்செய்த புண்ணியபலத்தினாலறிந்தவர்கள் வருத்தத்தைத்தருகின்ற வேறுயுள்ள சாதனங்களெல்லாவற்றையுங் கொடியவிஷம்போல எண்ணிக்கைவிடுவார்கள். எ-று. (௩௧)

ஆதலா லருங்காசியை, யோதலாலற முண்டுகாண்
காதலாற் சென்றுகாண்பவர், சாதலாறபயன் றுங்குவார்.

(இ-ள்.) ஆனபடியால் அரிய காசித்தலத்தின் மகிமையை அவரவர்கள் இருக்குமிடத்திற் சொல்லுவார்களானால் தருமமுண்டாகும் அன்புடன் அத்தலத்திற்குப்போய்த்தரிசிப்பார்களானால் மரித்தபோதுமுத்தியடைவார்கள். எ-று.

அன்னகாசியி னற்புத, மன்னமேவு மந்தாகினி
யென்னுமாநதி மூழ்குவோர், துன்னும்பேறெவர் சொல்லுவார்.

(இ-ள்.) அத்தன்மையான காசித்தலத்தில் நிலைபெற்று மகிமையோடு வருகின்ற கங்காநதியில் ஸ்நானஞ்செய்பவர்களுக்கு உண்டாகும் பலனை யாவரொடு தறுவைக்கத்தக்கவர்கள். எ-று. (௩௩)

அம்மைகையி னவதரித், தெம்மையாளுடை யீசனார்
செம்மையார்சடைச் சேர்ந்துபின், கொம்மைவானங்குடிபுகா.

(இ-ள்.) சர்வபுவனமாதாவாகிய உமாதேவியார் திருக்கரத்தில் உற்பத்தியாகி என்னை யடிமையாக உடைய சிவபெருமானது சடையிற்றங்கியிருந்து அதன்பின்னர் அழகிய சுவர்க்கலோகத்தில் ஆகாய கங்கையென்று பேர்பெற்று நிலைத்திருந்தது. எ-று. (௫௪)

கூண்டவன்பினோர் கொற்றவன், வேண்டவிச்சுவ நாயக
ஞண்டகாசி யடைந்தது, மாண்டதீம்புனற் கங்கையே.

(இ-ள்.) மாட்சிமைதங்கிய மதுரமுள்ள தீர்த்தவடிவமான கங்கையானது, நிறைந்த அன்புள்ள பகீரதமகாராசன் தவஞ்செய்து வேண்டிக்கொள்ள விசுவநாதரொழுந்தருளிய காசித்தலத்துக்குவந்தது. எ-று. (௫௫)

பெரியசீர பெறுகாசியின், மரியவாவி குளந்தட
முரியகூபமற் றோடைக, டெரியவாய்தரு கங்கையே.

(இ-ள்.) பெரும்புகழுள்ள காசித்தலத்துக்குவந்த கங்கையானது ஏரிகளையும், சிறுகுளங்களையும், பெரியதடாகங்களையும், ஆங்காங்குள்ள கிணறுகளையும், ஓடைகளையும் நிறைத்து நதிரூபமாக வேறேயிருந்தது. எ-று. (௫௬)

திவலையொன்று தஞ்சென்னிமே, லுவலைநீங்க வுறுத்தினோர்
கவலையாவுநு கவற்றியே, சவலைமாய்க்கு மக்கங்கையே.

(இ-ள்.) அக்கங்காநதியானது ஒருதுளி தீர்த்தத்தை யெடுத்து தங்கள் சிரசின்மேல் புரோட்சித்துக்கொள்ளுகின்றவர்களுடைய எல்லாவருத்தங்களையும் ஒழித்து பிறவிக்கிலேசத்தையும் மாற்றியருளும். எ-று. (௫௭)

உகந்த விச்சுவநாயகன், புகழ்ந்தசீரன்ன பூரணி
யிகந்திடா விவர்ப்பூசைசெய், தகந்தழைப்பவர்க் கப்பலன்.

(இ-ள்.) சர்வஜீவர்களையும் ஆதரிக்க விரும்பும் விசுவநாதரையும், யாவராலுந்துதிக்கப்பெற்ற சிறப்புள்ள அன்னபூரணியாரையும் பேரன்போடு பூஜித்து மனமகிழ்ச்சி யடைகின்றவர்கள் முத்தியின்பத்தைப்பெறுவார்கள். எ-று. (௫௮)

கொடையுளார்க்குக் கொடைப்பல, மடையும் யோகியர்க்கப்பல
மிடையும்யாகம் விளைப்பவ, ருடைதரா தடையும்பலம்.

(இ-ள்.) சற்பாத்திரதானஞ் செய்பவர்களுக்குண்டாகிய பலன்களையும், யோகாப்பியாசஞ் செய்பவர்களடையும் பலன்களையும் அனேகமாயுள்ள யாகங்களைச் செய்கின்றவர்கள் நிறைவோடனுபவிக்கின்ற பலன்களையும். எ-று. (௫௯)

முழுகுவார் கொண்முழுப்பலம், பழுது மேவிய பாவிக
டொழுது நிற்கழுவாய்நலங், தழுவுவார்க் குயர்முத்தியே.

(இ-ள்.) கங்கா ஸ்நாநஞ் செய்பவர்களடைவார்கள் குற்றத்தை விரும்பிச்செய்யும் பாவிகள் கங்கையை வணங்குவார்களானால் தாங்கள்செய்த பாவங்களுக்குப் பிராயச்சித்தஞ் செய்துகொள்ளத்தக்க மனமுடையராவார்கள், விதிப்படி ஸ்நாநஞ்செய்து வசிப்பவர்கள் மேலாகிய முத்தியடைவார்கள். எ-று.(௪0)

இன்னயாவு மினிதளித், தன்னபூரணியம்மையே
யென்னமேவு மந்தாகினி, யுன்னயாவு முறுவிக்கும்.

(இ-ள்.) இவைபோன்ற நல்ல பிரயோசனங்களை ஸ்நாநஞ்செய்பவர்களுக்கு இன்பமாகக்கொடுத்து அன்னபூரணித்தாயாரென்றே யாவருஞ் சொல்லும்படி, வருகின்ற கங்காநதியானது சிந்திக்கத்தக்க எல்லாப்பலன்களையும் கொடுப்பித்தருளும். எ-று. (௪௧)

வீரம்வேண்டினு மெய்க்கலைச், சாரம்வேண்டினுந் தாத்திரிப
பாரம்வேண்டினும் பற்றறும், வாரம்வேண்டினும் வாய்க்குமே.

(இ-ள்.) பிரபலவீரத்தை விரும்பினாலும், சத்தியஞானத்தைக்கொடுக்கும் தத்துவசாஸ்த்திரங்களின் உட்பொருளையறிய விரும்பினாலும், பூவுலகமுழுதும் அரசாளவிரும்பினாலும், உட்பற்று புறப்பற்றுக்களை யொழிக்கத்தக்க மோட்சவிருப்பம் வேண்டினாலும் அக்கங்கை கொடுத்தருளுவள். எ-று. (௪உ)

ஈசைபாக னருளினன், மாசைநீக்க வந்துற்றவர்
தேசைமேவச் செயுங்கங்கை, பூசையாவினு மிக்கதே.

(இ-ள்.) உமாதேவியை இடப்பாகத்திலுடைய சிவபிரான் கருணையினால் களங்கத்தை யொழிக்கவேண்டுமென்று யெண்ணிவந்து முழுகுவோர்கள் ஞானப்பிரகாசத்தை பெறும்படி செய்விக்கின்ற அக்கங்காதேவிக்குச் செய்யும் பூசையானது எல்லாப்பூசையினும் மேம்பாடுடையதாகும். எ-று. (௪௩)

வேறு.

நலமலிபாண்டியநாடுபுரப்போன், கிலமகல்புண்ணியகீர்த்தியெனும்பேர்
நிலவியமன்னவ னீதியின்மிக்கான்,மலர்தலைஞாலம்வழுத்திடவாழ்வான்.

(இ-ள்.) (சவுநகாதிமுனிவர்களே கேட்பீர்களாக) நன்மைக்கூட்டங்களையுடைய பாண்டியதேசத்தை அரசாளுகின்ற குற்றமற்றபுண்ணியகீர்த்தியென்று பேர்விளங்கு மரசன், நீதியில் மேம்பட்டவன் பரந்த இடத்தையுடைய உலகத்தார் துதிக்குமாறு வாழ்கின்றவன். எ-று. (௪௪)

மறைபலயாவும் வகுத்துணர்கேள்வித்,துறைபலகண்டவர் சூழவிருப்பானிறையுமறத்தினி யங்குதலில்லான், முறையினடத்து முழுப்புகழ்பெற்றோன்.

(இ-ள்.) வேதங்களிற்கூறிய பலசமய மார்க்கங்களையும் பிரித்தறியத்தக்க கேள்வியும் பலவாகிய விதிமார்க்கங்களையறியும் அறிவும் உடையபெரியோர் பலர்சூழும்படி இருக்கின்றவன் பாபவழியில் அற்பமுஞ்செல்லாதவன் விதிவழியே அரசாண்டு பெரும்புகழ்பெற்றவன். எ-று. (௪௫)

**கற்றவர்வந்து கரைந்திடுதோறு, நற்றவர்சேரு நலம்பெறுகாசிப
பற்றறுமான்மிய மேபகர்வீரென், றற்றமில்காசியி லாசையமைத்தான்.**

(இ-ள்.) வாசித்துணர்ந்த பெரியோர்கள் தன்னிடத்துவந்து வார்த்தை சொல்லுங் காலமெல்லாம் பெருந்தவர் ஒருங்குசேரத்தக்கதும் சேர்ந்தவருடைய பற்றுக்களை யொழிக்கத்தக்கதும் முத்தியின்பத்தைத் தரத்தக்கதுமாகிய காசித்தல மகிமையைத் திருவாய் மலர்ந்தருளுவீர்களென்று (சொல்லி) அடுத்தவர்களின் சோம்பலையொழிக்குங் காசித்தலத்தில் பேரன்புவைத்தனன். எ-று. (சசு)

**மன்னியகாசியின் மாதவர்நாளு, முன்னியகங்கை முழுப்புனலாடற்
றுன்னியபுண்ணியந் தூழ்தருமென்றே, நன்னியமங்கொ ணயத்தினுணர்ந்தான்.**

(இ-ள்.) அப்பாண்டியன் விதிவழியான நல்லநியமங்களை அன்போடு செய்துவருதலினாலே, நிலைபெற்ற காசித்தலத்தில் பெரியோர்கள் தினந்தோறும் நெருங்கிச்சிந்திக்கத்தக்க கங்காநதியிலே ஸ்நானஞ்செய்தால் எல்லாச்சிவபுண்ணியங்களும் வந்து நெருங்குமென்று தெரிந்தனன். எ-று. (சஎ)

**வாநதியாடி வருமபெரியோர்க்குஞ், சுரநதியென்று சொலிப்புகுவோர்க்கும், பரவுபொனுடை முதற்பலநல்கி, யுரவுகொண்மற்றவ ரைத்தொழுதுய்ப்பான்.**

(இ-ள்.) வரத்தைத்தரும் கங்காநதியில் முழுகிவருகின்ற பெரியோர்களுக்கும் கங்கையில் ஸ்நானம் செய்யவேண்டுமென்று சொல்லிக்கொண்டு காசித்தலத்துக்குப் போகின்றவர்களுக்கும் திரவியம் வஸ்திரம் முதலியவற்றையுங் கொடுத்து அறிவாலுயர்ந்த அப்பெரியோர்களை வணங்கி அனுப்பிவருவான். (சஅ)

**பாடுறமேவு பழம்புனற்கங்கை, யாடுறமேவுந மென்றடைவார்க்கு
நாடுறவாகு நலத்தினரென்றே, நீடுறவாகு நெடும்பொருளீவான்.**

(இ-ள்.) மிகுபுகழையுடைய விருப்பமுள்ள கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்யவேண்டுமென்று விரும்பிப்போகின்றவர்களை நாம்குறித்து உபசரிக்கத்தக்க பந்துக்களென்றெண்ணி அவர்களுக்குப் பெருந்துணையாயுள்ள பொருளை மிகவுங்கொடுப்பான். எ-று. (சகூ)

**ஒண்மலர்தூவி யுறுந்திசைநோக்கிக் கண்மலர்பூப்பொலி கங்கையைத் தாழ்ந்து, திண்மலர்காம முதற்பலசித்துத் தண்மலர்சிந்தையின மேவுசயத்தான்.**

(இ-ள்.) தேனையுடைய மலர்கள் நிறைந்தகங்காநதியைத் தியானித்து அந்நதியிருக்குந் திக்கைநோக்கி ஒள்ளியமலர்களாலருச்சித்து வணங்கி வலிமையாகத் தோன்றுகின்ற காமமுதலிய பலதுர்க்குணங்களையுநீக்கி சிவகருணையுள்ள மனதோடு வெற்றிபெற்றிருந்தனன். எ-று. (ருய)

வேறு.

உரைத்தவிக் குணஞ்சான்மன்ன னுபகரணங்கள் கொண்டு
திரைத்தநீர்க் கங்கைபாலைத் திருத்தகப் பூசைசெய்து
விரைத்ததார் மோலிவேந்த ராதியர் விழைந்துபோற்றக்
குரைத்தநீர்க் கடல்வைப்போதன் குடைநிழ லமரவாழ்நாள்.

(இ-ள்.) மேற்கூறிய உத்தமகுணமுள்ள புண்ணியகீர்த்தியென்னும் பாண்டியன் பூசைக்குவேண்டிய பொருள்களைக்கொண்டு அலைகளையுடைய கங்காதேவியை செவ்வையாகப்பூசித்து வாசனைதங்கிய மாலையணிந்த அரசர்கள்முதலானோர் விரும்பித்துதிக்க ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த பூமி தனது குடைநிழலில் குளிரும்படிசெய்து வாழுங்காலத்தில், எ-று. (௫௧)

புண்ணிய கீர்த்தியன்பின் பொலிவினை யுள்ளத்தோர்ந்து
தண்ணிய கங்கைமங்கை தன்றிருக்காட்சி நல்கக்
கண்ணிய வரசனோர்ந்து கதுமெனவெழுந்து தாழ்ந்து
பண்ணிய துதியனாகிப் பரவசமடைந்தான் மன்னோ.

(இ-ள்.) புண்ணியகீர்த்தியினுடைய அன்பின்விளக்கத்தைக்குளிர்ந்தகங்கா தேவியானவள் தன்உள்ளத்தறிந்து அழகுள்ள தனது யதார்த்தவடிவத்தைக்காட்டியருள சிந்தித்துவரும் அவ்வரசனறிந்து விரைவாக வெழுந்துவணங்கி துதித்துப்பரவசமடைந்தனன். எ-று. (௫௨)

பரவச மடைந்தமன்னன் றிருமுகம் பாவைநோக்கி
யுரவுசான் மன்னரேறே யுவந்தெனைப் பூசைபண்ணாட்
கரவற வாற்றிவந்தாய் கருதியதென்னை சொற்றி
வரமுறக்கொடுப்பேனென்றாண் மன்னனும்வணங்கிச்சொல்வான்.

(இ-ள்.) அன்பின்வசப்பட்ட பாண்டியன்முகத்தைக் கங்காதேவிபார்த்து அறிவாலுயர்ந்த அரசர்க்கரசனே நீபலநாளும் விருப்போடு களங்கமில்லாமல் என்னைப் பூசைசெய்துவந்தனை விரும்பியதுயாது சொல்வாயாக வேண்டிய வரத்தை இப்போதேதருகின்றேன் என்றுகூற அரசன்வணங்கிச் சொல்லுகின்றனன். எ-று. (௫௩)

அடியனேன் கேட்டவாறே யருள்செய லுண்மையாகிற்
கொடியனு யுரைப்பேனென்றான் குறித்ததை யுரைத்தியென்று
நெடியமா மோலிவேந்த னின்றிருக் காட்சிநாளும்
படியிலென் றனக்காம்வண்ணம் பரிந்தொரு வரந்தாவென்றான்.

(இ-ள்.) அடியேன் கேட்டவண்ணம் வரங்கொடுப்பதுண்மையானால் விதிக்குவிரோதமாகக் கேட்பேனென்றான் அதற்குக்கங்கை நீ எண்ணியதைச்

சொல்வாயென்றனள், கிரீடத்தையணிந்த அரசன் உனது அழகியசேவை இப்பூமியில் தினந்தோறும் எனக்குக்கிடைக்குமாறு பிரியம்வைத்து ஒருவரத்தைக் கொடுத்தருள்க வென்றனன். எ-று. (௫௪)

வரநதி மங்கைமன்னர் மன்னவ னுரைத்தல்கேட்டு
விரவுமுண் ணகையரும்ப மிக்குள மகிழ்ந்துசொல்வாள்
புரவல ரமரர்க்குப் பொருந்துபுத் தேளிரானோர்
பரவருங் காட்சியேக தேசமே பலிப்பதன்றி.

(இ-ள்.) அரசர்க்கரசனாகிய புண்ணியகீர்த்தியென்னும் பாண்டியன் சொன்னவார்த்தையைக் கங்காதேவிகேட்டு புன்னகைகொண்டு உள்ளங்களித்துக் கூறுகின்றனள் அரசனே தேவர்கள் அன்புள்ள பூலோகவாசிகளுக்கு எப்போதாவது ஒருக்கால் காக்ஷிகொடுப்பார்களே யன்றி. எ-று. (௫௫)

நினைத்தபோ தெல்லாங்காட்சி கொடுத்திட நேருங்கொல்லோ
கனைத்தவண் டௗருந்தாராய் கருதியென் கிரகம்வந்தா
லினைத்தென வளக்கலாகாக் காட்சியெப் போதுமெய்து
மனைத்தலை யடைவேனென்றுண் மாநிலம் புரக்குஞ்செல்வி.

(இ-ள்.) சிந்திக்குங்காலமெல்லாம் காட்சிகொடுக்கக்கூடுமோ கூடாது ஒலித்தலையுடைய வண்டுகள் மூக்காலூழப்பெற்ற மாலையுடையோனே நீ சிந்தித்து என்வீட்டுக்குவந்தால் இவ்வளவென்றளவிடக்கூடாத காட்சி எப்போதுங் கிடைக்கும் ஆதலால் என்கிரகத்துக்குப் போகிறேனென்று உலகத்தை ஆதரிக்கின்ற கங்காதேவி கூறினள். எ-று. (௫௬)

விளங்குபல் லண்டமெல்லாம் வியாபியா யமர்நினக்கு
முளங்கொளி லொன்றுண்டென்ற வுரையிறும் பூதேயம்ம
களங்கமி லனையவீடு மெவ்விடங் கரைவாயென்று
ளுளங்களிந் துலகமல்க வயக்குவா னுரைக்கலுற்றாள்.

(இ-ள்.) சராசர உயிர்களால் விளங்குகின்ற எல்லா அண்டங்களிலும் வியாபித்து இருக்கின்ற பிரியதேவதையாகிய உனக்கு மனதுக்கினியவீடு ஒன்றிருக்கிறதென்னும் வார்த்தை ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது. குற்றமற்ற அவ்வீடு எவ்விடத்துள்ளது கட்டளையிடவேண்டுமென்று கூறிய அரசனைப்பார்த்து உலகத்தை அபிவிர்த்திசெய்யும் கங்காதேவிமனமகிழ்ந்து சொல்லததொடங்கினள். எ-று. (௫௭)

அண்டங்க ளனைத்துநாமே வியாபியா யமர்வேமேனும்
பண்டங்கன் விசுவநாதன பரவுபே ரருளாலொன்பான்
கண்டங்கண் முதலபோற்றுங் காசியே கிரகமாகக்
கொண்டங்க ணுறையாநிற்போங் குவலயம புரக்குமன்னே.

(இ-ள்.) உலகத்தைப் பாதுகாக்கின்ற பாண்டியராசனே எல்லா அண்டங்களிலும் நாம் வியாபியாக யிருப்போமாலும் பழைய அஸ்திமாலையணிந்த விசுவநாதர் பெருங்கருணையால் நவகண்டத்திலுள்ளவரும் மற்றையர்களும் புகழ்தற்குரிய காசிப்பதியையே நமக்கு வீடாககொண்டு வாசஞ்செய்வோ மென்றறிவாயாக. எ-று. (ருஅ)

பாண்டிநா டாளும்பாரம் பயந்தபுத் திரனுக்காக்கிச்
சேண்டிகழ் மணிப்பொற்கொங்கைச் செல்வமின் றேவியோடும்
வேண்டியக் காசியுற்றால் விரும்பிய படியாமென்று
தேண்டியா வரும்வந்தாடத் திருவளிப் பவண்மறைந்தாள்.

(இ-ள்.) பாண்டியதேசத்தை அரசாளுஞ்சுமையை நீபெற்ற புத்திரன் மீதிருத்தி தூரத்துச்சென்று ஒளிவீசும் இரத்தினபூஷணங்களையணிந்த தனங்களையுடைய மனையாளோடும் பிரயாணப்பட்டு விருப்போடு அக்காசித்தலத்தைச்சேர்ந்தால் உனதிஷ்டப்படி நமது தரிசனம் நேரிடுமென்று, தேடிவந்து ஸ்நானஞ் செய்பவரெல்லோருக்கும் ஞானசம்பத்தைக் கொடுக்குங் கங்காதேவி கட்டளையிட்டு மறைந்தருளினள். எ-று. (ருகூ)

முன்னின்றுண் மறைதலோடு முழுத்தபே ரறஞ்சான்மன்ன
னங்கின்ற படியேமைந்தற் கணிமுடி சூட்டிநீத்துச்
சென்னின்ற கபோலத்தானச் செல்வனைப் பூசையாற்றிப்
பின்னின்ற மனைவியோடும் பெயர்ந்துபோய்க் காசிபுக்கான்.

(இ-ள்.) சாக்கிராவஸ்தையில் எதிர்நின்று காட்சிகொடுத்த கங்காதேவி மறைந்தவளவில் பெரிய தருமமேவடிவமான புண்ணியகீர்த்தியென்னும் பாண்டியன் அப்பொழுதே தனது குமாரனுக்கு அழகிய மகுடந்தரித்து அரண்மனையைவிட்டு நேரே ஒழுகுகின்ற கபோலமதமுண்டைய சித்திவிநாயகக்கடவுளைப் பூசைசெய்து (அநுமதிபெற்று) பின்னேவருகின்ற மனைவியோடும் மதுரையைவிட்டு நீங்கிச்சென்று காசித்தலத்தை யடைந்தனன். எ-று. (சுo)

காசியை யடைந்தமன்னன் கஙகைநீ ருச்சிக்கால
மாசறு விதியின்மூழ்கி மறையவ ராதியோர்க்கு
நேசமாா பொன்பூணுடை நிரம்புபற் பலவுநல்கித்
தேசமா ரகிலநாதன் சேவடி தொழுதுபோற்றி.

(இ-ள்.) காசித்தலத்தைச்சேர்ந்த பாண்டியராஜன் கங்காதீர்த்தத்தில் களங்கமற்ற விதிப்படி உச்சிக்காலத்தில் ஸ்நானஞ்செய்து பிராமணர் முதலிய பெரியோர்களுக்கு விருப்பம் நிறைந்த திரவியங்களையும், ஆபரணங்களையும், வஸ்திரங்களையும், நிறைவாகிய மற்றைப்பொருள்களையுங் கொடுத்து ஒளியுள்ள விசுவநாதர் பாதங்களைத்தொழுது துதித்து, எ-று. (சுக)

நீருரு வாயகங்கை பூசையு நிரம்பச்செய்து
காருரு வாயசெங்கைக் காவல னமருநாளி
னுருரு வாயவன்னு னல்வினைக்கிரங்கி முன்போற்
சீருரு வாயகங்கைத் திருமக டோன்றினாளால்.

(இ-ள்.) தீர்த்த வடிவமான கங்காதேவிபூசையும் சம்பூரணமாகச்செய்து மேகம்போலும் (பிரதிஉபகாரத்தை விரும்பாது கொடுக்கும்) சிவந்தகைக ளையுடைய பாண்டியன் அன்பேவடிவங்கொண்டு அக்காசிப்பதியில் வாசஞ்செ ய்யுங்காலத்தில் அவன் புண்ணியத்துக்கு மனமிரங்கிச்சிறந்த திருஉருவமுள்ள கங்காதேவிமுன்னே மதுரையில் தரிசனங்கொடுத்ததுபோற் பிரசன்னமாயி னள். எ-று. (சுஉ)

தோன்றிய துணர்ந்துமன்னன் றொழுதெழுந் தாடிப்பாடி
யூன்றிய பத்தியோங்கத் திருமுனின் றுரைக்கலுற்றான்
வான்றிக ழினையவைப்பில் வயங்குநின் கருணையாலே
தேன்றிகழ் கடுக்கைமோலிச் சிவபிரான் விசுவநாதன்.

(இ-ள்.) தரிசனந்தந்ததைப் பாண்டியனறிந்து பணிந்தெழுந்து நடனஞ் செய்துதோத்திரம்புரிந்து பேரன்பு மேன்மேலதிகரிக்கத் திருமுன்னேநின்று சொல்லத்தொடங்கினன். பெருமையால் விளங்குகின்ற இக்காசிப்பதியில் விள க்கமுற்ற உனது கிருபையால் தேன்றுளிக்கின்ற கொன்றைமாலையணிந்த சிவ பெருமானாகிய விசுவனாதனையும். எ-று. (சுரு)

ஆதியா வனையுங்கண்டே னளவிலா வின்பமுற்றேன்
சோதியாய் விளங்குங்காசி மான்மியஞ் சொல்லவேண்டும்
பேதியா வுயிர்கட்கெல்லாம் பிரிவரும் பாவம்போக்கி
நீதியா வருளுமன்னு யென்றன னிமலைசொல்வாள்.

(இ-ள்.) மற்றுமுள்ள தேவரையும் தரிசித்து அளவுபடாத இன்பத்தைப் பெற்றேன் மனஉறுதியுள்ள எல்லா உயிர்களுக்கும் நீக்குதற்கரிய பாவத்தை யொழித்து முறையாக அனுக்கிரகஞ்செய்கின்ற பரதேவதையே பிரகாசவடிவ மாக விளங்குங்காசித்தல மகிமையை (அடியேனுக்குக்) கட்டளையிடவேண்டு மென்றுகேட்ட அப்பாண்டியனுக்குக் கங்காதேவிகூறுவாள். எ-று. (சுச)

கரைதரு தெய்வஞானக் கலையது சொரூபமாய
துரைதரு பிறப்பிறப்பை யுற்றவர்க் கொழிக்குநீர
திரைதரு கடற்கட்டுஞ்சு மிறைவனு தியர்களென்றும்
புரையறு பொருளவாவிப் போக்கற வசிப்பதின்னும்.

(இ-ள்.) எடுத்துரைக்கின்ற தெய்வீகமுள்ள ஞானசாஸ்த்திர வடிவமாக விளங்குகின்றது அடுத்தவர்களுக்கு உற்பத்திலயத்தை நீக்குந்தன்மையுடையது

ஒலிக்கின்ற திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளும் திதிகர்த்தனுயுள்ள விஷ்ணுதேவர்முதலானவர்கள் களங்கமற்ற மோட்சசாம்பிராச்சியத்தை விரும்பி நீங்காமல் வசிக்கத்தக்கது மேலும். எ-று. (௬ரு)

பொறிபுல னடங்கியோரே புக்கினி தமரத்தக்க
தறிதரு மைங்குரோச சொரூபமாயமாவதென்று
நெறிதரு மின்பமுத்தி நினைத்தவா றருளவல்ல
தெறிதரு பாதகங்க ளனைத்தையு மொழிப்பதின்னும்.

(இ-ள்.) இந்திரியங்களையும் அவைகளால் விரும்பத்தக்க விஷயங்களையும் அடக்கினபெரியோரே புகுந்து சுகமாக வசிக்கத்தக்கது. அறிவுடையோரால் உணரத்தக்க பஞ்சக்குரோசவடிவமாய் விரும்பியுள்ளது. கருதியபடி வேதநெறியாகக்கிடைக்கின்ற மோட்சசுகத்தைக் கொடுக்கவல்லது. அளவுகடந்த தீவினைகள் எல்லாவற்றையும் போக்கத்தக்கது மேலும். எ-று. (௬௬)

ஆயிர வருடஞ்சொற்ற போதினு மடங்காச்சீர
தேய்தரு மெனக்குஞ்சொல்ல வெட்டுறுப புகழுதென்றும
பாய்தரு பவித்திரத்திற் பவித்திர மாயதம்ம
மாயிரு மறைகளாலே வகுத்திடப பட்டதின்னும்.

(இ-ள்.) ஆயிரவருடகாலம் சொன்னபோதிலும் அளவுபடாத சிறப்பினையுடையது, தெய்வத்தன்மையுள்ள எனக்கும் சொல்லுதற்கெட்டாத புகழை உடையது, பரவியபுகழுள்ள பரிசுத்தப்பொருள்களுக்குப் பரிசுத்தஞ்செய்வது பெருமைதங்கியவேதங்களாலேபிரித்துரைக்கப்பட்டமேன்மையுள்ளது மேலும்.

ஒள்ளிய பரமானந்த முறுவது கருதிவானோர்
தெள்ளிய முனிவரேனோர் சேர்தரப் பட்டதென்று
நள்ளிய வுமையாளோடு நம்பிரா னமரத்தக்க
தெள்ளிய குணமின்மாவோ டிலகுமா லுறுவதின்னும்.

(இ-ள்.) தேவர்களும், தெளிவுள்ள முனிவர்களும், மற்றையோர்களும் ஒளியையுடைய சிவானந்தத்தை யடையவிரும்பி வந்து தங்குதற்கிடமாயுள்ளது, நமது பெருமானாகிய விசுவநாதர் பிரியமுள்ள அன்னபூரணியாரோடு வீற்றிருக்கத்தக்கது உத்தமகுணமுள்ள இலக்குமியோடு விளக்கமமைந்த விஷ்ணுதேவர் அமர்ந்திருக்கத்தக்கது மேலும். எ-று. (௬அ)

சாந்தநற் குணத்தினோடு தரும்வீற் றிருப்பதன்றி
னுந்தவம வளர்க்கத்தக்க தவிமுத்த மெனும்பேர்பெற்ற
தேந்தழ குடையதீர்த்த சொரூபமா யிருப்பதென்றும்
போந்தசாத் திரம்வானோதஞ் சொரூபமாய்ப்பொலிவதின்னும்.

(இ-ள்.) பரமசாந்தமுள்ள நற்குணத்துடன் தருமதேவதை நிலைத்திருக்கத் தக்கது அன்போடு தவத்தைவளர்ந்தோங்கப் பண்ணுவது அவிமுத்தமென்னும் நாமகரணமுள்ளது அழகுதங்கிய தீர்த்தவடிவமானது என்னும் சாஸ்திர வடிவமாக விளங்குவது தேவர்கள் வடிவமாகவிளங்கத்தக்கது மேலும். எ-று. ()

முத்தியைப் பிரகாசஞ்செய் திருப்பது மொழியப்புக்காற்
சத்திமற் றெனக்குப்போதா தனைநிக ரருமிக்காசிப்
பத்தியின் வசிபபோரியாரும பவஞ்சவா சனையொழிந்தோர்
நித்திய விசுவநாத நின்மலன் சொரூப மானோர்.

(இ-ள்.) மோட்சவின்பத்தை விளக்கிக்கொண்டிருப்பது இன்னும் இக் காசியின் மகிமையைச் சொல்லப்புகுந்தால் எனக்குவல்லமை போதாது தனக்குத்தானே சமமாகிய இககாசித்தலத்தில் சிவநேசத்தோடு வாசஞ்செய்பவரெல்லோரும் உலகவாழ்க்கையை யொழிந்து நித்தியராகவும் மலரகிதராகவும் விளங்குகின்ற விசுவநாதரே யாவார்கள். எ-று. (௭௦)

தானத்தாற் றவத்தானும் தவாதயோ கத்தான்ஞான
மோனத்தாற் சித்தசுத்தி முளைத்தவர் வசிப்போரியாரு
மீனத்தா னிறைந்தோரியாரு மிவ்விடத் திருக்ககில்லா
ரேனத்தாற் காணவொண்ணா வின்பமே யடைவாரொன்றும்.

(இ-ள்.) இழிதொழிலால் நிறைவுற்றவர்களெல்லோரும் இக்காசிப்பதியில் வாசஞ்செய்யமாட்டார்கள். உத்தமதானத்தாலும், தவஞ்செய்தலினாலும், நாடோறும் தவறாதயோகசாதனத்தாலும், ஞானயோகத்தாலும், சித்தசுத்தியடைந்தவர்களியாவரும இத்தலத்தில் வசிப்பார்கள் அன்றியும் பன்றிவடிவங்கொண்ட விஷ்ணுவினால் அறியப்படாத சிவபெருமானுடைய இன்பவடிவத்தை எக்காலும் பெற்றிருப் பார்கள். எ-று. (௭௧)

பொலிதரு முத்திபூமி யென்பது புந்திசெய்யா
ரொலிதரு போகபூமி காசியென் றுள்ளங்கொண்டு
மலிதரு களவுகோறன் மதுககுடி முதலாம்பாவங்
கலிதரு குணத்திற்செய்வார் கைக்கொள்வார் நரகபூமி.

(இ-ள்.) விளக்கத்தைத் தருகின்ற முத்தியைக்கொடுக்கும் பூமி காசித்தலமென்று மதிக்காமல் போகத்தைத்தருகின்ற பூமியென்று மனதிலெண்ணி, திருடல், கொலைசெய்தல், மதுபானஞ் செய்தல் முதலியபாவங்களை வஞ்சனையுள்ளகுணததினாலே செய்பவர்கள் நரகபூமியைவிடாது கைக்கொள்வார்கள். ()

தெளிதரு சித்தத்துள்ளே திப்பிய விசுவநாத
னொளிதரு மயமாய்வைகு முலைவறத் தெளிந்தநீரிற்
களிதரு பிரதிவிம்பங் காணல்போற் கலங்கனீரில்
வெளிதரு மதுதோயாது மலினசித் தத்துமேவான.

(இ-ள்.) தெளிவுள்ள நீரில் களிப்னபத்தருகின்ற பிரதிபிம்பம் செவ்வையாகக்காணப்படுவதுபோல் திவ்வியகுணமுள்ள விசுவநாதர், நிர்ம்மலசித்தத்தினிடத்துப் பிரகாசவடிவமாக எழுந்தருளி யிருப்பர் கலங்கல் நீரில் பிரதிபிம்பம் செவ்வையாகக் காணுதவாறுபோல் களங்கமுள்ளமனதில் அவ்விசுவநாதர் வீற்றிருக்கமாட்டார். எ-று. (எ௩)

ஆரிய னருளினூற்ற னடியரைப் போற்றுநிற்குஞ்
சீரிய ரிடத்தேநாளுந் திகழுவன் விசுவநாத
னாரிய னருள்பெற்றூர யடியரைப பேணூராய
சீரிய ரல்லார்மாட்டுச் சிவனுறூ னனையனென்றும்.

(இ-ள்.) ஆசாரியரருளைப்பெற்றுத் தனதடியார்களைத்துதித்து வருகின்ற உத்தமரிடத்தே விசுவநாதர் தினந்தோறும் விளங்கிகொண்டிருப்பர் ஆசாரியர் அருளைப்பெற்றூலும் தம்மடியார்களை விரும்பாதவரராயுள்ள கொடியோரிடத்து அவ்விசுவநாதர் வீற்றிருக்கமாட்டார். எ-று. (எச)

குரவனை வழிபாடாற்றிக் கோதறு வேதமாதிப்
பாவுறு நூல்களெல்லாம் பண்புறப் பயின்றுநெஞ்சக்
கரவறு மொழுக்கம்பூண்டு கதிக்குமென் பாலுமூழ்கி
வரமலி தெய்வக்காசி வதிப்வ ரியாருமுத்தர்.

(இ-ள்.) ஆசாரியருக்கு வழிபாடுசெய்து களங்கமற்ற வேதமாதிகலைகளெல்லாவற்றையும் நற்குணத்தோடு பழகி மனத்தின்கண்ணுள்ள வஞ்சனையைப்போக்கும் நல்லொழுக்க வழிநின்று பெருகிவருகின்ற நதிவடிவமாகிய என்னிடத்து முழுகி வரத்தை நிறைவாகத்தருகின்ற தெய்வத்தன்மையுள்ள காசித்தலத்தில் வசிப்பவர்கள் எல்லோரும் முத்தியடைவார்கள். எ-று. (எ௫)

கற்பனை கடந்தபெம்மான காசிமான் மியமென்றோது
மற்புத மனைத்துஞ்சொல்ல வாருமோ வெம்மான்மன்னு
சிற்பர சொரூபமாமித் திருநகர் வாசஞ்செய்து
தற்பர வின்பமின்னே சாரென்று மறைந்தாள்கங்கை.

(இ-ள்.) மாயாகற்பனைகளைக் கடந்தசிவபிரான் வீற்றிருக்கின்ற காசித்தலமகிமையிற் கூறிய இன்பசரிதங்க ளெல்லாவற்றையும் என்றூல் சொல்லக்கூடுமோ அரசனே கேட்பாயாக மேலான ஞானவடிவமாயுள்ள சிறந்த இத்தலத்தில் வாசஞ்செயது சிவாநநதானுபவததை இக்காலத்திலடைவாயென்று கங்காதேவிகட்டளையிட்டுமறைந்தனள். எ-று. (எசா)

வாநதி யுரைத்தவாறே மன்னவன் வசித்துப்போற்றிய
பாவுறு மனைவியோடும் பகர்பெரு முத்திபெற்றூ
னூரன்மிகு மதனூற்காசி யொன்றுமே சிறந்ததாகு
மரவணி சடையாற்கன்பீ ரறிமினென் றனன்வியாதன்.

(இ-ள்.) கங்காதேவி சொன்னபிரகாரம் புண்ணியகீர்த்தியென்னும் பாண்டியன் காசியில் வசித்து விசுவநாதனைத் துதித்துப் புகழ்பெற்ற மனைவியுடனே பேரின்பத்தை யடைந்தனன். பிரபல ஞானத்தைக்கொடுத்தலால் காசிப்பதி ஒன்றுமே மேலானதாகும். சர்ப்பத்தை ஆபரணமாகத்தரித்த சடையையுடைய சிவபிரானுக்கு அன்பர்களே அக்காசிமகிமையை அறிவீர்களாக இவ்வாறே எனதாசிரியராகிய வியாதமுனிவர் கூறினர். எ-று. (௭௭)

எண்ணரும் கோடிகால மெத்தனை பேர்சொன்னாலுங்
கண்ணரும் காசிமேன்மை கடையுறப் போவதுண்டோ
பண்ணருந் தவங்கள்செய்து பரம்பரன் பாதம்பெற்று
நண்ணரு மின்பமுற்ற நைமிச வனத்தீரென்றான்.

(இ-ள்.) அளவிறந்தகோடிகாலம் அளவில்லாதவர்கள் எடுத்துரைத்தாலும் சிந்திப்பதற்கரிய காசித்தல மகிமைக்கு அளவு சொல்லக்கூடுமோ கூடாது செய்தற்கரிய தவங்களைச் செய்து மேலாகிய சிவபெருமான்திருவடிகளை யடைந்து கிட்டுதற்கரிய பேரின்பானுபவத்தைப்பெற்றநைமிசவாசமுனிவர்களே யென்று சூதமகாமுனிவர் கூறினர். எ-று. (௭௮)

## புண்ணியகீர்த்திமுத்திபெற்ற வத்தியாயம் முற்றியது.

ஆக அத்தியாயம். உக-க்கு. திருவிருத்தம். ௭௫௩.

திருச்சிற்றம்பலம்.



திருச்சிற்றம்பலம்.

# இருபத்திரண்டாவது பாதகக்கழுவா யுரைத்தவத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

புண்ணிய மலிகாசிப பொருவரு மேன்மையெலா
முண்ணிய விருசெவிவிட் டொருமன முடையாராய்க்
கண்ணிய முயறருவார் கச்சமில் பலபவத்தும்
பண்ணிய பாவமெலாம் பாற்றுபு கதியடைவார்.

(இ-ள்.) புண்ணியம்நிறைந்த காசித்தலத்தின் ஒப்பற்ற மகிமைகள்யாவும் இருசெவியாரநிறைத்து ஏகமனதுள்ளவராய் அத்தலத்தைச்சதாகாலமுஞ் சிந்திப் பாராயின் அளவில்லாத பலபிறவியிலுஞ் செய்தபாவங்க ளெல்லாவற்றையும் ஒழித்து முத்தியடைவார்கள். எ-று. (க)

திரவிய நசைமேவிச் செம்பொரு ணசைநீத்துப்
பரவிய பாவமெலாம் பண்ணுபு திரிதருவார்
விரவிய கொடுநிரய மேவுவர் திரவியமு
முரவிய விருகூறு யுற்றிரு பயன்றருமே.

(இ-ள்.) பொய்ப்பொருளாசைகொண்டு உண்மைப்பொருளாகிய முத்திவிருப்பத்தைக்கைவிட்டு விரிந்தபாவங்கள் முழுமையுஞ்செய்து உழலுபவர்கள் கொடுநரகங்க ளெல்லாவற்றையுமடைவார்கள் அப்பொய்ப்பொருளும் வலிமையுற்ற இரண்டுபாகமாகப்பிரிந்து இரண்டு பிரயோசனத்தைக் கொடுக்கும். எ-று. (உ)

பெண்டுபிள் ளைகட்கென்றே பேணுபு தேடுபொருண்
மண்டுபல் பாதகமும் வருவித்து நரகுய்க்கு
மண்டுபல் லறநிமித்த மார்வத்திற் றேடுபொருண்
மிண்டுபல் பந்தமெலாம் வீட்டுபு கதியுய்க்கும்.

(இ-ள்.) மனைவிமக்களுக்கு வேண்டுமென்றே விரும்பிச்சம்பாதிக்கின்ற பொருள்நிறைவாயுள்ள பலபாதகங்களையும் வளர்த்துப் பின்னர் நரகத்திற்செலுத்தும். நெருங்கிய பலவாயுள்ள தருமநிமித்தம் அன்போடு சம்பாதிக்கின்ற பொருளானது வலியபலபந்தங்களையொழித்து முத்தியைச்சேர்ப்பிக்கும். எ-று.

கண்ணிய காமியநிட் காமியமென் றிரண்டாம்
புண்ணிய மிதன்முன்னாப புகன்றது பந்தமெலா
நண்ணிய விளைவிக்கும் பின்னது நாடுங்காற்
றண்ணிய பெருமுத்தி சார்விக்குந் தவத்தோரே.

(இ-ள்.) தவத்தையுடைய முனிவர்களே காமியபுண்ணியமென்றும், நிஷ்க்காமிய புண்ணியமென்றும், புண்ணியம் இருவகையாகும். இவைகளுள் காமியபுண்ணியம் எல்லாப்பந்தங்களையும் விருத்திசெய்யும். குறிக்குமிடத்து நிஷ்க்காமிய புண்ணியம் பரமசாந்தமுள்ள முத்தியைச்சேர்ப்பிக்கும். எ-று. (௪)

பந்தமென் றுரைபபதுதான் பையப்பய நரகமெலாம்
பந்தமுற் றிடச்செயயும் பரசிவ னருள்போற்றிப்
பந்தமற் றிருப்பவரோ பரகதி யின்புறுவார்
பந்தமற் றுயாமேன்மை பற்றிய முனிவீர்காள்.

(இ-ள்.) பாசங்கள்யாவும் ஒழிந்து மேலான இன்பத்தைத் தழுவியிருக்கின்ற சவுனகாதிமுநிவர்களே பந்தமென்றுசொல்லத்தக்கது உபாயமாக எல்லாநரகங்களிலும் புகுவித்து விட்டுவிலகாமற் செய்விக்கும் பரமசிவனுடைய திருவருளைத் துதித்து பாசத்தை யொழித்திருப்பவர்களே மேலாகிய முத்தியின்பத்தைப்பெறுவார்கள். எ-று. (௫)

நரகமென் றுரைப்பதுதா னினெவ் வளவைத்தென்
றுரவுற வாராயிற் சொற்றுமற் றொருவன்செ
யிரவுறு பாதகங்க ளெவ்வள வவ்வளவாந்
திரமுறு பொருணடிச் சிந்தையிற் செறித்தீரே.

(இ-ள்.) அசைவற்ற மெய்ப்பொருளைத் தியானயோகத்தாற் குறித்து மனத்தில் வைத்திருக்கும் முநிவர்களே நரகமென்று சொல்லத்தக்கது ஆராய்ந்து பார்க்குங்கால் எவ்வளவு அளவினையுடையதென்றாற் சொல்லுகிறோம் ஒருவன் இராக்காலத்திற் செய்கின்ற பாதகம் எவ்வளவோ அவ்வளவென்றே (மதிப்பீர்களாக.) எ-று. (௬)

வளிதட வினும்பாடு மாதிநல் யாழ்முனிவன்
றெளிதர முன்னொருநாட் சேவடி பணிந்தேத்து
மொளிகெழு பாரவேந்த னொருவனுக் கீதுரைத்தான்
வெளிதர யாமின்று விரித்துரைப் பாமதனை.

(இ-ள்.) காற்று நரம்பின்மேற்படினும் இசைபாடுகின்ற நல்லமகதியாழையுடைய நாரதமுநிவர் முன்னொருகாலத்துத் தம்முடைய பாதங்களில் வணங்கி தெளிவினைப் பெறும்பொருட்டுத்துதித்த புகழுள்ள ஓரரசனுக்கு இதைக் கூறினர். யாம் இன்று அதைவெளியாக விரித்துக்கூறுகின்றோம் (கேட்பீர்களாக.) எ-று. (௭)

பகைவலி யறமாய்க்கும் பாய்சினப் பகடூர்தி
நகைகெழு நகரத்து நடுச்சபை யொன்றுளதாற்
றகைகெழு மற்றதன்கட் டங்குவர் பல்சான்றோர்
திசைகெழு பல்லுயிருஞ் செய்தவை தெரிந்துரைப்போர்.

(இ-ள்.) பகைவருடைய வல்லமையை முழுதுங்கெடுப்பதும் கோபத்தோடு வேகமாகச் செல்லுவதுமாகிய எருமைக்கடாவாகனமுள்ள இயமனது விளக்கமான பட்டண நடுவில் ஒருசபையிருக்கின்றது. பெருமையுள்ள அச்சபையினிடத்துப் பலபெரியோர்கள் வாசஞ்செய்வார்கள் பலதிக்கிலுமுள்ள அனேகசீவர்களுஞ் செய்தபுண்ணிய பாவங்களைத்தெளிந்துரைக்கவல்லவர்கள். ()

மன்னிய புகழ்க்காசி மான்மிய முதலாகப்
பன்னிய பற்பலவும் பகுத்தினி தாயுந்திடுவோர்
மின்னிய நல்லொழுக்கே மேவுருக் கொண்டனையார்
துன்னிய பாதகத்தின் றெருகழு வாய்விதிப்போர்.

(இ-ள்.) நிலைபெற்ற கீர்த்தியுள்ள காசித்தலமகிமை முதலாகச்சொல்லப்படுகின்ற பலநூல்களையும் இனிமையாகப்பகுத்து ஆராய்ந்தறிபவர்கள் விளக்கமுற்ற சன்மார்க்கமே திருவுருக்கொண்டது போன்றுள்ளவர் நெருங்கிய பாதகங்களுக்குத்தக்க பிராயச்சித்தத்தை விதிப்பவர்கள். எ-று. (௯)

காசியை நினையாமற் கங்கையின் முழுகாமற்
பேசிய விசுவேசன் பிறங்கருள் பேணாமன்
மாசியல் பாதகமு மன்னிய புரிவார்க்குப்
பேசிய பெருநகழுவாய் பிறவகுப் போரவரே.

(இ-ள்.) காசிப்பதியைச் சிந்தியாமலும் கங்காநதியில் ஸ்நானஞ்செய்யாமலும், வேதங்கள்கூறிய விசுவநாதரது விளக்கமுற்ற திருவருளை விரும்பாமலும், களங்கமுள்ளபாதகங்களை நிலையாகச் செய்பவர்களுக்குச் சொல்லப்படுகின்ற பிரபலமான பிராயச்சித்தத்தையும் மற்றையதண்டனைகளையும் விதிப்பவர்கள் அச்சபைநடுவுள்ள பெரியோர்களே யாவர். எ-று. (௧௦)

கடுகுபு விரைசெல்லுங் காய்சினப் பகடூருங்
கொடுவலி மறமண்மார்பக் கொற்றவ னனையார்சொற்
றிடுவது செவியேற்றே யியற்றுவன் றண்டமெனி
னெடுகிய வுணர்வன்னோர் நிறையளப பரிதெவர்க்கும்.

(இ-ள்.) அதிவேகமாக நடப்பதும் பெருங்கோபமுள்ளதுமாகிய எருமைகடாவாகனத்தை நடத்துபவனும், அதிகபராக்கிரமமும் வலிமையுமுள்ள மார்பினையுடைய அரசனுமாகிய இயமன், அச்சபைநடுவுள்ள பெரியோர்கள் சொல்லும் வார்த்தையைக்கேட்டு பாவிகளுக்குத் தண்டனைசெய்வானானல் பேரறிவுள்ள அப்பெரியோர்கள் மகிமையையாவரால் அளவிடக்கூடும். எ-று. (௧௧)

நலமலி யணையசபை நாப்பணோ ரரியணைமேற்
கலகல வொலிசெய்யுங் கண்டையம் பகட்டூர்தி
வலமிகு பெருஞ்சிறப்பின் வைகுபு பாதகர்கட்
கலகறு துயாசெயயுந் தண்டமற் றறைசெய்வான்.

(இ-ள்,) கலகலவென்று ஒலிசெய்கின்ற மணிகட்டிய எருமைக்கடாவை ஏறிநடாத்தி வெற்றிமிகுந்த பெருஞ்சிறப்பை யடைந்திருக்கின்ற அவ்வியமன் உண்மை நிறைந்த சபைமத்தியிலுள்ள ஒரு சிம்மாசனத்தின்மீது வீற்றிருந்து, பாவஞ்செய்தவர்களுக்கு அளவில்லாத துயரங்களைக்கொடுக்கின்ற தண்டனையின் விபரங்களைச் சொல்லத்தொடங்கினன். எ-று. (கஉ)

இனையவரை யிருப்பாலை யிடைக்கொடுத் துடைத்திடுமி
னினையவரை வன்செக்கி னிட்டுறத் திரித்திடுமி
னினையவரை முசலங்கொண் டிருந்தலை யுடைத்திடுமி
னினையவரை நாந்தகங்கொண் டுடற்றசை யீர்ந்திடுமின்.

(இ-ள்.) தூதர்களே இப்பாவிகளை இருப்பாலையிற்கொடுத்து உடம்பை நுறுங்கச்செய்வீர்கள். இப்பாவிகளை வலிய செக்கிற்போட்டு செவ்வையாகச்சுழற்றி அரைத்து விடுவீர்கள். இந்தப்பாவிகளை இருப்புலக்கைகொண்டு தலைசிதற உடைத்துவிடுங்கள். இந்தப்பாவிகளை வாள்கொண்டு தேகத்திலுள்ள மாமிசங்களை யரிந்து விடுவீர்கள். எ-று. (கந)

இன்னரை யீந்திலையி னிலகிய கருவிகொடு
நன்னர்கொள் கண்சூன்று நகுபல துயர்செய்மி
னின்னரை வேம்பிலையி னியல்புறு வாள்கொண்டு
நன்னர்கொ டசைமேனி நள்ளுற வறைசெய்மின்.

(இ-ள்.) இப்பாவிகளைப் பேரீச்சன் இலையையொத்து விளங்கும் ஆயுதத்தைக்கொண்டு உத்தமாங்கமாகிய கண்களைத்தோண்டிப் பலவிதமான துயரதனைச் செய்யுங்கள் இந்தப்பாவிகளை வேப்பிலைபோன்ற அச்சவடிவாகிய வாள்களால் உறுதியுள்ள மாமிசத்தைக்கடந்து, எலும்பிலழுந்தும்படி அறைவீர்களாக. எ-று. (கச)

இத்தகுபாவியரைத் தூக்கியமுட்கிரும்பின்
கொத்துறமிடற்றழுத்திக் கொடுந்தழல் கீழ்மூட்டிப்
பொத்தியபேரிழுதின் புடவைமெய்மேற்சூழ்ந்து
சுத்தியவத்தழல்வாய்த் * துணைந்துணுமாபுரிமின்.

(இ-ள்.) இந்தப்பாவிகளை, இரும்பினால் வளைவாகச்செய்த கொக்கிகளைக்கழுத்திற்குத்தி, மேலேதூக்கிக்கட்டி, அவர்கள்காலின்கீழே பிரபலமான நெருப்பைமூட்டி, இவர்கள்தேகத்தில் நெய்யினால்நனைத்த வஸ்த்திரங்களை நெருங்கச்சுற்றி, கீழுள்ளநெருப்பு அவ்வஸ்த்திரங்களைப்பற்றி விரைவில் தகிக்கும் வகைசெய்வீர்கள். எ-று. (கரு)

* துணைவு = விரைவு

கனலெழுநெடுநேரங் காய்ச்சியசெப்புருவி
லனகமிலிவர்தம்மைத் தழுவிட்டவாற்றிடுமின்
மனநெகவன்கறையின் மற்றிவர் தமையிட்டுக்
கனமிகுமிருப்புலக்கை கைக்கொடுதுவைத்திடுமின்.

(இ-ள்.) செப்புச்சிலைகளை நெருப்புப்பொறி பறக்கும்படி நெடுநேரங் காய்ச்சியெடுத்த அவ்வடிவங்களில் இந்தப்பாவிகளைச் சேர்த்துக்கட்டுவீர்கள் இந்தப்பாவிகளை இருப்புரலிற்போட்டு மனம்நெடுங்க அதிபாரமுள்ள இருப்புலக்கைகளைக் கையிற்கொண்டு துவைப்பீர்களாக. எ-று. (கசு)

(ப-ம்.) பரதாரகமனஞ்செய்தபாவிகளைக், காலதூதர் யாதனுசரீரத்திற் புகுத்தி நரகபூமிக்குக் கொண்டுபோய் அவர்கள் தழுவியமாதரைப்போல செம்பினாற்செய்து சிவக்கக்காய்ச்சிய வடிவங்களிற் சேர்த்துப் பயந்து விலகிப்போகாதபடி சூல்த்தால் முதுகிற்குத்தி அழுத்துவார்களென்பது வேதசம்மதமாதலின் இவர்தம்மைத்தழுவிட்ட வாற்றிடுமின். என்றுகூறினர்.

பூரியரிவர்தம்மைப் பொள்ளெனக்கொடுபோகிக்
கூரியவாள்கொண்டு கொழுவிடக்கிருண்முதற்
சோரியதறவீர்ந்து துண்ணெனநாய்நரிக
ளாரியவிடுத்திடுமி னல்லல்கள்பலசெய்மின்.

(இ-ள்.) மிக்க இழிவுள்ள இப்பாவிகளை விரைவாகக் கொண்டுபோய் கூர்ந்தவாளினால் செழித்ததசையும் ஈரல் முதலியவைகளும் உதிரமும் கீழ்விழுமாறு அறுத்து நாய் நரிகள் உண்ணும்படிசெய்வீர்களாக. அதுவன்றியும் இவர்கள் பல்வாயுள்ள துயரங்களையும் அனுபவிக்கச் செய்வீர்களாக. எ-று. (கஎ)

(ப-ம்.) பாவஞ்செய்பவர்களுக்குள் உபபாதகம், அதிபாதகம், மஹாபாதகங்களைச் செய்பவர்கள் மிகவிழிந்தவராதலின் பூரியரென்றும், வாள்கொண்டறுக்குந்தோறும் துயரப்பட்டு மற்றுமுள்ளதுயரங்களை யனுபவிப்பதற்கு அறுத்தகுறைகள் கூடிக்கொள்ளுந் தரமுடையது யாதனுதேகமாதலின் அல்லல்கள் பலசெய்மின் என்றுங்கூறினர்.

கிருமிகள்பலசெற்ற கிடங்கிடையிவர்தம்மைப்
பொருமுறவீழ்த்திடுமின் புன்மலமயமாய
கருகிருட்குழிவீழக் கடிதிவர்தமைத்தளுமி
னுருமுவெங்கான்மழைசா ருழையிவர்தமைவிடுமின்.

(இ-ள்.) இப்பாவிகளைப் பலவகையான புழுக்கள் இறந்துகிடக்கின்ற பள்ளத்தில் துன்பப்படும்படி தள்ளுவீர்கள். இப்பாவிகளைப் பெருந்துர்க்கந்தமயமாகிய மலங்கள் நிறைந்ததும் பேராந்தகாரத்தை யுடையதுமாகிய குழிகளில் விரைவாகத்தள்ளுவீர்கள். இப்பாவிகளைப்பெருங்காற்றும், பெருமழையும், பேரிடியும், அதிகரிக்கின்ற இருண்டவிடத்தில் விடுவீர்கள். எ-று. (கஅ)

துளையிடுநெட்டூசி துண்ணெனக் கரங்கொண்டு
விளைதுயர்ஙனியாக விரைந்திவர் செவிதுளைமின்
றளைபடு மிவாதந்தந் தடிகொடுதகர்த்திடுமின்
கிளைபடுதழற்குண்டத் திவர்கெழு முறச்செய்மின்.

(இ-ள்.) இந்தப்பாவிகளை, துவாரஞ்செய்கின்ற திருகூசியைக் கையிற் கொண்டு பெருந்துயரம் மேன்மேல்வளர, காதுகளில் விரைவாகத் துளையிடுங்கள். இந்தப்பாவிகளை தடியைக்கைக்கொண்டு வரிசையாயிருக்கின்ற பற்களை யுடைத்துவிடுங்கள். இந்தப்பாவிகளை, சுவாலித்தெரிகின்ற அக்கினிகுண்டத்தில் தள்ளிவிடுவீர்கள். எ-று. (௧௯)

(ப-ம்.) சிவபிரானையும், மெய்யடியாரையும், நிந்தைசெய்யும் அதிபாதகர் வார்த்தைகளை இன்பமாகக்கேட்டுச்சகிக்கின்றவர்களுடைய காதுகளைக் காலதூதர்கள் துளைசெய்வாரென்பது வேதசம்மதமாதலின், இவர்செவிதுளைமினென்று கூறினார்.

இன்னவைமூக்கரிமி னின்னவைநாக்கீர்மி
னின்னவைப்பற்றகர்மி னின்னவைக்கண்சூன்மி
னின்னவையுடல்போழ்மி னின்னவைக்குறியறுமி
னின்னவையிழுதுங்நிறை யிடையிட்டுவருத்திடுமின்.

(இ-ள்.) இந்தப்பாவிகளை, மூக்கறுப்பீர்கள். இந்தப்பாவிகளை, நாக்கைப் பிளப்பீர்கள். இந்தப்பாவிகளை பல்லைப்பிடுங்குவீர்கள். இந்தப்பாவிகளை, கண்களைத்தோண்டிவிடுவீர்கள். இந்தப்பாவிகளை, வாளினால் உடம்பைப் பிளந்துவிடுவீர்கள். இந்தப்பாவிகளை, ஆண்குறியை அறுத்துவிடுவீர்கள். இந்தப்பாவிகளை, (கொதிக்கின்ற) நெய்க்கொப்பரையிற்போட்டு வருத்துவீர்கள். எ-று.(உ௦)

(வேறு.)

என்றுமாபாவத்தார்க்கு மியலதிபாவத்தார்க்குங்
கன்றுபபாவத்தார்க்குங் கருதுறுதண்டமெல்லா
நன்றுறுமவையார்க்கேற்பத தக்கவாநவிற்றிநீலக்
குன்றுறழ்மேனிச்செங்கட் கூற்றுவன்கவலையுற்றான்.

(இ-ள்.) இவ்வாறாக மகாபாதகஞ் செய்தவர்களுக்கும், அதிபாதகஞ் செய்தவர்களுக்கும், உபபாதகஞ் செய்தவர்களுக்கும், சிந்திக்கத்தக்க தண்டனைகளெல்லாவற்றையும், நியாயசபையிலுள்ள பெரியோர்கள் சம்மதிக்கத்தக்க விதமாகச்சொல்லி நீலமலைபோன்ற பெரியசரீரத்தையும் சிவந்தகண்களையுமுடைய இயமன் கவலைகொண்டனன். எ-று. (உ௧)

கூற்றுவன்கவலையுற்ற குறிப்பவன்முகத்தாற்றேர்ந்து
மாற்றருநீதிவாய்ந்த மாண்புடையவையாரியாரும்
போற்றரும்வருத்தந்தாமும் பூண்டுமற்றவனைநோக்கிச்
சாற்றருநகவலையுற்ற காரணஞ்சாற்றுகென்றார்.

(இ-ள்.) தண்டனைத்தலைவனுகிய அவ்வியமன் உள்ளத்திற்கொண்ட கவலையை முகக்குறிப்பினுலுணர்ந்து பேதியாதநியாயமார்க்கத்தில் அசைவற்றுநிற்கும் பெரியோர்கள்யாவரும் சகிக்கப்படாத துயரத்தைத் தாமுங்கொண்டு அவ்வியமன் (முகத்தைப்) பார்த்து அடங்காக்கிலேசத்தை மனதிற்கொண்ட காரணம்யாது அதை எங்களுக்குத் தெரிவிக்கவேண்டுமென்றுர்கள். எ-று. (உஉ)

அவையிடநீதிவாய்ந்த வறிஞர்காளீதுகேண்மி
னவையறுசம்புதீவு நலத்ததாலதனிலுள்ளுஞ்
செவையுடைப்பரதகண்டஞ் சிறந்ததாலக்கண்டத்துஞ்
சிவையருள்கொழிக்குமாரி யவருத்தஞ்சிறந்ததாமால்.

(இ-ள்.) தருமசபையிலுள்ள நீதியமைந்தபெரியோர்களே இதைக்கேட்பீர்களாக (எழுதீவுகளுக்குள்) குற்றமற்ற சம்புத்தீவானது மேலானதாகும். அச்சம்புத்தீவிலுள்ள ஒன்பதுகண்டத்துள், மேலானபரதகண்டமே சிறந்ததாகும். அப்பரதகண்டத்துள், பராசத்தி யருள்பெருகுதற்கிடமாகிய ஆரியவர்த்தமே மேன்மையுடையதாகும். எ-று. (உ௩)

எழுதீபமாவன் நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு இவ்வெழுவகைப் பொருளும் அவ்வத்தீவின் மிக்கனவாகையால், இவற்றுற் பெயர்பெற்றன. கண்டம் ஒன்பதாவன கீழ்விதேகம், மேல்விதேகம், வடவிதேகம், தென்விதேகம், வடவிரேபதம், தென்னிரேபதம், வடபரதம், தென்பரதம், மத்திமகண்டம் இவையே நவகண்டமாம்.

அன்னபுண்ணியத்ததாய வாரியவருத்தந்தன்னுட்
பன்னருந்தலங்கள்பல்ல பரவுதீர்த்தங்கள்பல்ல
வென்னரும்புகழாநிற்கு மிலிங்கமூர்த்திகளும்பல்ல
நன்னர்கொளனையபூமி நலத்தையாரளக்கற்பாலார்.

(இ-ள்.) அத்தன்மையான புண்ணியங்களையுடைய ஆரியவர்த்தமென்னும் பூமியில் சொல்லுதற்கரிய மகிமையுள்ள பலதலங்களுள்ளன. புகழ்பெற்ற பல தீர்த்தங்களுள்ளன. யாவருந் துதித்தற்குரிய சிவலிங்கமூர்த்தமும் பலவுள்ளன. பல நன்மைகளையுந் தன்னிடத்துடைய அந்த ஆரியாவர்த்தத்தின் மகிமையை யாவரளவிட்டுரைக்கத்தக்கவர்கள். எ-று. (உச.)

இமயமலைக்கும் விந்தமலைக்கும் நடுவேயுள்ள பூமிக்கு ஆரியாவர்த்தமென்று பெயர்.

நிகழ்கருமாதிகாரி நிரம்புஞானதிகாரி
புகழ்மிகுமனையபூமி யுடையதாய்ப்பொலிவதோராந்து
மகழ்மலத்தினருமந்தப் பூமியையவாவல்கண்டு
மிகழ்விலப்புவியின்முத்திக் கேதுவாஞ்சன்மமாய.

(இ-ள்.) பெரும்புகழையுடைய ஆரியவர்த்தமென்னும் அந்தப் பூமியில் விளக்கமுற்ற சற்கர்மமாதிகாரிகளும் பூரணஞானதிகாரிகளும் சிறந்தோங்கிவரு

வதை யறிந்திருந்தும் முத்தான்மாக்களாகிய பெரியோரும் அவ்வாரியவர்த்தத்தை விரும்புதலை நோக்கியும் புகழுள்ள அந்தப் பூமியில் முத்தியின்பத்தைப் பெறத்தக்க பிறவியாகிய. எ-று. (௨௫)

மாணிடவுருவம்பெற்று மிற்றரும்விரத்திமேவி
யாணிடத்தைந்துமாடு மரனடியர்ச்சித்தேத்தி
யூணிடர்க்கடலினீங்கா ருண்மையென்பதுசற்றோரார்
வாணிடத்தேனும்வைகும் வகையொருவினையுஞ்செய்யார்.

(இ-ள்.) மாணிடதேகத்தை யடைந்தும் (விடயபோகத்தையொழித்து) நீங்குதற்கரிய விரக்தியடைந்து பசுவினிடத்துண்டாகிய பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பஞ்சகௌவியங்களையும் அபிஷேகித்துக் கொள்ளுகிற மஹாதேவர் திருவடிகளில் பூசைசெய்து துதிபுரிந்து தசைப்பொதியைத்தாங்கித் துயரத்தில் முழுகுகின்ற பிறவிக்கடலைக் கடக்கமாட்டார்கள். இது உண்மை மார்க்கமென்று சற்றேனும் உணரார்கள். இந்திரலோகத்திலானுலும் வசிக்கத்தக்க ஒருபுண்ணியத்தையுஞ் செய்யார்கள். எ-று. (௨௬.)

பரகதிசேரும்வண்ணம் பவஞ்சத்துவெறுப்புமேவும்
வரமிகுபெரியோர்தம்பாற் றூடணைவகுத்துச்சொல்வார்
புரவுசெயெதுசெய்யாத போதினுங்காசிமேவி
விரவுதண்கங்கையாடி விச்சுவநாதற்போற்றார்.

(இ-ள்.) மேலாகிய மோக்ஷத்தை அடையுமாறு உத்தேசித்துப் பிரபஞ்ச வாழ்க்கையில் வெறுப்படைந்து பெருந்தவஞ்செய்யுஞ் சாதுக்கள்மேல் பலவித தூஷணைகளையும் விரிவாகச்சொல்வார்கள். செய்தவர்களைப் பாதுகாக்கின்ற புண்ணியமெதைச் செய்யாதிருந்தாலுமிருக்க காசித்தலத்தையடைந்து (மகிமை) தங்கிய குளிர்ந்த கங்காதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து விசுவநாதனைத் துதியார்கள். எ-று. (௨௭)

பொருண்முதல்விடையப்பற்றே பூண்டுசற்கருமநீத்துத்
தெருண்மிகுவேதநிந்தை சிவாகமநிந்தைமற்றை
யருண்மிகுபெருமானிந்தை யனைத்தையுமவாவிச்செய்தே
யிருண்மிகுதமக்குத்தாமே துய்ரெலாமீட்டிக்கொள்வார்.

(இ-ள்.) திரவியமுதலாயுள்ள விடையசம்பந்தத்தை மேற்கொண்டு புண்ணியத்தொழில்களைநீக்கி தெளிவுமிகுந்த வேதநிந்தையையும் சிவாகமநிந்தையையும் பெருங்கருணையுள்ள சிவநிந்தைமுதலிய தேவநிந்தனையும் மற்றுள்ள பாவங்களையும் விருப்புடன் செய்து மிகுந்த அறியாமையால் துயரங்களைத் தாங்களே சம்பாதித்துக்கொள்வார்கள். எ-று. (௨அ)

சிவபுராணங்கள்கேளார் சிவனமர்தலங்கள்சேரார்
சிவனாலுந்தீர்த்தமூழ்கார் சிவலிங்கசேவைசெய்யார்

சிவனடியாரைக்கண்டாற் சிவனென்றேசென்றுபோற்றார்
சிவசிவவென்னாதீராத் தீங்கெலாஞ்செறியநின்றார்.

(இ-ள்.) சிவபுராணபாராயணங்களைக் காதிறற்கேளார்கள். சிவபிரான்வீற்றிருக்கின்ற ஸ்தலங்களை யடையார்கள். மேலாகிய சிவதீர்த்தங்களில் ஸ்நாநஞ்செய்யார்கள். சிவலிங்கதரிசனம் பண்ணார்கள். சிவநேயர்களைப்பார்த்தால் சிவபெருமானென்றே தியானித்துத்துதியார்கள். சிவசிவவென்று சொல்லார்கள். பிராயச்சித்தங்களாலே ஒழிக்கப்படாத பாவங்களெல்லாவற்றையுஞ்செய்வார்கள். எ-று.

வருபவத்துயரந்தேர்ந்தோர் மற்றதுமாற்றவேண்டி
பெருகுநிட்காமியத்தாற் பேரின்பமடையாநிற்பர்
திருகின்மற்றதற்குமாறாங் காமியஞ்செய்யாநிற்போ
ரொருவரும்பந்தமெல்லா முற்றருந்துயரத்தாழ்வார்.

(இ-ள்.) அடுத்தடுத்துவரும் பிறவிகளைத் துன்பமென்றறிந்த பக்குவிகள் அப்பிறவியை யொழிக்கவிரும்பி அதிகரித்த நிஷ்காமிய தவங்களைச்செய்து பேரின்பாநுபவத்தைப் பெறுவார்கள். மாறுபடாத அப்புண்ணியத்துக்கு விரோதமாயுள்ள காமியகர்ம்மங்களைச செய்பவர்கள் நீங்குதற்கரிய எல்லாப்பந்தங்களையுமடைந்து அருந்துயரமாகிய (கடலில்) மூழ்குவார்கள். எ-று. (௬௦)

புண்ணியம்புரிந்தார்க்கெல்லாம புகழ்மிகுசாந்தனாகி
யண்ணியநயமேன்மேலு மணைதரப்பொலியாநிற்போ
மெண்ணியபாவமெல்லா மியற்றிடுங்கொடியார்க்கென்றுங்
கண்ணியகொடியரூபங் காட்டியேயச்சஞ்செய்வோம்.

(இ-ள்.) (நியாயசபையிலுள்ள பெரியோர்களே) நல்வினைசெய்பவர்கள் யாவர்க்கும் மிகுபுகழுள்ள சாந்தரூபத்தைபபெற்று அவர்களுக்கு வேண்டிய சகாயங்கள் மேலுமேலு முண்டாகுமாறு இடைவிடாது செய்துவருவேன். எண்ணியவாறு பாவங்கள்யாவையும் செய்துவருந் துஷ்டடர்களுக்கு எக்காலமுஞ் சிந்திக்கத்தக்க குரூரவடிவத்தைக் காட்டிபயப்படுத்துவேன். எ-று. (௬௧)

எண்ணருந்தருமவாஞ்சை யெய்தினோசாந்தமேவிக்
கண்ணருஞ்சுத்திபெற்றுக் கதிக்கரசாகிவாழ்வார்
பண்ணரும்பொருளில்வாஞ்சைப் பட்டவரளவாப்பாவ
நண்ணருங்குணமாக்கொண்டு நரகெலாந்துளையாநிற்பார்.

(இ-ள்.) அளவில்லாத தருமங்களைச் செய்யவேண்டுமென்கிற இச்சையுடையோர்கள், சாந்தசம்பத்தையடைநது நினைத்தற்கரிய சித்தசுத்தியுடையராய (பின்னர்ஞானசாதனஞ்செய்து) மோட்சபூமிககு அரசராகி வாழ்வார்கள். துயரங்களை யுண்டுபண்ணுகிற பொய்ப்பொருளில் இச்சைவைத்தவர்கள் அளவுபடாத பெரும்பாவங்களைச்செய்வதே நன்னடையாகக்கொண்டு பலவாயுள்ள நரகங்களையும் அநுபவிப்பார்கள், எ-று. (௬௨)

ஒருமனம்விடயமபற்றி லுரைத்தவவ்விடயமேயாய்த்
திருமருநரகமெல்லாஞ் செறிபயனுடையார்க்காக்கு
மருண்மலிபரமான்மாவைப் பற்றின்மற்றதுவேயாகிக்
கருமருவாதவின்பக் கதியிடைக்கடுகவுய்க்கும்.

(இ-ள்.) நெஞ்சம் ஒருவிஷயத்தைவிரும்பி அழுந்திநல் சொல்லுகின்ற அவ்விடயமேவடிவமாகி (அதனாற்பாவங்களைச்செய்து) சுழலுதற்கிடமாயுள்ள நரகங்களெல்லாவற்றிலுஞ்சேர்ந்து பெருந்துயரத்தை யனுபவிப்பார்கள். திருவருள்நிறைந்த பரப்பிரமத்தை மனம்பற்றுமானால் பிரமவடிவாகி பிறப்பில்லாத இன்பமார்க்கமாகிய முத்தியில் விரைவாகப்போய்ச் சேர்வார்கள். எ-று. (௩௩)

ஒருபொருள்கையிற்கொண்டோ னொளித்திடல்விடுதலென்னு
மிருமையுளொன்றுசெய்தன் மற்றவற்கியலுமாபோற்
பருவரும்விடயபோசம் பற்றுதல்விடலிரண்டு
ளருமையதுணர்ந்துநீத்தோன் முத்தனயமர்வனன்றே.

(இ-ள்.) ஒருபொருளைக்கையிற்பெற்றவன் அப்பொருளைப் பத்திரப்படுத்துதல், விட்டுவிடுதல் என்னும் இரண்டு தொழிலில் ஒன்றைச் செய்தற்கு அவனதிகாரி யாவதுபோல, துன்பத்தைத் தருகின்ற விடயபோகங்களைப்பற்றுதல், நீக்குதல் ஆகிய விரண்டனுள் அருமையாயுள்ளதை யறிந்து விடுத்தவன் முத்திநிலையைப்பெற்று வீற்றிருப்பன். எ-று. (௩௪)

(ப-ம்.) விடயபோகங்களைப்பற்றுதல், எளிது, அவற்றை விடுதல், அரிது, அரிதாயுள்ளவைகளைப் பூர்வபுண்ணியத்தால் விடுவானாயினும் மனத்தைவிட்டு நீங்காது, விட்டபோகங்களை மீண்டும் பற்றத்தக்க இச்சையை விளைவிக்குமாதலின் அவ்வருமை நோக்கி அருமையதுணர்ந்து நீத்தோன் என்று கூறினார்.

தான்றேடுபொருள்களெல்லாந் தாரமாதியருக்கென்று
மான்றேமண்ணிடைப்புதைத்து மாண்டபின்றுயரத்தாழ்வான்
முன்றேடுபொருள்களெல்லாஞ் சங்கரப்பிரிதிசெய்யின்
மான்றேறுதுயரம்பூணான் வான்கதிக்கிறைவனாவான்.

(இ-ள்.) தன்னால் சம்பாதிக்கத்தக்க உலகபதார்த்தங்கள்யாவும் தார (புத்திராதி)களுக்கென்று பூமியிற்புதைப்பவன், இறந்தபின்னர் பலவாகிய துயரக் (கடலில்) முழுகுவன். தன்னால் சம்பாதிக்கத்தக்க பொருள்களெல்லாவற்றையும் சிவப்பிரீதி செய்பவன் அபிவிர்த்தியாகின்ற பிறவித்துயரத்தை யனுபவியாது மேலாகிய மோக்ஷபூமிக்குத் தலைவனாவன். எ-று. (௩௫)

ஆதலாற்சிவனொல்லா மருந்துயரடைவாரென்று
காதலாற்கவலையுற்றேன் வேறொன்றுகலந்ததின்று
லோதலாற்பயனுமில்லை யுண்மையீதுணர்மினென்றுன்
கோதலாற்புரியாாக்கெல்லாங் கொடியனுய்வருத்துங்கோமான்.

(இ-ள்.) ஆதலினாலே சீவகோடிகளெல்லாம் (விஷயமயக்கத்தால்) பெருந்துயரத்தையடைவார்களென்று அவர்களிடத்துவைத்த அன்பினால் கவலையடைந்தேன் வேறே ஒருகவலையுமில்லை. எடுத்துக்கூறுவதினாற் பயன்யாது (பெரியோர்களே) இது உண்மையென்றறிவீர்களாகவென்று, பாவஞ்செய்பவர்கள் யாவருக்கும் கொடியதண்டனைசெய்து வருத்தப்படுத்துகின்ற இயமன் கூறினான். எ-று. (௩௬)

(ப-ம்.) நடுநிலைமையுள்ளோர் தமக்குண்டாகுந் துயரத்தில் மனஞ்செலுத்தாது, அன்னியர்படுந் துயரங்களுக்கே இரங்குவராதலின், கவலையுற்றேன் என்றுகூறினார்.

**சான்றவரதனைக்கேட்டுத் தக்கதேயுரைத்தரய்தீமை**
**யேன்றபாதகாக்கப்பாவ மியாவுந்தீரகழுவாயாது**
**தோன்றநீயுரைத்தியென்னத் துடிதுடித்ததிர்த்துச்சீற்றங்**
**கான்றுபாயெருமைப்போத்தூர் கடவுண்மற்றிதனைச்சொன்னான்.**

(இ-ள்.) (சபையிலுள்ள) பெரியோர் அந்தவார்த்தைகளைக்கேட்டு உள்ளவாறே தெரிவித்தீர் தீமைநிறைந்தபாவிகள் அப்பாவமுழுமையும் ஒழிக்கத்தக்க பிராயசித்தம்யாது எங்களுக்குத் தெரியுமாறு கட்டளையிடுவீரென்றுகேட்க, படபடவென்று ஆரவாரித்துப் பெருங்கோபங்கொண்டு (நடக்கின்ற) எருமைக்கடாவை வாகனமாயுள்ள யமதருமன் இதைச்சொல்லத்தொடங்கினான். எ-று. (௩௭)

**என்னபாதகஞ்செய்தாலு மிரும்புகழ்க்காசிமேவி**
**நன்னர்மாகங்கைமூழ்கி நலந்தருவிசுவநாதன்**
**பொன்னடிச்சேவைசெய்து பொலிந்தமர்வாரோற்பாவந்**
**தன்னமுமிலராய்மேலா முத்திபைச்சார்வதுண்மை.**

(இ-ள்.) எந்த (மகா) பாதகங்களைச்செய்தாலும் பெரும்புகழமைந்த காசித்தலத்தையடைந்து, நன்மையும் பெருமையுந்தங்கிய கங்காநதியில் ஸ்நானஞ்செய்து முத்தியின்பத்தைத்தருகின்ற விசுவநாதருடைய அழகிய திருவடித்தாமரைகளைப்பணிந்து அறிவுவிளக்கத்தைப்பெற்று அத்தலத்தில் வாசஞ்செய்வார்களானால் பாவஞ்சிறிதுமில்லாதவர்களாகி (சிவபுண்ணியங்களைச்செய்து) மேலான முத்தியையடைதல் உண்மையென்று (பெரியோர்களே தெரிவீர்களாக.) எ-று.

பிராயச்சித்தத்துக் கடங்காத மகாபாதகங்களைச் செய்தவர்கள் காசியென்னுந்திருநாமமந்திரத்தை யுச்சரிப்பார்களானால் அப்பாதகங்களொழிந்து முத்தியடைவார்களென்று சிவபிரானே திருவாய்மலரக் கேட்டுள்ளாராதலின் முத்தியைச் சார்வதுண்மை யென்றுகூறினார்.

**ஈதுநம்பெருமான்முன்ன ரெமக்குபதேசஞ்செய்த**
**தோதுமந்தணமேயாகு முதற்குமேற்கழுவாயில்லைச்**
**சாதுநீரமையரேயாய சான்றீரென்றுரைத்தல்செய்தான்**
**காதுவெம்பாசந்தாங்கும் கையுடைச்செங்கோல்வேந்தன்.**

(இ-ள்.) இந்தப்பிராயச்சித்தம் நமது பெருமானாகிய கைலைநாயகர் பூர்வத்தில் எனக்கும், பிரமதேவருக்கும், சுவாயம்புமனுவுக்கும், உபதேசஞ்செய்த அதிரகசியமாகும். இதற்குமேற்பட்ட பிராயச்சித்தங்கிடையாது. சாதுத்தன்மையுள்ள பெரியோர்களே அறிவீர்களென்று கொலைசெய்கின்ற கொடியபாசத்தைக் கையிலுடைய செங்கோல்மன்னனாகிய யமதருமன் கூறினான். எ-று()

(ப-ம்.) மகாபாதகங்களைச் செய்தவர்கள் காசியில்வசித்துக் கங்காஸ்நானஞ்செய்தால் முத்தியடைவார்களென்று சொல்வது அனேகருக்குச் சந்தேகத்தை விளைக்குமாதலின் உண்மையுணர்தற்பொருட்டு நம்பெருமான் முன்னமெமக்குபதேசஞ் செய்ததென்றுகூறினார்.

கூற்றமீதுரைத்தலோடுங் குணங்கெழுசபையாராய
மாற்றருநலத்தார்கேட்டு மனமிகமகிழ்ந்தாராகி
யேற்றமார்வேதச்சென்னி யிருக்குமந்தணமீதென்று
தேற்றமார்காசிமேன்மை சிந்தைகொண்டிருந்தாரன்றே.

(இ-ள்.) எமதருமன் இதைச்சொன்னமாத்திரத்தில் சாந்தகுணசீலராகிய அச்சபையிலிருந்த பெரியோர்கள் கேள்வியுற்று மிகுந்த உள்ளக்கிளர்ச்சிகொண்டு உயர்வுக்குள் உயர்வாகிய வேதமுடிவிலுள்ள இரகசியார்த்தம் இதுதானென்று தெளிந்து தெளிவைக்கொடுக்கின்ற காசித்தலமகிமையைச் சிந்தித்திருந்தார்கள். எ-று. (௪௦)

(ப-ம்.) வேதங்களுக்கு மேற்பட்ட பிரமாணமில்லை யாதலின் ஏற்றமார்வேதமென்றும், மனோகளங்கத்தை யொழித்து சுத்திசெய்வது காசியாதலின் தேற்றமார் காசியென்றுங்கூறினர்.

## பாதகக்கழுவாயுரைத்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம். உ௨-க்கு திருவிருத்தம். எகூ௬.

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

# இருபத்து மூன்றாவது தேவர்களுப தேசம்பெற்ற அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

மன்னுகூற்றுவன், றுன்னுசான்றவர்க்
கின்னுமென்சொலு, னுன்னுமாறதை.

(இ-ள்.) நிலைபெற்ற இயமன், (அச்சபையில்) நெருங்கிய மேலோர்களுக்கு (முன்சொன்னதன்றி) இன்னும்யாதுசொன்னான் சிந்திக்கத்தக்க அச்சரித்திரத்தை. எ-று. (க)

ஓதவேண்டுமென், ருதரஞ்செயு
மாதவத்தர்பாற், சூதனோதுவான்.

(இ-ள்.) திருவாய்மலர வேண்டுமென்று அன்புசெய்து (கேட்கின்ற) பெருந்தவத்தையுடைய சவுநகாதி முனிவர்களுக்குச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர். எ-று. (உ)

மருவுபர்வமும், வெருவுகும்பியு
மொருவுகண்டமுந்; துருவுமாநரும.

(இ-ள்.) செய்கின்ற பாவங்களையும், அந்தப்பாவத்தால் வரும் பயங்கரமுள்ள நரகங்களையும் அந்நரகங்களைவிட்டு நீங்குங்காலமும் இவைகளைத்தேடுகின்ற மனிதர்களையும். எ-று. (ங)

சாற்றவேண்டுமென், றேற்றமேயவர்
மாற்றங்கேட்டலுங, கூற்றங்கூறுமே.

(இ-ள்.) திருவாயமலரவேண்டுமென்று பெருமைவாய்ந்த அப்பெரியோர்கள் சொன்னதைக் கேட்டவளவில் யமதருமன் சொல்லத்தொடங்கினான். எ-று.

மனத்தினால்வருங், கனத்தபாதக
மனத்தஞ்செய்வதை, யுனத்தகாதுகாண்.

(இ-ள்.) (பாவங்களைச் செய்யவேண்டுமென்று) மனதில் எண்ணுவதினால் உண்டாகின்ற மகாபாதகங்கள் எண்ணினவர்களை யாதனாசரீரத்திற் படுத்துகின்ற துயரப்பாடுகளை நாம் சிந்திக்கமுடியாது. எ-று. (ரு)

(ப-ம்.) வேதாகமங்களில் சிவபெருமான் விதித்தவிதிகள் யாவும் பொய்யென்று எண்ணுதன் முதலிய பெரும்பாவங்கட்கு மனங்காரணமாதலின் கனத்த பாதகமென்று கூறினார்.

வாக்கினால்வரும், போக்கில்பாதகந்
தேக்குதீமையுண், டாக்குநாளுமே.

(இ-ள்.) (தீயவாக்கியங்களை) வாக்கினாற்சொல்லுவதால் வரும் நீக்கப்படாத பெரும்பாவங்கள் (நரகபூமியில்) நெடுங்காலம் நிறைவாயுள்ள பலதுன்பங்களை உண்டுபண்ணும். எ-று. (௬)

(ப-ம்.) வேதாகமநிந்தை, சிவநிந்தை, சிவனடியார்நிந்தை, சற்கருமநிந்தை முதலிய செய்வதற்கு வாக்கு, காரணமாதலின், தீமையுண்டாக்குமென்று கூறினார்.

காயத்தால்வரு, மாயபாதகந்
தோயக்கும்பியுட், சாயச் சாடுமே.

(இ-ள்.) சரீரத்தினால் வருகின்ற வஞ்சனைக்கிடமாகிய பாவங்கள், நரகபூமியில் (புழுக்கள் நிறைந்த) துர்க்கந்த நீருட்சதாமுழுகி யிருக்கும்படி வருத்தஞ் செய்விக்கும். எ-று. (௭)

இன்னபாதகந், தன்னமாயினு
மன்னமாமலை, யென்னவோங்குமே.

(இ-ள்.) மனம், வாக்கு, காயத்தால்வருகின்ற பாவங்கள் சிறிதாயிருந்தாலும், நிலைபெற்ற பெருமலைபோலோங்கி வளரும். எ-று. (௮)

(ப-ம்.) ஒருக்கால் பாவஞ்செய்தவர் பல்காலுஞ்செய்ய உடன்படுவாராதலின் ஓங்குமேயென்று கூறினார்.

ஓதினோதுப, பாதகம்மகா
பாதகம்மென, வோதல்சான்றன.

(இ-ள்.) சொல்லுமிடத்து அப்பாவங்கள் உபபாதகமென்றும், மகாபாதகமென்றும், (அதிபாதகமென்றும்) பெயர்பெற்று வருகின்றன. எ-று. (௯)

பயில்செயற்கையா, லுயிர்களுக்கெலாஞ்
செயிர்செய்பாதக, மயர்வின்றோங்குமே.

(இ-ள்.) பாவங்கள், ஆன்மாக்கள் (தினந்தோறும்) பழகுகின்ற தீமையினால் வளர்ந்து (இவர்களுக்குப்பலவித) துன்பத்தை விளைவித்துச் சோர்வின்றி மேலோங்கியிருக்கும். எ-று. (௧௦)

கருப்பவாசமுற், றிருப்பதாதியா
வருபபுகுமபியு, ளிருபபுமேயின.

(இ-ள்.) (மேற்சொன்னபாவங்கள்) கருக்குழியில் வசித்தல் முதலிய துயரங்களையுண்டாக்கி, (பின்னர் யாதனாசரீரத்தைக் கொடுத்து) நரகத்தில் நிலைத்திருக்கச்செய்வனவாம். எ-று. (௧௧)

(ப-ம்.) குஷ்ட்ட முதலிய மகாரோகங்களை யனுபவித்தல், துர்க்கந்த பூமியில் வசித்தல், முதலியவைகள் யாவும் பாவப்பலனாதலின் ஆதியென்றுகூறினார்.

வருசுவர்க்கமும், பொருவின்முத்தியும்
வெருவில்புண்ணியத், திருவின்மேவுமே.

(இ-ள்.) மேலும் மேலும் சுகத்தை விளைவிக்கின்ற புண்ணியமாகிய சம்பத்தினால், இந்திரலோக முதலிய பதவிகளும், ஒப்பில்லாத சொரூபமுத்தியும் சித்திக்கும். எ-று. (௧௨)

செற்றகும்பிவீழ்ந், துற்றதீங்குறல்
சொற்றபாவத்தான், முற்றவாவதே.

(இ-ள்.) மேற்சொல்லிய பாவங்களால்வந்து சம்பவிப்பது யாதெனின், கோரநரகங்களில் வீழ்ந்து அளவுபடாத துயரங்களை யனுபவிப்பதேயாம். எ-று.

துக்கரூபமாய், மிக்கயாதனை
தொக்கதென்பரால், தக்கபாவர்க்கே.

(இ-ள்.) மேலாகிய பாவஞ்செய்தவர்கள் பெருந்துயரமே வடிவமாகவுடைய யாதனாசரீரத்தை யெடுத்துப் பலவிதகிலேசங்களையும் அநுபவிப்பார்களென்று (பெரியோர்) கூறுவர். எ-று. (௧௪)

விடயவாஞ்சைமிக், குடயமாந்தர்க
ளடையமேலவர், நடைபழிப்பரே.

(இ-ள்.) (அநித்தியமான) விடயவிருப்பத்தை அதிகமாகவுடைய (பாவிகளாகிய) மனிதர்கள் (சிவபிரானை) யடுத்திருக்கிற பெரியோர்களுடைய நல்லொழுக்கத்தை நிந்தைசெய்வார்கள். எ-று. (௧௫)

சிறியபாதக, மறியவாற்றினோர்
நெறியதண்டத்தால், செறிவர்தூய்மையே.

(இ-ள்.) சிறுபாவங்களைப் புத்திபூர்வமாகச் செய்தவர்கள் விதிப்படி (நான்) செய்கின்ற தண்டனையினால் அப்பாவங்களொழிந்து பின்னர் பரிசுத்தராவார்கள். எ-று. (௧௬)

கொலைஞர்தமமுட, னிலைசெய்மானத்த
ருலையுமற்றிவர்க், கிலைமெய்ஞ்ஞானமே.

(இ-ள்.) கொலைதொழில் செய்பவர்களுக்கும் அவர்களுடன் நண்புசெய்பவர்களுக்கும் ஆகிய இவ்விருதிறத்தவர்களுக்கும் சத்தியஞானம் உண்டாகமாட்டாது. எ-று. (௧௭)

எனதியானெனு, முனகர்துக்கத்தா
லனகமேவுறுர், மனாநலத்திர்காள்.

(இ-ள்.) சித்தசுத்தியுள்ள சபையாரோ தநுகரணங்களை யானென்றும் (புவனபோகங்களை) எனதென்றும் (மதிக்கின்ற) மூடர்கள் துயரமிகுதியால் பரிசுத்தாரகார்கள். எ-று. (௧௮)

பற்றுநீங்குறுர், முற்றுமின்சுகம்
பெற்றுவாழ்வரோ, கற்றமேலையிர்.

(இ-ள்.) பலநீதி நூல்களையுங்கற்ற பெரியோர்களே உட்பற்று புறப்பற்றுக்களை நீங்காதவர்கள் பூரணமான சுகத்தையடைந்து வாழமாட்டார்கள். எ-று.

விடயவின்பெலா, மடையவுன்னுவா
ருடைவதோர்கிலார், கடையமாந்தரே.

(இ-ள்.) (இந்திரியகரணங்களால்) பற்றியனுபவிக்கின்ற விஷயசுகங்களெல்லாவற்றையும் தாம் அநுபவிக்கவேணுமென்று எண்ணுபவர்கள் அவ்விஷயம் கெடுதியாகிறதன்மையை யறியாதவர்களாதலின் இழிவுள்ளமாந்தரோ யாவர்கள். எ-று. (உ௰)

உரவுஞானியைக், காவுதீரக்கண்
டிரவுசெய்துநாம், விரவுவோமகிழ்.

(இ-ள்.) தவவலிமையுள்ள ஞானவானை நமதுகளங்கந்தீருமாறு தரிசித்து (உத்தமகுணங்களை) அவரிடத்தில் யாசித்து நாம் இன்பத்தில் மூழ்குவோமாக. எ-று. (உ௧)

ஞானமில்லவ, ரூனமேவபி
மானநிட்டையின், மோனமுற்றிடார்.

(இ-ள்.) சொரூபஞான மில்லாதவர் தேகாதிபோகங்களை அபிமானித்துக்கொண்டு (அவைவார்களேயன்றி) நிஷ்டைகூடி முத்திநிலையைப் பெறமாட்டார்கள். எ-று. (உஉ)

இன்னுமெம்பிரான், மன்னுமாமலர்
துன்னுசேவடி, யுன்னுமாறிலார்.

(இ-ள்.) (உயர்ந்தமானிட தேகத்தைப்பெற்ற பின்னராகிய) இன்னமும் எமதாண்டவராயுள்ள சிவபெருமானுடைய மலர்கள் நிறைந்துள்ள திருவடிகளை சிந்தனை செய்யாதவர்களாக விருக்கின்றுர்கள். எ-று. (உ௩)

ஆனதேகமே, நானெனச்சொலி
யீனமேவுவர், ரூனவாழ்க்கையார்.

(இ-ள்.) அழிந்துவிடுகின்ற பிரபஞ்சவாழ்க்கையி லுள்ளவர்கள் மாயாகாரியமான தேகத்தையே நானென்றுசொல்லிக்கொண்டு இழிதொழிலையே விரும்பிச்செய்வார்கள். எ-று. (உ௪)

**அகமிலாதவர், தகவினுற்றமை**
**மிகவிழிப்பரேற், சுகமளாவுவார்.**

(இ-ள்.) பாபமில்லாதவர்கள் பெருந்தன்மையினாலே தங்களைத்தாங்கள் மிகவுமிழிவாகக் கூறிக்கொண் டிருப்பார்களானால் (அப்பெரியோர்களே) பரமசுகத்திற் கலந்திருப்பார்கள். எ-று. (௨௫)

ீந்தூ

வேறு.

**பேசின்மற்றிதற்காயதோ, ராசின்மாக்கதையொன்றுண்டு**
**நேசமார்தரப்பேசுகேன், பாசமில்லீருணருமின்.**

(இ-ள்.) பாசவிமோசனத்தை யடைந்தபெரியோர்களே, சொல்லுமிடத்தில், இப்போது கூறினவைகளை விளக்கிக் காட்டத்தக்க குற்றமற்ற மகிமையுள்ள கதையொன்றிருக்கின்றது. நிறைந்தஅன்போடு சொல்லுகின்றேன் தெரிவீர்களாக. எ-று. (௨௬)

**பற்றொழிந்தவர்பாதகந், தற்றமேன்மைச்சனகரு**
**முற்றுமுன்னமுணர்ந்தநீ, தற்றமோவவறிமினோ.**

(இ-ள்.) எல்லாப்பற்றுக்களையும் விட்ட பெரியோர்களும் பாதகமுற்றுமொழிந்தமேன்மையுள்ள சனகமகாராஜனும், பூர்வத்தில் இக்கதை முழுவதும் அறிந்திருக்கின்றார்கள். உங்கள் மனச்சோர்வு நீங்குமாறு அறிவீர்கள். எ-று.()

**மிக்கசெல்வமிதிலைவாழ், தக்கசீலனிருத்துச**
**னக்ககாவனவிற்றுநாள், புக்கனன்புகழ்க்காசியில்.**

(இ-ள்.) பிரபலசம்பத்தையுடைய மிதிலைப்பட்டணத்தில் வாழ்கின்ற சாந்தசீலனாகிய சனகராஜன், சிம்மாதனததிலிருந்து விதிவழி விளங்குங்காவற்றொழிலை நடாத்துங்காலத்தில் பெரும்புகழுள்ள காசிப்பதிக்குப் போனான். எ-று.

**காசிமேவியகாவல, னாசில்கங்கையடைந்தன**
**னேசமார்தரக்கண்டனன், மூசுபற்பன்முனிவரை,**

(இ-ள்.) காசித்தலத்தையடைந்த அச்சனகவரசன் குற்றத்தை யொழித்தருள்கின்ற கங்கையைத்தரிசித்து (ஸ்நாநஞ்செய்து) அவ்விடத்தில் நிறைந்திருக்கின்ற பலபெரியோர்களையும் பூரணமான அன்பினால் வணங்கினன். எ-று.()

**அன்னமாதவருட்சிலர், பன்னருங்கருமத்தினர்**
**நன்னர்சால்சிலர்ஞானிய, ரென்னவாயந்தங்கிருந்தனர்.**

(இ-ள்.) அப்பெரியோர்களுக்குள்ளே, சிலர் கருமகாண்டத்தின்வழி நிற்பவர்களும், சிலர் நன்மைநிறைந்த ஞானகாண்டத்தின்வழி நிற்பவர்களுமாக ஆராய்ந்தறியத்தக்க உணர்வோடு அங்கிருந்தார்கள். எ-று. (௩0)

**அந்தமாதவர்தாடொழாச், சந்தமன்னமறைப்பொரு**
**ளெந்தவாறறிவோமெனா, முந்தநின்றுவினவுவான்.**

(இ-ள்.) அவ்விடத்தெழுந்தருளி யிருந்த பெரியோர்கள் திருவடிகளை வணங்கிச் சந்தவின்பநிறைந்த வேதரகசியப்பொருளை (இவர்களிடத்து) எவ்வண்ணமாக அறியலாமென்று யோசித்து அவர்கள் திருமுன்னேநின்று வினவத்தொடங்கினன். எ-று. (௩க)

ஆனபந்தமழிப்பது, தானமென்றுந்தவமென்று
மீனமில்லாமகமென்று, ஞானமென்றுஞ்சிலுவார்.

(இ-ள்.) (பெரியோர்களே) உண்டாயிருக்கின்ற பாசவிமோசனஞ் செய்வது சிலர்தானமென்று சொல்வார்கள். சிலர்தவமென்பார்கள் சிலர்மகமென்பார்கள் சிலர்ஞானமென்பார்கள். எ-று. (௩௨)

தீர்த்தமாடுந்திறமென்று, மார்த்திமேவவறைகுவா
ரோர்த்தகாரணமீதென்று, பூர்த்தியாப்புகல்வீரென்றான்.

(இ-ள்.) சிலர் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணுந் தன்மையினால் பாசநிவிர்த்தியென்று கேட்பவர்களுக்கு ஆசைஅதிகரிக்கக் கூறுவார்கள். (இப்படி பலகாரணங்களைக் கூறுதலால் மனதுக்கு ஐயமுண்டாகின்றது.) பொருத்தமானகாரண மிதுவென்று தேவரீர்கட்டளையிடவேண்டுமென்றனன். எ-று.

அன்னர்மாயைவிசித்திர, முன்னமற்றதின்மூழ்கியே
பன்னருமனம்போனவா, றென்னருமியல்வாரென்றார்.

(இ-ள்.) பலவித விசித்திரமுள்ளதும் சிந்திக்கத்தக்கதுமாகிய மாயையென்னுஞ் சமுத்திரத்தில் யாவர்களும் மூழ்கி அவரவர்கள் மனம்போனபடி ஒவ்வொருதொழிலில் பிரவேசிக்கின்றார்களென்று அவர்கள்கூறினார்கள். எ-று. ()

அந்தவேளையருமறைச், சந்தமார்பொருடேர்ந்தவன்
முந்துமோரவதூதனுங், குந்துமாறுவந்தானரோ.

(இ-ள்.) அந்தசமயத்தில் அரியவேதங்களிலுள்ள இரகசியார்த்தங்களையுணர்ந்தவரும், (யாவைக்குமேற்பட்டு) முதன்மையாயுள்ள அவதூதநிலையினிற்பவருமாகிய ஒருபெரியவர் திருவருள்கூட்டுதலால் அவ்விடத்துக்கு வந்தனர். எ-று. (௩௫)

அன்னஞானியடிதொழாப், பன்னரும்பயபத்தியின்
மன்னன்பூசைவயக்கியே, யுன்னவாமிஃதோதுவான்.

(இ-ள்.) ஞானவானாகிய அப்பெரியவர் பாதங்களில் மிதிலையாதிபன் வணங்கிச் சொல்வதற்கரிய பயபத்தியுடன் விதிவிளங்கப்பூசைசெய்து சிந்திக்கத்தக்க இதைச்சொல்லத் தொடங்கினன். எ-று. (௩௬)

அய்யநீயெவனாநந்த, மெய்யனாகிவிளங்கினை
பொய்யவாமுதற்போக்கினை, செய்யஞானந்திருந்தினை.

(இ-ள்.) சுவாமிகளே தேவரீர் எவ்வாறாக நித்தியாநந்தமே வடிவமாகவிளங்குகின்றீர். அசத்தியமாயுள்ள ஆசைமுதலிய (குற்றங்களை) யொழித்திருக்கின்றீர். மேலாகியஞானசம்பத்தை நிலையாயடைந்திருக்கின்றீர். எ-று. (௩௭)

(ப-ம்.) சாதனசதுஷ்டய சம்பத்துள்ள மோக்ஷாதிகாரிகள், சொரூபஞானிகளை காட்சிமாத்திரத்தால் அறிந்துகொள்வாராதலின் ஆநந்த மெய்யனாகி விளங்கினை என்று கூறினார்.

எங்கிருந்திவணெய்தினே, துங்கவான்மசொரூபனீ
பங்கமோவத்தெரிந்தமை, யிங்கெனக்கருளென்றனன்.

(இ-ள்.) எங்கேயிருந்து இவ்விடத்துக்கு எழுந்தருளினீர், அஞ்ஞானம் விலகிப்போமாறு உயர்ந்த ஆன்மசொரூபத்தை தேவரீருணர்ந்த வண்ணம் அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தனன். எ-று. (ருஅ)

அரசன்வார்த்தையகஞ்செவி, விரவயோகிவிளம்புவான்
பரவுமன்பபரிந்துகே, ளுரவுசேருமோர்யோகிநான்.

(இ-ள்.) (பிரார்த்தித்த) ஜனகராஜன் வார்த்தையைக் கேள்வியுற்ற அவதூதராகிய சிவயோகி கட்டளையிடுகின்றார். துதித்தற்குரிய அன்பனே என்வாக்யத்தை விருப்புடன் கேட்பாயாக மெய்ஞ்ஞான வலிமையுள்ள சிவயோகியென்று என்னை யறியக்கடவாய். எ-று. (ருகூ)

ஆன்றசத்தியரூபமே, தோன்றவானமற்றென்னிடை
சான்றவிப்பிரசித்திதா, னென்றவாறுற்றிருந்ததே.

(இ-ள்.) நிலைபெற்ற சத்தியவடிவமான என்னிடத்தில் உள்ளதுபோலக்காட்டும் ஆரோபிதப்பிரபஞ்சம் பொருந்துமாறு காணப்பட்டு வருகின்றது. எ-று.

கருவிகாரிய நானலன், பொருவருங் கருத்தாவலன்
மருவலாமோர் விஞேதத்தாற், பொருநவிச்சகம் பார்க்கின்றேன்.

(இ-ள்.) பஞ்சபூதகாரியமாகிய சரீரமும் ஞானேந்திரிய கன்மேந்திரிய அந்தக்கரணாதிகளும் நானன்று இவைகளையபிமானிக்கின்ற கர்த்தாவும், நானன்று. என்னிடத்துண்டாகிய ஓர்விளையாட்டினால் உள்ளதுபோலக் காட்டுகின்ற இப்பிரபஞ்சத்தைப்பார்த்திருக்கின்றேன். எ-று. (சக)

அன்பநின்மல நெஞ்சுறிற், றுன்பமில்லையத் துன்பந்தா
னின்பமாவந்து மெய்தரில், வன்பளற்றிடைவைக்குமே.

(இ-ள்.) அன்புள்ள ஜனகராஜனே மனம் நின்மலத்தை யடையுமானால் துயரங்கள் வந்தணுகா. அத்துன்பங்கள்யாவும் இன்பம்போல வந்து சத்தியபுத்தியைக்கொடுக்குமானால் கொடிய நரகத்தினிடத்து அவனை நிலைநாட்டும். எ-று.

கூறுமானந்த ரூபமாம், பேறுநல்கும் பிரமப்பான்
மாறுதீர்ந்துற்ற வாஞ்சையோன், வேறுகாமம் விரும்புமோ.

(இ-ள்.) வேதங்களாலெடுத்துரைக்கின்ற ஆநந்தவடிவத்தை, விதிவழியே சிந்திக்கின்ற அன்பர்களுக்குக் கொடுத்தருளும் பரப்பிரமத்தினிடத்துப் பேதியாத இச்சையை (நிரந்தரம்) வைத்திருப்பவன் (அற்பமாகிய) வேறு இச்சையைக்கொள்வானோ (கொள்ளான்.) எ-று. (சரு)

அவாவிலார் பரமானந்தந் தவாதரூபச்சிவமலா
லுவாவுளாய் மற்றுமொன்றனை, யெவாறுகொள்ள விசைவரோ.

(இ-ள்.) பட்டத்தியானையையுடைய சனகராஜனே ஆசையற்றவர்கள் பரமானந்தானுபவத்தைப் பேதியாதுகொண்டிருக்கிற சிவரூபமாவார்களேயல்லாமல் அன்னிதான விஷயசுகங்களை எவ்வாறு அனுபவிக்கத்துணிவார்கள். எ-று.

முற்றுமோர்ந்தவனாயினும், பற்றுகாமஞ் சிறிதுறிற்
சுற்றுவாதனை நீங்குமோ, வற்றுமாறின்றி மல்குமே.

(இ-ள்.) முழுவதுமறிந்து மெய்ஞ்ஞான சமாதியில் நிற்பவனாயினும் உலகாபேக்ஷை சிறிதிருக்குமானால் சூழ்ந்துள்ள காரணவாதனை யொழியுமோ குறையாது மேன்மேலோங்கி வளரும். எ-று. (சரு)

ஆனதால் விடயத்தைவிட், டானமின்றியமாதியான்
மேன்மைகூர் சிவபூசைசெய், தூனமாதி யொழிப்பரே.

(இ-ள்.) ஆனபடியினால் விடயப்பற்றை விடுத்து உயர்வுள்ள இயமாதி அஷ்டாங்க யோகங்களைச்செய்து (மனோலயத்தைப்பெற்று) மேன்மைதங்கிய ஞானபூசைசெய்து தேகாதிப்பிரபஞ்சவாசனையை யொழித்துவிடுவார்கள். எ-று.

அஷ்டாங்கயோகம் இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பனவாம்.

மெய்யரானந்த ரூபியாஞ், செய்யவேணியன்பான்மன
மையசெல்லநிறுத்துபு, வையவாஞ்சையை மாட்டுவார்.

(இ-ள்.) உண்மைஞானத்தில் விருப்பம்வைத்த பெரியோர்கள் ஆநந்தரூபராயும், சிவந்தசடையையுடையராயுமுள்ள சிவபெருமானிடத்து மனமமுழுந்தும்படிநிறுத்தி பிரபஞ்சவாசையை நீக்கிவிடுவார்கள். எ-று. (சஎ)

முன்னர்நானும் விடயத்தாற், பன்னருந்துன்பம் பட்டனன்
பின்னர்நூலுணர் பெற்றியா, னன்னர்மேலவர் சேர்க்கையால்.

(இ-ள்.) நான் பூர்வத்தில் (பஞ்சேந்திரியங்களுக்கு இன்பத்தைவிளைவிக்கும்) விஷயப்பற்றினால் சொல்லுதற்கரிய துயரப்பாடுகளை யடைந்தேன். அதன் பின்னர் சாஸ்த்திரவுணர்ச்சியாலும் சாதுசங்கசேவையாலும். எ-று. (சஅ)

சிவபிரானருள் சேர்ந்தனன், றவறின்ஞானமுஞ் சார்ந்தனனிவறுபொய் மெயிரண்டுமோ, ரவமிறன்மையடைந்தனன்.

(இ-ள்.) மகாதேவருடைய கிருபையைப்பெற்றேன் பேதியாத சொரூபஞானத்தையடைந்தேன் மறதிக்குக் காரணமாகிய பொய்யையும் மெய்யையும் பகுத்தறியத்தக்க தவநிலையைப்பெற்றேன். எ-று. (சகூ)

(ப-ம்.) திருவருள் வலிமையுள்ளோர்க்குத் தவமும், நித்தியாநித்தியவஸ்த்து விவேகமும், ஞானமுதலியவைகளும் எளிதாகக்கிடைக்குமாதலின், அருளைமுற் கூறினார்.

சாதிமானந்தபுத்தலே, யாதியாவு மடைந்தனன்
சோதிபான்மனந்துன்னுவித், தேதிலானந்த மேய்ந்தனன்.

(இ-ள்.) சாதியாசாரங்களைக் கைவிட்டமையால், சஞ்சலமின்றி எல்லாவி ன்பங்களையும் பெற்றேன். பிரகாசமே வடிவமாகிய சிவபெருமானிடத்து மன மழுந்தச்செய்து குற்றமற்ற சொரூபானந்தத்தை யடைந்தனன். எ-று. (௫௰)

வேறு.

இலைமலிவேலினு யின்னமொன்றுகேள்
கலைமுழுவதும்புகழ் கயிலைமால்வரை
மலைமகளொடுமிள மைந்தனோடுநந்
தலைமகனொருதின மணையிற்றங்கினன்.

(இ-ள்.) அச்சவடிவுள்ள வேலேந்திய சனகமகாராஜனே மற்றொரு கதை யைக்கேட்பாயாக. பலநூல்களும் எடுத்துப்புகழ்தற்குரிய பெருமைவாய்ந்த திரு க்கைலாசமலையில் பார்வதிதேவியாரோடும், முருகப்பெருமானோடும், நமதிறை வராகிய சிவபெருமான் ஒரு தினத்தில் இரத்தின சிம்மாதனத்தின்மீது வீற்றிரு ந்து காட்சிகொடுத்தருளினார். எ-று. (௫௧)

வானவர்வந்தடி வணங்கிமானிட
ரீனமிலொருபவத் தெய்துவார்கொலோ
மானமின்முத்தியை மற்றையாருயி
ரானவைநின்னடி யடைவதுண்டுகொல்.

(இ-ள்.) தேவர்கள் வந்து (மகாதேவர்) பாதங்களில் வணங்கி, மனிதர் கள், குற்றமற்றமுத்தியை, பிறந்த ஒரு பிறவியிற்றானே மேன்மையாகப் பெறு வார்களோ அவர்கள் உடம்பை விட்டுப் பிரிந்த உயிர்கள் தேவரீர் திருவடியிற் கலப்பதுண்டோ. எ-று. (௫௨)

(ப-ம்.) உயர்ந்த பதவிகளிலிருந்து அனுபவிக்கின்ற சுகத்துக்கும் பதமுத் தியென்று பெயராதலின் மானமின் முத்தியென்று கூறினார்.

இல்லைகொலெங்களுக் கியம்புவாயென
யல்லைவென்றிடுகளத் தண்ணல்கூறுவான்
வல்லைவென்றிடுமுலை யதிதிமைந்தர்கா
டொல்லைவெம்பவத்துயர் துளையுமானிடா.

(இ-ள்.) மனிதர்கள் தேவரீர் திருவடியடைவதில்லையோ (சந்தேகமுள்ள) எங்களுக்குத் திருவாய்மலர வேண்டுமென்று தேவர்கள் வேண்டிக்கொள்ள கறு ப்பினால் இருளை வெல்லத்தக்க கண்டத்தையுடைய சிவபெருமான் கட்டளையிடு கின்றனர். சொக்கட்டான்காயை அவமதிக்கின்ற குஜங்களையுடைய அதிதிகுமாரர் களே (கேட்பீர்களாக) அனாதியாயுள்ள கொடியபிறவித்துயரமென்னுஞ் சமுத் திரத்தில் முழுகுகின்ற மானிடர்கள். எ-று. (௫௩)

அடைதருமொருபவத் தபேதஞானத்தாற்
றடைதவிர்முத்தியிற் சார்வதுண்மையக்

கொடைகெழுஞானமுங் குறித்தபல்பவ
மிடைதருமறத்தினுல் விளைவதுண்மையே.

(இ-ள்.) (மனிதர்கள்) எடுத்த ஒரு பிறவியிற்றுனே அபேதமாயுள்ள சிவ ஞானத்தைப்பெற்று தடையில்லாச் சுகத்தையுண்டுபண்ணு முத்தியைச்சேர்வ துண்மையாகும். பக்குவான்மாக்களுக்குப் போதிப்பதற்குரிய அச்சிவஞானமும் பலபிறவியிலும் மதித்து நிறைவாகசசெய்கின்ற சிவதருமங்களாலே நேரிடுவது ண்மையாகும். எ-று. (ருச)

அன்னஞானத்தினை யடைதராரொலரம
பன்னருமூழியும் பவத்திலாழுவா
ரொன்னபல்லுயிர்களு மிறந்தகாலத்தே
நன்னர்கொண்முத்தியை நல்கல்வேண்டியே.

(இ-ள்.) அச்சிவஞானத்தைப் பெருதவர்கள் யாவரும், சொல்லுதற்கரிய ஊழிகாலந்தோறும் பிறவிக (கடலில்) முழுகுவார்கள். இவ்வாறிருத்தலால் பல ஜீவர்களும் தேகத்தை விடுங்காலத்தில் இன்பவடிவாகிய முத்தியையடையவே ண்டுமென்று நாமாலோசித்து. எ-று, (ருரு)

இலங்கொளிஞானவீ டென்னுநாமமிட்
டலங்குறவொர் தல மமைத்துளாமது
குலநகெழுமு னிவரர் கொற்றமேவுறுங்
கலநகலில்கங் கைசூழ் கிடந்தகாசியே.

(இ-ள்.) புகழ் விளங்குகின்ற ஞானவீடென்று டெயர்வைத்துப் பிரகாச மாயுள்ள ஒருதலத்தை யுண்டுபண்ணியிருக்கின்றேம். அது கூட்டமாயுள்ள முனி வர்களை யுடையதும் பாவங்களை விருப்போடு வெல்லத்தக்க தெளிவுள்ள கங் காதீர்த்தத்தையுடையதும் ஆகிய காசித்தலமாகும். எ-று. (ருசா)

பிறங்குறுமத்தலம் பிரமபூமியென்
றறங்கிளரொருபெய ரடைந்ததாயிடை
நிறங்கிளாதரபபுகு நேயமிக்கவர்
வறங்கெடவடைகுவர் மாட்சிஞானமே.

(இ-ள்.) ஞானப்பிரகாசத்தை யுடைய அக்காசித்தலத்திற்குப் பிரமபூமி யென்று ஒருபெயருண்டு. தருமம் விளங்குகின்ற அததலததிற்குச் சித்தபரிபாகத் தோடு சென்று அன்பு செய்வார்களானுல் கொடிய குணங்களாகிய வெப்ப மொழிந்து சொரூபஞானத்தை யடைவார்கள், எ-று. (ருஎ)

(ப-ம்.) காசியென்று சொல்பவருக்கும், சொல்லக்கேட்பவருக்கும், கா சிக்குப்போக முயல்பவருக்கும், முயன்றவாறு அத்தலத்தை யடைந்தவருக்கும், போவாருக்குதவிசெய்பவருக்கும் அறிவைப் பிரகாசிப்பித்துப் பின்னர் பிரமஞா னத்தைத்தந்தருளுவதன்றிச்சொரூபஞானத்தையுடைய ஜீவன்முத்தரனேகரைச் சதாகாலமுந் தன்னிடத்துககொண்டிருப்பது அக்காசித்தலமாதலின் அப்பதி யைப் பிரமபூமியென்று கூறினர்.

பிறதலத்தெண்ணரும் பிறவிவைகிய
வறமொருபவத்துற வசிமுத்தந்தரு
மறவபராதமின் மாண்பினோர்க்கெலா
முறவொளிர்ஞானத்தை யொல்லைநல்குமே.

(இ-ள்.) அன்னியதலங்களில் கணக்கில்லாத பிறவியெடுத்து வாசஞ் செய்தலால் வரும் புண்ணியங்களை, காசித்தலத்தில் ஒரு பிறவியெடுத்து வசித்தால் அடையக்கூடும் பாவங்களாகிய அபராதஞ்செய்யாத மாட்சிமையுள்ள உத்தமர்கள் யாவருக்கும் உள்ளேபிரகாசத்தைத்தருகின்ற மெய்ஞ்ஞானத்தை அத்தலம் விரைவாகக்கொடுத்தருளும். எ-று. (ருஅ)

புரியபராதஞ்சால் புகருயிர்க்கெலா
மரியயாதனையின தந்தத்தெய்துமா
லுரியபராதமென் றுரைத்த தென்னெனிற்
றெரிதரநால்வர்க்குஞ் செப்புவாமரோ.

(இ-ள்.) செய்கின்ற சிவாபராதங்களால் அதிகரித்துக்களங்கத்தையடைந்த ஜீவர்களெல்லாம் (காலவைரவருடைய தண்டனையால்) அருந்துயரத்தை யநுபவித்து முடிவில் முத்தியடைவார்கள். அபராதமென்றுசொன்னது யாதென்றால், பிரம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரரென்னும் நான்கு வருணத்தார்க்கும் விதித்துள்ளவைகளை (தேவர்களே) நீங்களறியுமாறுகூறுகின்றோம். எ-று. (ருகூ)

நிறைதருமயன்மனை வசித்தனீதியில்
கறையுடைக்கயவர்தங் கையதேற்றுண
லறையனுசாரமற் றயோக்கியஞ்செயன்
மறையவர்புரியபராதம் வானர்காள்.

(இ-ள்.) பிராமணர் செய்கின்ற அபராதமாவன, செல்வம் நிறைந்துள்ள அன்னியர்வீடுகளிலே குடியிருத்தல், நீதியறியாதவர்களும், களங்கமுள்ளவர்களுமாகிய மூடர்களிடத்துப் பொருள்வாங்கி யுண்ணுதல், வேதங்களாலே இழிவென்று சொல்லத்தக்க அனுசாரங்களைச்செய்தல் அயுக்தமானவைகளைச் செய்தல் (முதலியவைகளென்று) தேவர்களே (அறிவீர்களாக.) எ-று. (சூ0).

கருநிலாவுயிர்த் துரோகம்புரிந்திடன்
மரியதன்மையிற் கடன்வாங்கிமீளவுந்
தெரிதரக்கொடுத்திடல் செயாமையின்னவை
யரியமன்னவரப ராதமாகுமால்.

(இ-ள்.) உற்பத்தியால் விளங்கியிருக்குஞ் சீவர்களுக்குத் துரோகஞ்செய்தல் தமது அதிகாரசம்பத்தைக் காண்பித்துக் கடன்வாங்கி, கொடுத்தவர் மனந்தெளியுமாறு பின்னர் அக்கடனைக் கொடாதிருத்தல் இவைபோன்ற தொழில்கள் அருமையுள்ள அரசராற்செய்யப்படும் அபராதங்களென்று தேவர்களே அறியக்கடவீர்கள். எ-று. (சூக)

அலைகடற்புவியிடத் தபத்தங்கூறுத
னிலைகெடவகஞ்சுருக் கிடுதனீடிய
தலைமையர்தமைப்பணி யாமைநாய்கர்தா
மலைவறப்புரியப ராதமாகுமே.

(இ-ள்.) அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற பூமியின்கண் வைசியர் செய்யும் அபராதமாவன (இலாபத்தையுத்தேசித்து) பொய்வார்த்தை கூறுதல் உலகியல் கெடுமாறு தானியங்களைக்குறையவிற்றல் குணத்தாலுங் கல்வியாலுந் தவத்தாலுந் தயையாலுஞ் சாந்தத்தாலும் உயர்ந்தவர்களை வணங்காதிருத்தல் முதலியவைகளாம். எ-று. (௬௨)

முன்னவர்தமைவணங் காமைமொய்த்தெழு
மின்னல்செய்மதுக்குடி யிகழ்புலாலுணல்
பன்னருமவஞ்சனை யாதிபண்ணுதல்
பின்னவர்தம்மப ராதம்பேசுங்கால்.

(இ-ள்.) சூத்திரர்கள் செய்யும் அபராதமாவன, தமக்குமேற்பட்ட மூன்று ஜாதியாரையும் வணங்காதிருத்தல், நிறைந்ததுன்பங்களை ஆன்மாக்களுக் குண்டுபண்ணுகிற மதுவைப்பானம் பண்ணுதல் அறிவுடையோரால் இகழத் தக்க மாமிசங்களை யுண்டல் சொல்லுதற்கரிய வஞ்சனைசெய்தன், முதலியவைகளாம். எ-று. (௬௩)

இத்தகுபாதக மெய்தலின்றியே
யுத்தமக்காசியை யுற்றுமேவுவோர்க்
கத்தகுபோழ்தினே யபேதஞானந்தான்
கைத்தலநெல்லியிற் கலப்பதுண்மையே.

(இ-ள்.) இவ்வாறாகத்தெரிவித்த பாதகங்கள் தம்மை யடையாதவாறு (மனதைத் தபோமார்க்கத்திற்செலுத்தி) உயர்ந்த காசித்தலத்தையடைந்து விருப்போடு வசிப்பவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் வசிக்கின்ற அக்காலத்திற்றானே பேதமற்ற சொரூப ஞானங் கிடைப்பது சத்தியமாகுமென்று (தேவர்களே அறிவீர்கள்.) எ-று. (௬௪)

இனையபல்வளம்பொலிந் திலகுகாசியை
நினையவுமரும்பய னிரம்பிமுற்றிடு
மனையநற்காசியை யடைதராரெலாந்
துனையவெவ்வலிகொடு துன்பநீங்குவார்.

(இ-ள்.) இத்தன்மையான ஞானவளப்பம் பலவும் நிறைந்து விளங்கப்பெற்ற காசித்தலத்தை நினைத்தமாத்திரத்து பெரும் பிரயோசனங்கள் சூழ்வனவாகும். நலமுள்ள அக்காசிப்பதியைச் சேராதவர்கள் யாவரும், என்ன புண்ணியங்களை வினாவாகக்கொண்டு துயரமாகிய (கடலைக்) கடப்பார்கள். எ-று. ()

பூமிவளம், செல்வவளம், கல்விவளம், தீர்த்தவளம், மூர்த்திவளம், தலவளமுதலிய வளப்பங்கள் நிறைந்துள்ளது அத்திருத்தலமாகலின், பல்வளம் பொலிந்திலகு காசியையென்றுகூறினார்.

அன்னியதலங்களி னுற்றலால்வரு
துன்னியபற்பல் துரோகமியாவைக்கு
மின்னியகாசியை விரும்பிக்காண்டலே
மன்னியபெருங்கழு வாயென்றேருமின்.

(இ-ள்.) அன்னிய ஸ்த்தலங்களிற் செய்த நிறைவாயுள்ள பல ப்ர்தகங்களும் நீங்குதற்கு நிலையாக மதித்துச் செய்யத்தக்க பெரிய பிராயச்சித்தம் யாதென்றால், விளக்கமுற்ற காசித்தலத்தை விருப்புடன்போய்ப் பார்த்தலொன்றே யாகும் தேவர்களே யறிவீர்களாக. எ-று. (௬௬)

காசியையடைந்துசெய் கடுந்துரோகத்திற்
கேசிலாவொருகழு வாயுமில்லையாங்
காய்சினவன்னையுங் கருப்பதுக்கமே
வீசுவள்காசிமற் றதனைவீட்டுமே.

(இ-ள்.) காசித்தலத்தை யடைந்தபின்பு செய்கின்ற கொடும்பாவங்களுக்குக் குற்றமற்ற ஒரு பிராயச்சித்தமுங் கிடையாது. பெருங்கருணையுள்ள தாயாரும் பிரசவவேதனைப்படும்போது கோபங்கொண்டு புத்திரனிடத்துப்பராமுகஞ் செய்வள். அக்கருப்பவேதனையொழித்து இன்பத்தைத் தருவது காசித்தலமாகுமென்று (தேவர்களே தெரிவீர்களாக.) எ-று. (௬௭)

நல்சாத்திரங்குரு சேவைநண்ணினோர்
சொல்லருங்காசிக்குத் துரோகஞ்செயகலார்
செல்லறீரன்னைக்குத் துரோகஞ்செய்பவர்
புல்லருங்காசிக்கும் புதுக்குவாரதே.

(இ-ள்.) மேலான வேதாந்த சாஸ்த்திரங்களை வாசித்தறிந்து சற்குரு சேவைசெய்த சாதுக்கள் மகிமைகூறுதற்கரிய காசித்தலத்துக்கு நிந்தை சொல்லார்கள். கருணைமாறாத தாயாருக்குத் துரோகம் நினைத்துச்செய்கின்ற (அதி பாதகர்கள்) அடைதற்கரிய காசித்தலத்திற்கும் நிந்தையுண்டாக்குவார்கள். எ-று.

நலமலிதருமமே நமதுருபமாம்
புலமலிதரவிஃ துணர்ந்தபுந்தியோர்
குலமலியதைவிடார் குருட்டுமூடர்க
ணிலமலிதரவது நீத்துமாழ்குவார்.

(இ-ள்.) நன்மை நிறைந்த தருமமே நமக்கு வடிவமாகும் அறிவின்கண் அனுபவமாக இந்த ரகசியங்களைத் தெரிந்த புத்திமான்கள், மேன்மை நிறைந்த அத்தருமத்தை விடாது செய்வார்கள். ஞானநேத்திரமில்லாத அஞ்ஞானிகள் உலகத்தில் மேன்மேல் பிறப்படையத்தக்கவராதலின் தருமஞ்செய்யாதொழிந்து மயங்குவார்கள். எ-று. (௬௯)

பூலோகாதிபத்தியம், இந்திரலோகாதிபத்தியம், பிரமலோகாதிபத்தியம், விஷ்ணுலோகாதிபத்தியமுதலிய சுகங்களுக்குத் தருமங்காரணமாதலின் நலமலிதருமமென்று கூறினார்.

அளவிடற்கரியநம் மடித்தியானத்தா
லுளவிடயங்களென் பனவொழிந்திடுங்
களவுறுமவையறக் கடியபாவமும்
வளர்வதின்றுயிட மின்றிமாயுமே.

(இ-ள்.) அளவிடக்கூடாத மகிமையுள்ள நமது திருவடியைத் தியானஞ் செய்வார்களானால், பிரபஞ்சப் பற்றுக்கள் யாவும் அவர்களை விட்டு விலகிப் போகும் வஞ்சனைக்கிடமாயுள்ள விஷய வாசனை யொழிந்தால் கொடும்பாவங் கள்வளருவதற்கிடமில்லாமல்நாசத்தையடையும்(தேவர்களேயறிவீர்களாக.)எ.று.

நமைநினைப்பவரிட நாமகன்றிடோ
மமைதருமறந்த ஞல்வளர்ந்திடு
நமைமறப்பவரிட நாம்புகுந்திடோ
மமைதருமறமத ஞல்விருத்தியே.

(இ-ள்.) நமது திருவடியைச் சிந்திக்கின்ற அடியார்களை நாம் விட்டுப் பிரியமாட்டோமாதலால் அவர்கள் செய்யுந்தருமம் நாளுக்குநாள் வளர்ந்தோங் கும். நம்மை மறப்பவரிடத்து நாம் வீற்றிருக்கமாட்டோமாதலின் அவர்கள் செய்யும் பாவம் நாளுக்குநாள் விருத்தியாகும். எ-று. (௭௧)

(ப.ம்.) சிவனடிக்கு, அன்புசெய்பவர் செய்யும் பாவமும் புண்ணியமாகுமா ஞல், புண்ணியம் ஒன்று கோடியாமென்பது தோன்ற, வளர்ந்திடுமென்றும், சிவனடிக்கு அன்பில்லாதவர்கள் செய்யும் புண்ணியமும் பாவமாகுமாஞல் பா வம் மேற்கூறியவாறு வளருமென்பது தோன்ற விருத்தியென்றுங் கூறிஞர்.

மற்றுநந்தியானத்தான் மாயும்பாதகஞ்
சொற்றபேரானந்த சொரூபமாநமைக்
கற்றவர்தியானிப்பார் கதியைநண்ணுவார்
மற்றவர்விடையவா தனையின்மாய்வரே.

(இ-ள்.) தேவர்களே கேட்பீர்களாக. நம்மை தியானஞ் செய்வார்களாஞல் பாவங்களொழிந்துபோம்சொல்லப்படுகின்ற மேலான ஆநந்தவடிவமாவார்கள். ஆதலால், நமதிலக்கணத்தை வாசித்தறிந்தவர்கள் நம்மைத்தியானிப்பர். பின்னர் முத்தியையடைவார்கள். வாசித்தறியாதவர் உலகவாதனையிலகப்பட்டு மரணத் தையடைவார்கள். எ-று. (௭௨)

கறையுறுபுண்ணிடைக் கலக்குமீயெனக்
குறைமதியாளர்கள் பவஞ்சங்கூடுவார்
நறைகமழ்மலர்மது நண்ணுமீயென
நிறைகுநர்நம்மடி நினைந்துநண்ணுவார்.

(இ-ள்.) உதிரந்தோய்ந்த செம்புண்ணிடத்துச் சேரும் ஈயைப்போல் அற்பபுத்தியுள்ளவர்கள் உலகவாழ்க்கையிலகப்பட்டு மயங்குவார்கள், வாசனை

பரிமளிக்கின்ற புட்பத்தினிடத்துள்ள தேனையடைந்த ஈயைப்போல பேரறிவினை யுடையவர் நமது திருவடியைச்சிந்தித்து முத்தியின்பம்பெறுவார்கள். எ-று. (எ௩)

மன்னுவேதாந்தநல்வழி யுணர்ந்துமேற்
றுன்னுபல்விடயமுந் தொலைத்துநம்மடி
யென்னுமோர்மரக்கல மியையப்பற்றியே
பன்னுவெம்பவக்கடல் கடப்பர்பண்பினோர்.

(இ-ள்.) உத்தமகுணமுள்ளோர், நிலைபெற்ற வேதாந்தநூல்களை வாசித்து முத்திமார்க்கத்தையுணர்ந்து அதன்பின்னர் நிறைவாயுள்ள பலவிஷயங்களையும் ஒழித்து (அதன்வாசனையையுங்கெடுத்து) நமது திருவடியென்கின்ற ஒப்பற்ற கப்பலைப்பற்றிக்கொண்டு கொடிய ஜனன சமுத்திரத்தைக் கடப்பார்கள். எ-று.

மருவுநம்மடித் தியானத்தின்வாய்த்திடுந்
திருவமர்முத்தியிற் சிறந்ததொன்றிலைப்
பருவரலொழிதரப் படருமியாவரு
மொருவருங்காசியை யுறுதல்வேண்டுமால்.

(இ-ள்.) (புண்ணியபலத்தால்) கிடைக்கின்ற நமது திருவடித்தியானத்தாலுண்டாகும் ஞானசம்பத்தையுடைய மோட்சசுகத்துக்கு மேற்பட்ட சுகங்கிடையாது பிறவித்துன்பம் நீங்கவேண்டுமென்று நன்மார்க்கத்தில் நடக்கின்ற எல்லோரும் விட்டுநீங்காம லிருக்கப்பெற்ற காசித்தலத்தை அவசியம் சேரவேண்டும். எ-று. (எ௫)

என்றுவானுடருக் கீசன்கூறின
னன்றுவானவரெலா மாடிப்பாடியே
நன்றுநாம்பெற்றன மென்றுநாயகத்
தொன்றுவான்காசியை யுள்ளிவாழ்ந்தனர்.

(இ-ள்.) இப்படி யென்று சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்களுக்குச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தனர். அப்போது தேவர்கள்யாவரும், ஆநந்தக் கூத்தாடி தோத்திரஞ் செய்து, நாம் உண்மை யுபதேசத்தைப் பெற்றோமென்று சிந்தை நாயகமாகிய பெருமை வாய்ந்த காசித்தலத்தைச் சிந்தித்துப் பரமசுகம்பெற்று வாழ்ந்தார்கள். எ-று. (எசு).

கலியிடைமுத்தியைக் கலக்கவேண்டினோ
ரொலிகெழுகாசியை யுற்றுவைகலே
வலியுடைத்தெனமன மதித்தியாவர்க்கு
மெலிவறவுரைத்தனர் மேலைவானவர்.

(இ-ள்.) அவ்வாறு சுகத்தையடைந்த மேலோராகிய தேவர்கள், கலியுகத்தில் முத்தியையடைய விரும்பினவர்கள் (யாவரானாலும்) (வேதங்கள்) ஆரவாரித்துக் கூறுதற்குரிய காசித்தலத்தை யடைந்து வாசஞ்செய்தலே உறுதியாயுள்ள சாதனமென்று மனதில் மதித்து எல்லோருக்குஞ் சந்தேகம் நீங்கும்படி போதித்தனர். எ-று. (எஎ)

சொற்றதோரென்றவ தூதனோதினன்
மற்றவன்வாய்மொழி கேட்டமன்னவன்
பெற்றனன்கதியெனப பிறங்குநெஞ்சினன்
கொற்றமார்காசியுட் குறித்துவைகினன்.

(இ-ள்.) நான் சொல்லிய இக்கதையைத் தெளிந்தறிவாயென்று, கங்கைக்கரையில் வந்த அவதூதராகிய பெரியவர் சொன்னவார்த்தையை (அன்போடு) கேட்ட மிதிலையாதிபனாகிய சனகராஜன், நான்முத்திபெற்றேனென்று விளக்கமுற்றமனதுடன் பாவங்களை வெல்லுகின்ற வலியுள்ள காசித்தலத்தின் மகிமையைச் சிந்தித்துக்கொண்டு அத்தலத்தில் வாசஞ்செய்தனன், எ-று. (எ௮)

ஆதலிற்காசியைப யடையுமாநந்தங்
காதலிற்கொள்பவர் கலபபுறூர்நர
கோதலினதுமன முறுதபாவியர்
சாதலிற்பெருந்துயர் தலைக்கொள்வாரொன்றும்.

(இ-ள்.) ஆனபடியால் காசித்தலத்துக்குப்போகவேண்டுமென்கிற சந்தோஷத்தை அன்போடு மனதிற்கொள்பவர்கள் (ஒருக்காலும்) நரகத்தையடையார்கள் அத்தலத்தின் மகிமையை வாயினாற்சொல்லாமலும், மனத்திற் சிந்தியாமலும் இருக்கின்ற பாவிகள் மரணகாலத்திலுண்டாகின்ற துயரத்தைப் பார்க்கிலும் அதிக துயரத்தை எக்காலமும் மேற்கொள்ளுவார்கள். எ-று. (எக)

என்றுசெங்கோலுடை யிறைவன்கூறினா
னன்றுவண்சபையிடை யமைந்தசான்றவர்
நன்றுளமகிழ்ந்தனர் நைமிசத்துளீ
ரொன்றுமாறிதுவெனச் சூதனோதினன்.

(இ-ள்.) இப்படியென்று செங்கோற்கடவுளாகிய இயமன் அக்காலத்தில் ஞானவளமுள்ள சபையிலிருக்கின்ற பெரியோர்களுக்குக் கூறினான், அப்பெரியோர்கள் கேட்டு (காசித்தலத்தின் மகிமையைச் சிந்தித்து) களிகூர்ந்தனர், நைமிசவனவாசிகளாகிய சவுநகாதி முனிவர்களே உள்ளவாறாகிய இதை உணருவீர்களென்று சூதமகாமுனிவர் திருவாய்மலர்ந்தனர். எ-று. (அ0)

## இருபத்துமூன்றாவது தேவர்களுபதேசம்பெற்ற அத்தியாயமுற்றியது.

ஆக அத்தியாயம் உ௩-க்கு திருவிருத்தம். (அஎ௩)

திருச்சிற்றம்பலம்.

திருச்சிற்றம்பலம்.

# இருபத்திநாலாவது சநாதனன் முத்தி யடைந்த அத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

நன்னலம்பொலிதரு நைமிசத்தவர்
முன்னருஞ்சூதமா முனிவற்போற்றியே
யின்னமுங்காசிமாக் கதையியம்பெனப்
பன்னருமம்முனி பகர்தன்மேயினான்.

(இ-ள்.) மேலான சுகானுபவத்தால் விளங்குகின்ற நைமிசவன வாசிக ளாகிய சவுநகராதிமுனிவர்கள், நினைத்தற்கரிய மகிமையுள்ள சூதமகாமுனிவரை வணங்கி பெருமைதங்கிய காசித்தலமகிமையை இன்னமுங் கட்டளையிடவே ண்டுமென்று பிரார்த்திக்க சொல்வதற்கரிய அச்சூதமுனிவர் கூறத்தொடங்கி னார். எ-று. (க)

காமமேபிறவிவித் தாகுங்கண்ணிலாக்
காமமேசிவனடிக் கலப்புநீக்கிடுங்
காமமேயவத்தையிற் கலக்கச்செய்திடுங்
காமமேநரகெலாங் காணியாக்குமே.

(இ-ள்.) பிறவியாகிய விருக்ஷந்தழைப்பதற்குக் காமமே, விரையாகும் தாக்ஷணியமில்லாதகாமமே, சிவபெருமான் திருவடியிற்சேரவொட்டாமல் வில க்கும். காமமே, எல்லாத்துயரங்களிலு முழுகும்படிசெய்விக்கும். காமமே, நர கபூமியைக்காணியாக்ஷியாக ஆளும்படி செய்விக்கும். எ-று. (உ)

மனைவியர்மக்களில் வாஞ்சையுண்மையே
புனைதருநலமெலாம் போக்கித்தாழ்த்திடு
மனைவியர்மக்களில் வாஞ்சையின்மையே
புனைதருபரகதி பொருந்தவுய்க்குமே.

(இ-ள்.) பெண்டு பிள்ளைகள்மேல் ஆசையுண்டாயிருத்தலே மேலாகிய சுக ங்களையெல்லாம் நீக்கி தாழ்ந்த நிலையிற்சேர்க்கும், மனைவிமக்களின்மேல் ஆசை யில்லாதிருத்தலே மிகவுமுயர்ந்த மோட்ச பூமியிற் சேரும்படி செலுத்தும். எ-று.

பிறவிவித்தாவதும் பெருகுதுன்பெலா
மறவியில்லாதுற வயக்குவிப்பது

முறவியலொழிப்பது முணர்ச்சிமேவிடுந்
துறவியல்கெடுப்பதுஞ் சொன்னவாஞ்சையே.

(இ-ள்.) பிறவித் துன்பத்திற்கு விரையாயிருப்பதும் அதிகரித்த துக்கானுபவங்களெல்லாவற்றையும் மறந்துவிடாமல் மேன்மேல் அதிகரிக்கும்படி செய்வதும், சிநேகவாஞ்சையைக்கெடுத்துவிடுவதும். அறிவை விசாலப்படுத்துகின்ற துறவாச்சிரமத்துக்குப் போகவொட்டாமற் செய்வதும் மேற்கூறிய ஆசையாகும். எ-று. (௪)

(ப-ம்.) ஆசைக்கடியானகிலலோகத்தினுக்கு மாசற்ற நல்லடியான் என்றும் ஆமுனிச்சையே. மேலுமேலும் பிறப்பளிக்கும் வித்தென்றும். ஆசையெனும் பெருங்காற்றூடென்றும் ஆன்றோர் கூறியவற்றாலுமுணர்க.

ஆசைசற்றிருந்திடி னதினிமித்தம்வந்
தோசைசால்வெகுளியு மொருங்குநண்ணிடு
மாசையாரஃதுற மயக்கமும்முறு
மீசையாரடிக்கலப் பிரிக்குமின்னவே.

(இ-ள்.) காமஞ்சிறிதிருப்பினும் அக்காமங்காரணமாக அறிவுடையோர் விரிவாக எடுத்துரைத்தற்குரிய கோபமும் வந்து கலந்திடும். களங்கமுள்ள கோபங் காரணமாக மயக்கமும் வந்து சேரும். காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்றுங் கலந்து பரதேவியின்றிருவடிகளை அணுகவொட்டாமற் பிரித்துவிடும். எ-று.

பெண்ணிடத்தாசையுட் சிறிதுபெற்றிடின்
மண்ணிடத்தாசையும் வந்துகூடிடு
மெண்ணிடத்தஃதுற விரியத்தக்கதோ
கண்ணிடக்கொடியதாங் கனகவாசையே.

(இ-ள்.) பெண்ணாசை சிறிதிருந்தாலும் அதனிமித்தம் மண்ணாசையும் வந்து சேரும். அம்மண்ணாசையிருக்குமானால் சிந்தித்தாலுங் கொடுமையைத் தருவதாகிய பொன்னாசை ஒருக்காலும் விட்டு நீங்காது. எ-று. (௫)

(ப-ம்.) பெண்ணாசையுடையோர், அந்தப்பெண்ணிருப்பதற்கு ஓரிடமும், காப்பதற்குத் துணையும் தேடவேண்டும். அவ்விடமுந் துணையும் பொன்னையன்றி அமையாமையின் கனகவாசை இரியத்தக்கதோவென்று கூறினார்.

ஆசையில்லார்களே யறவர்மேலவ
ராசையில்லாரகளே யருந்தவத்தின
ராசையில்லார்களே யருட்கலப்பின
ராசையில்லார்களே யரியமுத்தர்கள்.

(இ-ள்.) ஆசையை நீத்தவர்களே தருமரூபிகள். ஆசையைக்கடிந்தவர்களே அரியதவத்தையுடையோர்கள் ஆசையைவிலக்கினவரோ மேலானவர்கள் ஆசையைப்போக்கினவர்களே திருவருட்பிரசாதத்தை யுடையோர்கள். ஆசையைக கடந்தவர்களே மேலாகிய முத்திநிலையினிற்பவர்கள். எ-று. (௬)

ஆசையுட்பட்ட வரல்லற்பட்டவ
ராசையுட்பட்டவ ரளற்றிற்பட்டவ
ராசையுட்பட்டவ ரயாவிற்பட்டவ
ராசையுட்பட்டவ ரரங்கப்பட்டவர்.

(இ-ள்.) ஆசைக்குடன் பட்டவர்களே, எல்லாத்துயரங்கட்கும் உள்ளாவார். ஆசையிற் கட்டுப்பட்டவர்கள், எல்லா நரகங்களையு மனுபவிப்பர். ஆசையிற் சம்பந்தமுடையவர்களே, மறதிக்குக்காரணமாகிய அஞ்ஞானத்தில் முழுகினோர்கள். ஆசையில் மேம்பட்டவர்களே, பிறவியாகிய நாடகச்சாலையில் நடனஞ்செய்பவர்கள். எ-று. (அ)

மூவகையாசையு முருங்கமாற்றியே
யாவகைசிவனடி யருச்சித்தனபின்மா
தேவகைதொழுபவர் செல்வவென்றுபல்
பாவகைபாடுவோர் பரமமுத்தரே.

(இ-ள்.) (மண், பெண், பொன்) என்னும் மூன்றாசையும் ஒருமிக்கக்கெடுத்துப் பிழைக்குமார்க்கத்தை யுத்தேசித்து, சிவபெருமான் பாதங்களில் அருச்சனை செய்து, அன்போடு சிவரூபங்களைவணங்குபவரும் சிவஞானச்செல்வனே என்று பலபாவினங்களைப்பாடி (ஆடுபவரும்) மேலாகிய முத்தியடைவார்கள். எ-று. (கூ)

பாவியநசையெலாம பாழ்படுத்துமே
லூரவியகாசியை யுற்று நன்மையே
விரவியகங்கைநீர் விருப்பினாடுமா
தரவியல்பெற்றவர் சார்வர்முத்தியே.

(இ-ள்.) ஞானத்தைத்தருகின்ற காசிததலத்தையடைந்து நன்மைக கூட்டங்களையுடைய கங்காதீர்த்தத்தில் விருப்புடன் ஸ்நானஞ்செய்யவேண்டு மென்கிற அன்பை மேற்கொண்டவர்கள் முத்தியடைவார்களாதலின் விரிந்த ஆசைகளெல்லாவற்றையும் பாழாக்கி விடுவீர்கள். எ-று. (கo)

அனாதியெம்பரஞ்சுட ரமருநகாசியின்
றனாதொருபெரும்புலஞ் செறிந்தவேதியன்
சனாதனனெனும்பெயர் தரித்தமேல்வ
னினாதவையாயின விரிக்குமெண்ணத்தான்.

(இ-ள்.) அனாதியேயுள்ள எமது சிவபரஞ்சோதியாகிய மகாதேவர் எழுந்தருளியிருக்கின்ற காசித்தலத்தில், பேரறிவுள்ளவனும் சனாதனனென்னும் பெயர் பெற்றவனும் மேன்மையுள்ளவனுமாகிய ஒருபிராமணன் துன்பங்களாயுள்ளவைகளைப் போக்கவேண்டுமென்கிற நல்லசிந்தனையுள்ளவன். எ-று. (கக)

சந்திவந்தனைசெபந் தவந்தியானமு
நந்தியபலவுமுண் ணசையினாற்றுவான்

முந்தியமாமறை முழுதுமோர்ந்துளா
னிந்தியமவித்தவ ரிணக்கம்பெற்றுளான்.

(இ-ள்.) சந்திகாலத்திற்செய்யுந் தேவவந்தனையும், ஜெபமும், தவமும், தியானமும், இன்னும்பலவாயுள்ள சற்கருமங்களையும் உள்ளன்போடு செய்பவன், முதன்மையாயுள்ளதும் பெருமைவாய்ந்ததுமாகிய வேதங்கள் முழுவதையுமறிந்தவன் பஞ்சேந்திரிய நிக்கிரகஞ்செய்த பெரியோர்களுடைய கருணையைப்பெற்றவன். எ-று. (௧௨)

கருதரும்பெருமைசால் காசிமான்மியம்
பொருவறக்கேட்பது புரிந்தபுந்தியான்
வெருவறக்கங்கைநீர் விரும்பியாடலே
திருவருநாளெனச் சிந்தைசெய்துளான்.

(இ-ள்.) சிந்திப்பதற்கரிய பெருமையிற்சிறந்த காசித்தலமகிமைகளைச் சதாகாலமுங்கேட்க வேண்டுமென்று விரும்புகின்ற புத்தியுள்ளவன். பிறவிப்பயமொழிய கங்காதீர்த்தத்தில் விருப்போடு ஸ்நானஞ்செய்தலே சிவஞானச்செல்வங்கிடைக்குங் காலமென்று சிந்தித்துள்ளவன். எ-று. (௧௩)

அன்னமாமறையவற் கமைந்தபுத்திர
ரென்னவந்துதித்தவ ரியம்பின்மூவர்க
டன்னமுங்குணமிலார் சற்றுமோர்தரா
தின்னலேபாவர்க்கு மியற்றுதன்மையார்.

(இ-ள்.) அச்சனுதனனென்னும் பிராமணனுக்கு, மூன்று புத்திரர்கள்பிறந்தார்கள். அவர்கள் சிறிதும் நற்குணமில்லாதவர்கள். தீர்க்க ஆலோசித்துப் (பாவத்திற்கு அச்சங்கொள்ளாமல்) பிறருக்குத் துன்பஞ்செய்வதே விரதமாகக் கொண்டவர்கள். எ-று. (௧௪)

கரவுசெய்திடுதலுங் கட்குடித்தலும்
விரவுசூதாடலும் விலைமடந்தையர்
பரவுமிற்புகுந்தவர் பயோதரத்துணை
யுரவுறக்கலத்தலு மொழுக்கமாக்கினர்.

(இ-ள்.) (பிறர்பொருளை வஞ்சித்துத்) திருடுதலும், மதுபானஞ்செய்தலும், பாவசம்பந்தமுள்ள சூதாடுதலும், விலைமாதர்களைத் துதித்து அவர் மனைக்குள்ளே போய்த் தமது மார்பில் அவர்களுடைய குஜகும்பங்களழுந்தும்படி கூடுதலுமாகிய, இவைபோன்ற தீய ஒழுக்கங்களையே செய்வார்கள். எ-று (௧௫)

தந்தையையடித்தலுந் தாயைவைதலு
முந்தைமாமறையுணர் முதன்மையோர்தமை
நிந்தைசெய்திடுதலு நெறியெனக்கொடு
கந்தைவீசவாவெனக் களித்தியங்குவார்.

(இ-ள்.) பிதாவைத்தண்டித்தலும், தாயாரைவைதலும், அனுதியாயுள்ள பெருமைவாய்ந்த வேதங்களையுணர்ந்த பெரியோர்களை நிந்தித்தலும், இவைபோன்ற நடைகளையே நியமமாகக்கொண்டு கட்டுத்தறியை முறிக்கின்ற (மத) யானை போலச் செருக்கடைந்து நடப்பார்கள். எ-று. (கசு)

மூத்தவன்சினியென மொழியுநாமத்தா
னேத்தருஞ்சோதிட மினிதுதேர்ந்தவன்
பாத்துணர்ந்தரிவையர் பாற்புகன்றிடும்
வேத்தவையிடத்தினுஞ் சென்றுவிள்ளுமே.

(இ-ள்.) மூத்தகுமாரன் சினியென்று சொல்லத்தக்கநாமகரணமுள்ளவன் துதித்தற்கரிய ஜோதிடசாஸ்திரங்களை நுட்பமாக அறிந்தவன். ஜோதிடம் பார்த்துக்கொள்ளத்தக்க மாதர்கள் இன்னுரென்றறிந்து, அப்பெண்களுக்குச் சோதிடஞ்சொல்பவன் இராஜசபைக்கும் போய்ச் சோதிடஞ்சொல்வான். எ-று. (கஎ)

இளமடமாதர்கை யிரேகைநோக்கியே
வளமுறப்பலம்புகல் வல்லனுயவ
ருளமயக்குறவித முரைத்துப்புல்லியே
களவுகைக்கொடுபழி கலக்கவீட்டுவான்.

(இ-ள்.) அழகும் யவ்வனமும் வாய்ந்த மாதர்களிடத்திற்குப்போய், அவர்கள் கையிலுள்ள இரேகைகளைப்பார்த்து மேன்மேலுஞ் சவுக்கியமுண்டாகுமென்று பலன்களை விரிவாகச் சொல்லுவதில் வல்லவனுகி, அவர்கள் மனதை மயக்கும்படி போதித்து அவர்களைப்புணர்ந்து ஆபரணங்களை யபகரித்துக்கொண்டு பெண்பழிதன்னை யடையுமாறு கொல்லுவான். எ-று. (கஅ)

தோன்றுமந்நாட்டிறை சுவாகுவென்பவன்
மான்றயலார்பொருள் வாஞ்சியாதவன்
கான்றசோறெனச்சகங் காணுங்காட்சிய
னேன்றசெங்கோனடா யிருக்குநாளையில்.

(இ-ள்.) உண்டாகிய அந்நாட்டை அரசாளும் சுவாகுவென்னு நாமகரணத்தையுடைய அரசன், அயலார் பொருளை யபேட்சியாதவன். வாந்திபண்ண . சாதத்தை (வெறுப்பாகப்) பார்ப்பதுபோல் பிரபஞ்சத்தைப் பார்க்கும் காட்சியுள்ளவன். நிலையான செங்கோலை விதிவழியே நடத்துங்காலத்தில். எ-று. (கக)

ஓங்கவன்றிருமனை யுவளகம்புகாப்
பாங்கவன்மனைவித னிரேகைபார்த்தனன்
வீங்கவண்முலைத்துணை மேவவெண்ணினு
ணுங்கதுதெரிந்தன னச்சுவாகுவே.

(இ-ள்.) உயர்ந்ததும் சிறப்புவாய்ந்ததுமாகிய அச்சுவாகுவரசன் அரண்மனைக்குச்சென்று, பட்டத்தரசியாகிய மனைவியிருக்கும் மாளிகையையடைந்து,

அவள்கையிலுள்ள இரேகைகளைப்பார்த்துப் பூரித்த பயோதரங்களைத் தழுவ வேண்டுமென்னு மெண்ணத்தை வெளிப்படுத்திய (குறிப்பை) அச்சுவாகுவரசன் தெரிந்துகொண்டனன். எ-று. (௨௰)

வெட்டியவெழுஞ்சினம் விரைந்துபொங்கிட
வெட்டியகொடுமா ணேவலாளராற்
கட்டிவைத்தடித்தனன் கவலையாக்கின
னெட்டியசனுதனற் குரைத்துப்போக்கினன்.

(இ-ள்.) கொல்லத்தக்க கொடுங்கோபம் மேன்மேல்வளர்ந்துபொங்க மிகு பராக்கிரமமுள்ள பரிசனங்களைக்கொண்டு, சினியென்னும் பிராமணன் கவலையடையுமாறு கட்டிவைத்தடித்தவனாகி இச்சங்கதியை பிதாவாகியசனுதனனுக்குச் சொல்லியனுப்பினன். எ-று. (௨௧)

அனையனுமடைந்தரு காசிகூறின
னினைவருஞ்சினக்கன னிவந்தெழுந்திடத்
துனையமற்றவன்முக நோக்கிச்சொல்லுவான்
கனையொலிகருங்கழற் காற்சுவாகுவே.

(இ-ள்.) (அதைக்கேள்வியுற்ற) அச்சனுதனன் அரசனிடம்வந்து ஆசீர்வதித்தனன். ஒலிக்கின்ற பெருமைவாய்ந்த வீரகண்டையணிந்த பாதங்களையுடைய சுவாகுவரசன் நினைத்தற்கரியகோபாக்கினிமேலோங்கிவளர விரைவோடு அச்சனுதனன் முகத்தைப்பார்த்துக் கூறுகின்றனன். எ-று. (௨௨)

துட்டனைப்பயந்தனை துறந்திடாயெனின்
மட்டறவருத்துவ னுனையுமைந்தனாற்
கெட்டனைநீயெனக் கேட்டவேதிய
னிட்டமிக்குறுமொழி யியம்பிபோயினன்.

(இ-ள்.) துஷ்டப்பிள்ளையைப்பெற்ற நீர் அவனை ஓட்டிவிடாதிருந்தால், உம்மையும் பெருந்தண்டனை செய்வேன். அவனைச்சேர்த்தலால் உமக்குங்கெடுதிசம்பவித்ததென்று சொல்லக்கேட்ட சனுதனன் அவ்வரசன் மனங்களிக்கத்தக்கவாக்கியங்களைச் சொல்லிவந்து விட்டனன். எ-று. (௨௩)

தன்னகங்கவலையிற் சனுதனன்புகுந்
தின்னபொல்லாங்குவந் தெய்திற்றேயெனாப்
பன்னருங்கவலையிற் படிந்திருந்தன
னன்னமென்னடைமனை யருகுவந்தனள்.

(இ-ள்.) அச்சனுதனன் கவலையோடு தன்வீட்டுக்குள்வந்து இவ்வாறான கொடுமைவந்து சம்பவித்ததேயென்று எண்ணி, சொல்லுதற்கரிய துயரக் (கடலில்) மூழ்கியிருந்தானாக (அந்தசமயத்தில்) அன்னம்போன்ற மிருதுவான நடையுள்ள மனைவி சமீபமாக வந்தனள். எ-று. (௨௪)

கவலையென்னுற்றனை கணாதியென்றலு
மவலமிக்கொருமக னரசனுலையஞ்
சவலையிற்புகுந்துளங் குறித்ததன்மைசொற்
றுவலைசெய்மனத்தனு யுளைந்துவாடினான்.

(இ-ள்.) (அருகுவந்தமனைவி நாயகனைப்பார்த்து) நீர்யாது கவலையுற்றிருக்கின்றீர் சொல்லீரென்று கேட்டபோது குணக்கேடுள்ள மூத்தகுமாரன் இராஜக்கிரகத்திற்குப்போய் அறியாமையால் அரசமாதை விரும்பிப் பட்டபாடுகளைச்சொல்லி சதாவருந்துகின்றமனத்தோடு மயக்கங்கொண்டிளைத்தனன். எ-று.

மற்றதுகேட்டவம் மனைவியாயவ
ளுற்றதுநோக்குரு துரியமைந்தற்கே
பற்றதுவைத்துளம் பரிந்துமாழ்கினாள்
சொற்றதுபழுதெனத் துணைவன்சோர்ந்தனன்.

(இ-ள்.) நாயகன் சொல்லியவார்த்தைகளைக் கேட்டமனைவியானவள், தன்குமாரன் செய்தபாவத்தையெண்ணுமலும், தனதுநாயகனுக்கு வந்த அவமானத்தை நோக்காமலும் புத்திரவாஞ்சையால் மயங்கித்துன்பமுற்றனள். இவளுக்கு இந்தவார்த்தையைச் சொன்னது நமது குற்றமென்று சனுதனன் வாட்டங்கொண்டனன். எ-று. (உசு)

உளங்கவன்மைந்தரி னுற்றதன்றியும்
விளங்கிழைமனையினும் வெறுப்புவைத்தனன்
றுளங்குதலொழிவகை சூழ்தலுற்றனன்
களங்கமின்மனனுடைக் காமர்வேதியன்.

(இ-ள்.) மனதைக் கவலைப்படுத்துகின்ற புத்திரன்மீது வெறுப்புவந்ததன்றி ஒளிசெய்கின்ற ஆபரணங்களையணிந்த மனையாளிடத்தும் வெறுப்புவைத்து, களங்கமில்லாத நல்லெண்ணமுள்ள அழகுவாய்ந்த சனுதனனென்னும் பிராமணன் இவர்களோடு சேர்ந்துபடுந்துயரத்தை நீக்கிக்கொள்ளுமாறு ஆலோசித்தனன். எ-று. (உஎ)

பொன்மனைமுதலிய பொருளியாவையுந்
தன்மனையொடுமசார் தாங்களேகொளப்
பன்மனையிரந்துணும் பண்புமேயினான்
சென்மனைமிசையமர் காசிசேருவான்.

(இ-ள்.) வீடு பொருள்முதலிய எல்லாவற்றையும் தன்மனைவியும் புத்திரர்களும் கைக்கொள்ளும்படிவிட்டு மேகங்கள் தவழப்பெற்ற மாளிகைகளையுடைய காசிப்பதியிற்சேர்ந்து பலவீடுகளிலும் பிச்சையெடுத்துண்டு காலங்கழிக்கலாமென்கிற உத்தமசிந்தனையை யடைந்தனன். எ-று. (உஅ)

சான்றிடுபெருங்குணச் சாதுவேதியன்
கான்றிடுசோறென யாவுங்கண்டனன்

மான்றிடுதகையற வழிக்கொண்டேற்றன
ஞான்றிடுகொடிமுகி லுருவிற்காசியே.

(இ-ள்.) சர்வசாட்சியாயுள்ள பரமான்மாவைச்சிந்திக்கின்ற சாதுத்தன்மை வாய்ந்த சுஜாதனென்னும் பிராமணன் எல்லாப்பொருளேயும் வாந்தியாசனம் போற்கண்டு (வீட்டைவிட்டு) மாளிகைமேற் கட்டியகொடிகள் மேகங்களேய ளாவியிருக்கப்பெற்ற காசித்தலத்திற்குத் தடையின்றிவழிக்கொண்டு நடந்தடைந்தனன். எ-று. (உ௯)

கண்ணியமறையவன் காசியெல்லேவந்
தண்ணியபொழுதுவந் தாடிப்பாடிஞா
னெண்ணியவெண்ணியாங் கெய்திற்றுலிதென்
புண்ணியமாமெனப் பொலிந்துதுள்ளுவான்.

(இ-ள்.) சிந்தித்துவந்த சுஜாதனன் காசியெல்லேயைச்சேர்ந்தபோது பெருமகிழ்ச்சிகொண்டு ஆநந்தக்கூத்தாடிக் காசிமகிமையைப் பாடி நான் நினேத்தவண்ணங் கைகூடியது பூர்வத்திற் செய்தபுண்ணியமென்று அறிவுவிளங்கிக் குதித்தனன். எ-று. (௩0)

ஈன்றபுத்திரர்களா லின்பம்பெற்றுளே
ஞன்றவித்துணேவியா லல்லலோவினே
னேன்றவிக்காசியி னெல்லேசேர்ந்தனேன்
றேன்றவெற்கிணேயெவர் சொல்லுங்காலென்பான்.

(இ-ள்.) பெற்றபிள்ளேகளால் இச்சுகத்தை யடைந்தேன். மாட்சிமையுள்ள மனேவியால் குடும்பக்கவலே நீங்கினேன். பெருந்தன்மையுள்ள இக்காசித்தலத்தினெல்லேயையடைந்தேன் சொல்லுமிடத்து எனக்கு யாவர் சமானமானவர்களென்று சொல்லிக்கொண்டனன். எ-று. (௩௧)

மனேவிநம்மருகுற வதிந்தகாலேயு
மனேயமைந்தரினளா யமைந்தகாலேயும்
புனேகலமணிபல பொலிந்தகாலேயு
மினேயவின்பறிந்திலே னென்றுபேசுவான்.

(இ-ள்.) மனேயாள் (பூர்வத்தில்) என்பக்கத்திருந்து, உபசரித்த காலத்திலும், என் புத்திரர்களுடன் குதுகலமாகக் கூடிக்கொண்டிருந்தகாலத்திலும், பல இரத்திஞபரணங்களே நான் தரித்திருந்தகாலத்திலும், இவ்வண்ணமான சுகத்தை அறிந்திருக்கமாட்டேனென்று தன்னுள்ளே சொல்லிக்கொள்வதாயினன், எ-று. (௩௨)

திருந்தியவின்னன செப்பிவேதியன்
பொருந்தியகாசியுட் புக்குவெவ்வினே

யருந்தியாங்கைகீ ராடிவெம்பவம்
வருந்தியவசித்தனன் மனங்குளிர்ப்பவே.

(இ-ள்.) திருத்தமுற்ற இவ்வாருன வாக்கியங்களைச் சனுதனனென்னும் பிராமணன் சொல்லிப்புண்ணியப்பொருத்தமுள்ள காசித்தலத்தினுள்ளே போய் பெரும்பாவங்களை யுண்டுவிடுகிற கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து கொடும்பிறவி வருந்தி ஒழிந்துபோமாறு அத்தலத்தில் மன மகிழ்ச்சியுடன் வசித்தனன். எ-று. (கூகூ)

அன்னமென்னடையுடை யன்னபூரணி
தன்னமர்சேவையுஞ் சறுவநாயக
னன்னலச்சேவையு நயந்துசெய்தவன்
பின்னரும்பன்முறை துதித்துப்பேணுவன்.

(இ-ள்.) அன்னப்பறவைபோன்ற மிருதுவான நடையுள்ள அன்னபூரணித்தாயாருடைய விருப்பத்தைத்தருந் தரிசனமும் சர்வலோக நாயகராகிய விசுவநாதருடைய பேரின்பத்தைத்தருந் தரிசனமுஞ்செய்து அதன்பின்னர் களிப்போடு பலதோத்திரங்களுஞ் செய்வானாயினன். எ-று. (கூச)

இன்னணுய்ச்சிலபக லிருக்கவாயிடை
யன்னபூரணியொடு மரன்மகிழ்ந்தன
னென்னரும்புகுதர வெண்ணுமின்பமார்
பன்னருமுத்தியிற் பதிந்துவாழ்ந்தனன்.

(இ-ள்.) இவ்வாருன நல்லொழுக்கத்தோடு அக்காசித்தலத்தில் சிலநாள் வசிக்கும்போது அன்னபூரணித்தாயாரும் விசுவநாதருந் திருவுள்ள மகிழ்தலினுல் யாவரும் வந்து சேரவேணுமென்கிற எண்ணத்தைக் கொடுப்பதும் நிறைந்த இன்ப வடிவமானதும் சொல்வதற் கரியதுமாகிய முத்திநிலையைப்பெற்று வாழ்ந்திருந்தனன். எ-று. (கூடு)

இனியுரைத்திடலெவ னின்பமேவுவோர்
கனிமனத்தாசையைக் கழற்றிநிற்றலே
நனியுடைச்சிறப்பெனச் சூதநற்றவன்
பனியுடைத்தவர்க்கெலாம் பகர்ந்திட்டானரோ.

(இ-ள்.) இன்னுங் காசித்தலத்தின் மகிமையை மொழிவதியாது. முத்திநிலையைப்பெற வேண்டினேர், மனதைக் கனியச்செய்கின்ற மண், பெண், பொன்னென்னு மூன்ருசைகளையு மொழித்து நிற்பதே மேலாகச் சிறந்த சாதனமாகுமென்று பெருந்தவராகிய சூதமுனிவர் குளிர்ந்தமனமுள்ள சவுனகராதி முனிவர்களுக்கு உபதேசித்தருளினுர். எ-று. (கூசா)

## சனுதனன் முத்தியடைந்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம். உச-க்கு. திருவிருத்தம். கூ௱கூ.

திருச்சிற்றம்பலம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# இருபத்தைந்தாவது இரணியகருப்பன் முதலோர் முத்திபெற்றவத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

மறைமுழுதுணர்சூதன் மன்னியநைமிசத்து
நிறைசவுநகராதி நிகழ்முனிவரர்ப்பாராக்
கறைமிடற்றிறைமேய காசியின்புகழின்னு
மறைகுவதுண்டென்று வார்வத்தினறைகிற்பான்.

(இ-ள்.) வேதங்களெல்லாவற்றையும், அறிந்த சூதமகாமுனிவர் நைமிசாரணியத்தில் நிலைபெற்று நிறைந்த சவுனகர்முதலிய விளக்கமுற்ற முனிகணங்களைப்பார்த்து காளகண்டத்தையுடைய சிவபிரான் வீற்றிருக்கின்ற காசித்தலத்தின் மகிமை உங்களுக்குச் சொல்லவேண்டியவை இன்னுமுள்ளனவென்று அன்பினால் சொல்லத்தொடங்கினார். எ-று. (க)

உலகத்தின்வாழ்வார்கள் காசியினொருங்குற்று
மலகற்றபாவஞ்செய் தமைவதையுணரரா
லில்குற்றநாம்புரியுங் கருமத்திற்கிடையூறே
நிலவுற்றதெனக்கூறி நெஞ்சநெக்குருகுவரால்.

(இ-ள்.) பூமியில் வாழ்கின்றவர்களுக்குள் (சிலர்) காசித்தலத்தை விலகாதடைந்திருந்தும் சிவபுண்ணியங்களைச் செய்யாது அளவிறந்த பாவங்களைச்செய்துவருகிறோமென்று தெளியாதவர்களாகி, நாம் விளக்கமாகச்செய்யுஞ் சற்காரியங்களுக்கு விக்கினங்கள் அடிக்கடி வந்துசம்பவிக்கிறதேயென்று மனந்தளர்வார்கள். எ-று. (உ)

பாதகர்காசியிடைப் படர்ந்துசெய்பாதகமே
மேதகுநல்வினைக்கு விக்கினமாய்வந்து
னோதகவுறுவிக்கு நுவலபராதமிலார்க்
கேதமென்றுரைசெய்வ திலையிலையெஞ்ஞான்றும்.

(இ-ள்.) பாவிகள் காசித்தலத்திற்குப் போய் (புண்ணியமென்று எண்ணிக்கொண்டு) தாங்கள் செய்யும்பாவங்கள், மேலானசற்காரியங்கட்கு விக்கினமாகிவந்து துன்பத்தை யுண்டாக்கும், அத்தலத்தில் அபராதஞ்செய்யாதவர்களுக்குத் துன்பமென்று சொல்லத்தக்கவைகள் எக்காலமும் இலையாவாம். எ-று. (௩)

மறைமுழுதுணர்வாத ராயண்மாமுனிவ
னறைபுகழ்ப்பெருங்காசி யகன்றுகங்கையைத்தாண்டிப்
பொறைமலிவடதிக்கிற் போம்பொழுதிக்காசி
யுறைபவர்நிதியாசை யுறினவர்க்கிடையூறும்.

(இ-ள்.) வேதங்களை ஓதாதுணர்ந்த வேதவியாசமகாமுனிவர், சாதுக்களா லெடுத்துரைக்கப்படும் பெரும்புகழுள்ள காசித்தலத்தை யகன்று கங்காநதியைக் கடந்துபோய், மலைகளை அதிகமாகவுடைய வடதிசையை நோக்கிப்போகுங்காலத் தில் இக்காசித்தலத்தில் வசிப்பவர்கள் பொருளாசை கொள்ளுவார்களானால் அவர்களுக்கு இடையூறுண்டாகக் கடவதென்றனர். எ-று. (௪)

அரியணைமேல்வைகி யரசுசெய்பவனெனினும்
பரிதருபொருளாசை பற்றிடிற்பவமொழியான்
றெரிதருபொருண்மிக்குச் சிவணினர்களுமேலோர்க்
குரியனவெனப்போக்கி வறிஞரிலுறைவாரால்.

(இ-ள்.) சிம்மாசனத்தின்மே லிருந்து உலகத்தையாளுகின்ற அரசனாகவி ருந்தாலும் மனக்களிப்பை உண்டாக்குகின்ற பொருளின்மீது ஆசைகொள்ளு வானானால் பிறவியைக்கடக்கமாட்டான். உடையோரைப்பிரசித்தப் படுத்துகின்ற சம்பத்தை அதிகமாகவுடைய உத்தமர்களும் அப்பொருள் பெரியோர்களு க்கு உரியதென்று தானஞ்செய்துவிட்டுத் தரித்திரர்களை யொத்துக்காசித்தல த்தில் வாசஞ்செய்வார்கள். எ-று. (௫)

திகழ்தருமொருமுத்தித் திருமகள்பொலிதேத்தி
னிகழ்தருவிடையசுக மெங்ஙனம்பெறமுற்று
மகழ்தருபுனற்கங்கைக் கழுத்தளவறனின்றும்
புகழ்தருநீர்வேட்டுப் புரண்டிரந்ததுபோலும்.

(இ-ள்.) எவ்விடத்தும் விளங்குகின்ற ஒப்பற்ற மோட்சமென்னுந் திரும கள் பூரணகிருபையுடன் வசிக்கப்பெற்ற காசித்தலத்தில் வசிப்பவர்கள், (அறி வுடையோர்) நிந்திப்பதற்குரிய விஷயசுகங்களை எவ்வாறுபெறமுடியும் அவர் கள் விஷயத்தை யனுபவிக்கமுயற்சிப்பார்களானால் ஆழமாயுள்ள கங்கையில் கழுத்தளவுதீர்த்தத்தில் நின்றுகொண்டு புகழப்பெறும் அத்தீர்த்த பானத்தை விரும்பிப் புரண்டியாசித்தவனை யொப்பாவர். எ-று. (௬)

வளமலியவிமுத்த மாநகரிடையுற்று
மளமலிமலினத்தாற் பாதகமுளுற்றிடுவோர்
களமலியாதனையே கைக்கொடுகவலுறுவார்
தளமலிமனத்துற்ற சஞ்சலமொழியாரால்.

(இ-ள்.) முத்திவளப்பம் நிறைந்த பெருமைபொருந்திய அவிமுத்தமென் னுங் காசிப்பதியில் வசிக்கப்பெற்றும் களங்கம்நிறைந்த மனத்தால் தீவினைகளைச்

செய்பவர்கள் நிறைந்தவிஷம்போற் றுன்பஞ்செய்யும் வேதனைக்கதிகாரிகளாகி துயரப்படுவதுமன்றி மனத்தின்கண் உண்டாகியசஞ்சலமும் விட்டுநீங்கமாட்டார்கள். எ-று. (எ)

மாயையின்வல்லபமே வல்லபம்விடமேனுந்
தூயநல்லமுதாகத் தோற்றுவித்திடுதலினாற்
பாயமற்றதுநீங்கும் பண்பினரெஞ்ஞான்று
மாயசற்குருவருளா லானந்தமடைகிற்பார்.

(இ-ள்.) விஷத்தை யொப்பதாலும் பரிசுத்தமும் நன்மையுமுள்ளதே வாமிர்தம்போற் றோற்றுவிக்குங் காரணத்தினால் மாயையின் சாமர்த்தியமே (அளவுபடாத)சாமர்த்தியமாகும். பரவிய அம்மாயாவல்லபத்தைக் கடக்குங்குண முடையவர்கள், பரமாசாரியருடைய கருணையினால் எக்காலமும் ஆனந்தத்தைப் பெறுவார்கள். எ-று. (அ)

காசியின்வசிப்பவர்கள் கருதறம்புரியாரேன்
மாசறுஞானமிலை வைராக்கியமுமிலை
மூசியசிவபத்திமுளைப்பது மவர்க்கில்லை
வீசியவிவையாலோர் விசேடமுமிலையாமால்.

(இ-ள்.) காசித்தலத்தில் வாசஞ்செய்பவர்கள் பெரியோரால் சிந்திக்கத்தகுந்த தருமங்களைச் செய்யாதிருப்பார்களே யானால் களங்கமற்ற மெய்ஞ்ஞானம் உண்டாகாது வைராக்கியமும் நேரிடாது நிறைந்தசிவபக்தியும் அவர்களுக்கில்லை தமது வாசஸ்த்தானத்தைவிட்டு வெளிப்பட்டதனால் ஒரு விசேடமுங் கிடையாது. எ-று. (கூ)

முத்தியென்றுரைசெய்யு மொழியுமற்றில்லையெனிற்
புத்தியுண்டாம்வண்ணம் புகுத்திடும்பாதனையா
லொத்தியல்பாதகம்போ யந்தத்திலுறுகிற்பார்
சத்தியோர்பாகத்தான் றனருளுபதேசம்.

(இ-ள்.) காசித்தலத்தில் போகங்களை யனுபவித்துக்கொண்டு முத்தியைப்பெறவேண்டுமென்னும் வார்த்தையுஞ் சொல்லாமல் மனதிலுஞ் சிந்தியாமல் காலங்கழிப்பார்களானால், முடிவில் காலவைரவருடைய தண்டனைக்குடன்பட்டு வேதனைகளையனுபவித்து பின்னர் பராசத்தியை வாமபாகத்திலுடைய சிவபிரான் செய்தருளு முபதேசத்தைப்பெறுவார்கள். எ-று. (க௦)

ஆதலிற்சமுசாரத் தழுந்துதலற்றிருப்பர்
காதலிற்பெறுகிற்பார் கரிசகன்முத்தியினை
வீதலிற்கொடிதாய யாதனைமிக்கேற்றுப்
போதலிற்பின்புறுவார் பரவரும்பெருமுத்தி.

(இ-ள்.) ஆனபடியினால் காசித்தலத்தில் சமுசாரபந்தத் தழுந்தாதிருப்பவர், குற்றமற்ற மோட்சவின்பத்தை அன்போடுபெறுவார்கள். (அச்சமுசாரபந்தத்தை

யுடையோர்கள்) மரணாவஸ்தையைப்பார்க்கிலுங் கொடிதாகிய துன்பங்களை காலவயிரவர் தண்டனையால் முன்னேயனுபவித்து அதன்பின்பு துதித்தற்கரிய மோட்சசுகத்தைப் பெறுவார்கள். எ-று. (கக)

வேறு.

முந்தியகிரேதந்தன்னின் மொழிபெரும்புகழோர்சைவ
னந்தியதவத்தின்மிக்கா னற்சிவபத்திவாய்ந்தா
னந்திவானிறத்தன்மேசன் சந்நிதியடைந்துபோற்றிப்
புந்தியுட்சலனநீத்துப் பொலிபெருமுத்தனானான்.

(இ-ள்.) முதலாவதாகிய கிரேதாயுகத்தில் யாவராலு மெடுத்துரைக்கும் பெரும்புகழுள்ளவனும் அரியதவமுள்ளவனும் மேலானசிவபக்தியுள்ளவனுமாகிய ஓர்சைவன், காசித்தலத்தில் அந்திவானம்போலுந் திருமேனிவாய்ந்த தன்மேசர் சந்நிதியடைந்து வணங்கி மனக்கிலேசத்தை யொழித்து விளக்கமுள்ள முத்திநிலையைப்பெற்றனன். எ-று. (கஉ)

அன்னநாளையினோர்வேத னவிர்புழ்க்காசிமேவிப்
பன்னருமகங்காரத்திற் பயின்றுபின்பிறந்தோர்பேயாய்த்
தன்னமும்விரும்பாக்கால தண்டமும்பெற்றானென்றா
லென்னசெய்தாலும்பந்த மின்மையேசிறப்புமேவும்.

(இ-ள்.) அக்காலத்திலோர் பிராமணன் விளங்குதலுள்ள புகழமைந்த காசிப்பதியைச்சேர்ந்து மட்டுக்கடங்காத அகங்காரத்துடன் பழகிப் பின்மரணமடைந்து பின்னர் பேய்வடிவமாகிக் காலவயிரவருடைய தண்டனையைப்பெற்றனன். ஆதலால் எவ்வகையிலும் பந்தமில்லாமையே சிறப்பாகும். எ-று.(கங)

வேறு.

சாற்றுபெரும்புகழ்மேய தருமேசர்சந்நிதியிற்
றேற்றுநலத்தார்மருவுஞ் சிவயோகமடமொன்று
போற்றுமிரணியகருப்ப னெனப்படுவான்புத்தியின்மிக்
காற்றுதருக்குடையானு யமர்ந்தனனம்மடத்திறையாய்.

(இ-ள்.) (காசித்தலத்தில்) சொல்லத்தகும் பெரும்புகழையுடைய தருமேசர் சந்நிதிக்குச்சமீபத்தில் அடைந்தோர்களைத் தெளிவிக்கும் நல்லோர்கள் தங்கப்பெற்ற சிவயோகமடமொன்றுண்டு அம்மடத்தில் துதிபெற்ற இரணியகருப்பனென்னும் பெயர்பெற்றவனும் புத்தியில் அடங்காத அகங்காரமுடையவனுமாகிய ஒருவன் மடாதிபதியா யிருந்தனன். எ-று. (கச)

அன்னவன்பாற்றருமநிதி யெனும்பெயரோனரபத்தன்
பன்னருநற்குணமிக்கோன் றருக்கொழிந்தபடிமத்தான்
பின்னமறப்புகுந்தளாய்ப் பெருநட்புக்கொண்டிருந்தா
னன்னரோருதினத்தவனை நோக்கியிதுநவிலுவான்.

(இ-ள்.) அவ்விரணியகருப்பனிடத்து சிவபத்தியுள்ளவனும் சொல்வதற்கரிய நற்குணமுள்ளவனும் அகங்காரமொழிந்தவனும் தவவேடமுள்ளவனும் தருமநிதி என்னும் பெயருள்ளவனுமாகிய ஒருவன் மடாலயத்திற் பிரவேசித்து மடாதிபதியுடன் சிநேகித்து ஒருநாளவனைப்பார்த்து இதைச்சொல்லத்தொடங்கினன். எ-று. (௧௫)

ஆன்றவிரணியகருப்ப வண்ணலேபாசுபதஞ்
சான்றபெருவிரதமுடைத் தலைவனேயிம்மடத்துத்
தோன்றவெதுபுரிந்தமர்வாய் சொல்லுகமற்றதுதோர்ந்து
கான்றபதமெனப்பவஞ்சங் களிப்பயானனுட்டிப்பேன்.

(இ-ள்.) நிலைபெற்ற இரணியகருப்பனென்னும் பெயருள்ள பெரியோரே மாட்சிமையுள்ள பாசுபத சமயவிரதத்தை யனுட்டிக்குந் தலைவரே இம்மடாலயத்தில் எந்தச்சாதனத்தைப் பயின்று வசிக்கின்றீர் சொல்வீராக அதையுணர்ந்து உலகத்தை வாந்தியாசனம்போற் பார்த்து உண்மகிழ்ந்து யான் அந்நிலையிற் பழகுகின்றேன். எ-று. (௧௬)

என்றுபுகன்றிட்டதுகேட் டிலங்குதமனியகருப்ப
னன்றுமொழிகுவன்றரும நிதியேவேதாந்தத்தாற்
றுன்றுபெருந்தவஞ்செபத்தாற் றுதியோகப்பழக்கத்தா
னன்றுபரிபூரணனாய் நானிருந்தேனென்றுரைத்தான்.

(இ-ள்.) தருமநிதி இவ்வாறு சொல்லியதைக்கேட்டு இரணியகருப்பன் கூறுகின்றனன். வேதாந்த விசாரணையாலும் நிறைந்த பெருந்தவத்தினாலும் செபஞ்செய்தலினாலும் யோகாப்பியாசத்தினாலும் நன்மையுள்ள பரிபூரண சொரூபத்தை நான் பெற்றேனென்று கூறினன். எ-று. (௧௭)

ஓங்குதமனியகருப்பா வுறுவாதராயணன்முற்
றாங்குதவமுனிவர்களு மடையாததருக்குற்றாய்
நீங்குதருக்குடையாரோ நிறையுடையரொஞ்ஞான்றும்
பாங்குறுமோநீயுரைத்த படியெனமற்றிவன்புகன்றான்.

(இ-ள்.) உயர்வுள்ள இரணியகருப்பனென்னும் பெயருடையோரே பெருந்தவமுள்ள வேதவியாசர் முதலாகிய மகாமுனிவர்களுமடையாத செருக்கை அடைந்திருக்கின்றீர். அகங்கார நீங்கினவரே பெரியோராவர்கள் நீர்சொல்லியது எக்காலத்திலும் மேன்மை யாகுமோவென்று தருமநிதி கூறினன். எ-று. ()

தருமநிதிமொழிகேட்டுத் தருக்குமிரணியகருப்பன்
பொருவில்பரப்பிரமம்யான் புவனகாரணமும்யா
னிருநிலம்பல்லுயிர்தமைய வெத்தொழிலும்புரிபவனியான்
வெருவிலிலிங்குண்மையென மிகத்தருக்கியுரைத்தனனால்,

(இ-ள்.) தருமநிதி சொல்லிய வார்த்தையை அகங்காரமுள்ள இரணிய கருப்பன் கேட்டு ஒப்பற்ற பரப்பிரமமும் நானே, எல்லாவுலகங்களுக்குங் காரணகர்த்தனு நானே, பூமியிலுள்ள பலஜீவர்களும் தழைத் தோங்கும்படி பஞ்சகிருத்தியம் செய்பவனும் யானே. களிப்பைத் தருகின்ற இவ்வார்த்தை சத்தியமென்று மிகச் செருக்கடைந்து கூறினன். எ-று. (௧௯)

தருக்குமொழியுட்கொண்டு தருமநிதியுரைசெய்வான்
பெருக்குபலவிடயத்தும் பெயராதுசெலுநீயோ
முருக்கும்வினைப்பரமிங்ஙன் மொழிந்தாலுநரகுறுமே
திருக்குவிடயத்துறுவோன் சிரவணஞ்செய்ததும்வீணே.

(இ-ள்.) (இரணியகருப்பன்) அகங்கரித்துச் சொன்னவார்த்தையை தருமநிதிகேட்டுக் கூறுவான். விரிந்த பலவிஷய சுகத்திலும் நீங்காமற்போகின்ற நீர்தானோ. தீவினைகளைக் கெடுக்கின்ற பரப்பிரமம் இவ்வாறு வேடிக்கையாகக் கூறினாலும் நரகம் சம்பவிக்குமே காண்கின்ற விடயத்திற் செல்லுகின்றதாமுடையவன் வேதாந்தசிரவணஞ் செய்தபலனையும் இவ்வார்த்தை வீணாக்குமே. ()

அடைவரியபெருங்காசித் தலத்தடையுந்தவம்பெற்று
முடையபெருந்தருக்கிறு லொன்றுமிலாதவனுனை
மிடைபலசீவருநினைப்பார்த் திவ்வாறுவிளம்புவரே
தடையில்பராநந்நீயிலையெனச் சாற்றுவனென்றான்.

(இ-ள்.) கிட்டுதற்கரிய மகிமையுள்ள காசித்தலத்தையடைதற்குரிய தவத்தைநீர்செய்திருந்தும் உம்மை அடிமையாகவுடைய அகங்காரத்தினால் ஒருபலனும் அடையாதவரானீர். நெருங்கியபலரும் உம்மைப்பார்த்து இவ்வாறு வாயினாற்சொல்லி சற்காரியஞ் செய்யாதுகெட்டுவிடுவார்கள் தடையற்றபிர்ம்மாநந்தத்தை நீர் அனுபவிக்க வில்லையென்று யான்கூறுவேன். எ-று. (உ௧)

என்றலும்வெஞ்சினமூள விரணியகர்ப்பன்புகல்வா
னொன்றுமபேதங்குறியா துழன்றிடுபேதத்தாலே
கன்றலுறுசீவர்பல ரிவ்வாறேகரைந்துழல்வார்
மன்றவுயர்பரஞான மருவாரெக்காலத்தும்.

(இ-ள்.) இப்படியென்று தருமநிதி சொன்னபோது இரணியகருப்பன் பெருங்கோபங்கொண்டு கூறுகின்றனன் உண்டாகிய அபேதத்தைக் குறிக்காது உழலத்தக்க பேதநோக்கத்தால் வருந்துகின்ற பலஜீவர்களும் இவ்வாறேபேதஞ்சொல்லி அலைவார்கள் நிலைபெற்றுமேலாகிய பரஞானத்தையெக்காலுமடையார்கள். எ-று. (உ௨)

சந்திரன்யான்பரிதியான்ற ழலவனியான்மருத்துவனு
னிந்திரனியான்பிரமனியா னிணர்த்துழாய்கெடுமாலியான்
மந்திரசொரூபனெனு மாதேவதேவனுமியான்
முந்திரப்போர்களுக்கு வரமுகிழ்க்கும்வலியாளனுமியான்.

(இ-ள்.) சந்திரனும்யானே, சூரியனும்யானே, அக்கினியும்யானே, காற்றும்யானே, இந்திரனும்யானே, பிரமனும்யானே, கொத்துக்களையுடைய துளபமாலையணிந்த விஷ்ணுவும்யானே. மந்திரசொரூபமென்று சொல்லும் மாதேவனும்யானே. சர்வவல்லமையுள்ள கடவுளும்யானே, முற்பட்டியோசிப்பவர்களுக்கு வரங்கொடுக்கின்ற வல்லவனும் யானே. எ-று. (உ௩)

பன்னாளும்யோகியற்றிப் பரம்பிரமானேனென்
சொன்னானீயுணர்வாயோ சுவர்க்கமிலைநரகமிலை
பின்னாளுஞ்சிறுமையிலை பெருமையிலைபின்னுமிலை
முன்னாகுமதுவுமிலை மொழியுமெனக்கென்றுணர்தி.

(இ-ள்.) பலகாலமும் நானேபிரமமென்று யோகாப்பியாசஞ்செய்து பரப்பிரமநிலையை யடைந்தேன் அதைவாயினாற் சொன்னால் நீயறியக்கூடுமோ எனக்கு சுவர்க்கமில்லை நரகமுமில்லை, பிற்காலத்துவருஞ் சிறுமையுமில்லை பெருமையுமில்லை பின்னுமில்லை முன்னுமில்லை என்றுதருமநிதியே அறியக்கடவாய். எ-று. (உ௪)

கண்டிடுவதெல்லாமாயா கற்பிதமேயிதுநிரம்பக்
கொண்டிடுவதாலெனக்கோர் குறையுண்டோகூறுதியால்
விண்டிடுவதுணராய்நீ விழியெதிர்நில்லாதகறி
யண்டிடுபேதகங்குறித்தே யலைந்துதிரிபோவென்றான்.

(இ-ள்.) காணத்தக்கவைகள் யாவும் மாயாகாரியமாகிய பொய்ப்போகங்களாகும் இப்போகங்களை நிரம்ப அனுபவித்தலினால் சச்சிதானந்த வடிவாகிய எனக்கு ஓர் குறையுண்டாகுமோ நீ சொல்வாயாக நான் கூறுவதை நீயறியாதிருக்கின்றனை என் கண்ணெதிர் நில்லாது அப்பாற் போய்விடு பேதபாவனை செய்து அலைந்து திரியுமாறு செல் என்றனன். எ-று. (உ௫)

சொற்றவிரணியகருப்பன் மொழிகேட்டுத்துணுக்குற்றுச்
செற்றமகல்பெருங்குணத்துத் தருமநிதியெனுஞ்சீலன்
மற்றவனையடையானாய் மாதேவற்கன்பியற்றி
யுற்றபரஞானத்தா லுயர்பெருமுத்தியையுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு துணிந்து கூறிய இரணிய கருப்பன் வார்த்தையைக் கேட்டு நடுநடுங்கி கோபமகன்ற சாந்தகுணமுள்ள தருமநிதியென்னுந் தவசீலன் அவ்விரணிய கருப்பனைப்பாராது சிவபிரானுக் கன்புசெய்து பரஞானத்தை யடைந்து உயர்வும் பெருமையுமுள்ள முத்தியைப் பெற்றனன். எ-று. (உ௬)

அன்னவிரணியகருப்ப னகங்காரமேன்மேலுந்
துன்னவவணின்றெழுந்து தொல்காசிமறுகுதொறு
மென்னரும்வந்தடிதொழப்போ யிவ்வாறேயுபதேசித்
துன்னரும்பல்பொருளீட்டி யோவாதசெருக்குறுவான்.

(இ-ள்.) அத்தன்மையான இரணியகருப்பன் அகங்கார மேன்மேலும் வளர அம்மடத்தினின்றெழுந்துவந்து பழைமையான காசிப்பதியின் வீதிக டோறுஞ் சென்று யாவரும் வந்தடி வணங்க இவ்வாறே யுபதேசஞ்செய்து நிறைந்த பொருள்களைச் சம்பாதித்து மாறாத செருக்கடைந்தனன். எ-று. (உஎ)

ஓரிடத்துச்சிவவேட முறப்புனைந்துசென்றிடுவா
னோரிடத்துநெடுமாலுக் குரியனெனச்சென்றிடுவா
னோரிடத்துக்கணபதியை யுபாசிப்போனெனப்புகுவா
னோரிடத்துச்சூரியனை யுபாசிப்போனெனப்புகுவான்.

(இ-ள்.) திரவியஞ் சம்பாதிக்கும் பொருட்டுச் சிவவேடந்தரித்துக்கொண் டோரிடத்துக்குப் போவான் திருமாலுக்குரிய பாகவதர்களைப்போல் வேடம் பூண்டோரிடத்துக்குப் போவான் கணபதியுபாசனை செய்பவன்போலோரிடத் துக்குச் செல்வான் சூரியோபாசனை செய்பவன்போலோரிடத்துக்குப் போ வான். எ-று. (உஅ)

ஓரிடத்துவாமியென வுற்றதற்குத்தகச்செய்வா
னோரிடத்துத்தாந்திரிய னென்றுணரும்படியடைவா
னோரிடத்துச்சாத்திரங்க ளுள்ளனவெலாம்புகல்வா
னோரிடத்துவயிரவம்பூண் டுற்றடைந்தோர்மனந்திரிப்பான்.

(இ-ள்.) வாமதந்திரியைப்போல் ஓரிடத்துக்குச்சென்று அதற்குத் தகுந்த தொழில்களைச்செய்வான். கிரியாவல்லவனென்றுமதிக்கும்படி யோரிடத்துக் குப்போவான். சாஸ்திரங்கள் பலவற்றினும் வல்லமைகாட்டி யோரிடத்துக் குப் போய்ப்பேசுவான். வயிரவசமயகோலம் பூண்டு லோரிடத்துக்குப்போய் அவி டத்துள்ளோர் மனதைப் பேதிப்பான். எ-று. (உகூ)

இவ்வாறுவஞ்சனையி னெவ்விடத்தும்போயுழிதந்
தொவ்வாதபொற்கருப்ப னுற்றபலபொருளீட்டிச்
செவ்வாய்மையில்லானுய்ச் செறியுமுலோபம்பூண்டு
துவ்வாதுநிலமாதிதொகச் சேர்த்துக்களிப்புற்றான்.

(இ-ள்.) இவ்விதமாகக் கபடவேடங்கொண்டு எவ்விடத்தும் போயலைந்து விதிவழி நடவாத இரணிய கருப்பன் பலபொருளைச் சம்பாதித்துச் சத்தியங் கெட்டவனுகி உலோபகுணத்தை மேற்கொண்டு தக்க ஆகாரத்திலுஞ் செலவு செய்யாது பூமிமுதலியவைகளை நிறைவாகச் சேர்த்துப் பொய்ப்பொருளிற் களி த்திருந்தனன். எ-று. (௩0)

ஆயவன்மற்றொருதினத்தே யாவித்தானுயிர்மாய்ந்தான்
மேயவவன்றனைப்பற்றி வெங்காலவயிரவனு
ரேயவொருமூன்றுபத்தோ டிட்டவாயிரவாண்டு
மோயவுறுபெருந்தண்ட மொழியாதுமிகப்புரிந்தே.

(இ-ள்.) அவ்விரணிய கருப்பன் ஓர் நாளிறந்தொழிந்தனன் அக்கொடியனைப் பிடித்து வயிரவக் கடவுள் முப்பதினாயிரந் தெய்வவருட காலத்தளவுஞ் சோர்ந்துவிடத்தக்க பெருந்தண்டனைகளை நீங்காதுசெய்து. எ-று. (௬௧)

ஆற்றுபிழைமுழுதொழிந்த வந்தத்துவயிரவனார்
சாற்றுமவிமுத்தேசர் திருமுன்னர்ச்சார்வித்து
மாற்றரியதண்டமெலாம் வருத்தனன்யான்பன்னாளுந்
தோற்றமிகுமிவன்பாவத் தொடக்கினீங்கினனென்றார்.

(இ-ள்.) இரணிய கருப்பன் செய்த பாவமுழுவதும் மொழிந்த பின்பு வயிரவக் கடவுள் வேதங்களெடுத்துரைக்கும் அவிமுத்தேசர் சந்நிதியிற்கொடுவந்து விட்டு பேதிக்கப்படாத தண்டங்கள் யாவுஞ் செய்தேன் பலகாலமும் வஞ்சனைத் தோற்ற மிகுந்த இவன் செய்த பாவத் தொடர்ச்சியினின்று நீங்கினன் என்றனர். எ-று. (௬௨)

என்றுரைத்தமொழிசெவியேற் றெம்பெருமான்விசுவேச
னன்றுமணிகன்னிகையி லவன்மூழ்கப்புரிவித்து
நன்றுபுரியாதுபல நவின்றதினாலடைந்ததுய
ரின்றுதெரிந்தனைசொல்லோ வென்றருளியிதுகூறும்.

(இ-ள்.) என்று வயிரவக் கடவுள் கூறிய வாக்கியத்தை எம்பெருமானாகிய விசுவநாதர் திருச்செவியிலேற்று அப்பொழுதே அவ்விரணிய கருப்பனை மணிகர்ணிகாதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்யும்படி செய்வித்து அவனைப் பார்த்து நல்ல காரியங்களைச் செய்யாது பலபாவங்களைச் செய்ததினால் நீ யடைந்த துயரப்பாட்டை இப்போது அனுபவமாகத் தெரிந்தனையோ என்று திருவாய் மலர்ந்து இதைச் சொல்லத் தொடங்கினர். எ-று. (௬௩)

மன்னுபெருங்காசிநகர் வசிப்பவர்கள்பொருளாசை
முன்னுகுடிகெடுப்பதென மொழிந்தகற்றியகங்கார
மென்னுமதுவுங்கடியா விந்திரியமொழித்தமரிற்
பன்னுநமதின்பமுறப் பாலிப்போமப்பொழுதே.

(இ-ள்) நிலைபெற்ற மகிமைதங்கிய காசித்தலத்தில் வாசஞ்செய்பவர், பொருளாசைகொண்டால் நமதுகுடிகெட்டுவிடுமென்று சொல்லியவாறுசையை யொழித்து அகங்காரத்தைக் களைந்து இந்திரியவழிசெல்லாது நின்று நமக்கன்பு செய்வார்களாயின் அப்பொழுதே பரமசுகத்தையவர்களுக்குப் பாலிப்போமென்றறிவாயாக. எ-று. (௬௪)

மின்னலெனத்தோன்றிமறை வெறுவாழ்க்கையுட்பட்டுப்
பன்னலமுமழிந்தாராய்ப் பதிநின்றபாவியர்க
ளுன்னல்கொடிதெனத்தீய தண்டமுன்போலுறப்பெற்றுப்
பின்னவன்முடிநம்மருளாற் பின்புகலப்பார்முத்தி.

(இ-ள்.) மின்னலைப்போற் காணப்பட்டு மறைகின்ற பொய் வாழ்க்கைக் குடன்பட்டு பலவிதசுகங்களையுமிழந்தவர்களாகி பாபத்தில் முழுகுகின்றவர்கள், சிந்திப்பதற்கரிய கொடியதண்டங்களை நீயடைந்ததுபோலடைந்து பின்னிமுடிக் குஞ் சடையையுடைய நமது கருணையினாலே பின்பு முத்தியடைவார்கள்,எ-று.

ஆதலினீபலதுன்புமடைந்து புனிதம்படைத்தாய்
காதலினென்னுபதேசங் கருத்துறக்கொள்ளெனப்புகன்று
பாதகமிறருமநிதி பதிந்தமரும்பெருமுத்தி
யாதரத்திற்புகச்செய்தா னருளுறின்மற்றிலதரிதோ.

(இ-ள்.) ஆதலினால் நீ பல துன்பங்களையுமடைந்து பின் பரிசுத்தத்தை யடைந்தனை இப்போது நான் செய்யப்போகின்ற உபதேசத்தை யன்போடு மனதிற் சிந்தித்துக்கொள்வாயென்று உபதேசித்துப் புண்ணியவானாகிய தருமநிதி விரும்பியடைந்த முத்திநிலையில் இரணிய கருப்பனும் அன்போடு சேரும்படி செய்தருளினர். திருவருளைப்பெற்றால் விம்முத்திநிலைகிடைப்பதருமையன்று.எ-று.

இல்லறத்தினிருந்தாலுந் துறவறத்தினிருந்தாலுஞ்
சொல்லறத்தின்வழிநின்று தொக்கமறைமுடிபுணர்ந்து
நல்லறத்தராவரொனி னீடுபெரும்பந்தமெனு
மல்லறச்செம்பரிதியின்மே லறவிளங்கிக்கதியடைவார்.

(இ-ள்.) இல்லற நிலையினின்றாலும், துறவறநிலையினின்றாலும் அதனதனு க்கு விதித்த தருமவழியில் நின்று வேதாந்த மகாவாக்கியார்த்தத்தை குருமுக மாகவறிந்து, உத்தமோத்தம தருமமாகிய ஜீவகாருணியம் பாசவயிராக்கியமுதலி யவற்றை அநுஷ்டிப்பாராயின் தம்மைப்பற்றிய பந்தமாகிய இருளொழியத் தக்க ஞானமாகிய சூரியோதயத்தாற் பிரகாசித்து முத்தியடைவார்கள். எ-று.()

முன்னுமுயன்றரிதாக மொய்த்தபலபொருளீட்டிக்
கொன்னுமவறிதேபுதைத்துக் கொடாதிருந்ததோடத்தாற்
பின்னுமருநரகுழப்பர் பெரும்பொருளாலடைபயன்றான்
மன்னுமலதென்றுணரா மாக்களுக்கென்னுரைப்பதுவே.

(இ-ள்.) சிந்தித்தும் முயற்சித்தும் அரிதாகக் கிடைக்கும்பொருளை மிகவுஞ், சம்பாதித்து அச்சத்தோடு வீணாகப் புதைத்துச் சற்பாத்திரத்திற் கொடாமற் போய்விட்ட பாவத்தினாலே கொடிய நரகத்தில் முழுகுவார்கள். பெரும்பொ ருளாலடைந்த பிரயோசனம் நிலைத்த நரகமென்று அறியாத மனிதர்களுக்கு எடுத்துக் கூறுவதென்னையுள்ளது. எ-று. (௩௮)

மருமலர்நீர்வளக்காசி மாநகர்வாழ்வோரென்று
மருமறையாதிகளுணர்ந்த வந்தணராதியர்தம்பாற்
பெருமையுறக்கொடுப்பதுவே பெருந்தருமமவற்றுள்ளு
மிருமையுறுமதியையரா விழுங்குநாளினிதளித்தல்.

(இ-ள்.) வாசனை தங்கிய மலர்களையுடைய கங்காதீர்த்த வளப்பமுள்ளதும் மகிமையுள்ளதுமாகிய காசித்தலத்தில் வாசஞ்செய்பவருக்கும், அரியவேத மார்க்கலைகளையுணர்ந்த பிராமணர் முதலியோர்க்கும் பெருமையடையுமாறு கையிலுள்ள பொருளைக் கொடுப்பதுவே அரிய தருமமாகும். அவ்வாறு செய்யுந் தருமத்துள்ளும் பெருமை வாய்ந்த சந்திரனை இராகு தீண்டுங் கிரகண புண்ணியகாலத்திலும். எ-று. (௩௯)

அரவுபரிதியைத்தீண்டு மன்னதினங்கொடுத்திடலால்
விரவுபலனூறுமடங் கதிகமாய்மிகுபருங்
கரவுதவிர்மரணமுறு காலத்திற்கொடுத்திடலாற்
பரவுபல்லனந்தமடங் கென்றுரைக்கும்பன்மறையும்.

(இ-ள்.) கேதுக்கோள் சூரியதேவனைத் தீண்டும் சூரியகிரகண புண்ணியகாலத்திலே தானஞ்செய்தால் நூறுமடங்கு அதிகபலனுண்டாகும். வஞ்சனையை ஒழிக்கின்ற மரணகாலத்தில் சற்பாத்திரதானஞ்செய்தால் ஒன்றுக்கு அனந்த மடங்கு அதிகபலனென்று வேதங்கூறும். எ-று. (௪0)

மறையவராயிருந்தாலு மற்றோராயிருந்தாலு
நிறையவுளத்தைந்தெழுத்து நிகழ்திருவெண்ணீறணிந்து
பொறைமலியுங்கண்மணியும் பூண்டமைவார்பாற்கொடுப்பி
னறைதாமுற்றிடுங்கொல்லோ வவரளவேபயனளவும்.

(இ-ள்.) காசித்தலத்தில் தானம் வாங்குபவர் பிராமணராலும், மற்றை வருணத்தாராயினும் மனதைத் திருவருளால் நிறைவிக்கும் பஞ்சாட்சரத்தை உச்சரித்து அறிவை விளக்குந் திருவெண்ணீற்றைத்தரித்து பொறுமையை நிறைவிக்கும் உருத்திராக்ஷமாலைபூண்டு இருப்பவர்களுக்குக் கொடுத்தால், உண்டாகும் பலன் எடுத்துரைக்க முடியுமோ அப்பெரியோர்களின் மகிமையைப் போற் பயனும் அளவுபடாததாகும். எ-று. (௪௧)

கன்றுதலில்வளம்பொலியுங் காசிநகர்வாழ்வாரு
ளொன்றுதெரிந்திந்திரிய நாசஞ்செய்தமர்வார்பா
லொன்றுகொடுப்போமெனமுன் னுரைத்துப்பின்கொடாராயிற்
றுன்றுகொடுநரகமெலாந் துளைந்திடுவர்சத்தியமே.

(இ-ள்.) கிலேசத்தை மாற்றுகின்ற வளப்பங்கள் நிறைந்த காசித்தலத்தில் வாசஞ்செய்பவர்களுக்குள் உண்மையுணர்ந்து இந்திரிய நிக்கிரகஞ்செய்த பெரியோர்களுக்கு ஒருபொருளைக் கொடுப்பதாக வாக்குத்தத்தஞ்செய்து பின்பு கொடாமற்போவாரானல் நிறைந்த மகாநரகங்களெல்லாவற்றிலு முழுகித்துயர முறுவார்கள் இவ்வார்த்தை சத்தியமாகும். எ-று. (௪௨)

தீராதபாதகங்கள் செய்தாலுங்கலிகாலத்
தோராதபெருங்கழுவாய் கொடையன்றியுண்டுகொலோ
வாராதவின்பமெலாம் வருவிக்குங்காசியின்மற்
றூராதபெரும்பலனு மற்பதானமும்பெரிதாய்.

(இ-ள்.) பிராயச்சித்தத்தாலொழிக்கப்படாத பெரும்பாவங்களைச் செய்தாலும், இக்கலியுகத்தில் ஆராய்ந்தறிதற்கரிய பிராயச்சித்தமாவது கொடுத்தலல்லாமல் வேறே யுண்டோ. (இல்லை) கிடைத்தற்கரிய சுகங்கலெல்லாவற்றையுங் கொடுக்குங் காசித்தலத்தில் சிறியதானமும் பெரிதாக வளர்ந்து நிறைந்த முத்தியின்பத்தைத் தரும். எ-று. (௪௩)

எண்ணிறந்தபெரும்பொருளை யீட்டியகனிலம்புதைத்துக்
கண்ணிறந்ததுயரமெலாங் காலனியற்றிடப்படுவர்
மண்ணிறந்தபுகழ்பரப்பி வான்முழுதுங்கைக்கொள்ளார்
பண்ணிறந்தமொழியார்க்கே பதைத்துருகிச்சோருவார்.

(இ-ள்.) கணக்கில்லாத அதிக திரவியங்களைச் சம்பாதித்துப் பூமியிற் புதைத்துவைத்துச் சிந்திப்பதற்கரிய துயரங்களெல்லாவற்றையும் இயமன் செய்ய உடன்படுவார்கள். (தருமங்களைச்செய்து) உலகமுழுவதும் பரவி அப்பாற்படத்தக்க புகழை விரித்துத் தேவபுவனங்கள் யாவுங்கைக்கொண்டு சுகமனுபவிக்க மாட்டார்கள். கானத்தை அப்பாற்படுத்தும் மொழிகளையுடைய மடவார்களுக்கே மனம் பதைத்துருகி வாடுவார்கள். எ-று. (௪௪)

அராவணிசெஞ்சடைப்பெருமா னடிமலர்போற்றார்பகலு
மிராவுமுயன்றரிதாக விரும்பொருளைத்தேடிப்புதைப்பார்
தராதலத்திற்பெரும்புகழுந் தழைதருவானத்திருப்பும்
விராவவறம்புரிதரா ரவற்குரைத்தல்வீண்படுமே.

(இ-ள்.) சர்ப்பாபரணரும் சிவந்த சடையையுடையவருமாகிய சிவபெருமானுடைய திருவடித் தாமரையைத் துதிக்கமாட்டார்கள். இரவும் பகலுமுயற்சித்துப் பெரும்பொருளை அரிதாகத் தேடிப் புதைப்பார்கள். உலகத்தில் பெருங்கீர்த்தியும் போகங்கள் நிறைந்த சுவர்க்காதிபுவனங்களில் வசித்தலையுஞ் செய்விக்கும் தருமங்களைச் செய்யமாட்டார்கள். இவர்களுக்குத் தருமரகசியங்களைப் போதித்தல், வீணாகும். எ-று. (௪௫)

மின்னுகருமுகில்சார்ந்து மேற்றவழும்பொழிலுடுத்து
மன்னுபெரும்புகழ்க்காசி மாநகர்வாழொருமறையோன்
பன்னுமருமறையாதிப் பற்பலநூல்களுமுணர்ந்தோன்
றுன்னுமருந்தவத்துயர்ந்தோன் றூயகுணத்தலைநின்றோன்.

(இ-ள்.) மின்னலைச்செய்யுங் கரியமேகங்கள் நெருங்கி மேலே தவழப்பெற்ற சோலைகளைச் சூழக்கொண்டு நிலைபெற்றிருக்கும் பெரும்புகழமைந்த மகத்தாகிய காசித்தலத்தில் வாழ்கின்ற ஒரு பிராமணன், விரிவாகக்கூறும் அரியவேதமாதி பல்வாயுள்ள நூல்களையுந் தெரிந்தவன். பற்பலவாகிய அரியதவங்களாலுயர்ந்தவன். பரிசுத்தமமைந்த குணமே வடிவாக நிற்பவன். எ-று. (௪௬)

அந்தநெடும்புகழ்மறையோற் காசியபுத்திரரிருவர்
சந்தமிகுகலியாண விராமனொருதனயன்பேர்
முந்தவெழுதனப்பிரியன் மொழிதருமற்றையனும
மிந்தமகார்தமக்கெல்லா மிருகூறுசெய்தளித்து.

(இ-ள்.) பெரும்புகழுள்ள அந்தப் பிராமணனுக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள் அழகு மிகுந்த ஒரு புதல்வனுக்குக் கலியாணராமனென்றுபெயர். மற்றொருவனுக்குத் தனப்பிரியனென்றுபெயர் இந்தப் புத்திரர்களிருவருக்குந் தனது ஆஸ்தியை இரண்டு பங்குசெய்து கொடுத்து. எ-று. (சஎ)

தந்தைதுறவறஞ்சார்ந்து தடங்கங்கைப்புனலாடி
நிந்தையறுநடைபயின்று நிரம்புறவைந்தெழுத்தெண்ணி
யந்தையறுத்துயர்ஞானத் தமைந்தகிலநாயகன்றன்
முந்தையருடலைக்கொண்டு முத்தியடைந்தின்புற்றான்.

(இ-ள்.) பிதா துறவறத்தையடைந்து பெருமைபொருந்திய கங்காதீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து குற்றமற்ற நல்லொழுக்கத்திற்பழகி பஞ்சாட்சரத்தைச் சதாகாலமும் உச்சரித்து அகங்காரத்தைக் கெடுத்து மேலாகிய ஞானத்தைப் பெற்று விசுவநாதருடைய முதன்மையான திருவருளை மேற்கொண்டு முத்தியின்பத்தைப்பெற்றனன். எ-று. (சஅ)

ஒருமைந்தன்றந்தையென வோங்கியநன்னெறிநின்றே
யருமந்தவந்தான மாசாரமநுட்டித்துத்
தருமந்தன்வசமாகத் தம்பிரானருள்பெற்றுத்
திருமந்தியாதளிக்குந் தெய்வமாக்கதியடைந்தான்.

(இ-ள்.) ஒரு குமாரன் பிதாவைப்போலப் புகழ்பெற்ற நல்லொழுக்கத்திலிருந்து, அரிய தேவாமிர்தம்போன்ற தவங்களையும் உத்தமதானங்களையும் நீதியாசாரங்களையும் விடாதுசெய்து சிவதருமங்களைத் தன் வசப்படுத்த விசுவநாதருடைய திருவருளைப்பெற்றுச் சிவாநந்த வாழ்வைத் தடையின்றிக் கொடுக்குந் தெய்வத்தன்மையுள்ள முத்திபெற்றனன். எ-று. (சகூ)

மற்றொருவனனுத்துணையும் வயங்குமறஞ்செய்யானைப்
பெற்றமுயர்த்தவனடிகள் பேணுனைப்பொருளனைத்தும்
பற்றமையிலத்திருவிப் பாவியெனப்பட்டிறந்து
செற்றமகல்கதியுற்றான் செப்பியதன்றுணைவன்போல்.

(இ-ள்.) மற்றொரு குமாரன் விளக்கமுறுந்தருமம் அணுவளவுஞ் செய்யாமலும் இடபக்கொடியையுடைய சிவபிரான்திருவடிகளை விரும்பாமலும் எல்லாப்பொருளையும் பூமியிலழுந்தப்புதைத்துப் பாவியென்று சொல்லுமாறு மரணத்தையடைந்து களங்கமற்றமுத்தியைத் தனதுசகோதரனடைந்தது போன்றடைந்தனன். எ-று. (ருய)

காசிநகர்தன்னிடத்துக் கலந்தவுயிர்தமக்கருளும்
வாசிதனையாரேயோ வகுத்துரைக்கும்வன்மையினர்
பேசியினியாவதெவன் பிறங்குறுமப்பதிசாரார்
சீசியெனப்பலரிகழுஞ் செய்கையராகுவரென்முன்.

(இ-ள்.) காசித்தலமானது தன்னிடத்தில் வந்த ஆன்மகோடிகளுக்கு அநுக்கிரகஞ் செய்யுந் தன்மையை அளவிட்டுரைக்கவல்லவர்கள் யாவர் இனிமேற்கூறுவதென்னை விளக்கமுற்ற அத்தலத்தையடையாதவர்கள் இழிவுநோக்கிப்பலரும் இகழப்படுஞ் செய்கையுடையவர்களென்று சூதமுனிவர் கூறினர். எ-று. (ருக)

இரணியகருப்பன் முதலோர் முத்தியடைந்த வத்தியாய முற்றியது.

ஆக அத்தியாயம் உரு-க்கு திருவிருத்தம். (கூகூ)

திருச்சிற்றம்பலம்.

உ

# இருபத்தாறாவது விட்டுணுசருமனுபதேசம்பெற்ற வத்தியாயம்.

திருச்சிற்றம்பலம்.

புண்ணியம்புரிந்தான்போலும் பாதகம்புரிந்துளானு
நண்ணினன்முத்தியென்று நவின்றனையஃதெவ்வாறுந்
தண்ணியகுணத்தாயிந்தச் சங்கைதீர்த்தருடியென்று
கண்ணியமுனிவர்கேட்பக் கழறுதலுற்றான்சூதன்.

(இ-ள்.) புண்ணியஞ் செய்தவனைப்போல் பாதகஞ்செய்தவனும் முத்தியடைந்தானென்று கட்டளையிட்டீர் அதுஎவ்வாறாகக்கூடும் சாந்த குணமுள்ள மகாமுனிவரே இந்தச்சந்தேகத்தை ஒழித்தருள்வீரென்று பெருந்தன்மையுள்ள சவுநகராதிமுநிவரர் கேட்கச் சூதமுநிவர் சொல்லத் தொடங்கினர். எ-று. (க)

பாதகம்புரிந்தான்கால வயிரவர்பரிவினாற்று
னோதகவனைத்துமேற்று நுவலரும்புனிதனாகி
மேதகவுடையமூர்த்தி விச்சுவநாதன்செய்யும்
போதகவுபதேசத்தாற் புகுந்தனன்முத்திமாதோ.

(இ-ள்.) தீவினையைச்செய்த பிராமணகுமாரன் காலவயிரவக் கடவுள் அன்பினாற் செய்த தண்டனைகளெல்லா வற்றையு மனுபவித்துச் சொல்லுதற்கரிய பரிசுத்தத்தை யுடையனாகி மேன்மையுள்ள விசுவநாதர் செய்யுஞானோபதேசத்தைப்பெற்று முத்தியடைந்தனன். எ-று. (உ)

பளகருங்காசிவைகிப் பாதகம்புரிந்தாரெல்லாம்
வளரருட்செல்வக்கால வயிரவர்தண்டஞ்செய்யத்
தளர்வர்பின்புனிதராகித் தாரகமனுவுங்கேட்டுக்
கிளரொளிமுத்திவீடு கெழுமிவீற்றிருப்பரன்றே.

(இ-ள்.) குற்றமற்ற காசித்தலத்தில் வாசஞ்செய்து தீவினையைச் செய்தவர்களியாவரும் வளர்கின்ற அருட்செல்வத்தையுடைய காலவயிரவர் செய்யுந் தண்டனையால் தளர்ச்சியுற்றுப் பின்னர் பரிசுத்தராகி விசுவநாதருபதேசித்தருளும் தாரகமந்திரத்தைப் பெற்று பேரொளியால் விளங்கும் முத்திவீட்டில் நிலைபெற்றிருப்பர்கள். எ-று. (ங)

மன்னியபுகழ்சால்கால வயிரவர்தண்டஞ்செய்யா
தன்னியமில்லா முத்தி யடைவதெவ்வாறென்பீரேற்
பன்னியகுரவன்பாத பங்கயம்பணிந்துபோற்றி
நன்னியமத்துநின்று நான்மறைமுடிவுதேர்ந்து.

(இ-ள்.) நிலைபெற்ற புகழமைந்த காலவ்யிரவர் தண்டனை செய்யப்பெறாது அனன்னியமாகிய மோட்சத்தைப் பெறுவது எவ்வாறென்று முநிவர்களே கேட்பீர்களானால் உபதேசித்த ஆசாரியன் பாததாமரைகளை வணங்கித்துதித்து நான்குவேதங்களின் முடிவையும் அறிந்து நல்லொழுக்கங்களிற்றவறாது நின்று. எ-று. (ச)

பச்சிளமுலையாள்பாகப் பரம்பரனுயவெங்கள்
விச்சுவநாதன்பாத மேதகத்தியானஞ்செய்து
கச்சமிலறத்துட்டம்மா லியன்றனகடைப்பிடித்து
நிச்சலுமொழுகுவாரே லடைகுவர்நேரேமுத்தி.

(இ-ள்.) பசுமையும் இளமையுமுள்ள குஜங்களையுடைய பார்வதிதேவியாரை வாமபாகத்திற் கொண்டிருக்கும் எமது பரம்பொருளாகிய விசுவநாதர் திருவடிகளைச் சதாகாலமுந்தியானித்து அளவில்லாத சிவதருமங்களுள் தம்மாற்கூடுமானவற்றை உறுதியாகப்பிடித்துத் தினந்தோறுந் தவறுதனுஷ்டிப்பாராயின் (அக்காலவயிரவர் தண்டனையின்றி) நேரேமுத்தியடைவார்கள். எ-று. (ரு)

பார்பொருளபகரித்தல் பரதாரகமனஞ்செய்தல்
வரமிகுபரமனிந்தைவயக்குதல் கடுஞ்சொற்கூறல்
விரவுபொன்னுதிவாங்கி மீட்டுதவாமையின்ன
தரமுளோர்வடுகப்புத்தே டண்டிக்கப்படுவர்மாதோ.

(இ-ள்.) அன்னியர் பொருளையபகரித்தல் பிறர்மனைவியரைக்கூடுதல் மேன்மைமிகுந்த பரமசிவநிந்தை செய்தல், கடுஞ்சொற்களைச் சொல்லுதல், பொன்முதலியவைகளை வாங்கி மீட்டுமவருக்குக், கொடாதிருத்தல் இவ்வாறுயுள்ள பாதகங்களைச் செய்பவர்கள் வயிரவக்கடவுளாற் றண்டிக்கப்படுவார்கள். எ-று()

வெஞ்சினம்பொருளாக்கொள்வோர் விடுபடாப்பொறுமையாள்வோர்
வஞ்சகநட்டோர்பாலும் வயக்குவோர்பிறருறஞ்சி
நெஞ்சநெக்குருகாரெங்க ணின்மலப்பெருமான்றாளே
தஞ்சமென்றடையாரின்னோர் தண்டிக்கப்படுவர்மாதோ.

(இ-ள்.) கொடுங்கோபத்தையே பொருளாகக் கொண்டவர்களும், விட்டுநீங்காப் பொறாமையுடையோர்களும், நம்பினவரிடத்து வஞ்சகத்தைச் செய்பவர்களும் அன்னியர்படுந் துயரத்தைக்கண்டு மனமிரங்காதவர்களும், நின்மலராகிய எமதுசிவபெருமான்றிருவடியே அடைக்கலமென்று பற்றுதவர்களும், ஆகியஇவர்களெல்லாம் வயிரவக்கடவுளாற் றண்டிக்கப்படுவர்கள். எ-று, (எ)

உயர்ந்தவாச்சிரமம்பெற்று முரியதாமொழுக்கம்பேணு
தயர்ந்துமுன்விட்டயாவு மநுசரித்தவாவிக்கொண்டும்
பெயர்ந்தும்வேறெண்ணாராகிப் பிறரிழித்திடுவான்செல்வார்
நயந்தபவடுகப்புத்தே டண்டிக்கப்படுவர்நாளும்.

(இ-ள்.) மேலாகிய ஆச்சிரமநிலையடைந்தும் அவ்வாச்சிரமத்துக்குரிய நல்லொழுக்கங்களை விரும்பாது மறந்தவராகி முன்னேவிட்ட போகங்களியாவையும் அனுசரித்துப் பற்றிக்கொண்டு மறந்தும் பாவமென்றெண்ணாதவராகி அன்னியர் நிந்திக்குமாறு நடப்பவர்கள், துயரமுறும்வண்ணம் வயிரவக்கடவுளாற்றண்டிக்கப் படுவார்கள். எ-று. (அ)

மட்டலர்க்கிழவன்போல்வா னெக்கியசருமன்மைந்தன்
விட்டுணுசருமனென்பான் மேதகுதந்தைபாலே
பட்டபன்மறையுமோர்ந்தான் பளகறுகுணத்துமிக்கா
னட்டநன்கியற்றும்பெம்மா னறுமலர்ப்பதமுட்கொள்வான்.

(இ-ள்.) வாசனைவீசுகின்ற தாமரைமலருக்குரியவனாகிய பிரமதேவனையொத்த எக்கியசருமன்குமாரன் விஷ்ணுசருமனென்னும் பெயருடையோன் மேலானதந்தையினிடத்துப் பதவிகளைத்தரும் பலவேதங்களையும் அறிந்தவன் குற்றமற்றகுணத்தில் மேம்பட்டவன் நடனத்தை உயிர்கள் நன்மையடையுமாறு புரியும் சபாநாயகரது நற்றாமரைமலர்போன்ற திருவடிகளை மனதில்சிந்திப்பவன். எ-று. (௯)

இன்னமுங்கற்கவேண்டு மியல்பினதெதுகாணென்று
பன்னருவிண்டுசன்மன் றந்தைபாற்பரிந்துகேட்க
வன்னவன்வித்தையொன்றுண் டதுதெரிந்தவன்மற்றெல்லா
நன்னயத்தொடுதெளிந்தா னென்மனார்நன்னூல்வல்லார்.

(இ-ள்.) மேலும்வாசித்தறியவேண்டிய தன்மையுள்ளது எந்நூலென்று, சொல்வதற்கரிய விஷ்ணுசருமன் தந்தையாகிய எக்கியசருமனைக்கேட்க, அவன் வித்தையொன்றிருக்கின்றது அதைத்தெரிந்தவன் எல்லாநூல்களிலுள்ள நுட்பங்களையுந் தெளிந்தவனாவனென நல்லநூல்களில் வல்லவர்கள் கூறுவார்களென்று கூறினான். எ-று. (௧௦)

அந்தவித்தையினெஞ்ஞான்று மகன்றிடாதமர்வனீசன்
சந்தமற்றவனைநிந்தை சாற்றுவோர்நரகில்வீழ்வார்
முந்தமற்றுடம்பைநிந்தை மொழிந்திடுவாரான்மாவை
யெந்தமூடருநிந்தித்த லியற்றிடமாட்டாரென்னில்.

(இ-ள்.) அந்த வித்தைகிடைத்தால் மகாதேவர் அவனைவிட்டு எக்காலமும் விலகாது விரும்பியிருப்பர். சாந்தசம்பத்துள்ள அம்மஹாநுபாவனை நிந்திப்போர் நரகத்தில் முழுகுவார்கள் சுகதுக்கத்திற்கு முன்னிற்குந்தேகத்தை அறிஞர் நிந்திப்பார்கள். ஆன்மாவை எந்தமூடரும் நிந்தைசெய்யமாட்டார்கள். எ-று.

தேகியானவற்குநாளுந் தேகத்துமானமுண்டாந்
தேகியேதுக்கமெல்லாஞ் செறிகுவனிந்தைகூறி
லாகியஞானியர்க்குந் துக்கமுண்டாமேன்மூட
ராகியபலர்க்குஞ்சொல்ல வேண்டுமோவறிதிமைந்த.

(இ-ள்.) தேகத்தை யபிமானித்திருக்குஞ் சீவான்மாவுக்குத் தினந்தோறும் அத்தேகத்தி லபிமானமுண்டாகும் அச்சீவனே பலவாகிய துயரங்களாலும் நெருக்கப்படுவன். ஒருவனிந்தித்தால் மேலோராகியஞானவான்களுக்குந் துயரஞ் சம்பவிக்குமானால் மூடராகிய பலருக்குங்கிலேசமுண்டாகுமென்று நான் கூற வேண்டுமோ அவசியமுண்டாகுமென்று விஷ்ணுசருமனாகிய குமாரனே அறிவாயாக. எ-று. (கஉ)

ஆதலினிந்தைதுக்கங் கொடுப்பதற்கையமில்லை
நோதகநிந்தைசெய்தோ னுவன்றதம்பிதிர்க்களோடும்
வீதருநரகில்வீழ்வன் முதல்யுகம்விளைத்தநிந்தை
பூதரங்குறுகவல்லே புகுத்திடுந்துக்கமெல்லாம்.

(இ-ள்.) ஆனபடியால் நிந்தையானது சந்தேகமில்லாது துயரத்தைக்கொடுக்கும் அன்னியர்மனம் வருந்தும்படி நிந்திப்பவன் தன்னுடைய பிதிர்க்களோடும் கொடிய நரகத்திடைமுழுகுவன் கிரேதாயுகத்திற்செய்த நிந்தை, மலையுஞ்சிறிதென்றுசொல்லுமாறு எல்லாத்துயரங்களையும் விரைவில் உண்டாக்கும். எ-று.

அறையிரண்டுகத்துநிந்தைக் காமொருபக்கந்துக்க
முறைதுவாபரத்துநிந்தை முகிழ்க்குமோர்மதியிற்றுக்கங்
கறைகெழுகலியினிந்தை காணுமெப்போதுந்துக்க
மிறைதருநிந்தையாரு மொழித்திடன்மேன்மையாமால்.

(இ-ள்,) சொல்லத்தக்க கிரேதாயுகத்தில் நிந்தையானது ஒருபட்சமாகிய பதினைந்துநாளளவும் துயரத்தையுண்டாக்கும். மூன்றாவது துவாபரயுகத்தில் நிந்தையானது ஓர்மாதத்தளவுந் துயரத்தை யுண்டாக்கும் குற்றம்பொருந்திய கலியுகத்தில் நிந்தையானது சதாகாலத்திலுந் துயரத்தையுண்டாக்கும். (ஆதலால்) அச்சத்தைத்தருகின்ற நிந்தையை எல்லோரும் நீக்கிவிடுதலே மேன்மையாகும். எ-று. (கச)

சுகமிலைத்தருமமில்லை துன்னியதானமில்லைத்
திகழ்தருவிரதமில்லைத் தீர்த்தயாத்திரையுமில்லை
யகநெகிழொழுக்கமில்லை யருந்தலவாசமில்லை
யிகழ்வினாலுணர்ச்சியில்லை நிந்தனையியற்றுவார்க்கே.

(இ-ள்,) நிந்தனைசெய்யுந் தொழிலிற்பழகினவர்களுக்குச் சுகங்கிடையாது தருமமும் அவ்வாறேயாம் பலவாகிய தானங்களில்லை விளக்கமுற்ற விரத

மும் அத்தன்மையேயாம். தீர்த்தயாத்திரை நேரிடாது மனம் உருகுகின்ற நல்லொழுக்கமும் அவ்வண்ணமேயாம். அரியதலவாசங் கிடைக்கமாட்டாது நல்லசாஸ்திரவிசாரணையும் நேரிடாது. எ-று. (கரு)

இம்பரினகுடனென்பா னிட்டியோர்நூறுசெய்யா
வும்பருளிறைவனாகி யுறுசுகநுகரும்போதி
லம்பர்மாமுனிவர்நிந்தை யறைதலின்மலைப்பாம்பாகி
வம்பலரிகழமீட்டு மண்மிசைவீழ்ந்தான்மன்னோ.

(இ-ள்.) இவ்வுலகத்தில் நகுஷனென்னும் அரசன் நூறு அசுவமேதயாகஞ்செய்து தேவேந்திரபதவிக்குப்போய் நானாவிதசுகங்களையு மனுபவிக்குங்காலத்து அவ்விடத்திலே மஹாமுநிவரை நிந்தித்தபடியால் மலைப்பாம்பாகி எக்காலும் புதிதாகவிளங்கும் பழிமொழியைப் பிறர்சொல்லுமாறு பூமியின்மீது வீழ்ந்தனன். எ-று. (கசு)

மறையினைநிந்தித்தாலு மறைமுதற்பொருளாயுள்ள
கறைமிடற்றிறைவன்றன்னைக் கருத்துறநிந்தித்தாலு
மிறையவனடியார்தம்மை நிந்தித்தல்கூடாதென்று
மறைதருகழுவாயிந்த நிந்தனைக்கிலத்தின்றே.

(இ-ள்.) (துதிப்பதற்குரிய) வேதங்களை நிந்தித்தாலும் வேதத்துக்கு முதற்பொருளாகிய காளகண்டத்தையுடைய சிவபெருமானைப் புத்திபூர்வமாக நிந்தித்தாலும் சிவனடியார்களை ஒருக்காலும் நிந்தைசெய்யக்கூடாது. இந்நிந்தனைக்குலகத்திற் பிராயச்சித்தங்கிடையாது. எ-று (கஎ)

பதசாரம் வேதநிந்தைக்குஞ் சிவநிந்தைக்கும் பிராயச்சித்தமுள்ளதாகலின் நிந்தித்தாலு மென்றும் சிவனடியார் நிந்தைக்கோர்நூலிலும் பிராயச்சித்தம் விதிக்கவில்லையாகலின் கழுவா யிலத்தின் றென்றுங் கூறினர்.

பரசிவனடியார்நிந்தை பண்ணுமாபாவிதன்னைக்
கரவறக்கோறல்வேண்டுங் களைந்தமற்றதுமுற்றுதேல்
விரவுபொன்வீசியேனுங் கோறலேவிதியாமன்ன
தரமுமுற்றுதேலன்னா னிருந்தவூர்தணந்துசெல்க.

(இ-ள்.) பரமசிவன் றிருவடிகளைச் சிந்திக்கும் அடியார்களை நிந்தைசெய்யுங்கொடியபாவியைநிந்தித்த பாவமப்போதேபோகும்படிகொலைசெய்யவேண்டும். சொல்லிய அந்தப்பிராயச்சித்தஞ்செய்ய முடியாதெனில், பிறருக்குப்பெரும்பொருள் கொடுத்தாவது கொலைசெய்வித்தலே வேதவிதியாகும். அவ்வாறுஞ்செய்வதற்குக் கூடாதாயின் அப்பாதகனிருந்தவூரைக் கடந்தப்பாற்செல்லக்கடவன். எ-று. (கஅ)

வெள்ளியநீறுபூசி விளங்குகண்மணிகள்பூண்டு
தள்ளியவினையார்தம்மைச் சரித்திடுமடியார்தம்மை
யெள்ளியபாவிவார்த்தை யேற்றிடுசெவியினூடு
கொள்ளியவுருக்குவங்கங் கூற்றுவன்கவிழ்த்துமொத்தும்.

(இ-ள்.) வெண்மையுள்ள விபூதியைத்தரித்து அருளைவிளக்கும் உருத்திராட்சமாலையணிந்து கிரியைகளை முழுதுமொழித்த ஞானிகளையும் அக்கிரியைகளைத்தழுவிக்கொண்டு உலகோபகாரமாகச் சஞ்சரிக்குஞ் சிவனடியார்களையும் நிந்தைசெய்கின்ற கொடும்பாவிகளுடைய வார்த்தையைக்கேட்ட செவிகளுக்குள்ளே இயமன் கொடிய சூடுள்ளஈயத்தை யுருக்கிக்கவிழ்த்துப் பின்னர் தண்டிப்பன். எ-று. (கக)

விரித்துரைசெய்வதென்னை வித்தகனடியாரானோ
ருரித்தறக்காலதேச விரோதத்தாலொழுக்கநீத்துச்
சரிப்பினுஞ்சரிப்பரன்னார் தஞ்செயலுணக்கியாதுஞ்
சிரித்தலுங்கூடாதென்னிற் செப்புவதிதன்மேலுண்டோ.

(இ-ள்.) விரித்துக் கூறவேண்டிய தென்னையுள சிவனடியவரானோர்கள் தங்களுக்குரிய தொழிலைவிட்டுக் காலதேசவிரோதங்களா லொழுக்கந்தவறிச் சஞ்சரித்தாலுஞ் சஞ்சரிப்பார்கள்.அவர்களுண்மையறியாது செய்கையைப்பார்த்துச் சற்றும் நகைக்கக்கூடாதென்று பெரியோர்கள் கூறுவார்களானால் இதற்கு மேற் சொல்லத்தக்கதொன்றுளதோ. எ-று. (உ0)

இன்னுமொன்றுரைப்பதுண்டா லிரும்புகழ்க்காசிமூதூர்
மன்னுநல்வாழ்க்கையோரை மறவியினிந்தித்தாலுங்
கொன்னும்வெந்நரகமெல்லாங் குளித்திடவமூழ்ந்தாநிற்ப
ருன்னுமற்றதனிற்றீய தொன்றுமின்றுணர்திமைந்த.

(இ-ள்.) இன்னமும் அருமையாகச் சொல்லத்தக்கதொன்றுள்ளது பெரும்புகழுள்ள அநாதியாகிய காசித்தலத்தில் நிலைபெற்று வாசஞ்செய்பவர்களை மறதியினால் நிந்தைசெய்பவர்கள், அச்சத்தைத்தருங் கொடியநரகங்களெல்லாவற்றினு மூழ்கிக் கிடப்பர்கள் சிந்திக்கத்தக்க இக்கொடுமையைப்பார்க்கிலுங் கொடிதாயுள்ளது வேறொன்றுமில்லையென்று விஷ்ணுசருமனாகிய குமாரனே அறியக் கடவாய். எ-று. (உக)

மறைமுதலடிகண்மேய மாத்தலந்தோறுமேவு
நிறைபுகழுடையார்தம்மை நீடுநிந்தனைசெய்தாலுங்
கறைதபுகாசிவாழ்வார் தமைநிந்தைகளையலாகா
தறைபடவின்றுநாளு மளற்றிடையழுத்துமாற்றல்.

(இ-ள்.) வேதங்கட்கு மூலகாரணராகிய சிவபிரான் வீற்றிருக்கும் மகிமையுள்ள தலங்கடோறும் விரும்பி வசிக்கும் பெரும்புகழுள்ள அடியார்களை நிந்தித்தாலு நிந்திக்கக்கடவர். குற்றமற்ற காசிப்பதியில் வசிப்பவர்களை நிந்தித்தால் எக்காலத்திலுங் கொடிய நரகத்திடை மூழ்கிக்கிடப்பராதலால் ஒருக்காலு நிந்தை செய்யலாகாது. எ-று. (உஉ)

கங்கைசூழ்காசிமேவிக் கணப்பொழுதிருந்தாரேனு
மங்கவர்தம்மையெங்க ளகிலநாயகனேயென்று
பங்கமில்வழிபாடாற்றிப் பத்தியும்பயமுமேவிச்
சிங்கவில்குறிப்பினிற்பார் சிவகதிக்கணியராஞர்.

(இ-ள்.) கங்காநதி சூழப்பெற்ற காசித்தலத்தையடைந்து, கணகாலம் வசிப்பாராஞலும் அவர்களை நமது விசுவநாதரென்றே பாவனைசெய்து அவர்களுக்குக் குற்றமற்ற வழிபாடு புரிந்து பயபக்திவைத்து அவர்கள் திருவுள்ளக் குறிப்பினின்று பணிபுரிபவர்களே மேலாகிய முத்திக்கதிகாரிகளாவார்கள். எ-று.()

தொலைவருங்காசிமேவுஞ் சூகரங்கழுதைஞாளி
யலைதருகிருமிகீட மாதியபலவுங்கண்டா
னிலைதருசிவபிரான்செய் நிகரருட்குரியவென்றே
மலைவறவாஞுளோரும் வணங்கின்மற்றுரைப்பதென்னே.

(இ-ள்.) அடங்காமகிமையுள்ள காசித்தலத்தில் வாழும் பன்றி, வேசரி, சுணங்கன், சஞ்சரிக்கும்புழு, கோற்புழுமுதலிய பலவற்றையும் பார்த்தால் நித்தியராகிய விசுவநாதர் பாலிக்கும் ஒப்பற்ற தாரகமந்திரோபதேசத்திற்கு அதிகாரமுள்ள ஆன்மாக்களென்று மதித்துச் சந்தேகமின்றிச் சுவர்க்கலோகவாசிகளும் வணங்குவார்களாஞல் நாம் கூறுவதியாது. எ-று. (உச)

காசியைநினைக்கமுத்தி காசியென்றுரைக்கமுத்தி
காசியைக்காணமுத்தி காசியைச்சூழமுத்தி
காசியில்வசிக்கமுத்தி காசியைக்கேட்கமுத்தி
காசியின்வசிப்போர்தம்மைக் கண்டுதொழ்ந்திடுதன்முத்தி.

(இ-ள்.) காசித்தலத்தைச் சிந்தித்தவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலமென்று சொன்னவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலத்தைத் தரிசித்தவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலத்தைப் பிரதட்சணஞ்செய்தவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலத்தில் வசிப்பவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலமென்று கேட்டவர்களுக்கு முத்தியுண்டாகும். காசித்தலத்தில் வசிப்பவர்களைத் தரிசித்து வணங்கினவர்களுக்கு முத்தியுண்டாகும். எ-று. (உரு)

ஒளிகெழுகாசிவாழ்வா ருருத்திரசொரூபரென்றே
யளிகெழுமனத்துட்கொள்ளா வன்புசெய்திடுதல்வேண்டுங்
களிகெழுமனையவன்பாற் கதித்தெழுபவர்யாரேனும்
வெளிகெழுமின்பமுத்தி மேவுவர்மெய்யிதாமால்.

(இ-ள்.) விளக்கம்பொருந்திய காசித்தலத்தில் வாழ்பவர்களை உருத்திர சாரூப்பியமுடையோர்களென்பதாகவே அன்புபொருந்திய மனதில் மதித்து அவர்களுக்குப் பணிபுரிதல்வேண்டும். விரும்புதற்குரிய அவ்வாறன அன்பிஞல் அதிகரிக்கின்றவர்கள் தீவினையுடையோராயினும் பரமாகாச நிலையிலுதிக்கும் ஆநந்தமயமாகிய முத்தியைப்பெறுவார்கள் இஃதுண்மையாகும். எ-று. (உசு)

வளமலிகாசிமேய வாழ்க்கையர்மனைசேயாதி
யுளமலிபல்லோர்மாட்டு முறுமபிமானநீத்தே
களமலியாப்பொன்கொண்டு பாதுகாத்திடுதல்வேண்டுங்
குளமலிநியானமுற்றோ ராவரக்குணமிக்கோரே.

(இ-ள்.) ஞானவளப்பம் நிறைந்த காசித்தலத்தில் விரும்பி வாசஞ்செய்பவர்கள், மனைவி புத்திரர் (சுற்றத்தார் நண்பினர்) முதலாயினோரிடத்து அபிமானிப்பதைவிட்டு அப்போதப்போது கிடைக்குந் திரவியங்களைச் சாதுக்களுக்குக் கொடுத்துத் தருமத்தைக் காத்தல்வேண்டும். அவ்வாறு காக்குங் குணமுடையோர் புருவமத்தியில் நியாணிக்கத்தக்க பரமாகாச நிலையடைந்த பெரியோர்களுக் கொப்பாவர்கள். எ-று. (உஎ)

சங்கவெண்குழையானெல்லா வுயிர்களுந்தழுவியுய்வான்
றுங்கமிக்கருளிச்செய்த சுருதியாகமபுராண
மங்கவையனைத்துமோர்ந்து மப்பிரமாணமென்பார்
சிங்கலினரகமெல்லாஞ் சென்றுசென்றளைதறேற்றம்.

(இ-ள்.) வெள்ளிய சங்கக்குண்டலங்களை யணிந்த சிவபிரான் எல்லாச் சீவர்களும் விதியைத்தழுவி மேன்மையடையும்பொருட்டு மிக்க பரிசுத்தத்தோடு திருவாய்மலர்ந்த வேதாகமபுராணங்களெல்லாவற்றையும் அறிந்திருந்தும் அவைகளை அப்பிரமாணமென்று கொள்பவர்கள், குறைவற்ற பெருநரகங்கள் முழுவதுஞ் சென்று சென்று முழுகுதல் சத்தியமாகும். எ-று. (உஅ)

மறைமுழுதுணர்ந்தாரேனு மகம்பலபுரிந்தாரேனுங்
குறைவறுதானமெல்லாங் கொடுத்தறங்கூர்ந்தாரேனு
நிறைபெருந்தீர்த்தமெல்லா நிரம்புறத்துளைந்தாரேனுங்
கறையுறுமொருபொய்கூறிற் கடுநரகழுந்துவாரே.

(இ-ள்.) வேதங்கள் முழுவது முணர்ந்தவராயினும், அனேகயாகங்கள் செய்தவராயினும், மஹாதானங்களெல்லாவற்றையுங் கொடுத்துப் பெரிய தருமங்களால் உயர்ந்தவராயினும், மகிமைநிறைந்த எல்லாத்தீர்த்தங்களிலும் விதிநிரம்ப ஸ்நானஞ் செய்பவராயினும், பெருங்குற்றத்தைத்தரும் ஒரு பொய்கூறுவார்களாயின் மேற்கூறிய புண்ணியங்களிழந்து கொடிய நரகத்திலழுந்துவார்கள். எ-று. ()

பொருளுலோபத்தினானும் புரிதருவினோதத்தானு
மருடபவுயிரையோம்பி வாழுதற்பொருட்டினானு
மிருளுறுமொருபொய்கூறி னெடுத்திடுபவங்கடோறுந்
தெருடபவந்துபற்றிச் செயிர்மிகவிளையாநிற்கும்.

(இ-ள்.) பொருள் செலவாகுமென்னும் உலோபத்தினாலாவது விரும்பத்தகும் விளையாட்டினாலாவது மயக்கத்தையொழித்து உயிர்களைப் பாதுகாத்து

வாழுநிமித்தத்தினுலாவது மயக்கத்தைத்தருகின்ற ஒரு பொய்கூறுவானுயின் அடு த்தடுத்துவரும் பிறவிகடோறும்.ஞானத்துக்கு விரோதவகைகளாகச் சூழ்ந்து பல துன்பங்களையும் விளைவித்து நிற்கும். எ-று. (௯0)

பொய்மையேபாவமெல்லாம் விளைதருபூமியாகும்
பொய்மையேபிறவியெல்லாம் புகப்புரிவித்துமாகும்
பொய்மையேவறுமையெல்லாம் போதரப்புரிவதாகும்
பொய்மையேநரகமெல்லாம் புகுதரப்புகுத்தாநிற்கும்.

(இ-ள்.) பொய்கூறுதலே பாவங்களெல்லாவற்றையும் விளைவிக்கின்றபூமியாகும். பொய்கூறுதலே பிறவி யெல்லாவற்றிலும் புகச்செய்கின்ற வினையாகும்.பொய்கூறுதலே தரித்திரங்களெல்லாவற்றையும் பொருந்தச் செய்வதாகும். பொய்கூறுதலே எல்லாநரகங்களிலும் புகுமாறுபொருத்துவிப்பதாகும். எ-று.()

ஏனைநல்லொழுக்கமுற்ற விருப்பினுமின்மைசெய்யு
மூனமிலின்றுண்மாட்டு மருவருப்பொருங்குசெய்யு
மானமிக்கவாஞ்சான்றோர் மருங்குநான்புகல்வதென்னை
யீனமார்பொய்மைகூற லெற்றைக்கும்பொல்லாதாகும்.

(இ-ள்.) பொய்கூறுதல், மற்றைய நல்லொழுக்கங்கள் பூரணமாகவிருப்பினும் அவைகளை யில்லாதனவாகச் செய்யும் அன்றியும் குற்றமற்ற தாயாரும் அருவருக்குமாறு செய்விக்கும். மிக்க பெருமையுள்ளோராகிய சாதுக்களிடத்துக் கூறுதலால் வருந்துயரத்தை யான் கூறவேண்டியதியாது? இழிவு நிறைந்த அப்பொய்கூறுதல் எவ்விடத்துந் துன்பமேயுண்டாக்கும். எ-று. (௯௨)

பொய்யுளான்மறந்தோர்மெய்மை புகலினும்பொய்மையாகு
மூய்யுமாறென்றுமில்லை யுறுதியென்பதுஞ்சாராது
கொய்யுமாமலர்ப்பூஞ்சோலை சூழ்குவலயத்துநாளு
நையுமாறெதுசெய்தாலும் பொய்நவிலாமைவேண்டும்.

(இ-ள்.) பொய்சொல்லுபவன், தன்னை மறந்து ஓர் மெய்கூறுவானுயின் அதுவும் பொய்யாகமுடியும். அவன் பிழைக்கும்வழி எக்காலுமில்லை. உத்தம நடை எப்போதுங்கிட்டாது.பறித்தற்குரிய பெருமைதங்கிய மலர்களையுடையதும் பொலிவுள்ளதுமாகிய சோலைகள் சூழப்பெற்ற பூமியில் வருத்தத்தக்க பாதகங்களை நிரந்தரம் எதுசெய்தாலுஞ்செய்க. பொய்யொன்றுமே சொல்லாதிருத்தல் வேண்டும். எ-று. (௯௩)

திருவளரயோத்தியாளுந் திறலரிச்சந்திரன்றன்
மருவளர்நாடுநீத்தும் வளநகர்நீத்துமற்றை
யுருவளர்மனைசேயாதிச் செல்வங்களொருங்குநீத்துங்
கருவளர்பொய்மைகூறற் கஞ்சுபுகழித்தான்சன்மம்.

(இ-ள்.) திருமாது வளரப்பெற்ற அயோத்தியாபுரியை அரசாளும் வல்லமையுள்ள அரிச்சந்திரமகாராஜன் வாசனை வளர்கின்ற உய்யானங்களையுடைய நாட்டைத் துறந்தும் வளமுள்ள நகரத்தைத் துறந்தும் அழகுவாய்ந்த மனைவியையும், புத்திரனையும், மற்றுமுள்ள செல்வங்களையும் ஒருமிக்கத்துறந்தும் பிறவியை வளர்க்கின்ற பொய்கூறலொன்றிற்குப் பயந்து தனது சன்மங்கழித்துவிட்டனர். எ-று. (ருச)

ஓரிடத்தினுங்கூடாத பொய்மையையும்பர்வேந்தன்
சேரிடத்திடைச்சொற்றாலுந் திசைமுகன்செங்கண்மாயோ
னாரிடத்திடைச்சொற்றாலு மூழியுமழிதராது
பாரிடைப்பொலியுங்காசிப் பதிவயிற்சொல்லொணாதே.

(இ-ள்.) ஓரிடத்திலுஞ்சொல்லக்கூடாத பொய்யை தேவர்க்கரசனாகிய இந்திரனிடத்துச் சொன்னாலுஞ்சொல்லக்கடவன் பிரமனிடத்தானாலுந்திருமாலிடத்தானாலும் இன்னும் யாரிடத்தாயினுஞ் சொன்னாலுஞ் சொல்லக்கடவன் ஊழிகாலத்தும் அழியாது பூமியின்கண் விளங்குங் காசிப்பதியினிடத்துச் சொல்லாதிருக்கக்கடவன். எ-று. (ருரு)

பொய்மையெவ்விடைச்சொற்றாலும் போக்கிடுங்கழுவாயுண்டு
மெய்மையேயொலியுங்காசிப் பதியிடைவிளம்புவாரோ
லம்மையோடப்பனாகி யகிலமும்படைத்துக்காக்குங்
கொம்மைவெள்விடையானாலுங் கூடுமோகழுவாயாற்ற.

(இ-ள்.) பொய்யை யெவ்விடத்துச்சொன்னாலு மப்பாவத்தை நீக்கத்தகும் பிராயச்சித்தமுண்டு. சத்தியமே பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற காசித்தலத்திற் சொல்லுவார்களானால் எல்லாவுயிர்களுக்குந் தாய்தந்தையாகவிருந்து சகலபுவனங்களையும் படைத்துக் காப்பவரும் வலிமையும் வெண்மையுமுடைய ரிஷபத்தை வாகனமாகக்கொண்டவருமாகிய சிவபிரானாலும் பிராயச்சித்தஞ் செய்யக்கூடாது. எ-று. (ருசா)

கூற்றுவன்றண்டமில்லைக் கோள்செயுந்தீங்குமில்லை
மாற்றருமசனிதீய வளிமழையராக்கள்செய்யுஞ்
சாற்றரும்வருத்தமில்லைத் தரித்திரஞ்சற்றுமில்லை
யேற்றமார்மெய்யேகூறிப் பொய்யினையிரித்துளார்க்கே.

(இ-ள்.) மேன்மேலுயர்ந்த சத்தியத்தைமொழிந்து பொய்யைப்பறந்தோடும்படி செய்பவர்களுக்கு இயமனாற்செய்யுந்தண்டனையில்லை. நவக்கிரகதோஷமில்லை. பேதிப்பதற்கரிய இடியினால் வருத்தமில்லை. பெருங்காற்றாற்றுன்பமில்லை. பெருமழையாலுபாதியில்லை. சர்ப்பங்களாற்றுயரமில்லை. சற்றுந்தரித்திரமில்லை. எ-று. (ருஎ)

எடுத்தசன்மத்துமேன்மை யெவ்வளவிருந்தபோதுங்
கடுத்தவைமாற்றலன்றிக் கழிந்தசன்மத்துஞ்செய்ய
வடுத்தபுண்ணியங்களெல்லா மழித்திடும்பொய்மையென்னிற்
றொடுத்தமேற்பிறப்பினுற்றுந் தொழிலினையுரைப்பதென்னே.

(இ-ள்.) இப்போதெடுத்த பிறவிக்கு எவ்வளவு பெருமையிருந்தபோதி லும் கோபித்துப் பெருமைகளைக் கெடுப்பதுமன்றி முன்போன அநந்த பிறவி யிலுஞ்செய்த பெரும்புண்ணியங்களெல்லாவற்றையும் அழித்துவிடுவது பொய் யென்றுசொன்னால் மேலேவரும் பிறவியிற்செய்யும் புண்ணியங்களை இப் பொய் கெடுக்குமென்பதை நான் கூறவேண்டியதில்லை. எ-று. (௩அ)

(ப-ம்.) நிகழ்காலத்திலே கூறும்பொய் இறந்தகால புண்ணியத்தையும் நிகழ்காலபுண்ணியத்தையும் எதிர்காலபுண்ணியத்தையுங் கெடுத்து நரகத்திலிரு த்துமென்பார் உரைப்பதென்னே என்று கூறினர்.

வாதராயணனென்றோது மாமுனியாதினுளிற்
போதமார்தரவீரோன்பான் புராணங்களருளிச்செய்தா
ருதரத்தனையமேலோ னநுமைபெற்றுலகமுய்யக்
காதலினுபபுராணங் கண்டனர்தத்தம்பேரால்.

(இ-ள்.) வேதவியாசரென்று பெரியோர்களாலெடுத்துரைக்கப்படும் மகாமு னிவர் கேட்பவர்களுக்கு ஞானமுண்டாகப், பதினெண்புராணங்களையும் ஆதி காலத்திற் றிருவாய்மலர்ந்தனர். மேலோராகிய அவ்வியாசமுனிவரநுமதிபெற் றுக்கொண்டு உலகத்தார் கடைத்தேறும் வண்ணந் தங்கள் தங்கள் பெயரால் விருப்புடன் உபபுராணங்களைச் செய்தனர். எ-று. (௩௯)

பதினெண்புராணங்களாவன மச்சம், கூர்மம், வராகம், வாமனம், பிர மம், வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பௌஷிகம், நாரதீயம், காரு டம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பிரமாண்டம், பதுமம் என்பனவாம். இவற்றுள் சைவம், காந்தம், இலிங்கம், கூர்மம், வாம னம், வராகம், பௌஷிகம், மச்சம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் இவை பத்துஞ் சிவபுராணமேயாம். நாரதீயம், பாகவதம், காருடம், வைணவம் இவை நான்கும் விஷ்ணுபுராணமேயாம். பிரமம், பதுமம் இவையிரண்டும் பிரமபுராணமே யாம். பிரமகைவர்த்தம் சூரியபுராணமாம். ஆக்கிநேயம் அக் கினிபுராணமாம். அன்றியும் காந்தம், ஆக்கிநேயம், சைவம், கூர்மம், மச்சம், இலிங்கம் இவை தாமதபுராணமாம். பிரமாண்டம், பிரமகைவர்த்தகம், மார் க்கண்டேயம், வாமனம், பிரமம், பௌஷிகம் இவைராசதபுராணமாம். பாக வதம், பதுமம், வராகம், வைணவம், காருடம், நாரதீயம் இவைகள் சாத்துவிக புராணமாம். உபபுராணம் பதினெட்டாவன. உசனம், கபிலம், காளி, சநற்கு மாரீயம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், தைர்வாசம் நந்தி, நாரசிங்கம், நாரதீயம், பாரசரீயம், பார்க்கவம், ஆங்கிரம், மாரீசம், மானவம், வாசிட்டம், வாருணம் இவை அவ்வவர் பெயரால்விளங்கும்.

திகழ்தருமுபபுராணத் தொகையுமீரொன்பான்செப்பிற்
புகழ்தருமிப்புராணம் புகன்றதுமெற்றுக்கென்னி
லிகழ்தருதன்மைநீங்கி யாவருமியற்றுதீமை
யகழ்தருவிதிவிலக்காய்ந் தருங்கதியடைதற்கன்றே.

(இ-ள்.) விளக்கமுற்ற உபபுராணத்தொகையும் கூறுமிடத்துப்பதினெட்டேயாகும். புகழ்பெற்ற விப்புராணங்களைக்கூறியது யாது நிமித்தமெனின்அறியாமையைக் கெடுத்து யாவர்களும் செய்கின்ற தீமையைப்போக்கத்தக்க விதியையாராய்ந்து விலக்கையொழித்து அரியமுத்தியை யடைதற்பொருட்டேயாம். எ-று. (சo)

இருவகைநாலொன்பானென் றிசைத்திடுபுராணந்தம்மு
ளொருவகையீரொன்பானுள் யாதானுமொன்றையோர்வார்
கருவகையனைத்துநீத்துக் காலனார்பாசந்தப்பித்
திருவகையெல்லாமேவிச் செழுங்கதிக்கிறைவராவார்.

(இ-ள்.) இருவகையாகக்கூறிய புராணம் முப்பத்தாறனுள் ஒரு வகையிலுள்ள பதினெண்புராணத்துள் யாதானுமோர்புராணத்தை அன்போடறியத்தக்கவர்கள் எல்லாப்பிறவிகளையு மொழித்து இயமனால்வீசப்படும்பாசத்தை நீக்கிச் சிவஞானச்செல்வத்தை யடைதற்கேதுவாகிய சாலோகாதிபத முத்திகளையடைந்து மேலாகிய மோட்சபூமிக்கரசராவார்கள். எ-று. (சக)

திருத்தகுசிவபுராண சிரவணவிசேடத்தாலே
யுருத்தகுபாவநீங்கும் புண்ணியமொருங்குமேவு
மருத்தகுபத்திவாய்க்கு மாதேவனருளுண்டாகுங்
கருத்தகுதீமையெல்லாங் கழன்றுமேற்கதியுண்டாமால்.

(இ-ள்.) சிறப்புற்ற சிவபுராணத்தைக் கேட்டலாகிய விசேடசாதனத்தாலே கோபித்து வருத்தத்தக்க பாவங்கள் விலகிப்போம். எல்லாப்புண்ணியங்களுங்கைகூடும். அரிய உண்மைப்பத்தி கிடைக்கும் சிவபெருமான்றிருவருள் விளங்கும். பிறவியைத்தரத்தக்க தீமைகள்யாவும் விலகி மேலானமுத்தி சித்திக்கும். எ-று. (சஉ)

மறைகளாகமமோர்ந்தாலும் வண்புராணங்களோரா
துறைவனேலவற்றாலாகும் பயனவற்குதவாதாகு
நிறைதருபுராணமோர்ந்து நிகழுமற்றவையோராத
குறையுளனெனினுமேலாந் தன்மையிற்கூடச்செய்யும்.

(இ-ள்.) வேதாகமங்களையறிந்திருந்தாலும் ஞானவளத்தைத்தரும்புராணங்களையறியாதிருப்பானாயின் அவ்வேதாகமங்களை யறிந்ததனாலடையும் பிரயோசனம் அவனுக்கு நேரிடாதாகும் இன்பநிறைவைத்தருகின்ற புராணங்களையறிந்து விளக்கமுற்ற அவ்வேதாகமங்களை யறியாத குறைவையுடையவனாயினும் இப்புராண உணர்ச்சியானது மேலாகிய முத்தியிற்கூடும்படி செய்விக்கும். எ-று.

புராணங்களோராதார்க்குப் புகல்சிவபத்தியில்லை
விராவுபல்விதிவிலக்கு மேதகத்தெரிதலில்லை
யராவணிசடையெம்மண்ண லாரருட்கலப்புமில்லைத்
தாரதலம்புகழுங்காசித் தலத்தினும்வாழ்க்கையில்லை.

(இ-ள்.) புராணங்களை யறியாதவர்களுக்குச் சாதுக்களாலெடுத்துரைக்கும் சிவபத்தியுண்டாகமாட்டாது. பல உபாயங்களாகக் கூறியவிதிகளும் விலக்குகளும் செவ்வையாகத் தெரியமாட்டாது. சர்ப்பாபரணத்தை யணிந்த சடாபாரத்தையுடைய எமது சிவபெருமான் றிருக்கருணை கிடைக்கமாட்டாது. உலகத்தாரால் றுதிக்கப்பெற்ற காசித்தலத்திலும் வாசஞ்செய்யநேரிடாது. எ-று. ()

புண்ணியக்காசிவாழ்க்கை பொருந்திய வறவோரெல்லாந்
தண்ணியசிவபுராணந் தகவுணர்ந்தவரோவென்னி
லெண்ணியவிச்சன்மத்தே யுணர்தராரெனினுமுன்ன
மண்ணியபிறப்பினுய்ந்தா ரென்பதற்கையமின்றே.

(இ-ள்.) புண்ணியவடிவமாகிய காசித்தலவாழக்கையைப்பெற்ற தருமவான்களெல்லோரும் மனதைக்குளிர்விக்கும் சிவபுராணங்களை முறையாக உணர்ந்தவர்களோ வென்று கேட்பீர்களானால் சிந்திப்பதற்குரிய இப்பிறவியில் தெரியாதவர்களாயிருந்தாலும் முன்னுள்ள பிறவிகளில் ஆராய்ந்திருப்பார்களென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை. எ-று. (௬௫)

புராணங்களுணர்ந்தோர்க்கல்லாற் புண்ணியக்காசிவாழ்வும்
பராவுநீர்க்கங்கையாட்டும் பழமறையெடுத்துக்கூறும்
விராமலர்க்குழலிபாக விச்சுவநாதப்பெம்மா
னராவொளிர்சிலம்பிற்பாத சேவையுமமையாவன்றே.

(இ-ள்.) புராணங்களை விதியாக ஆராய்ந்தவர்களுக்கல்லாமல் மற்றையர்களுக்குப் புண்ணியவடிவான காசித்தலவாசமும் துதிபெற்ற கங்காதீர்த்தத்தில் ஸ்நாநமும் அநாதியாயுள்ள வேதங்களாலெடுத்துரைக்கப் பெற்றவரும் மலர்கள் நெருங்கிய அளகபாரத்தையுடைய அன்னபூரணியாரை வாமபாகத்திலுடையருமாகிய விசுவநாதப்பெருமான் சர்ப்பங்கள் சூழ்ந்து ஒளிரப்பெற்ற சிலம்பணிந்த பாதசேவையும் நேரிடாவாம். எ-று. (௬௬)

மந்தணமானவெல்லாம் வகுத்துனக்குரைத்தேனென்று
தந்தைதானருளிச்செய்ய விட்டுணுசருமன்றாழா
வெந்தைநின்னருளாலியான் மற் றெய்தரும்பேறுபெற்றேன்
முந்தைவல்வினையுநீத்தேன் முத்தியுமுற்றேனென்றான்.

(இ-ள்.) இரகசியமான எல்லாப்பொருள்களையும் உனக்குவிரித்துக்கூறினேனென்று பிதாவாகிய எக்கியசருமன் கட்டளையிட (குமாரனாகிய) விஷ்ணு

சருமன் வணங்கி என்றந்தையே தேவரீர்கருணையாற் கிடைத்தற்கரியஇரகசியப் பேற்றையானடைந்தேன். முற்பிறவியிற்செய்த கொடுவினைகளைக் கடந்தேன். முத்திநிலையும் பெற்றேனென்றனன். எ-று. (௬௭)

தரைபுகழ்பெருமைவாய்ந்த சவுனகமுனிவனாதி
வரைவில்பன்முனிவீர்காசி மான்மியமனந்தமின்னுந்
திரைதவழ்நிலந்தாங்குஞ் சேடனென்பவனுந்தேர்ந்தென்
னுரையளவாமோவென்பானென்னில்யாருரைப்பாரொன்றுன்.

(இ-ள்.) உலகத்தாரால் புகழப்பெற்ற பெருமைதங்கிய சவுநகராதியான அளவில்லாத முனிவர்களே காசித்தலமகிமை யிப்போது கூறியதன்றி யின்னுமநந்த முள்ளன. அலைகளையுடைய கடலாற் சூழப்பெற்ற உலகத்தைச்சுமக்கும் ஆதிசேடனென்பவனுமாராய்ந்து என்னுலுரைக்க அளவுபடுமோவென்று சொல்லுவானானல் யாவரொருத்துக்கூற வல்லவர்களென்று சூதமுநிவர் கூறினர். ()

சூதமாமுனிவனின்ன சொற்றலுந்தொழுதுபோற்றிப்
போதமாமுனிவரெல்லாம் புந்தியுண்மகிழ்ச்சிபூத்து
வேதமாமுதல்வனெங்கள் விச்சுவநாதன்மேய
காதல்கூர்காசிமேன்மை கரிசறநின்றுற்கேட்டு.

(இ-ள்.) சூதமகாமுநிவர் இவ்வாறுகக் கூறியவளவில் ஞானமுள்ள சவுநகராதிமுநிவர்களெல்லோரும் வணங்கித்துதித்து மனதிற் களிகூர்ந்து வேதங்களாற் பிரதிபாதிக்கப்படும் முதற்கடவுளாகிய எமது விசுவநாயகர் விரும்பியெழுந்தருளி யிருக்கப்பெற்ற காசித்தலமகிமையைத் தேவரீரால் குற்றமறக்கேள்வியுற்று. எ-று. (௬௯)

புண்ணியம்படைத்தோமேலாம் போதமுமுற்றோமுத்தி
நண்ணியவழியுங்கண்டோ நாடுமாநந்தமுற்றோ
மெண்ணியவெண்ணியாங்கே யெய்தினங்குறைவொன்றில்லோந்
தண்ணியகுணத்தாயென்று தாழ்ந்தனர்துதித்துவாழ்ந்தார்.

(இ-ள்.) நாங்கள் எல்லாப்புண்ணியங்களையும் பெற்றோம். மேலாகிய ஞானத்தையுமடைந்தோம். முத்திசாதனத்திலுள்ள மார்க்கங்களையுங் கண்டோம். குறிக்கத்தக்க ஆநந்தாநுபவத்தை யடைந்தோம். நினைத்தவைகளை நினைத்தவாறே தேவராற்பெற்றுக்கொண்டோம். எங்களுக்கு யாதொருகுறையுமில்லை. சாந்தகுணநிதியேயென்று சூதமகாமுநிவரைத் துதித்துவணங்கினவர்களாகிச் சவுநகராதிமுநிவர்கள் காசித்தலத்தில் வாழ்ந்திருந்தார்கள். எ-று. (௭0)

## வாழ்த்து.

கார்பூத்தபொழிலுடுத்த காசிநகர்வாழ்கநெடுங்கங்கைவாழ்க
ஏர்பூத்ததுண்டி தண்டபாணிவயிரவர்கொற்றியின்னோர்வாழ்க
நார்பூத்தவன்னபூரணியகிலே சனும்வாழ்கநயந்துமன்று
ணீர்பூத்தமுடியனையா னடநவில்குஞ்சிதபாதநீடுவாழ்க.

(இ-ள்.) மேகங்கள் தவழுஞ் சோலை சூழ்ந்த ஸ்ரீகாசிநகரமானது வாழக்கடவது. நீண்ட கங்கைநதி வாழக்கடவது. அழகு பொருந்திய துண்டிவிநாயகரும், தண்டபாணியாகிய குமாரக்கடவுளும், வைரவமூர்த்தியும், துர்க்காதேவியும், இவர்போன்ற வேனைய தேவர்க்களும் வாழக்கடவர். அன்புருவமாகிய வன்னபூரணித்தாயும், ஸ்ரீவிசுவேசுவரமூர்த்தியும் வாழக்கடவர். ஜலவடிவம் பொருந்திய கங்கை தவழுஞ் சடைமுடியையுடைய வந்த விசுவநாதரது ஆநந்த நடம்பயிலுங் குஞ்சிதபாதமும் நிலைபெற்று வாழக்கடவது. எ-று. (ருக)

ஈண்டுக் காசியை வாழ்கவென்றது அழியாவாழ்க்கையை விரும்பினோர்க்கு அதுவே தாரகமாய் நிற்றல் கருதியென்க. காசியிலிறந்தால் முத்தியென்று வேதஞ்சொல்லுகையால், தில்லையைக்காணலாலும், திருவாரூரிற் பிறத்தலாலும், அருணையை நினைத்தலாலுமுண்டாகு முத்தியை நோக்கக் காசியிலிறக்க நேருமுத்தி யுசிதமன்றெனின், அஃதொன்றே யுசிதமுத்தியாதலமையும். தில்லையைக் கண்டபேர் உடனே தேகம்விடக்கண்டதில்லை. ஒருதரமேயன்றிப் பலதரமொருவனவன் வாணாண்முடிவுக்கு ளத்தில்லையைக்காணக்கூடும். ஒருதரங்கண்டபோதே யவன்முத்தனுவனெனின், பின்னர்ப்பாவஸம்பவங்களுக்கிடமுண்டாதலிழுக்காம். அங்ஙனமின்றி, எல்லாவிதபாவங்களுந்தங்கி வாழவிடஞ்செய்திருப்போனை யாண்டெண்ணிமுடியாதே! அப்பாவங்களுக்குப் பயனையவரடையார்கொல்லோ? அடைவாரெனின், மூன்றடவைகளிற் றில்லையைக்கண்ட பயன்யாதுசெய்ய? பின்னருண்டாகு மெல்லாப்பாவங்களையு முன்செய்த தரிசனபல னென்றே தேய்த்துவிடுமெனின், அப்போது பலதரம்தரிசிப்பதற்குப் பலனெய்தக்கிடையாமையும், ஒருதரம் தரிசித்ததேபோதுமாகையாற்பின்னரிசைந்த வழியெல்லாம் பாவங்களை யீட்டலாமென்கையும், அப்பாவங்களெல்லாம் புண்ணியமாமென்கையுமேயன்றோ போதரும்? இதை மேலோர்கொள்ளாராகையாற் றில்லையை வாணாண்முடிவிற் காணப்பெறுவாரே முத்தராதலமையும். இப்படியேயன்றோ பிறக்க முத்தியாகியவாரூரையும், நினைக்கமுத்தியாகியவருணையையுங் கொள்ளாநிற்பர் பெரியோர்? இன்னவஸம்பவங்களிறக்க முத்தியாகிய காசியிலெண்ணவிடஞ்செய்யாமையா லிஃதொன்றே ஸௌகரிய முத்தியாதல் தெளிந்திடுக. தில்லைத்தரிசனமுதலிய கிடைத்த பின்னரோர்பாவமு மொருவனெய்தாதவழியவற்றாலவனடையு முத்தியுசிதமெனின், காலாதீதத்திலவை பயக்கு முத்தியை நோக்க வப்போதே பயக்குங் காசிமுத்தியே யேற்றம் பெறும். பிருகஜ்ஜாபாலோபநிடம் முதலியன காசிப்பதியொன்றினையே யெல்லை பரிமாணமுதலியவற்றாலெடுத்துக் கூறுகையானுமேலுண்மை நிலையுதல்பெறும். பிறபதிகளுக்கேற்றம் பகரவேண்டினோர் காசியையும், பிறதீர்த்தங்களுக்கேற்றம் பகரவேண்டினோர் கங்கையையு முவமைகூறுதலானு மவ்வுண்மை வெளிப்படும். இனிக்கங்கை, துண்டி, தண்டபாணி, வயிரவர், கொற்றி, அன்னபூரணி, அகிலேசன் முதலினோரை வாழ்கவென்றது இன்னோரக் காசிப்பதியிடம்பெற்றவராதலினென்க. இவருள், கங்கை யக்காசியையடைந்த மாங்மியம் வாமனபுராணம், இராமாயணம், பாரதம், பாகவதமுதலிய நூல்களாற்கண்டறிக.

பாகவதத்திற் சிவன்சடையினின்றுமிழிந்து காசியிற்பெருகிய கங்கையைவிஷ்ணுபதியென்றுகூறியதுண்டேயெனின், விஷ்ணுபதம் என்று ஆகாசத்துக்கோர்பெயராகையாலவ்வாகாயத்தினின்றுஞ் சிவனார் சடையிலது இறங்கினகாரணங்கருதியபோது தோஷமாகாதென்க. விஷ்ணுவினுடைய பாதத்திலிருந்தே கங்கையுண்டானபோது சிவன்றரித்தாரென்று கூறும் வசனங்களுண்டேயெனின், திரிதியஸ்கந்த முதலிய சிலவிடங்களிலவ்விபரீதப் பொருளை மூடராயுள்ளபேர் கொள்வரேயன்றிப் பஞ்சமஸ்கந்தத்தில் கங்கோற்பத்தி, தத்தாரணமுதலியவற்றைப்பாஹுள்யமாய்க்கூறு முண்மையைக்கண்டறிந்த விவேகிகள் மயங்கிக்கூறுரென்க. விஷ்ணுபாதத்திலிருந்து கங்கைபெருகியதுண்டேயெனின், அவ்விஷ்ணுபாதகங்கையைப் பாஞ்சராத்திரிகள் மூன்றுவிதமாக முரணிக்கூறுவர். திரிவிக்கிரமன்பாதத்தைப் பிரமன்றனது கமண்டலுஜலத்தாலலம்பியபோது அதைச்சிவன்றரித்தாரெனவும், திரிவிக்கிரமன் பாதத்திலிருந்தே கங்கைபிறந்து பிரவகித்தபோது அதைச்சிவன்றரித்தாரெனவும், திரிவிக்கிரமன் றனதுபாதத்தைமேலே நீட்டியபோது, அவனதுகட்டைவிரலூர்த்துவாண்டகடாகத்தையுடைத்துப்பேதித்தலாலந்தவழியாய்க் கங்கை யந்தலோகத்தினின்றும் பிரஸரித்தபோது அதைச்சிவன்றரித்தாரெனவும் பிதற்றுவதேயாம். இவற்றுளெந்த விதத்தாலாவது விஷ்ணுபாதத்தில் கங்காஸம்பந்த முண்டாயிருத்தலாலிதையே சிவன்றரித்தாரென்பாரெனின், விஷ்ணுபாதகங்கைக்குப் பூபதனம்வாமனகல்பத்திலும், பகீரதனால் பிரம்ஹலோகத்தினின்றுங் கொண்டுவரப்பட்டுச் சிவனால் தரிக்கப்பட்ட பாகீரதிக்குப் பூபதனம் வராககல்பத்திலுமென்று வாமன முதலிய புராணங்களிற் படிக்கப்பட்டிருத்தலால் விரோதமுண்டாதலறிக. இவற்றின் விரிவைச் சித்தாந்தரத் நாகரம் (சிவபாரம்யப்பிரதரிசினியிற்) பரக்கக்கண்டு தெளிக.

மேல், துண்டி, தண்டபாணி முதலினோர் காசியை யடைந்தமான்மியங் காசிமாஹாத்மியத்தாலினிதுவிளங்கும். இங்ஙனநிற்க, காசியையும், காசிவாசமூர்த்திகளையும் வாழ்த்தத்தொடங்கி யம்மட்டே நிறுத்தாமல் ஆனந்தநடேசனது குஞ்சிதபாதத்தையுந் தில்லை ஞாபகந்தோன்ற வாழ்த்தியதென்னையெனின், ஆக்கியோரதுபாசனாமூர்த்தியென்பது தோன்றவறிக. அல்லதூஉம், முத்திஸ்தானமாகியகாசியை வாழ்த்திமுடிக்குங்காலிக்காசியுதவு முத்தியையே தம்மைத் தரிசித்தன்முதலியவற்றாலுதவுந்தில்லைமுதலியவற்றையு மோரோ வழியெடுத்துக்காட்டவேண்டுமென்பதுசிதம்பெற்றமையாலுமறிக. இதனால்,தியாகராஜப்பெருமானையும், அருணகிரிப்பெருமானையும் வாழ்த்தினாரென்பதுஞ் சொல்லாமையையும், முதலுங்கடையுஞ்சொன்னமையா லிடையிற்போந்தனவுஞ் சொல்லப்பட்டனவென்பதே ஸித்தமாகையால். இன்னும் விரிக்கிற்பெருகும்.

வானுறைதியாகராசனையிங்குக்கொடுவந்தவள்ளல்போலுந், தேனுறைகாக்கயிலையமர்போதமிங்குக் கொடுவந்தசெல்வன்போலு, மானுறைகாசியினின்றம்மந்தணஞ்செந் தமிழ்த்தேயம்வரக்கொணர்ந்த மீனுறைநீர்த்துறைசையிற்சுப் பிரமணியமுனிவர்பிரான்மெய்ச்சீர்வாழ்க.

(இ-ள்.) பூர்வத்திற்புத்திரப்பேறு வேண்டிவிஷ்ணுவினாற் பூசித்துத்தே வேந்திரனிடத்தில் வைக்கப்பட்ட தியாகராஜப்பெருமான் முதலிய சத்தவிடங்களையும் தேவலோகத்திலிருந்திப்பூமியிற்கொணர்ந்து திருவாரூர்முதலிய வுத்தமக்ஷேத்திரங்களிற் பிரதிட்டித்தவள்ளலாகிய முசுகுந்த சக்கிரவர்த்தியைப்போலவும், தேன்பொருந்திய மலர்களையுடைய சோலைசூழ்ந்த ஸ்ரீகைலாயத்தில்(**ரௌரவாகமத்தில், பாசவிமோசனபடலத்தில், துவாதசசூத்திரமாய் அநுஷ்டுப்புச்சந்தசாக**) நிலைபெற்று விளங்கியசிவஞானபோதமென்னும் ஸித்தாந்த சாத்திரத்தை யிப்பரதகண்டத்திற்கொண்டுவந்து ஸாம்சித்தராகிய மெய்கண்டதேவருக்குபதேசித்தருளிய சிவஞானச்செல்வராகிய பரஞ்சோதி முனிவரைப்போலவும், சத்திநிபாதத்துத்தமராகிய மானுக்கள்வசிக்கும் பெருமையையுடையகாசியினின்றுமந்தக் (**காசியினது மகிமைகளையுணர்த்துங்**) காசிரஹஸ்யமென்னும் பிரபந்தத்தை யிந்தத்தமிழ்நாட்டிற்கொண்டுவந்தருளிய மீன்கள் பொருந்திய நீர்வளப்பத்தையுடைய திருவாவடுதுறையென்னுந் திவ்யக்ஷேத்திரத்தினிலை பெற்றுவசிக்கும் முநிவர் பெருமானாகிய ஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்தியினது அழியாத வெல்லாச்சிறப்புகளும் வாழக்கடவன. எ-று.

## உகூ-வது விட்டுணுசருமனுபதேசம்பெற்ற வத்தியாயமுற்றியது.

ஆக, அத்தியாயம் உகூ-க்கு கூடிய திருவிருத்தம் ௬௰௨.

## காசிரகசிய முற்றுப்பெற்றது.

**திருச்சிற்றம்பலம்.**

ஸ்ரீமச்சிவாய சற்குருசுவாமிகள் திருவடிவாழ்க.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௮ | ௩௪ | றாட் | றாட |
| ௧௯ | ௧௮ | வர்சக | வாசக |
| ௨0 | ௩௫ | ட் | ட |
| ௫0 | ௧௪ | பீ | மீ |
| ௫௧ | ௧௫ | கேட்ட் | கேட்ட |
| ௫௪ | ௧௫ | ம்ம | ம |
| ௯௭ | ௨௩ | க | த |
| ௧0௯ | ௩௧ | ய | ய் |
| ௧௧௨ | ௩௧ | ன் | ள் |
| ௧௧௫ | ௨௬ | லெ | ளெ |
| ௧௧௬ | ௨௪ | செய்யு | செயு |
| ௧௧௯ | ௨0 | லோ | ல |
| ௧௧௯ | ௨௩ | த | தி |
| ௧௨0 | ௧௫ | க | கி |
| ௧௨௪ | ௩௨ | ட் | ட |
| ௧௨௭ | ௨௮ | ஒரு | மூன்று |
| ௧௫௯ | ௧௬ | ெ | இ |
| ௧௬௬ | ௩0 | யக | ய் |
| ௧௬௭ | ௨௭ | ஞ | ஞ் |
| ௧௬௮ | ௩ | ழ | ழ் |
| ௨00 | ௨0 | ப் | ம் |
| ௨0௧ | ௯ | ன் | ன |
| ௨0௪ | ௨௫ | ண | ள |
| ௨0௪ | ௨௫ | பா | பர் |
| ௨0௬ | ௮ | த | ற |
| ௨௧௨ | ௨௯ | ளா | ள் |
| ௨௧௬ | ௧0 | வவடிவ | வடிவ |
| ௨௧௭ | ௨௨ | தைபெ | தைப்பெறு |
| ௨௨௨ | ௩௩ | ரு | று |
| ௨௨௪ | ௪ | ன்ஞ | ங்கா |
| ௨௬௩ | ௧0 | று | ரு |
| ௨௭௬ | ௨௫ | த | தி |